# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை

## தொகுதி - 1

## சித்த மருத்துவம்

பதிப்பாசிரியர்
முனைவர் தி. மகாலட்சுமி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி,
சென்னை - 600 113.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை

## தொகுதி - 1

## *சித்த மருத்துவம்*

பதிப்பாசிரியர்
முனைவர் தி. மகாலட்சுமி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி,
சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title | : | A Descriptive Catalogue of Manuscripts in the International Institute of Tamil Studies, Part I<br>Citta maruttuvam |
| Editor | : | Dr. T. Mahalakshmi |
| Publisher & © | | International Institute of Tamil Studies, Chennai - 600 113. |
| Publication Number | : | 319 |
| Language | : | Tamil |
| Edition | | First |
| Date of Publication | : | 1998 |
| Paper used | : | TNPL 16 kg. Creamve |
| Size of the book | : | Demy 1/8 |
| Printing types used | : | 10 point |
| Typesetting and printed by | : | Shri Vignesh Prints<br>No.158/5, Lake View Road,<br>West Mambalam,<br>Chennai - 600 033.<br>Ph : 4748486 |
| Number of pages | : | xii + 336 |
| Number of copies : | : | 1,000 |
| Price | : | Rs.75/- |
| Binding | : | Paper pack |
| Subject | : | Siddha Medical Manuscripts available in the International Institute of Tamil Studies |

Published with the financial assistance from the Government of India, National Archives of India, vide Sanction F.No.31-1(13)/95 grants, dated 15th April, 1996 and copyright vests with the Director, International Institute of Tamil Studies, Chennai - 600 113.

முனைவர் ச.சு. **இராமர் இளங்கோ**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113.

## அணிந்துரை

சென்னையில் 1968 - இல் நடந்த இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின்போது, உயர்தமிழ் ஆய்வுக்கு வழி வகுக்கும் வகையில், பேரறிஞர் அண்ணா அவர்களால் உருவாக்கப்பட்டதே உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் தமிழக முதல்வராயிருந்தபோது 1972 - இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பதிவு செய்யப்பெற்றது.

இந்நிறுவனத்தின் ஆய்வுகள் பலவகைப்பட்டன. இவற்றுள் சுவடியியல் ஆய்வும் அடங்கும். தொன்மையான தமிழிலக்கியங்களையும், இலக்கணங்களையும் நம் முன்னோர் ஓலைச்சுவடிகளில் எழுதி வைத்தனர். அவ்வாறு எழுதப் பெற்ற ஓலைச் சுவடிகளைத் தொகுத்துப் பதிப்பித்து அச்சு நூல்களாக்கித் தந்தவர்களுள் தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாதையர், சி.வை. தாமோதரம்பிள்ளை, ஆறுமுக நாவலர் முதலியோர் குறிப்பிடத்தக்கவராவர். இவர்களைப் போன்றோரின் முயற்சியால் நீராலும், நெருப்பாலும், பகையாலும் அழிந்து போய் எஞ்சிய ஓலைச் சுவடிகள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

ஓலைச் சுவடிகளின் பெருமைகளை உலகுக்கு உணர்த்தும் வகையில் 1974 - முதல் இந்நிறுவனம் சுவடியியல் பட்டய வகுப்பைத் தொடர்ந்து நடத்தி வருகிறது. சுவடியியல் பட்டய வகுப்புப் படிக்கும் மாணவர்கள் ஆண்டு இறுதியில் நிறுவனத்திலிருந்தோ பிற சுவடி நூலகங்களிலிருந்தோ சுவடிகளைப் பெயர்த்தெழுதி ஆய்வு செய்து நிறுவனத்திற்கு ஆய்வேடாக வழங்கி வருகின்றனர். மேலும் சுவடிகள் தொடர்பான கருத்தரங்குகளும் பயிலரங்குகளும் நடைபெற்று வருகின்றன.

தொடக்கக் காலத்தில் இந்நிறுவனம் டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூலகத்துடன் இணைந்து திங்கள் தோறும்

சுவடியியல் கருத்தரங்கை நடத்தி வந்தது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

1980 - முதல் இந்நிறுவனம் சுவடிப் பதிப்புகளை வெளியிடத் தொடங்கியது. இதுகாறும் 44 சுவடிப் புதிப்புகள் வெளிவந்துள்ளன. முனைவர் வே. இரா. மாதவன் அவர்கள் பதிப்பித்த கண்மருத்துவம் என்ற நூலுக்கும், முனைவர் சூ. நிர்மலாதேவி அவர்கள் பதிப்பித்த கருவூரார் பல திரட்டு, தடிவீர சுவாமி கதை - வன்னியராயன் கதை ஆகிய சுவடி நூல்களுக்கும் தமிழ் வளர்ச்சி இயக்ககம் சிறந்த நூல்களுக்கான பரிசுகளை வழங்கியுள்ளது.

'சுவடி அட்டவணை' எனும் திட்டப்பணி இந்நிறுவனத்தில் 1983 - இல் தொடங்கப் பெற்றது. இத்திட்டத்தின் பயனாகக் கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்திலுள்ள தமிழ்ச் சுவடிகள் முனைவர் சூ. நிர்மலாதேவி அவர்களால் 1983 - இல் ஆய்வு செய்யப் பெற்றுத் 'தமிழ்ச் சுவடிகள் அட்டவணை' என்ற தலைப்பில் நூலாக வெளிவந்தன. 1989 - இல் "Siddha Medical Manuscripts in Tamil' என்ற நூல் முனைவர் வே. இரா. மாதவன் அவர்களால் பதிப்பிக்கப்பெற்று நிறுவனத்தில் வெளியிடப்பெற்றது. 1995 - இல் முனைவர் நிர்மலாதேவி அவர்கள் பதிப்பித்த 'கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை' என்ற நூலை நிறுவனம் வெளியிட்டது.

இத்திட்டத்தைத் தொடர்ந்து நிறுவனத்திலுள்ள சுவடிகளைப் பாதுகாக்கவும், அட்டவணைப்படுத்தவும் 1990-1991-இல் முனைவர் சிலம்பொலி செல்லப்பன் அவர்கள் நிறுவன இயக்குநராக இருந்தபோது தில்லியில் உள்ள ஆவணக் காப்பகத்திடமிருந்து ரூ. 5,000 பெறப்பட்டது.

சுவடிகளை அட்டவணைப் படுத்தற்கு வித்திட்டு, அட்டவணைப் படுத்தும் முயற்சியைச் செயற்படுத்தி நடத்திய முனைவர் பூ.சுப்பிரமணியம் அவர்களுக்கு என் நன்றி. தொடக்க நிலையில் சுவடிகளை அட்டவணைப் படுத்தி இப்பணிக்குத் துணை நின்ற முனைவர் வ.அலுமேலு அவர்களுக்குப் பாராட்டுக்கள்.

*1995 - 96* - இல் நிறுவனச் சுவடிகளுக்கு விளக்க அட்டவணை தயாரித்து அச்சிட்டு வெளியிடுவதற்குத் தில்லி தேசிய ஆவணக் காப்பகம் ரூ. 30,000/- வழங்கியது. இத்திட்டத்தின் விளைவாக இப்போது முனைவர் டி. மகாலட்சுமி அவர்கள் பதிப்பித்துள்ள உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடிகள் விளக்க அட்டவணைகள் நான்கு தொகுதிகளாக வெளிவருகின்றன. மிகவும் கடினமான இப்பணியைச் செய்து முடித்த முனைவர் டி. மகாலட்சுமி அவர்கள் பாராட்டுக்குரியவர். சுவடித் துறையில் ஈடுபாடு கொண்டவர்களுக்கும், தமிழறிஞர்களுக்கும், சித்த மருத்து வர்களுக்கும் பிறருக்கும் இந்நான்கு தொகுப்புகள் மிகவும் பயனுடையன. நிறுவன ஓலைச் சுவடிகள் பாதுகாக்கப்பெற வேண்டுமென்ற எண்ணத்தில் செயல்பட்ட முனைவர் சிலம்பொலி செல்லப்பன் அவர்களும், நிறுவனச் சுவடிகள் விளக்க அட்டவணை செய்யப் பெற வேண்டுமென்று விரும்பிய முன்னாள் இயக்குநர் பொறுப்பிலிருந்த முனைவர் அன்னி மிருதுலகுமாரி தாமசு அவர்களும் பாராட்டுக்குரிய வர்கள்.

இத்திட்டப்பணி சிறப்பாக அமைய வழிகாட்டிய பெருந்தகை பேராசிரியர் அமரர் மு. சண்முகம் பிள்ளை அவர்களை நன்றியுடன் நினைவுகூர்கிறேன். அவருடன் இணைந்து வழிகாட்டிய முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும் என் நன்றி.

இந்நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும் ஊக்கமும் காட்டி வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு. த. இரா. சீனிவாசன் இ.ஆ.ப. அவர்களுக்கும், நிதி நல்கிய தில்லி தேசிய ஆவணக் காப்பகத்தார்க்கும் நன்றி.

இந்நான்கு தொகுதிகளையும் சிறப்பாக அச்சிட்டுத் தந்த விக்னேஷ் அச்சகத்தார்க்கும் நன்றி.

இயக்குநர்

# முன்னுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இலக்கியத் துறையுடன் இணைந்துள்ள சுவடிப்புலம், பட்டய வகுப்புகள், பயில ரங்குகள் வழி மாணவர்களுக்கும் பிறருக்கும் சுவடிப் பயிற்சி அளித்தல், அச்சில் வெளிவராத சுவடி நூல்களைப் பதிப்பித்து அச்சிடல், சுவடிப்பதிப்பு வரலாறு அறிதல், சுவடிகளுக்கு விளக்க அட்டவணை தயாரித்து வெளியிடுதல் முதலான பணிகளை மேற்கொண்டு வருகிறது.

## சுவடி விளக்க அட்டவணை

இந்நிறுவனத்தில் ஏறக்குறைய 592 சுவடிக்கட்டுகளும், அவற்றில் 950 நூல்களும் உள்ளன. 1990-91 இல் இந்நிறுவனச் சுவடிகளைச் செப்பம் செய்வதற்கும், சுவடிகளை அட்டவணை செய்வதற்கும் ரூபாய் ஐந்தாயிரம் இந்நிறுவன அந்நாளைய இயக்குநர் முனைவர் சிலம்பொலி செல்லப்பன் அவர்களால் தில்லி தேசிய ஆவணக் காப்பகத்தி லிருந்து பெறப்பட்டது. பின்னர், 1995-இல் இந்நிறுவனச் சுவடிகளின் விளக்க அட்டவணையை அச்சிட்டு வெளியிடு வதற்கு ரூபாய் முப்பதாயிரம் இந்நிறுவன இந்நாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களால் அக்காப்பகத் திடமிருந்து பெறப்பட்டது. இத்திட்டத்தின் வாயிலாக உருவாகிய விளக்க அட்டவணைகளே இப்போது வெளி வருபவை.

## பொருளடிப்படைப் பாகுபாடு

இந்நிறுவனச் சுவடிகளின் விளக்க அட்டவணை 4 தொகுதிகளில் அமைகிறது. முதல் தொகுதி **சித்த மருத்துவச் சுவடி விளக்க அட்டவணை** என்ற தலைப்பிலும், இரண்டாம் தொகுதி **இலக்கியச் சுவடி விளக்க அட்டவணை** என்ற தலைப்பிலும், மூன்றாம் தொகுதி **மெய்யியல் மற்றும் நாட்டுப்புறவியல் சுவடி விளக்க அட்டவணை** என்ற

தலைப்பிலும், நான்காம் தொகுதி **மொழி, கணிதம் மற்றும் பண்பாட்டுச் சுவடி விளக்க அட்டவணை** என்ற தலைப்பிலும் அமைகின்றன.

இத்தொகுதியில் சித்த மருத்துவம் பற்றிய சுவடிக்கட்டு களில் அடங்கிய நூல்களின் எண்ணிக்கை 270. இதனைத் தொடர்ந்து வெளியிடப் பெறும் பிற மூன்று தொகுதிகளில் அகராதி, ஆருடம், ஆவணம், இதிகாசம், இலக்கணம், கணிதம், கதைப்பாடல், காவியம், சரசாத்திரம், சாமுத்திரிகாலட்சணம் (உடல் அங்கவியல்), சமயம், சோதிடம், ஞானம், நாட்டுப்புறப்பாட்டு, நிகண்டு, நீதி, தத்துவம், துதி, புராணம் முதலான பொருண்மைகள் இடம் பெறவுள்ளன. மருத்துவம் உட்பட இப்பொருண்மைகளைக் கொண்டு வெளிவரவுள்ள இவ்வட்டவணைத் தொகுதிகள் பொருள் அடிப்படையில் முறையாக்கம் பெற்றுள்ளன. இவற்றுள் சமயம் தொடர்பான நூல்களே மிகுதியானவை. மருத்துவச் சுவடிகள் அடுத்த நிலையில் உள்ளன.

## மருத்துவத் தொகுதியின் சிறப்பு

இம்மருத்துவத் தொகுதியில் இடம்பெற்றுள்ள பல அரிய, புதிய மருத்துவச் செய்திகள் நூல்களாக அச்சிடப்படின் அது தமிழுக்கும் மருத்துவ உலகுக்கும் பெரிதும் பயன்தரும். குறிப்பாகச் சுவடி ஆய்வோர்க்குப் பெரிதும் பயன்படும். மருந்து செய்முறைகளைத் தேர்ந்தெடுத்துச் சோதிக்கவும், மாற்று மருந்து செய்முறைகளை அறியவும் மிகவும் பயனுடையதாக இருக்கும்.

## சுவடிக் கொடை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்குத் தங்களிடமிருந்த சுவடிகளை அன்பளிப்பாகவும், நன்கொடையாகவும், வழங்கிய நல்ல மனம் கொண்ட அன்பர்கள் பலராவர். திருவாவடுதுறை ஆதீனத்தினரும், திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடத்தினரும் இக்கொடையில் முக்கிய இடம் பெற்றவராவர். இங்ஙனம் சுவடி வழங்கிய அனைவருக்கும் இந்நிறுவனம் மனம் நிறைந்த நன்றியையும், அன்பு நிறைந்த பாராட்டையும் தெரிவிக்கின்றது.

## நன்றியுரை

சுவடி விளக்க அட்டவணை விரைந்து நூல்களாக வெளிவரவேண்டு மென்ற ஆவலோடு என்னை ஊக்கப் படுத்தியும், ஆற்றுப்படுத்தியும், அச்சிட நிதிபெற்றுத் தந்தும், தோன்றாத் துணையுமாக நின்ற இந்நிறுவன இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கும், இத்திட்டத்திற்கு நல்கை வழங்கிச் சிறப்பித்த தில்லி, தேசிய ஆவணக்காப்பக இயக்குநர் அவர்களுக்கும், சுவடிகளைச் செப்பமிடுவதற்கும் அட்டவணைப் பணியை நான் செய்வதற்கும் வாய்ப்பு நல்கிய அந்நாளைய இயக்குநர் பொறுப்பிலிருந்த முனைவர் அன்னிதாமசு அவர்களுக்கும், கேட்டபோதெல்லாம் ஐயம் தீர்த்துத் துணையாக நின்ற இலக்கியத்துறை இணைப்பேராசிரியர் முனைவர் ச. சிவகாமி அவர்களுக்கும், இந்நூலாக்கத்தின் தொடக்கக் காலக்கட்டத்தில் எனக்கு ஆசானாக இருந்து, நான் இடர்ப்படும்போதெல்லாம் தேவையான ஆலோசனை வழங்கி, எழுத்துருவின் பெரும்பகுதியைத் திருத்திக் கொடுத்துப் பல்லாற்றானும் துணைபுரிந்த முனைவர் பூ. சுப்பிரமணியம் அவர்களுக்கும், அட்டவணைப் படுத்தும்போது தொடக்கத்தில் எனக்கு உதவிய முனைவர் வ. அலமேலு அவர்களுக்கும், இவ்வட்டவணைத் தொகுதிகள் சிறக்கவும், விரைந்து முடியவும், துணைநின்ற எங்கள் துறை சிறப்புநிலை ஆய்வாளர் முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், நான் வேண்டும்போதெல்லாம் சிரமம் பாராது தன்வேலையைப் போல் கருதி தேவைப்படும் கருத்துரைகளையும் நூல்களையும் கொடுத்துதவிய எங்கள் துறை ஆராய்ச்சி உதவியாளர் திரு. த.பூமிநாகநாதன் அவர்களுக்கும், தன் பணிகளுக்கிடையே இந்த நூலின் மெய்ப்புகளைத் திருத்துவதில் உதவிய எங்கள் துறை ஆராய்ச்சி உதவியாளர் திரு. மொ. மருதமுத்து அவர்களுக்கும், அட்டவணைப் பணிக்குத் துணைநின்ற எங்கள் துறை ஆராய்ச்சி உதவியாளர்கள் முனைவர் கூ.நிர்மலா தேவி, திரு மூ. பரிமணன் அவர்களுக்கும், என் இனிய மாணவிகளான செல்வி வெண்ணிலா, செல்வி லட்சுமி அவர்களுக்கும் அன்பார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நூல்களைத் தடையின்றித் தந்தருளிய அன்பு கெழுமிய நூலகர் திரு இரா. பார்வதி அவர்களுக்கும், இந்நூல்

நன்முறையில் வெளிவருவதற்கு அச்சுப்பணி செய்த விக்னேஷ் அச்சுக் கூடத்திற்கும், மருத்துவப் பகுதியினைப் பார்வையிட்டுத் தந்த மதிப்பிற்குரிய மருத்துவர்களான திரு பிரின்ஸ், திரு பழனிச்சாமி, திரு செல்வரங்கம், திரு பாரி, திரு தமிழழகன், செல்வி அ. வாசுகி தேவி அவர்களுக்கும் என் நன்றி உரித்து. நான் சிறந்த ஆராய்ச்சியாளராக அமைதல் வேண்டும் என்ற பெரு நோக்கோடு என் கல்விப் பணியில் உற்ற நண்பராக தோள்கொடுத்து நின்றவரும், எந்நிலையிலும் கடமை தவறாதிருக்க வேண்டுமென்ற உணர்வை ஊட்டிய வருமான என் இதயம் நிறைந்த, அண்மையில் மறைந்த எனது கணவர் அமரர் எஸ்.சந்திரசேகரன் அவர்களை வணங்கி என் நன்றியை நிறைவு செய்கிறேன்.

தி. மகாலட்சுமி

# பொருளடக்கம்

# பதிப்புரை

**ந**ம் முன்னோர் தம் அறிவுக் கருவூலமாக விளங்கும் சுவடிகளைத் திரட்டிப் பாதுகாக்கும் கடமைகளைப் பல அமைப்புகள் மேற்கொண்டுள்ளன. அவ்வகையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடிப் புலத்திற்கு முதன் முதலில் கால்கோளிட்டவர் இந்நிறுவனத்தின் மேனாள் இயக்குநர் ச.வே. சுப்பிரமணியன் அவர்கள். அவரது முயற்சியால் ஓலைச்சுவடிகள் திரட்டப்பெற்றன. *1979*-இல் சுவடியியல் பட்ட மேற்படிப்புப் பட்டயக் கல்வி தொடங்கப்பெற்று, *1980* முதல் சுவடிப் பதிப்புகளும், சுவடிப் பதிப்பு நூல் வெளியீடு களும் வரத்தொடங்கின. *1983* முதல் அறக்கட்டளைகள் உருவாக்கப் பெற்று, *1984* முதல் உ.வே. சாமிநாத ஐயர் பெயரில் அமைக்கப்பெற்ற அறக்கட்டளையின் சார்பில் சுவடிப் பதிப்புத் திறனாய்வு நூல்களும் வெளிவரலாயின (இணைப்பு.*1*). இதே காலக்கட்டம் சுவடியட்டவணை, சுவடிப்பாடநூல் எனும் பரிமாணங்களுக்கும் வித்திட்டது.

**சுவடிப் பதிப்பு ஆய்வுகள்**

பட்டயக் கல்வி நிறைவின் பகுதியாகப் பதிப்புகள் உருவாகியதுடன், நிறுவன ஆய்வு அலுவலரின் திட்டப் பணியாகவும் பதிப்புகள் தயாரிக்கப் பெற்றன. சுவடிப் பாடநூல்கள், நிறுவனச் சுவடியியல் பட்டய மாணவர்க்குப் பயனாகும் வண்ணம் உருவாகியுள்ளன. அவை,

1. சுவடியியல் பயிற்சிக் கையேடு, மு.கோ. ராமன், *1982*.
2. சுவடியியல், பூ. சுப்பிரமணியம், *1991* - என்பன. இவற்றுள் பின்னது, சென்னைப் பல்கலைக் கழகப் பிஎச்.டி. பட்ட ஆய்வேட்டின் சுருக்க வடிவமாகும்.

சுவடி அட்டவணைகளுள் இரண்டு நூலக அடிப்படை யிலும், மற்றொன்று துறைப் பொருண்மையிலும் (மருத்து வம்) உருவாகியுள்ளன. அவை,

1. தமிழ்ச் சுவடிகள் (அட்டவணை), இரா. நிர்மலாதேவி (திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்ச் சுவடிகள் அட்டவணை, 1091 சுவடிகள்), 1983.
2. கேரளப் பல்கலைக் கழகம் கீழ்த்திசைச் சுவடிகள் விளக்க அட்டவணை (முதல் தொகுதி), சூ. நிர்மலா தேவி, 1985.
3. Siddha Medical Manuscripts in Tamil, V.R. Madhavan, 1984 என்பன.

நூலகம், தனியார் பதிப்பகம் உட்பட பல நிறுவனங்கள், பல்கலைக் கழகங்கள் சுவடிப் பதிப்பு வெளியீட்டில் ஈடுபடுகின்றன. அவற்றுள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் ஒன்று. சுவடியியலில் பட்டயக் கல்வி நிகழ்த்தி அதன் பகுதியாகச் சுவடிப் பதிப்பு ஏடுகளை உருவாக்கி, அவற்றுள் சிலவற்றை அச்சிடுதல் இந்நிறுவனத்திற்கு மட்டுமே உரிய தனிச்சிறப்பு ஆகும். மேலும் நிறுவனத்திலன்றி வேறு பல நிறுவனங்களில், நூலகங்களில், தனியாரிடம் பெறப்பட்ட சுவடிகளும் இந்நிறுவனத்தின் பதிப்பு வெளியீடாக உருவாகியுள்ளன. திட்டப் பதிப்பாக வந்தவை பலவும் உ.வே.சா. நூலகச் சுவடியாகவும், கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தைச் சார்ந்தவையாகவும் அமைய, பட்டய மாணவர்களின் ஆய்வுப் பதிப்புகள் சென்னை, கீழ்த்திசைச் சுவடி நூலகத்திலிருந்து பெறப்பட்டவையாகப் பெரும்பாலும் அமைகின்றன.

இந்நிறுவனச் சுவடிப் பதிப்புகளாக இதுகாறும் பிரபந்த தீபிகை, பிரபந்தத்திரட்டு, திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத் தமிழ், சின்ன மகிபன் குளுவ நாடகம், மனைநூல், தந்திவனப் புராணம், சித்திரக் கவிகள் முதலான 42 நூல்களும் (இணைப்பு.2), 70க்கு மேற்பட்ட சுவடிப் பட்டய ஆய்வேடுகளும் (இணைப்பு.3) வந்துள்ளன. இவ்வாய்வேடுகளுள் 32 ஆய்வேடுகள் நிறுவனத்திலுள்ள சுவடி நூல்களாகும். அச்சான 42 நூல்களுள் கூவநூல், திருமயிலை உலா, வாத்திய மரபு, குணவாகடம் முதலான 11 நூல்கள் (இணைப்பு.4) இந்நிறுவனச் சுவடி நூல்களாகும். இப்பதினொன்றில் ஆய்வேடாகத் தரப் பெற்று அதன் பின் நூலாக்கம் பெற்றவை எட்டு நூல்கள் (இணைப்பு .5).

தமிழக அரசின் நிதியுதவி பெற்று வெளிவந்த சுவடிப் பதிப்பு நூல்கள் 12 (இணைப்பு .6). அவற்றுள் ஏழு நூல்கள் இந்நிறுவனச் சுவடி நூல்களாகும் (இணைப்பு 7). முனைவர் **இரா. மாதவன்** பதிப்பித்த கண்மருத்துவத்திற்கு முதல் பரிசையும், முனைவர் **சூ. நிர்மலாதேவி** பதிப்பித்த நிறுவனச் சுவடியான **கருவூரார் பலதிரட்டு,** தாள் சுவடிகளான **தடிவீரன் கதை, வன்னிராயன் கதை** என்ற நூல்களுக்கு இரண்டாம் பரிசுகளையும் தமிழக அரசு வழங்கியுள்ளது. **சித்த மருத்துவ மணிகள்** என்ற சுவடிப் பதிப்பு நூல் மூலிகைமணி **டாக்டர் க. வேங்கடேசன்** அவர்களின் நிதியுதவி பெற்று வெளிவந்த நூலாகும். வெளிவந்துள்ள சுவடிப் பதிப்பு நூல்கள் அனைத்தும் நிறுவன வெளியீடாக அமைய, முனைவர் **தி. மகாலட்சுமி** பதிப்பித்த **சோதிட நட்சத்திர மாலை** என்ற இந்நிறுவனச் சுவடிப் பதிப்பாய்வேடு **நர்மதா பதிப்பக** வெளியீடாக வந்துள்ளது. மூன்று முனைவர் பட்ட சுவடி ஆய்வேடுகள் இந்நிறுவனத்தின் வழி வெளிவந்துள்ளன (இணைப்பு.8). **நிறுவனச் சுவடிப் பதிப்புகள்** என்ற கட்டுரை (அன்னிதாமசு, **பதிப்பியல், பக்.95-128**) நிறுவனத்தின் வழி வெளிவந்த சுவடி பட்டய, முனைவர் பட்ட ஆய்வேடு களையும், சுவடிப் பதிப்பு நூல்களையும் பற்றி ஆய்கிறது.

### நூலாக வெளிவரத்தக்க, சிறந்த நிறுவன ஆய்வேடுகள்

இலட்சுமிகாந்த சதகம், இலட்சுமியம்மன் தவநிலை, எழுமலைக் குமரரந்தாதி, கடும்பாடி சின்னம்மை மாலை, குலாலர் புராணம், சித்தர் வெண்பா, சித்த மருத்துவத்தில் நாடி, திருப்புக் கொளிமாலை, மன்மதன் ஒப்பாரி ரதி புலம்பல், வராகி அந்தாதி, வராகிமாலை, வாகடசாரம் முதலான நூல்கள் அச்சுருக்காண வேண்டிய சிறந்த ஆய்வேடுகளாக உள்ளன.

### நூலாக வெளிவரத்தக்க சுவடிகள்

அகத்தியர் கம்பு சூத்திரம், அகத்தியர் நிகண்டு தெரியும் வகை, சண்முக நிகண்டு, சரக்கு சிந்தாமணி, பதார்த்த குண சிந்தாமணி, மருத்துவ அகராதி, மருந்து செய்முறைகள் முதலானவை அச்சுருக் காணாத சிறந்த சுவடிகளாக உள்ளன. எட்டையபுரத்துப் பள்ளு, கணக்கதிகாரம் என்ற இருசுவடிகள் எழுத்துரு ஆக்கப்பட்டுத் தற்போது அச்சிற்குத் தயார் நிலையில் உள்ளன.

**நிறுவனச் சுவடிக் கட்டுகளைச் செப்பனிடல்**

1992-இல் இந்நிறுவனச் சுவடிகளுக்கு விளக்க அட்டவணை தயாரிக்கும் பணி, மேனாள் இயக்குநர் பொறுப்பிலிருந்த முனைவர் அன்னி தாமசு அவர்களால் முனைவர். தி. மகாலட்சுமிக்கும், தயாரித்த அட்டவணை களை மேற்பார்வை யிடும் பணி முனைவர் **பூ. சுப்பிரமணியம்** அவர்களுக்கும் பணிக்கப் பெற்றன. அமரர் முனைவர் **க.த. திருநாவுக்கரசு** இயக்குநராக இருந்த காலத்தில் முனைவர் அலமேலுவால் 76 சுவடிக்கட்டுகளுக்கு விளக்க அட்டவணை 1989-இல் செய்யப் பெற்றிருந்தது.

இந்நிறுவனத்தில் கட்டுகளாக இருந்த 348 சுவடிகள் மட்டுமின்றி, இரண்டு அட்டைப் பெட்டிகளில் கட்டு எண் தரப்படாத பல சுவடிகள் இருந்தன. அவை கட்டுகள் பிரிந்த நிலையில் தனித்தனி ஏடுகளாக இருந்தன. மேலும் கறையான், புழு, பூச்சி, மண், தூசி ஆகியவற்றுடன் மிகவும் மோசமான நிலையில் அவற்றிலுள்ள ஏடுகள் இருந்தன. அவற்றை ஒழுங்குபடுத்திச் செப்பம் செய்யும் பணியும் மகாலட்சுமிக்குப் பணிக்கப் பெற்றது. ஏடுகளின் நீள அகலங்கள், சுவடி எழுத்துகளிலுள்ள ஒற்றுமை, ஏட்டு எண் தொடர்ச்சி, பாடல் எண் தொடர்ச்சி முதலான பல உத்திகளைப் பயன்படுத்தி, அட்டைப் பெட்டிகளிலிருந்த ஏடுகளிலிருந்து எண்பது புதிய சுவடிக் கட்டுகள் உருவாக்கப்பட்டன. மேலும் சித்த மருத்துவர் அ. வாசுகிதேவி 1990-இல் கட்டுகள் பிரிந்த நிலையில் நிறுவனத்திற்கு வழங்கிய சுவடிகளும் ஒழுங்கு செய்யப் பெற்றன. இவையனைத்தும் முன்பிருந்த நிறுவனச் சுவடிகளுடன் (348) சேர்க்கப்பெற்றன.

பெரும்பான்மையான நிறுவனச் சுவடிக் கட்டுகளுக்கு முன்பு இடப்பட்டிருந்த காகித அட்டைத் தலைப்புகள் இல்லாதிருந்தன. எனவே கட்டு எண், நூல் தலைப்பு ஆகியவற்றை அறிய இயலாத நிலை ஏற்பட்டது. அத்தகைய சுவடிக் கட்டுகளுக்குப் புதிய எண்களும், சுவடிகளின் உள்ளடக்க வரிகளிலிருந்து நூல் பெயர்களும் தரப்பெற்றன. எனவே முன்பு சுவடிகளுக்குத் தரப் பட்டிருந்த கட்டு எண்களில் மாற்றம் ஏற்பட்டது. காட்டாகத் தற்போதைய கட்டு எண் 392 என்பதன் பழைய கட்டு எண் 328. இச்சுவடி நூல்

ஆய்வேடாக அளிக்கப் பெற்றுள்ளது. இவ்வாய்வேட்டில் 328 என்ற பழைய கட்டு எண்ணே இடம் பெற்றிருக்கும். இச்சுவடிக் கட்டுகளின் அட்டவணைப் பணி 1993-இல் நிறைவு பெற்றது.

**அட்டவணைத் தொகுதியில் மாற்றம்**

இவ்விளக்க அட்டவணைகளை நூலாக்கம் செய்யும் முயற்சி 1996-இல் இயக்குநர் **ச.சு. இராமர் இளங்கோ** அவர்களால் மேற்கொள்ளப்பட்டது. எனவே, 1995, 96-களில் புதிதாகக் கிடைத்த சுவடிகளும், முன்பிருந்த தாள் சுவடிகளும் அட்டவணை செய்யப்பெற்று, முன்பு செய்யப்பெற்றிருந்த அட்டவணைகளுடன் சேர்க்கப் பெற்றன.

இவ்வட்டவணைத் தொகுதிகளை அச்சிடும் தறுவாயில், கூடுதல் பயன்பாடு கருதி சில மாற்றங்களைச் செய்வது தவிர்க்க இயலாததாயிற்று. முன்பே இத்தொகுதிகள் எழுதி முடிக்கப் பெற்றிருந்த காரணத்தால் அவ்வளவு எளிதில் விரும்பிய மாற்றங்கள் அனைத்தையும் செய்ய இயல வில்லை. மேலும் முடிக்கப் பெற்ற ஒன்றைச் சரிசெய்தல் என்பதைவிடப் **புதிதாகத் தயாரித்து விடுதலே எளிது** என்பதை மிகத் தெளிவாக உணரமுடிந்தது.

**காட்டு:** ஒரு கட்டில் பல நூல்கள் அமைதல் என்பதும் இயல்பு. அத்தகைய ஒரு கட்டின் முதல் 20 பாடல்கள் வரை ஒரு நூல் என முன்பு அட்டவணை செய்யப் பட்டிருந்தது. ஆயின் மீண்டும் அச்சுவடிக்கட்டை எடுத்துப் பார்க்கும் போது ஒன்று முதல் ஆறுபாடல்களில் முதல் நூல் முடிந்து, மீண்டும் ஒன்று முதல் 20 பாடல்களில் அடுத்த நூல் முடிந்திருந்தது. முன்பு செய்யப்பட்டிருந்த அட்டவணை முதல் நூலின் தொடக்கத்தையும், இரண்டாம் நூலின் முடிவையும் பெற்றிருந்தது. இந்நிலையில் ஒரு நூல் முன்பை விடக் கூடுதல் ஆகிறது. அதனால், இதனை அடுத்து வரும் அனைத்து நூல்களின் எண்களும் மாற்றம் பெறுகின்றன. இதுபோன்ற இன்னும் பலவிதமான சிக்கல்கள் இவ்வட்டவணையைச் செம்மை செய்யும் போது ஏற்பட்டன. மேலும் முன்பு முடிக்கப்பெற்றிருந்த அட்டவணைகளில் குறிப்புரை என்ற பகுதியில் நூற்பொருண்மை பற்றி மட்டுமே எழுதப் பெற்றிருந்தது. கூடுதலான உட்தலைப்புகளும், விரிவான

இன்னபிற செய்திகளும் இயன்ற அளவு பின்னரே எழுதிச் சேர்க்கப் பெற்றன.

**மருத்துவத் தொகுதியில் மாற்றம்**

1997 ஆம் ஆண்டு நிறுவனத்திற்கு மாற்றுப் பணி விடுப்பில் பணிபுரிய வந்த சித்த மருத்துவர்கள் ஏற்கெனவே என்னால் தயாரித்து வைக்கப் பெற்றிருந்த சுவடி விளக்க அட்டவணையின், மருத்துவத் தொகுதியைப் பார்வையிட நேர்ந்தது. அதுபோது அவர்கள், குறிப்புரை என்ற பகுதியில் நீங்கள் தந்திருக்கும் செய்தி போதாது. ஒரு சுவடியில் உள்ள செய்தி அட்டவணையில் முழுமையாக இடம்பெற வேண்டும். குறிப்பாக உட்தலைப்புகள் தொடர்ச்சியாக, முழுமையாகத் தொகுக்கப் பெற வேண்டும். அப்படித் தரும் போது தான் எங்களைப் போன்ற மருத்துவர்கள் இவ்வட்டவணையின் பயன்பாட்டினை முழுமையாகப் பெறமுடியும்'' என்று கூறினர்.

எனவே சித்த மருத்துவத் தொகுதியை அச்சிடும் தறுவாயில், சில மாற்றங்களைச் செய்வது தவிர்க்க முடியாததாயிற்று. இருப்பினும் ஒரு சுவடி நூலில் 250-க்கும் மேற்பட்ட உட்தலைப்புகள் இடம் பெற்றிருந்ததால் அவை அனைத்தையும் தொகுத்தல் என்பது விரியக் கூடும். ஒரே நோயின் பெயர், ஒரே மருந்தின் பெயர் மீண்டும் மீண்டும் வரும். ஒரு மருந்து ஒன்றுக்கு மேற்பட்ட இடங்களில் அவ்வாறு வருகின்றது என்றால் அவற்றின் செய்முறையும் மாறுபடும். மேற்குறிப்பிட்ட முறையில் அனைத்து உட்தலைப்புகளையும் தரமுயன்றால் ஒரு சுவடிக்குத் தரப்படும் குறிப்புரையானது ஒரு கட்டுரை போல் அமையக் கூடும். இருப்பினும் அம்மருத்துவர்கள் தம் விருப்பத்தை வலியுறுத்திக் கூறியதால் பல நூல்களுக்கான குறிப்புரைகளில் கூடுதலான உட்தலைப்புகளும் விரிவான செய்திகளும் ஓரளவு எழுதிச் சேர்க்கப்பெற்றன.

**பொருளடிப்படைப் பாகுபாடு**

தற்போது இந்நிறுவனச் சுவடி காப்பகத்தில் 592 ஓலைச் சுவடிக் கட்டுகளும், அவற்றுள் 950 நூல்களும் உள்ளன. மேலும் 27 தாள் சுவடி நூற்கட்டுகளும், அவற்றுள் 58

நூல்களும் உள்ளன. இச்சுவடி நூல்கள் நல்லநிலை, முழுமை, குறை, சிதைவு, செய்யுள் வடிவம், உரைநடை என்றவாறு காணப்பெறுகின்றன. நூற்பெயர் இன்றி, பல உரைநடை நூல்களும், செய்யுள் வடிவிலான நூல்களும், இரண்டும் கலந்த நூல்களும் உள்ளன. சிதைந்த நிலையில் சில சுவடிகள் இருப்பது மட்டுமின்றி நல்ல சுவடிகள் சிலவற்றிலும் ஏடுகளில் மாற்றம், ஏடுகளின் எண்களில் மாற்றம், செய்திகளில் மாற்றம் என்ற நிலைகளுள்ளன. இவற்றில் செய்தித் தொடர்ச்சியை முழுமையாகக் காண இயலவில்லை. மேலும் உதிரி ஏடுகள் பாதுகாப்பு கருதி பொதுத் தலைப்புகளில் 52 கட்டுகளாகக் கட்டி வைக்கப் பெற்றுள்ளன. இவை மீண்டும் செப்பம் செய்யப்பட வேண்டியவை. இவை தவிர வடமொழி, மலையாளம், தெலுங்கு ஆகிய பிறமொழிச் சுவடிக் கட்டுகள் 82 உள்ளன.

இந்நிறுவனச் சுவடிகளின் விளக்க அட்டவணை 4 தொகுதிகளில் அமைகிறது. சித்த மருத்துவ நூல்கள் பற்றியதாக அமையும் முதல் தொகுதியில் 270 நூல்களும், இலக்கியம் பற்றியதாக அமையும் இரண்டாம் தொகுதியில் 271 - 533 நூல்களும், மெய்யியல் மற்றும், நாட்டுப்புற வியல் பற்றியதாக அமையும் மூன்றாம் தொகுதியில் 534 - 805 நூல்களும், மொழி, கணிதம் மற்றும் பண்பாடு பற்றியதாக அமையும் நான்காம் தொகுதியில் 806 - 1008 நூல்களும் இடம் பெறுகின்றன.

மருத்துவம் உட்பட இப்பொருண்மைகளைக் கொண்டு வெளிவரும் இவ்வட்டவணைத் தொகுதிகள் பொருள் அடிப்படையில் முறையாக்கம் பெற்றுள்ளன. இவற்றுள் சமயம் தொடர்பான நூல்கள் முதல் நிலையிலும், மருத்துவ நூல்கள் அடுத்த நிலையிலும் காணப்படுகின்றன.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை மாதிரிப் படிவம் (பொருள் அடிப்படைப் பாகுபாடு)

## I. நூற்பெயர்: (வரிசை எண்ணுடன்)

அ. கட்டு எண் + நூல் எண்

ஆ. ஏடுகளின் எண்ணிக்கை

இ. அளவு

ஈ. வரிகள்

உ. சுவடியின் நிலை

ஊ. கையெழுத்தின் தன்மை

எ. சுவடி முழுமை / குறைவு

ஏ. அச்சான விவரம்

முற்குறிப்பு (இருப்பின் மட்டும்) (Colophon)

தொடக்கம் (காப்பு + நூலின் முதல்பாட்டு)

முடிவு (இறுதிப்பாடல்)

பிற்குறிப்பு (இருப்பின் மட்டும்) (Colophon)

## II. குறிப்புரை

1. நூற்பெயர் (சுவடியில் உள்ள வடிவம்)
2. செய்யுட்களின் எண்ணிக்கை
3. செய்யுளா? உரைநடையா? இரண்டும் கலந்ததா?
4. நூலின் சிறப்பு/நூலின் சுருக்கம்
5. நூலின் உட்தலைப்புகள்
6. நூற்செய்தியைக் கொண்டமைந்த உட்தலைப்புகள்
7. குறிப்பிட்ட ஒரு நூல் இவ்வட்டவணையில் வேறு இடங்களில் இடம் பெற்றிருப்பின் அதனைச் சுட்டுதல்
8. குறிப்பிட்ட அந்நூல் பிற அட்டவணைகளில் இடம் பெற்றிருப்பின் ஓரளவு சுட்டுதல்

9. அந்நூலை இவ்வட்டவணையிலுள்ள பிற நூல்களுடனும், வேறு அட்டவணைகளிலுள்ள நூல்களுடனும் ஒப்பிட்டு அது தொடர்பான சில ஆய்வுச் சிந்தனைகளைத் தருதல்.
10. மாற்றுச் சுவடிகள் உள்ள வேறு இடங்கள்
11. அச்சான நூல்களின் விபரம்
12. குறிப்பிட்ட நூல் தலைப்பை ஒட்டி வெளிவந்துள்ள அச்சு நூல் விபரம்
13. சுவடிப்பட்டய ஆய்வேடாக அளிக்கப்பெற்றிருப்பின் அதனையும், ஆய்வேடு நூலாக வந்திருப்பின் அதனையும் சுட்டுதல்.
14. நூலாசிரியர்
15. நூலாசிரியர் காலம்
16. நூலாசிரியரின் பிறநூல்கள்

**சுவடி விளக்க அட்டவணையின் அமைப்பு முறை விளக்கம்**

முதலில் நூல்தலைப்பும், நூல் தலைப்பின் இடது பக்கம் நூல் வரிசை எண்ணும் தரப்பட்டுள்ளன. அதன் பின் **அ** முதல் **ஏ** வரையிலான எட்டு உட்பிரிவுகளில் செய்திகள் தரப்பட்டுள்ளன.

**காட்டு**

**1. அகத்தியர் 16**

அ. 487: 742

ஆ. 103-105 ஏடுகள்

இ. 26.5 X 3 செ.மீ.

ஈ. 7,8 வரிகள்

உ. நன்று

ஊ. தெளிவு

எ. முழுமை

ஏ. இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

**தொடக்கம்** என்பதில் நூலின் தொடக்கத்தில் அமையும் முதல் பாடல் முழுமையாகத் தரப்பட்டுள்ளது. 14 அல்லது 16 சீர் வரும் பாடல்களிலும், நூலோடு தொடர்பில்லாத காப்புப் பாடல், நூல் பாடல் ஆகியவற்றைத் தருமிடங்களிலும், ஒரு பாடலின் இரண்டு வரிகளைத் தரும் முறையும் பின்பற்றப்பெற்றுள்ளது காப்புப் பாடல், நூல்பாடல் ஆகிய இரண்டையும் முழுமையாகத் தரும்முறையும் பின்பற்றப் பட்டுள்ளது. **முடிவு** என்பதில் நூலின் இறுதிப்பாடல் முழுமையாகத் தரப்படுகிறது. **முற்குறிப்பு** என்ற பகுதியில் நூல் தொடங்குவதற்கு முன்பு இடம்பெறும் சில குறிப்புகளும், **பிற்குறிப்பு** என்ற பகுதியில் நூல் முடிந்தபின் இடம்பெறும் சில குறிப்புகளும் தரப்பட்டுள்ளன. நூலின்பெயர், நூலாசிரியர் பெயர், நூலை ஏட்டில் எழுதியவர் பெயர், முகவரி, நூலின் காலம், சுவடியை எழுதத் தொடங்கிய நாள், எழுதி முடித்த நாள், சுவடி உரிமையாளர், சுவடியைப் படியெடுக்கச் சொன்னவர், சுவடிக் கட்டில் அடங்கியுள்ள நூல்களின் பட்டியல், நூலை எடுத்தவர்களும், படித்தவர்களும் திருப்பிக் கொடுக்காவிட்டால் இன்னின்ன தீய விளைவுகள் ஏற்படும் என்ற அச்சுருத்தல், இரகசியக் குறிப்பு முதலான செய்திகள் பிற்குறிப்பில் இடம்பெற, இவற்றுள் ஒரு சில செய்திகளே முற்குறிப்பில் இடம்பெறுகின்றன. மேலும் அவ்வாறான இடங்களும் மிகக்குறைவே.

**காட்டு**

## முற்குறிப்பு

### 109. தன் வந்திரி பாலவாகடம் 360 (189:389)

தன்வந்திரி பகவான் திருவாய் மலர்ந்தருளிய பாலவாகட மென்னும் சிமிட்டு ரத்தினச் சுருக்கம் 360. இது தொண்டை மண்டலம், வல்லக் காளத்தி நகர், வீ. அயோத்தி தாசகவிராச பண்டிதரவர்களால் பரிசோதித்துப் பிழையறத் திருத்தப்பட்டு, திருவொற்றியூர் இராசப்ப முதலியார் குமாரர் பரசுராம முதலியாரால் தமது பரப்பிரம முத்திராட்சர சாலையிற் பதிப்பிக்கப்பட்டது. 1867 ஆவது வருஷம் டிசம்பர் மாதம்.

**விளம்பரம்**

இதனால் யாவருக்குமறிவிப்பது யாதெனில் 1867 ஆவது வருஷம் 25 ஆவது ஆக்ஷன், 20 ஆவது பிரிவில், 6 ஆவது விதியின் படி காப்பிரயிட் பெற்றிருப்பதால் இதை அச்சுக் கூடத் தலைவர்களும் மற்றவர்களும் வேறு பாஷையில் மொழிபெயர்க்கக் கூடாது... இதன் விலை பயிண்டுட்பட ரூபா ½. இதன்றி 10 புத்தகம் வாங்குவார்களானால் ஒரு புத்தகம் கமிஷன் கொடுக்கப்படும்.

## பிற்குறிப்பு

### 7. அகத்தியர் இரத்தினச் சுருக்கம் (556 : 907)

இது எழுதினது மகுதும்பிசா பண்டிதர் மகன் மாலிமீயா பபிசா பண்டிதர், அவர் மகன் காதரு மீரா பபிசா பண்டிதர், அவர் மகன் ஜமாலு முகிய்தீன் என்று பேர் விளங்கிய மாலிமீயா பபிசா பண்டிதன் கை அச்சாம். 1015-ஆம் வருஷம் மார்கழி மாசம் ஞாயிற்றுக்கிழமை விடிந்து ஒரு நாழிகை நேரத்தில் எழுதி முடிந்தது ஆமீன். இந்தச் சுவடி எழுதத் துடங்கினது திருச்சினாப்பள்ளி சில்லாவைச் சேர்ந்த கொனாடு தாலுக்கா வயலூர் வட்டத்தைச் சேர்ந்த நாச்சிக் குறிச்சிக் கிராமத்தில் எழுதத் துடங்கினது. அல்லா உதவி கொண்டு அந்த ஊரிலே நானே கூடிச் சுவடி எழுதி முடிவானது. ஆமீன்.

மேலே **குறிப்புரை**யில் இடம் பெற்றுள்ள அனைத்து விபரங்களும் இடம்பெறாமல் இவற் றுள் ஒன்றிரண்டு விபரங்கள் கொண்டமையும் குறிப்புரைகளும் உள்ளன.

ஒரு சுவடியில் ஒரு நூல் அமைதல் இயல்பானது. அன்றியும் சுவடியில் ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் உடன் எழுதப்பெற்றிருத்தலும் உண்டு. அவை வெவ்வேறு பொருள் பற்றியனவாகக் கூட இருக்கலாம். விளக்கத்தில் அவ்வாறு ஒன்றுக்கு மேற்கூறப்பட்ட நூல்கள் ஒரு சுவடியில் இருப்பின் அவற்றிற்கும் தனித்தனியே விளக்க அட்டவணைகள் செய்யப் பெற்றுள்ளன. அங்ஙனம் செய்யப்பெறும் போது சுவடிக்குரிய எண் **கட்டு எண்**ணாகவும், அதிலுள்ள நூல்களுக்குத் தரப்படும் எண் **நூல் எண்**ணாகவும் **'அ'** என்ற பகுதியில் சுட்டப் பெறுகிறது. எனவே ஒரு சுவடியில்

ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் இருப்பின் கட்டுஎண் மாறாது. நூல் எண் தொடர்ச்சியாக எண்களைப் பெறும்.

முதல், இடை, கடை ஆகியவற்றில் ஏடுகள் இல்லா திருப்பின், இருந்து தெளிவற்று, சிதைந்து இருப்பின் அல்லது ஏடுகளுக்கு எண் இல்லாது இருப்பின் ஏடுகளின் மொத்த எண்ணிக்கை மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளது. இல்லாத ஏடுகளின் எண்களும், எண்ணிக்கை விபரங்களும் ஓரளவு தரப்பட்டுள்ளன. ஏடுகளின் எண்ணிக்கையைத் தரும் நிலையில் ஏடுகள் விடுபட்டிருப்பின் பிறைக்குறிக்குள் மொத்த எண்ணிக்கையைச் சுட்டும் நிலையும் பின்பற்றப்பட்டுள்ளன.

தொடக்கம், முடிவு ஆகியவற்றின் முடிவில் பெரும்பாலும் பாடல் எண் தரப் பெற்றுள்ளது. ஒரு சிலவற்றில் பக்க எண்ணும், ஒரு சிலவற்றில் பக்க எண்ணும், பாடல் எண்ணும் தரப்பெற்றுள்ளன.

முழுமையாக, இடையில், இறுதியில் என்றவாறு பல சுவடிகளின் ஏட்டெண்கள் சிதைந்துள்ளன. அதுபோன்ற நிலைகளில் இயன்றவரை பாடல்களை வைத்து ஏடுகள் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. பாடல்களிலும் தொடர்ச்சி முறை அறிதலில் இடர்ப்பாடு நேரும்போது ஏட்டுஎண் இல்லாதவை இறுதியில் சேர்க்கப் பெற்றுள்ளன.

ஒரு நூலில் பிற நூற் செய்திகள் இடம்பெற்று அவை அட்டவணை செய்யப்படாது இருப்பின் நூல் தலைப்புடன் முதலியன என்ற சொல்லாட்சி இடம் பெற்றிருக்கும். ஒரு நூலின் தொடர்பற்ற ஒன்றிரண்டு ஏடுகள், சிதைவு போன்றன அட்டவணை செய்யப் படாமைக்குக் காரணங்களாகின்றன.

அச்சுநூல் விவர அட்டவணை ஒரு சேரக் கிடைக் காமையும், விரைந்து அட்டவணையைத் தயாரித்து முடிக்க வேண்டிய நிலையும் இருந்ததனால் அவ்விவரக் குறிப்புகள் முழுமையாகத் தரப்படவில்லை. மேலும் ஒரு நூல் அச்சானதா அச்சாகாததா எனத் தெரிந்து கொள்வதில் பல இடர்ப்பாடுகள் உள்ளன. பல சுவடிகளில் இடம்பெற்றுள்ள பாடல் களையோ செய்திகளையோ திரட்டி வேறு ஒரு சுவடியாகத் தொகுக்கும் முறை மிகுதியாகக் காணப்படுகிறது. இங்ஙனம் உருவான சுவடிகளில் இடம்பெற்றுள்ள பல பாடல்களும், செய்திகளும் அச்சு நூல்களில் இடம்பெற்றதாக இருக்கின்றன. ஆயின் அச்சு

நூல்களில் இடம்பெறாத பாடல்களும் இருக்கின்றன. எனவே இத்தகைய சுவடிகளை அப்படியே எழுதித் தனி நூல்களாக வெளியிடுதல் இயலும். சான்றாக இந்நிறுவன வெளியீடான **சித்த மருத்துவ மணிகள்** என்ற நூலிலுள்ள பாடல்கள் பல சுவடிகளிலிருந்து திரட்டப்பெற்றுள்ளன. ஆயின் அவற்றுள் ஒரு சில பாடல்களே அச்சு நூலில் இடம்பெற்றுள்ளன. எனவே இத்தகைய சுவடி நூல்கள் **அச்சானதாகத் தெரியவில்லை** என்றே சுட்டப் பெறுகின்றன.

## தாள் சுவடிகள்

ஓலைச் சுவடிக் கட்டுகளின் தொடர் வரிசையில் இடம் பெறாமல் தாள் சுவடிகள் தனித்த எண்களைப் பெறுகின்றன. எனவே அவற்றை வேறுபடுத்திக் காட்ட **அ.** என்ற பகுதியில் தாள் என்ற சொல் சேர்க்கப்பட்டுள்ளது.

**அ.** தாள் : க.எண் + நூல் எண்

**ஆ.** பக்கங்கள்

**இ.** முழுமை/குறை

**ஈ.** அச்சானதா/அச்சாகாததா எனும் அமைப்பில் தாள் சுவடிகள் விளக்கம் பெறுகின்றன.

**காட்டு**

30. **அகத்தியர்** முப்பு 30

**அ.** தாள் : *11 : 40*

**ஆ.** *1-13* பக்கங்கள்

**இ.** முழுமை

**ஈ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

## நூல்களுக்குத் தலைப்பிடல்

இம்முதல் தொகுதியில் நூற்பெயர் தெரியாத நூல்களும், ஆசிரியர் பெயர் தெரியாத நூல்களும் இடம்பெற்றுள்ளன. நூற்பெயர் தெரியாத நூல்களுக்கு அந்நூற் செய்திகளை

உட்கொண்டு தலைப்புகள் என்னால் வழங்கப்பெற்றுள்ளன. அனுபவ மருத்துவம், மந்திரமும் மருத்துவமும், மருத்துவத் திரட்டு, மருத்துவப்பாடல், மருத்துவம், மருத்துவமும் மந்திரமும், மருந்து செய்முறைகள் எனப்பொதுப்பட அத் தலைப்புகள் இடம் பெற்றுள்ளன. இங்ஙனம் பொதுப்பட அமைந்த தலைப்புகள் அடைப்புக் குறிக்குள் காட்டப் பெறவில்லை. ஆயின் சில தலைப்புகள் சிறப்பு நிலையில் இடம்பெற்றிருப்பின் அவை மட்டும் அடைப்புக்குறிக்குள் தரப்பட்டுள்ளன.

## பதிப்புக் குறிப்புகள்

தொடக்கம், முடிவு, முற்குறிப்பு, பிற்குறிப்பு எனும் பகுதிகளில் சுவடிகளிலிருந்து பெயர்த்தெழுதும் போது, தற்போது எழுத்துச் சீர்திருத்த முறையைப் பின்பற்றி எழுத்துகள் மாற்றி அமைக்கப்பட்டுள்ளன. ஏடுகளில், பாடல்களில் இடம்பெற்றுள்ள தமிழ் எண்கள் அராபிய எண்களாகத் தரப்பெற்றுள்ளன. சுவடிகளினின்று இவ்வாறு பெயர்த்தெழுதிய பகுதிகளில் தேவையான இடங்களில் காற்புள்ளி, முற்றுப்புள்ளி முதலியன இடம் பெற்றுள்ளன. மருத்துவச் சுவடிகளில் வீசம், பலம் போன்ற எடை அளவுகளுக்குத் தரப்பெற்றுள்ள குறியீட்டு வடிவங்கள் சுட்டப் பெறாமல் அவற்றின் விரிவே எழுதப்பெற்றுள்ளன. சிதைந்த இடங்களைக் குறிக்க '....' என்றவாறு புள்ளிகள் இட்டும், சிதைந்த இடங்கள் வருவித்து நிரப்பப்பட்டிருப்பின் அதன்கீழ் கோடிட்டும் காட்டப்பெற்றுள்ளன. ஒரு நூலின் மாற்றுப் பிரதி இடம்பெறின் அதனை 'இன்ன எண்ணில் காண்க' என்பது சுட்டப்பெற்றுள்ளது. **உ** என்பது உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தையும், **த** என்பது தஞ்சைப் பல்கலைக் கழகத்தையும், **ச** என்பது தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையத்தையும், **கே** என்பது கேரளப் பல்கலைக் கழக அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தையும் குறிக்கும் சுருக்க விளக்கங்களாகின்றன.

அறுசீர், எழுசீர், எண்சீர் ஆகியவற்றாலான விருத்தப் பா வகைகளே மிகுதியாக உள்ளன. பெரும்பாலான மருத்துவச் சுவடிகள் எண்சீர் வருத்தங்களாலானவையே. வெண்பா, அகவல் போன்ற வகைகளும் உள்ளன. அவ்வகைகளுள்

அடங்காத சில பாடல்களும் இடையிடையே காணப்பெறு கின்றன. பல பாடல்கள் அந்தாதி அமைப்பில் அமைந்துள்ளன. மூலநூல்களில் யாப்பு பெரும்பாலும் சரியாய் அமைந்து, அவை பிரதி செய்யப்படும் போது பல யாப்புக் குறைபாடுகள் தோன்றுகின்றன. இதனைச் சில மருத்துவச் சுவடிகளில் அமையும் பல பாடல்களை நோக்குமிடத்து உணரமுடிகிறது.

**சுவடி நடை**

பேச்சு வழக்கு நடை பல மருத்துவச் சுவடிகளில் காணப்பெறுகின்றது. சில சுவடிகளில் மிகவும் தெளிவற்ற கையெழுத்து இடம் பெறுவதால் படித்தறிவது மிகவும் சிரமமாகவே உள்ளது. இவ்விடங்களில் பொருள் உணர்ந்து எழுத வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. சொற்றொடரிலுள்ள எழுத்துகள் ஒன்றன் மீது ஒன்று அமைந்து மிகவும் நெருக்கமாக எழுதப் பெற்றிருப்பதால் சொற்களை உணர்வதும், அது என்ன தொடர் என்று அறிவதும் கடினமாகிறது.

ஏடுகளில் காணப்பெறும் கையெழுத்துகளில் ஒருவர் கையெழுத்துப் போல் மற்றொருவர் கையெழுத்து இருப் பதில்லை. ஏடெழுதியோர் பயன்படுத்திய வடிவங்களையும், குறியீடுகளையும் நூல் முழுவதும் படித்த பின்னரே முழுமையாகத் தெரிந்து கொள்ள முடிகிறது. ஆயின் அட்டவணைக்காக ஓரளவு மட்டும் சுவடியைப் பயன் படுத்தும் நிலையில் ஏடெழுதியோரின் சில எழுத்து வடிவங்களையும் குறியீடுகளையும் புரிந்து கொள்வதில் சிக்கல் ஏற்படுகின்றது. காட்டாக 'களர்ச்சி' என்பது 'களச்சி' என வரின் அது அப்படியே தரப்பெற்றுள்ளது. 'தழுதாழை' என்பது தருதாழை என வரின் 'ழு' என்ற எழுத்து 'ரு' வடிவில் எழுதப் பெற்றிருக்கலாம் என நினைத்து 'தழுதாழை' என்றவாறு கொள்ளப் பெற்றுள்ளது. மருத்துவச் சுவடிகள் பிழை மிகுந்ததாக இருப்பினும் வழக்கில் அவை இப்படியும் வழங்க வாய்ப்பு இருப்பதால் அனைத்துப் பிழைகளும் திருத்தப் பெறவில்லை. இயன்றவரை, பேச்சுவழக்கு சுவடிகளில் உள்ளவாறே தரப்பெற்றுள்ளது.

இத்தொகுப்பில் தரப்பெற்றுள்ள மருத்துவச் சுவடிகளின் அட்டவணையைப் பிற இடங்களில் வெளியிடப்பட்டுள்ள

மருத்துவச் சுவடிகளின் அட்டவணைகளோடு ஒப்பிட்டு ஆய்ந்து அதன்வழி பெறப்பட்ட பல கருத்துகள் குறிப்புரை என்ற பகுதியில் சேர்க்கப்பெற்றுள்ளன. இக் கருத்துகளை மூல நூல்களோடு ஒப்பிடும் நிலையில் பல மாற்றங்கள் எற்பட வாய்ப்புண்டு. மேலும் சுவடிகளைக் கூர்ந்து காணக்காண மாற்றங்கள் ஏற்படவும் வாய்ப்புண்டு. அதைப் போன்று கருத்துகளும் வளர்ச்சி காரணமாக மாறலாம்.

## ஆய்வுரை

இந்த அட்டவணையில் பல சுவடிகள் அச்சாகாதவை. பல நூல்கள் நல்ல நிலையிலும், முழுமையாகவும், குறையுடையனவாகவும், சிதைந்தும், பாடலாகவும், உரைநடையாகவும் காணப்படுகின்றன. அகத்தியர், இராமதேவர், கருவூரார், கொங்கணர், சட்டைமுனி, தட்சிணாமூர்த்தி, தன்வந்திரி, திருமூலர், திருவள்ளுவர், தேரையர், புலிப்பாணி, போகர், மச்சமுனி போன்ற சித்தர்களின் பெயர்களால் அமைந்த நூல்கள் யாவும் பாடல் வடிவிலுள்ளன. குறிப்பிட்ட தலைப்போ, நூற்பெயரோ இன்றிப் பல உரைநடை நூல்களும், சில பாடல் வடிவிலான நூல்களும் காணப்படுகின்றன. இச்செய்யுள் வடிவிலான நூல்களுக்கு நூற்பெயர் அறியும் முயற்சி மேற்கொள்ளப்படவேண்டும் என்பதற்காக அவை **மருத்துவப் பாடல்** என்ற பொதுத் தலைப்பில் தரப்பட்டிருக்கின்றன. உரைநடை நூல்கள் மட்டுமின்றி உரைநடையும் பாடலும் கலந்ததாகச் சில சுவடிகள் உள்ளன. இவை பல ஆசிரியர்களால் இயற்றப் பெற்றவை. மருத்துவ நூலறிவு, முன்னோர் மொழிப்பொருள், அனுபவத்தில் பெற்ற சில உண்மைகள் போன்றவற்றை முதன்மையாகக் கொண்டு இந்நூல்கள் எழுந்துள்ளன.

சில சுவடிகள் மருத்துவக் குறிப்புகளின் கலப்புச் சுவடிகளாகவும் காணப்படுகின்றன. சிதைந்த நிலையில் சில சுவடிகள் இருப்பது மட்டுமின்றி நல்ல சுவடிகள் சிலவற்றிலும் ஏடுகளில் மாற்றம், ஏடுகளில் எண்களில் மாற்றம், செய்திகளில் மாற்றம் என்ற நிலைகளுள்ளன. இவற்றில் செய்தித் தொடர்ச்சியை முழுமையாகக் காண இயலவில்லை.

அச்சுருக்காணாத நூல்களாகப் பெரும்பாலும் காணப் படுபவை உரைநடையிலான நூல்களோ. அவை, நோய்க்குரிய மருந்துகளின் பட்டியல்களை அறிவிப்பனவாய் உள்ளன. அவை பெரும்பாலும் முறையான நூலாக அமையாமல் பல நூல்களிலிருந்து பொழிப்பாகத் திரட்டியும், அனுபவ மருத்துவக் குறிப்புகளாகத் தொகுக்கப்பட்டும் தனித்தனியே சுவடிகளாக அமைக்கப் பெற்றுள்ளன. பல சுவடிகளிலிருந்து செய்திகளைத் திரட்டி எழுதப்பெற்ற நிலையைச் சில சுவடிகள் சுட்டியுள்ளன. அவ்வகை நூல்களிலும் பல அரிய செய்திகள் பொதிந்துள்ளன. பெரும்பாலும் அவற்றிலுள்ள மருத்துவக் குறிப்புகள் தெளிவுடனும், **வட்டார வழக்கை** எதிரொலிப் பதாகவும் உள்ளன. மேலும் இந்நூல்களில் எளிய நடையிலான மருத்துவ முறைகள் சொல்லப்பெற்றுள்ளன. அவற்றுள் பல குறிப்புகள் மிகவும் பயனுள்ளதாக உள்ளன. பல அரிய பாமர மக்களும் புரிந்து தயாரிக்க முடிந்த மருத்துவக் குறிப்புகளை, மருந்து செய்முறைகளை விளக்குவனவாக விளங்குகின்றன. அவை எளிய முறைகளே ஆயினும் அவற்றையெல்லாம் ஆய்வுக்குட்படுத்தி வெளிப்படுத்தும் நிலை விரைந்து உருவாதல் வேண்டும்.

இத்தொகுதியில் அச்சாகாமல் உள்ள நூல்கள் பலவற்றுள் சிறந்த சில நூல்களும் காணப்படுகின்றன. **அகத்தியர் கம்பு சூத்திரம்** *(10:39)* என்ற மிகச்சிறிய தாள் சுவடி வெளிவரின் ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகளுக்கு முன் உள்ள சிலம்பம் பற்றிய சில் அரிய உண்மைகள் தெரியவரும்.

**பல வாகடத்தில் சோதித்து எழுதிய கைவாகடம் அட்டவணை** *(510:789)* என்ற நூல் பதினெண் சித்தர்கள் அருளிய பல நூல்களிலிருந்து திரட்டித் தொகுத்து எழுதப்பெற்ற சிறந்த நூல் என்பதை நூல் தலைப்பும், நூற்செய்திகளும் காட்டுகின்றன.

**பதார்த்த குண சிந்தாமணி** என்ற பெயரில் சில சுவடிகள் உள்ளன. அதில் ஒரு தாள் சுவடியில் *(4:31)* காப்புப் பாடல்களையும் சேர்த்து 601 பாடல்கள் உள்ளன. இந்நூலும், சரக்கு சிந்தாமணி *(4:30)* என்ற தாள் சுவடி நூலும் அச்சான பதார்த்த குண சிந்தாமணி என்ற நூல்களினின்றும் வேறானவை. எனவே இப் பொருண்மையிலுள்ள சுவடிகள் அனைத்தையும்

அப்பொருண்மை தொடர்பான அச்சு நூல்களுடன் ஒப்பிட்டு அச்சிடுதல் ஆய்வுலகிற்குத் துணை செய்யும்.

**அகத்தியர் நிகண்டு தெரியும் வகை** (257:475), **சண்முக நிகண்டு** (524:854), **மருத்துவ அகராதி** (260:480) முதலானவை அச்சுருக்காணாத சிறந்த நூல்களாக உள்ளன. இவற்றைப் படியெடுத்துத் தொகுத்து வெளியிடின், அவற்றுள் திரும்பத் திரும்ப இடம் பெறும் சொற்கள் கண்டறியப்பட்டு நிகண்டுகள், அகராதிகள் தயாரிக்கும் போது அவை தவிர்க்கப் பெறும்.

சில சுவடிகளின் இறுதியில் அட்டவணை (Index) உள்ளது. இதில் குறிப்பிட்ட ஒரு சுவடிக் கட்டில் உள்ள நூல்களின் பெயரும், பாடல்களின் எண்ணிக்கைகளும், யாப்பு பற்றிய விவரமும் உள்ளன. இதிலிருந்து இந்தச் சுவடியில் விடுபட்ட நூல்களை அறிய முடியும்.

பொதுவாகச் சுவடிகளில் ஏடுகளுக்கு மட்டும் எண்கள் தரப்படுகின்றன. இரு பக்கங்களைக் கொண்ட ஓர் ஏடு ஒன்று என்ற எண்ணை மட்டுமே பெற்றிருக்கும். ஆயின், **அகத்தியர் வைத்திய காவியம் 1500** (241:457) என்ற சுவடியில் ஒவ்வொரு ஏட்டின் இருபக்கங்களுக்கும் எண்கள் தரப்பட்டுள்ளன. மேலும் தமிழ் எழுத்துகளில் எண்கள் தரப்பெற்றிருப்பதுடன், இன்று வழக்கிலுள்ள அராபிய எண்களும் தரப்பட்டுள்ளன.

கட்டுஎண் 556-இல் வைத்தியம் பல மருந்துகள், வைத்தியம், வாலை வாகடம் என்ற மூன்று நூல்கள் உள்ளன. இம் மூன்று நூல் தலைப்புகளின் முன்பும் **விசுமில்லா கிர் ரகுமானி கிர் ரகீம்** என்ற தொடர் சேர்த்து எழுதப் பெற்றுள்ளது. **பிசுமில்லா நிர் ரகிமான் நிர் ரகீம்** என்பது இதன் திருந்திய வடிவம். அளவற்ற அருளாளரும், நிகரற்ற அன்பாளருமாகிய அல்லாவின் பெயரால் நூலைத் தொடங்குகின்றேன் என்பதே இத்தொடரின் பொருள். பொதுவாக இசுலாம் இலக்கியச் சுவடிகளிலும், இசுலாமியர் படியெடுத்த சுவடிகளிலும் இச்சொல்லாட்சி பயன்படுத்தப் படுகிறது. பிற சுவடிகளில் ராமஜெயம், குருவாழ்க, குருவே துணை, சிவகடாட்சம், தேவி துணை என்று எழுதப்படுவது போன்றதே இச்சொல்லாட்சி.

# சித்த மருத்துவச் சுவடிகளில் பதிப்புச் சிக்கல்கள்

**சி**த்த மருத்துவ நிறுவனச் சுவடிகளை அட்டவணை செய்யும் போது பல சிக்கல்களும், சிந்தனைகளும் தோன்றின. குறிப்புரை என்ற பகுதியில் சில செய்திகளைச் சேர்ப்பதற்காகப் பிற இடங்களில் வெளியிட்டுள்ள அட்டவணைகளை நிறுவனச் சுவடிகளோடு ஒப்பு நோக்கிய போது இந்தச் சிக்கல்களும் சிந்தனைகளும் தன்னளவில் பரந்து விரிந்து நின்றன. இத்தொகுதியிலுள்ள நூலோடு தொடர்புடைய சிந்தனைகளும், சிக்கல்களும் அந்தந்த நூலின் குறிப்புரையில் சேர்க்கப் பெற்றுள்ளன. இம் மருத்துவப் பதிப்புகள் குறித்துக் கிடைத்த செய்திகள் அனைத்தையும் இங்குத் தருதல் விரிவு கருதி இயலாது என்ற நிலையில் ஒரு சில செய்திகள் மட்டும் இவண் தரப்படுகின்றன.

மனப்பாடம் செய்ததை அப்படியே எழுத முற்படுதல், பிறர் கருத்தைத் தன் நடையில் வடித்தல், ஒரு நூலில் தொடர்புடைய பிற நூற் செய்திகளை நுழைத்தல், தனக்குத் தெரிந்த புதிய செய்திகளையும், விருப்பம், சூழல் காரணமாய்ச் சில செய்திகளையும் இடைச் செருகல்களாக நுழைத்தல் என்பன போன்ற நிகழ்வுகள் மருத்துவச் சுவடிகளில் காணப்படும் பல்வேறு சிக்கல்களுக்குக் காரணங்களாகின்றன.

**அகத்தியர்**

அகத்தியர் ஒருவரா பலரா, அகத்தியர் பெயரில் கிடைக்கும் நூல்களுள் அகத்தியர் இயற்றிய மூல நூல்கள் உள்ளனவா, அகத்தியர் கருத்துகள் மட்டுமே அகத்தியர் பெயரிலமைந்த நூல்களில் உள்ளனவா, அகத்தியர் பெயரிலமைந்த நூல்களில் பிற சித்தர்களின் கருத்துகளும் இடம் பெற்றுள்ளனவா, அகத்தியரல்லாத பலர் இயற்றிய நூல்கள் அகத்தியர் பெயரில் அமைகின்றனவா என்பன போன்ற கேள்விகள் பலவற்றைச் சித்த மருத்துவச் சுவடிகள் தோற்றுவிக்கின்றன. இத்தகு அகத்தியர் பற்றி நோக்கும் போது தமிழ் மருத்துவ முறையை வகுத்த பதினெண்மர்களுள் இவர் தலையாயவர் என்பது தெரிகிறது. ஆயின் வடநாட்டிலும் தென்னாட்டிலுமாக ஏறக்குறைய 37 அகத்தியர்கள் பல்வேறு காலங்களில்

வாழ்ந்ததாகக் குறிப்புகள் கிடைக்கின்றன. அகத்தியர் என்ற பெயர் நல்ல புகழ் பெற்ற பெயராக முதன் முதலில் அமைந்துவிட்டதால் அவர் பெயரால் பல மருத்துவ நூல்கள் வெளிவந்து சிறப்பெய்தியுள்ளன. எனவே பின்னர் வந்தவர்கள் அகத்தியர் பெயரால் வெளியிட்டால் நல்லதாக, சிறப்பானதாகக் கருதப்பட்டுப் புகழுடன் திகழும் என்று கருதி, தம்முடைய நூல்களை அகத்தியர் பெயரில் வெளியிட்டிருக் கின்றனர். எனவே இன்று கிடைக்கும் மருத்துவ நூல்களுள் பெரும்பான்மையான நூல்கள் அகத்தியர் பெயராலேயே கிடைக்கின்றன. இங்ஙனம் அகத்தியர் பெயரில் பிற சித்தர்கள் எழுதி இருப்பதால் மருத்துவ நூல்கள் பலவற்றிற்கு ஆசிரியர் அகத்தியர் என்று கூறுவது உறுதியானதன்று.

மேலும் அகத்தியர் போன்றோர் பெயர்களால் வழங்கப் பெறும் நூல்கள் அவர்கள் இயற்றியவையோ, பாடியவையோ அல்ல. அச்சித்தர்களின் மருத்துவ முறைகளை, கொள்கை களைப் பரம்பரை, பரம்பரையாக அறிந்தவர்களும், அவர்கள் பரம்பரையைச் சேர்ந்தவர் களும் பாடி வைத்தவை. எனவே அகத்தியர் பெயராலும், பிற சித்தர்கள் பெயர்களாலும் வழங்கும் பல மருத்துவ நூல்கள் பிற்காலத்தில் மற்றை யோரால் எழுதப்பட்டவை. அகத்தியர் போன்றோரின் கருத்து செவிவழி பேணப்பட்டு, பிற்காலம் எழுதப் பெற்றதால் நூலின் நடை பழைமைப் பொலிவைப் பெறவில்லை. அகத்தியர் மருத்துவத்தில் தேர்ந்து இருந்ததால் பின்வந்த பலர் தாம் எழுதிய பல நூல்களை அகத்தியர் பெயரில் எழுதியிருக் கின்றனர்.

### அகத்தியரின் வேறு பெயர்கள்

அகத்தியருக்குப் பொதிகாசல மூர்த்தி என்றொரு பெயர் இருப்பதை, அகத்தியர் பரிபூரணம் என்ற நூலில் (த. 810. 3) வரும் பொதிகாசல மூர்த்தி யருளிச் செய்த வைத்திய பூரணம் 400 என்ற தொடர் காட்டுகிறது. மேலும் இதுபோன்ற வேறு ஒரு நூல் பொதிகாசலம் 400 (ச. 1309) என்ற பெயரிலும் கிடைக்கின்றது.

அகத்தியருக்குப் பொதிகையார் என்ற பெயரும் உண்டு என்பதைப் பொதிகை முந்நூறு (உ.வே.சா. நூலக விளக்க அட்டவணை) என்ற நூலின் இறுதியில் எழுதப்பட்டுள்ள பொதிகையார் பாடல் முற்றும் என்ற தொடர் காட்டுகின் றது.

அகத்தியருக்குக் கும்பமுனி என்றொரு பெயருமுண்டாத லால், **கும்பமுனி சூத்திரம் 35** (த.800) என்ற நூலையும், **கும்பமுனி நாயனார் வாக்கியம் ஞானம்** (ச. 725.a) என்ற நூலையும் அகத்தியரின் நூல்களாகக் கருத இடமுண்டு.

அகத்தியருக்கு உள்ள வேறு பெயர்களுள் தட்சிணா மூர்த்தி என்ற பெயரும் ஒன்று என்று கருதப் பின்வரும் சில குறிப்புகள் இடமளிக்கின்றன.

அகத்தியர் சூத்திரம் முப்பத்திரண்டு (ச. 129.b) என்ற பெயரிலுள்ள ஒரு நூலின் மாற்றுப் பிரதி தட்சிணாமூர்த்தி 30 (த. 501) என்ற பெயரிலும், அகத்தியர் சூத்திரம் 50 (உ. 487:744) என்ற நூலின் மாற்றுப்பிரதி தட்சிணாமூர்த்தி வைத்தியம் 50 (த.1583 - 4) என்ற பெயரிலும் கிடைக்கின்றன.

அகத்தியர் பரிபாசை என்ற நான்கு காண்டங்களை உடைய நூலில் ஒவ்வொரு காண்டத்திலும் நூறு பாடல்கள் இடம் பெறுகின்றன. தட்சிணாமூர்த்தி யருளிச் செய்த பரிபாஷை (த. 552) என்ற நூலிலுள்ள பாடல்கள் அகத்தியர் பரிபாஷை முதலாங் காண்டத்தில் (ச. 270 A) இடம் பெற்றவையே. எனவே அகத்தியர் பரிபாஷை என்ற பெயரில் கிடைக்கும். பிற காண்டங்கள், தட்சிணாமூர்த்தி பெயரில் அமையினும் நூல் ஒன்றாகவே இருத்தல் கூடும்.

அகத்தியர் பரிபூரணம் 1200 என்ற நூலின் மாற்றுப் பிரதி தட்சிணாமூர்த்தி பரிபூரணம் (உ. தாள். 18.1) என்ற பெயரிலும், தட்சிணாமூர்த்தி வகாரம் 100 (த. 801 - 3) என்ற நூலின் மாற்றுப் பிரதி அகத்தியர் சூத்திரம் 100 (உ. 494 : 752) என்ற பெயரிலும் கிடைக்கின்றன.

இங்ஙனம் ஒரே நூல் இவ்விரண்டு ஆசிரியர்களின் பெயர்களில், இருவேறு நூல்களாகக் கிடைப்பது மட்டுமின்றி, ஒரே சுவடி நூலில் இவ்விரண்டு ஆசிரியர் களின் பெயர்களும் சுட்டப்படும் நிலையைத் தட்சிணா மூர்த்தி வகாரம் 16 (த.803-2) என்ற நூலின் இறுதிப் பாடலான 16 ஆம் பாடலிலுள்ள,

பேணவே பதினாறு மிதுவே யாகும்
பலமாகும் அகத்தியர்வாக் கியந்தான் முற்றே (16)

என்ற அடிகள் காட்டுகின்றன. அதே போல் தட்சிணாமூர்த்தி தீட்சா விதி 200 (ச. 263. B) என்ற நூலின் இறுதியில் அகஸ்தியர் மூர்த்தி தீட்சா விதி முற்றும் என்றும், தட்சிணா மூர்த்தி வைத்தியம் 1500 (த. 797) என்ற நூலின் முதல் ஏட்டில் தெச்சணாமூர்த்தி வயித்தியம் ஆயிரத்தைந்நூறு என்றும், இறுதியில் அகத்தியர் வாகட. சூத்திரம் 1500 எழுதி நிறைந்தது முற்றும் என்றும் உள்ளன.

இங்ஙனம் தட்சிணாமூர்த்தி பெயரில் அமைந்த நூல்களில் அகத்தியர் பெயர் காணப்படுவது போலவே, அகத்தியர் பெயரிலமைந்த நூல்களில் தட்சிணாமூர்த்தி பெயர் காணப்படுகின்றது. அகத்தியர் வைத்திய காவியம் (த. 2395) என்ற நூலின் முதல் ஏட்டில் தட்சிணாமூர்த்தி வயித்தியம் 1500 என்றும், இறுதியிலுள்ள ஏட்டில், நூல் முடிந்த பின்னர் அகத்தியர் அருளிச்செய்த ஆயிரத்தைந் நூறு எழுதி நிறைந்தது முற்றும் என்றும் எழுதப் பெற்றுள் ளன. அதேபோல் அகத்தியர் முப்பு (உ. 529. 863) என்ற நூலின் இறுதியில், 'தெட்சிணாமூர்த்தி அருளிச் செய்த முப்பு அன்பது முற்றும்' என்றுள்ளது.

தட்சிணாமூர்த்தி சூத்திரம் 10, அகத்தியர் சூத்திரம் 10 (உ. 199:404), இராமதேவர் சூத்திரம் 10 என்ற இவை மூன்றும் ஒரே நூலின் மாற்றுப் பிரதிகளாக இருந்தும், மூன்று ஆசிரியர்களின் பெயர்களில் கிடைக்கின்றன. அகத்தியரின் வேறு பெயராகத் தட்சிணாமூர்த்தி என்ற பெயர் இருக்க வாய்ப்பு இருப்பதால் இந்நூல் அவ்விருவர் பெயரில் அமைதல் ஏற்புடைத்தே. ஆயின் இந்நூல் இராமதேவர் பெயரிலும் கிடைப்பதால் ஒரு நூலுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியர் என்ற நிலை ஏற்பட்டதற்கான காரணங்கள் தெளிவு படுத்தப்பட வேண்டும். இதன் பல மாற்றுச் சுவடிகள் இராமதேவர் பெயரில் கிடைக்கின்றன. காட்டு: **ராமதேவர் 1000 இல் சூத்திரம் 10** (ச. 289A), எனவே இது அவருடைய நூலாக இருத்தல் கூடும் என்ற எண்ணத்திற்கும் இடமளிக்கிறது.

ஓர் ஆசிரியரின் நூலில் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியர்களின் பெயர் வருதல் என்ற நிலை சுவடிகளில் பொதுவாகக் காணப்பெறினும், முன்னர் சுட்டிய பல குறிப்புகளை நோக்க, அகத்தியரும் தட்சிணா மூர்த்தியும்

ஒருவரே என்ற முடிவுக்கு வரமுடிகிறது. எனவே அகத்தியர் பெயரிலுள்ள பல நூல்கள் தட்சிணாமூர்த்தி பெயரிலும் கிடைக்க வாய்ப்பு இருக்கிறது. ஆயின் அகத்தியர் பெயரிலுள்ள நூல்களின் எண்ணிக்கை மிகுதி யாக இருப்பதால் அவை அனைத்தும் தட்சிணாமூர்த்தி பெயரில் கிடைத்தல் இயலாது. இருவர் பெயர்களிலும் கிடைக்கும் நூல்களை ஒப்பிடும் போது அகத்தியருடைய வேறு பெயர்களுள் தட்சிணாமூர்த்தி என்ற பெயரும் ஒன்று என்ற கருத்து வலுப்பட்ட பல சான்றுகள் கிட்டலாம். அகத்தியர் என்பது தமிழ்ப் பெயராக இருப்பதால் வடமொழி செல்வாக்கின் காரணமாகத் தட்சிணாமூர்த்தி என்ற வடமொழிப் பெயரும் அகத்தியருக்குப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

**சித்த மருத்துவ அச்சு நூல்கள்**

18-ஆம் நூற்றாண்டில் வெளிவந்துள்ள 300-க்கும் மேற்பட்ட சித்த மருத்துவ நூல்களுள் பெரும்பான்மை பாடல் வடிவிலான மூல நூல்கள். 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், 19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் உரைநடை நூல்கள் வரத் தொடங்கியுள்ளன. 18-ஆம் நூற்றாண்டு சித்த மருத்துவ நூல் பதிப்புகள் பலவற்றில், ஆசிரியர் பெயர், பதிப்பாண்டு, அச்சகம், எந்தச் சுவடியிலிருந்து பதிப்பு செய்யப்பட்டது. சுவடியைப் பற்றிய குறிப்புகள் என்பன இல்லை. மூல நூலைப் பதிப்பித்த ஆசிரியர் தங்களைப் பதிப்பாசிரியர் என அழைத்துக் கொள்ளாத நிலையும் அச்சக உரிமையாளரின் பெயரைப் பெரியதாகப் போடும் நிலையும் இருந்துள்ளன. ஒரு சில பழம் பதிப்பு நூல்களில் மட்டுமே ஒரு நூல் எந்தச் சுவடியிலிருந்து பதிப்பு செய்யப் பெற்றது என்பது போன்றவை இடம் பெற்றுள்ளன. ஏடுகள் பற்றிய குறிப்புகள், நூல் அச்சிடப் பொருளுதவி செய்தவர்களின் பெயர்கள், பதிப்பாசிரியரது ஆசிரியர், பெற்றோர், பதிப்பு நோக்கங்கள் என்பன விளக்கமாகச் சில நூல்களின் முன்பக்கத்தில் கூறப்பெற்றுள்ளன. இப்பழம் பதிப்புகளில் இடம் பெற்றுள்ள சில விளம்பரங்களின் வழி நூல் வெளியான காலத்தில் புழக்கத்திலிருந்த சுவடிகள், நூல்கள் முதலான பல புதிய விவரங்களை அறிய முடிகிறது.

**அச்சுநூல்களில் காணப்படும் சிக்கல்கள்**

இங்ஙனம் வெளிவந்த சித்த மருத்துவ நூல் பதிப்புகளில் பல சிக்கல்களைக் காணமுடிகின்றது. அவற்றுள் ஒரு சில இவண் சுட்டப் பெறுகின்றன. சித்த மருத்துவ நூற்பெயரில் இடம் பெற்ற ஆசிரியர் பெயர் ஒன்றாக இருக்கப் பிறர் பெயர்களும் ஆசிரியர் பெயரே என்று கருதும் வண்ணம் பாடல்கள் அமைந்துள்ளன. ஒரே ஆசிரியரின் பெயரில் உள்ள நூல்களில் முரண்பட்ட கருத்துகள் காணப்படு கின்றன. ஓர் ஆசிரியரின் பெயரில் வெளிவந்த நூலில் பிற ஆசிரியர்களின் பாடல்களும் கலந்துள்ளன. தேரையர் வாகடம் என்ற நூலில் அகத்தியரின் பாடல்கள் கலந் துள்ளதைக் காட்டாகக் கூறலாம். நூல் ஆசிரியர் பெயரின்றி, சில நூல்கள் வெளிவந்துள்ளன. ஆயின் நூற்பகுதியில் நூலாசிரியர்களின் பெயர்கள் இடம் பெற்றுள்ளன. வர்மவிதி என்ற நூலிற்கு ஆசிரியர் பெயர் இல்லை. நூற்பகுதியில் பரமுனியைப் பற்றியும், அகத்தியரைப் பற்றியும் உள்ளதால் அகத்தியர், பரமுனி ஆகியோரின் பாடல்கள் கலந்துள்ளன என்பது பெறப்படுகிறது.

ஒரே வகையான பாடல்கள் இரு சித்த மருத்துவ நூல்களில் உள்ளன. ஆத்மரட்சாமிர்தம் என்ற நூலில் கர்ப்ப இலட்சணம் என்ற தலைப்பில் வரும் சூல் மருத்துவம், மலட்டு நோய் பற்றிய பாடல்களும், கர்ப்ப, பாலரோக சிகிச்சை என்ற நூலில் வரும் பாடல்களும் ஒன்றாகவே காணப்பெறுகின்றன. திருமூலர் எழுதியதாக உள்ள சில பாடல்கள் அகத்தியர் வைத்தியம் என்ற நூலிலும் காணப்பெறுகின்றன. இங்ஙனம் சில செய்திகள் ஒன்றாக இருப்பினும் அவை வெவ்வேறு ஆசிரியர்களுடையது எனத் தனித்தனியே கிடைக்கின்றன. சித்தர்களின் பெயரால் சித்தமருத்துவ நூல்கள் பல அச்சிடப்பட்டு வெளியாகியுள்ளன. இருப்பினும் நூலாசிரியர் பெயரைத் தெளிவாகக் கூறமுடியாத நிலை வெளிவந்த, வெளிவராத சுவடி நூல்களில் நிலவுவதைத் தவிர்க்க முடியாத நிலையே உள்ளது. பிரமமுனி 800 என்ற பெயரில் பதிப்புச் செய்யப் பெற்ற நூல், போகர் பெயரால் வழங்கும் போகர் வைத்தியம் 700 என்ற நூலே. எனவே மருத்துவ நூல்களைப் பதிப்புச் செய்யும் போது பாடல்களைப் பற்றிய தெளிவான கண்ணோட்டம் இருக்க வேண்டுமென்பது தெரிகிறது.

பதிப்பின் போது தொடர்புள்ள வேறு மருத்துவ நூல்களையும் கருத்தில் கொண்டு, அவற்றுடன் ஒப்பிட்டு அறிந்தும், சில நூல்கள் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. பால வாகடத் திரட்டு என்ற நூலுக்குப் பிள்ளைப் பிணிவாகடம் என்ற நூல் பெரிதும் ஆதாரமாயிருந்திருக்கிறது. ஆயின் பாலவாகடத் திரட்டைப் பதிப்பித்த முருகேச முதலியார் தாம் பயன்படுத்திய சுவடி பற்றிய விவரங்களைக் குறிப்பிட வில்லை.

ஒருபழைய சித்த மருத்துவ நூலில் நூற்றுக்கும் மேற்பட்ட நூல்கள் அடங்கியுள்ளன. முதலும் முடிவும் இல்லாததால் நூலைத் தொகுத்த பதிப்பாசிரியர், வெளியிட்டவர், ஆண்டு முதலான விவரங்களை அறிய முடியவில்லை. இப்பதிப்பு நூலில், அகஸ்திய மகா முனிவர் குரு நூல் முப்பு 50' என்ற நூல் 11 ஆவது நூலாகவும், 26 ஆவது நூலாகவும் இரண்டுமுறை இடம் பெற்றுள்ளது. அதேபோல் அகஸ்திய மகாமுனிவர் முப்பூ - 30, அகஸ்திய மகா முனிவர் தீகைஷ பாடல்-5, அகத்திய முனிவர் சோதிமணி சூத்திரம்-8 என்ற நூல்களும் இந்நூலில் இரண்டிரண்டு முறை பாட வேறுபாடுகளுடன் இடம் பெற்றுள்ளன. இங்ஙனம் இரண்டுமுறை இடம் பெறும் நூல்கள் முதலில் உரைநடை வடிவிலும், அடுத்துச் செய்யுள் வடிவிலும் தரப்படுகின்றன. உரைநடையாயின் அடிபிரியும் இடங்களில் சிறுகோடு அல்லது காற்புள்ளி இடப் பெறுகின்றன. செய்யுளாயின் அடிகள் பிரிக்கப்பட்டு, சீர்கள் சரியாகப் பிரிக்கப்படாமல் உள்ளன.

இரண்டுமுறை இடம் பெறுகின்றன என்பது உணரப் படாததன் காரணமாகவும், ஒன்றுக்கு மேற்பட்டவர் மெய்ப்புத் திருத்தியதாலும் இந்நூல்கள் இரண்டிரண்டு முறை இடம் பெற்றிருக்கலாம். ஒரே நூல் உரைநடை, செய்யுள் என்ற வடிவங்களில் அச்சுநூலில் அமைவதால் சுவடிகளில் இவ்வமைப்பு இருந்து, உள்ளதை உள்ளவாறே பதிப்பித் திருக்கலாம். அல்லது சுவடிகளில் உரைநடை வடிவு மட்டுமே இருந்து இரண்டாம் சுவடியைப் பதிப்பித்தவர் அதை யாப்பு முறையில் அமைத்திருக்கலாம். எப்படி இருப்பினும் ஒரு நூலுக்குக் கிடைத்த இரு சுவடிகளே அச்சேறியுள்ளன என்பதைப் பாடவேறுபாடு, வடிவம் போன்றவற்றால் அறிய முடிகிறது. எனவே ஒரு நூல் இரண்டுமுறை இடம் பெறுகின்றது என்பது அறிந்தே அச்சிடப் பட்டிருக்கிறது என்று கருதலாம்.

## மருத்துவச் சுவடிகளில் காணப்படும் சிக்கல்கள்

### காப்பு

கவிதன் வழிபடு கடவுளையோ, எடுத்துக்கொண்ட நூலுக்கு ஏற்புடைக் கடவுளையோ வாழ்த்திக் காப்பாக வேண்டும் என்று துதிப்பது காப்புப் பாடலாகும். இக்காப்புப் பாடல்கள் குழப்பத்தை விளைவிக்கும் வண்ணம் ஒரு பாடலே வேறு பல நூல்களுக்குக் காப்புப் பாடலாக வருவதுண்டு. சுவடி எழுதுவோர் அந்நூலுக்குரிய காப்புப் பாடலை எழுதுமுன் தம் வழிபடு கடவுளைப் பற்றியோ அல்லது தமக்குத் தெரிந்த கணபதி பாடலையோ எழுதிச் சேர்ப்பதே இதற்குக் காரணமாகிறது. நூலுக்குத் தொடர்பில்லாத கடவுள்வாழ்த்து காப்பாக அமையும் போது அவ்வகையான பாடல்களை நூலுக்குப் புறம்பாகத் தனியேட்டில் எழுதும் மரபு தொடக்கக் காலத்தில் பின்பற்றப் பெற்றிருக்கும். இம்முறையை இன்றும் பல சுவடிகளில் காணமுடிகின்றது. இச்சுவடிகள் மீண்டும் படியெடுக்கப்பட்டபோது, படியெடுக்கப்பட்டவரால் புதிதாகக் காப்புப் பாடல் உருவாக்கப் பெற்றபோது காப்புப் பாடலை எழுதிவிட்டு, நூல் பாடலையும் தொடர்ந்து அதே ஏட்டில் எழுதும் நிலை உருவாகியிருக்கலாம். மேலும் ஒன்று, ஒன்றுக்கு மேற்பட்டு அமைந்த காப்புப் பாடல்களுக்கு எண் தரப்பட்டிருப்பினும் நூலின் முதல் பாடலுக்கு ஒன்று என்ற எண்ணைத் தரும் முறையே முன்பு பின்பற்றப் பெற்றிருக்கும். பின்னர் எழுதப்பெற்ற பல சுவடிகளில் காப்புப் பாடல்களுக்கு எண்கள் தரப்பட்டு, நூல் பாடல் ஒன்று என்ற எண்ணைப் பெறாமல் தொடரெண்ணையே பெறுகிறது. மேலும் நூலோடு தொடர்புடைய காப்புப் பாடல், வேறுசில நூல்களில் காப்புப் பாடலாய் இடம் பெறும் நிலையும், ஒரு நூலுக்கு உள்ள பல சுவடிகளில் வரும் காப்புப் பாடல் வேறுவேறாய் அமையும் நிலையும் காணப்படுகின்றன.

மனோன்மணி, குண்டலியாள், சிவபெருமான் இவர் களுடன் இணையாக மூலிகைகளைக் கூறி மூலிகைகளும் காப்பாக வேண்டுமென்று வேண்டுவதுபோல் அமையும் காப்புப் பாடல்கள் புதுமையாக உள்ளன. இவ்வகைக் காப்புப் பாடல்கள் அனைத்தும் தொகுத்து நுண்ணிதின் உணர்ந்து ஆய்வு செய்யப்பெறின் நூலாசிரியர் பலரின் இலக்கியக்

கொள்கை புலனாவதுடன் மருத்துவப் பேருண்மைகள் பல வெளிப்படும்.

**ஆசிரியர் பெயரில் ஏற்படும் சிக்கல்கள்**

அகத்திய நாயினார் அருளிச் செய்த சூரிய வாகட வெண்பா (ஆர். *2496*) என்ற நூலின் மாற்றுப் பிரதி தேரையர் அருளிச் செய்த நோயின் சாரம் (ஆர். *3412*) என்ற பெயரிலும் கிடைக்கின்றது. இச்சுவடிகள் இரண்டும் ஆசிரியர் பெயராலும், நூலின் பெயராலும் முழுக்க முழுக்க வேறுபடுவன. நூற்பெயர் நோயின் சாரம் எனில் நோயின் குறிகுணங்கள் விரித்துக் கூறப்படவேண்டும். ஆயின் இந்நூல் அதைத் தீர்க்கும் மருத்துவத்தையே சிறப்பாகக் கூறுகிறது. நூலில் கசாயம், சூரணம் முதலான மருந்துகளைப் பற்றிய பாடல்களும் உள்ளன. நோயின் சாரம் என்ற தலைப்புக்குப் பொருந்துமாறு இந்நூலின் 42 ஆவது பாடல் மட்டுமே அமைகிறது. அதில் நோய்வகையின் குணம், அவிழ்தம் ஆகியன நோயின் சாரமாகச் சொல்லப்பட்டுள்ளன. எனவே சூரிய வாகட வெண்பா என்ற பெயரே பின்னர் தேரையர் நோயின் சாரமாக மாறியிருத்தல் வேண்டும். எனவே சுவடிப் பதிப்பாளர் ஆழ்கவனமும், பரந்த அறிவும் பெற்றிருத்தல் சுவடிப் பதிப்பிற்குத் துணைபுரியும் என்பது தெரிகிறது. அகஸ்தியர் வல்லாதி *18* (ச. *162.*) என்ற நூலின் தொடக்கத்தில் திருமூலர் வல்லாதி என்றும், நூல் முடிந்தபின் அகஸ்தியர் வல்லாதி முற்றும் என்றும் உள்ளன.

**ஒரு நூலின் பல்வேறு வடிவங்கள்**

பிரமமுனி *380*, பிரமமுனி கருக்கடை, பிரமமுனி கருக்கடை சூத்திரம், பிரமமுனி கருக்கடை சூத்திரம் *350*, பிரமமுனி கருக்கடை சூத்திரம் *360*, பிரமமுனி கருக்கடை சூத்திரம் *380*, பிரமமுனி கருக்கடை சூத்திரம் *385*, பிரமமுனி சூத்திரம், பிரமமுனி சூத்திரம் *360*, பிரமமுனி சூத்திரம் *380*, பிரமமுனி வைத்திய சூத்திரம், பிரமமுனி வைத்திய சூத்திரம் *300*, பிரமமுனி வைத்திய சூத்திரம் *380*, பிரமமுனி வைத்தியம், பிரமமுனி வைத்தியம் *360*, பிரமமுனி வைத்தியம் கருக்கடை முதலான சுவடி நூல்கள் ஒரே நூலின் வேறுபட்ட வடிவங்களாக உள்ளன. ஆயின் நூலுக்கு நூல் சில பாடல்களும், பாடல் தொகைகளும் மாறுபடுகின்றன. ஒரு நூலுக்கு உள்ளேயும் பாடல் எண்ணிக்கையில் வேறுபாடுகள் காணப்படுகின்றன.

**பரிபூரணம் - ஒரு நோக்கு**

பரிபூரணம் என்ற பெயரில் எண்ணிக்கை வேறுபட்ட மைந்த பல நூல்களிடையே பாடல்களில், பொருண்மை களில் ஒற்றுமைக் கூறுகள் உள்ளனவா என அறிய அகத்தியர் பரிபூரணம் 400, அகத்தியர் பரிபூரணம் 1200 என்ற இரண்டு நூல்களையும் ஒப்பிட்டபோது இரண்டும் ஒன்றிலிருந்து ஒன்று முற்றிலும் மாறுபட்ட நூல் என்பதையும், பரிபூரணம் 1200-இன் சுருக்கமாகப் பரிபூரணம் 400 அமையவில்லை என்பதையும் அறிய முடிந்தது. ஆயின் இவ்விரண்டு நூல்களிலும் தொடக்க முடிவுப் பாடல்கள் ஒத்துள்ளன. நூலோடு தொடர்புள்ளது போல் அமைந்த காப்புப் பாடல் ஒன்றுக்கு மேற்பட்ட வேறு நூல்களிலும் அமைதல் என்ற நிலை சுவடிகளில் காணப்படுவதால் தொடக்கப் பாடல் இரண்டிலும் ஒன்றுபோல அமைதல் ஏற்புடைத்தே. ஆயின் 1200 ஆவதாகவும் 400 ஆவதாகவும் அமைந்த இறுதிப் பாடல் இரண்டிலும் ஒத்து அமைந்ததை நோக்கத் தன்தேவை, பயன்பாடு என்ற நோக்கிலும் நூல்கள் எழுந்துள்ளன என்பதையே காட்டுகிறது.

**எண்ணிக்கையால் ஏற்படும் பொருண்மைச் சிக்கல்**

புலிப்பாணி பலதிரட்டு (த. 154-2), புலிப்பாணி பல திரட்டு 100 (உ.513:796) என்ற நூல்கள் 100 பாடல்களையும், புலிப்பாணி பலதிரட்டு (த.813-1) என்ற நூல் 1-40 பாடல்களையும் பெற்ற முழுமை பெற்ற நூல்கள். முதல் இரண்டு நூல்களிலும் நூறு பாடல்கள் என்ற எண்ணிக்கை ஒத்து அமையினும் முதல் இறுதிப் பாடல்கள் ஒத்தமையவில்லை. ஆயின் மூன்றாவது நூல் முதல் நூலின் தொடக்கப் பாடலுடனும், இரண்டாம் நூலின் இறுதிப் பாடலுடனும் ஒத்து அமைகின்றது. மூன்றாம் நூலின் முதல் பாடல் காப்புப் பாடலாக இருப்பதால் முதல் நூலின் தொடக்கப் பாடலுடன் ஒத்து அமைய வாய்ப்புண்டு. ஆயின் இரண்டாம் நூலின் இறுதிப் பாடலுடன் 40 பாடல்களையே உடைய இந்நூலின் இறுதிப்பாடல் ஒத்து அமைந்தமை திரட்டுகளாகவும், தேவை கருதியும், நூலை அமைத்துக் கொண்ட முறைமையைக் காட்டுகிறது.

### பொருண்மைச் சிக்கல்

அகஸ்தியர் பதினாறு (*ச.267*.B) என்ற நூல் அகஸ்தியருளிய பதினாறு (*உ.487:742*) என்ற நூலிலிருந்து முற்றிலும் வேறானது. மேலும் முதல் நூல் அகத்தியர் சூத்திரம் *16* (*உ.199:403*) என்ற பெயரிலும் கிடைக்கின்றது. ஒரு நூல், ஒன்றுக்கு மேற்பட்ட பெயர்களில் கிடைத்தல் என்பது மருத்துவச் சுவடியைப் பொறுத்தவரை மிகுதியாகக் காணப்படுகிறது. இதற்கான காரணங்களுள், ஒரே சுவடியில் நூற்பெயர் பலவாறு எழுதப்படுவதும் ஒன்று.

### காட்டு

நூல் தலைப்பில் **அகத்தியர் வைத்திய சூத்திரம் முன்னூறு** (*ச.298*) என்றும், நூல் முடிவில் **அகஸ்தியர் வைத்திய பூரண சூத்திரம் முன்னூறு** என்றும், நூல் முடிந்தபின் வரும் பிற்குறிப்பில் **அகஸ்தியர் முன்னூறு** என்றும் ஒரு நூலுக்கு மூன்று பெயர்கள் தரப்பட்டுள்ளன. **அகத்தியர் செந்தூரம்** (*2.15*.a) என்ற வேறு ஒரு பிரதியும் இந்நூல் போன்றதே. இதன் இறுதிப் பாடலில் **வைத்தியம் முந்நூறு** என்றும் பிற்குறிப்பில் **அகஸ்திய சுவாமிகள் செந்தூரம் முந்நூறு** என்றும் நூற்பெயர்கள் சுட்டப் பெறுகின்றன. இங்ஙனம் ஒரு நூலுக்கு ஆறு நூற் பெயர்கள் உருவாகியிருக்கிறது.

### தனிநூல் - திரட்டுநூல் ஏற்படுத்தும் சிக்கல்கள்

குணவாகடம் (*2.68:96*) என்ற சுவடியின் ஆசிரியர் அகத்தியராக இருக்கலாம் என்பதை நூற்செய்திகளைக் கொண்டு அறிய முடிகிறது. *465* பாடல்களையுடைய இந்நூல் தொடக்கம் முதல் முழுமையாகத் தொடர்ந்து எழுதப்பட்டு முடிந்தது என்ற குறிப்பையும் பெற்று முழுநூல் போன்ற அமைப்பில் உள்ளது. இந்நூற் பாடல்களுடன் அகத்தியர் 2000 என்ற அச்சு நூலிலுள்ள ஏறக்குறைய 150 பாடல்கள் ஒத்து வருகின்றன. ஒரு சில பாடல்கள் முழுதும் ஒப்புமையுடையனவாகவும், பல பாடல்கள் பாட வேறுபாடுகளைப் பெற்றனவாகவும், குறிப்பிட்ட சில பாடல்கள் இரு நூல்களிலும் ஒன்று போலவே, குறைப்பாடலாகவும் காணப்படுகின்றன.

காட்டு: கோப்புரை வழியதாக (குணவாகடம்: பா.*254*)
(அகத்தியர் *2000*:பக்.*35*; பா.*317*)

எனவே குணவாகடம் என்ற நூலை எழுத விரும்பிய ஒருவர் தனக்குத் தேவையான பாடல்களைத் திரட்டி அத்தொகுப்பை ஒரு தனிநூல் அமைப்பில் வழங்கியிருக்கலாம். அல்லது வழிவழி மனப்பாடத்தில் தான் அறிந்ததை எழுதும்போது சில நூற் செய்திகளைத் தொகுத்து ஒரு நூலாக அமைத்திருக்கலாம். எனவே தொகுப்புகள் என்று வெளிப்படையாகத் தெரியும் நூல்கள் மட்டுமல்லாமல் தனி ஆசிரியர் பெயரில் கிட்டும் நூல்களுள் பலவும் தொகுப்பு நூல்களாக இருத்தல் கூடும்.

காளமேகேசர் சிவானந்த பூரணம் (த.1660-4) என்ற சுவடி நூலில் அகத்தியர் சிவகாவியம் 1000 என்ற நூலின் பல பாடல்கள் இடம் பெற்றுள்ளன. எனவே ஓர் ஆசிரியர் நூல் எனக் கருதும் வண்ணம் நூல் தலைப்பு இருப்பினும் இரு ஆசிரியர்களுடைய பாடல்களைக் கொண்ட நூல் என்பது தெரிகிறது. காளமேகேசர் பாடல்கள் மிகுதியாக வும், அகத்தியர் பாடல்கள் குறைவாகவும் இருப்பதால் இப் பெயர் சுவடிக்கு இடப்பட்டுள்ளதா, அல்லது தொடக்கத்தில் அமைந்த பாடல்கள் காளமேகேசருடையதாக இருப்பதால் இப்பெயர் வந்ததா என்பது அறியப்படுதல் வேண்டும்.

எனவே சுவடிகளில் உரைநடையிலும், பாடல் வடிவி லும் அமைந்துள்ள தொகுப்பு நூல்களின் நூற் பெயர்கள், முதலிலுள்ள உட்தலைப்பு எந்நூலுக்குரியதோ அந்நூற் பெயரை மட்டும் நூற் பெயராகப் பெற்று ஒரு நூல்போல் தோற்றமளிக்க வாய்ப்பு உண்டு. எனவே சுவடிகளில் எழுதப்படும் நூல் தலைப்புகளைப் பல நிலைகளில் நுண்ணிதின் நோக்கி அறிவதன் வழி பல தெளிவுகளைப் பெறமுடியும்.

சில நூல்கள் தனி நூல் அமைப்பில் இருப்பினும் நூற் தலைப்பு, பிற்குறிப்பு ஆகியவற்றின் வழி இது வேறு ஒரு நூலின் பகுதி அல்லது சில நூல்களின் பகுதிகள் என்பதை உணர முடிகிறது.

**காட்டு**

1. அகத்தியர் ஆயிரத்திருநூறில் தைலம் (நூல் தைலம்)
2. அகஸ்தியர் 1500 லுள்ள நாடியின் துகை நூறு எழுதி முடிந்தது (ச. 277).

3. குணவாகடம் பல பிரதிகளில் பொறுக்கி எழுதினது (த.1673).

### நூற் பெயர் மயக்கம்

பதார்த்த குணசிந்தாமணி என்ற பெயரில் சில அச்சு நூல்கள் வெளிவந்துள்ளன. இப்பெயரில் இந்நிறுவனத்தில் ஒரு தாள் சுவடி (4:31) உள்ளது. அதிலுள்ள 1-601 பாடல்களும் ஒப்பிட்டுப் பார்த்த அளவில் வெளிவந்துள்ள அச்சு நூல்களினின்றும் வேறுபட்டனவாகத் தெரிகின்றன. எனவே வெளிவந்த நூலின் பெயரைப் பெற்றுள்ள பிற சுவடி களிலுள்ள பாடல்கள் முழுமையாக வேறாக இருக்கலாம் அல்லது அச்சு நூலில் இடம் பெறாத நூற்றுக்கணக்கான புதிய பாடல்கள் அவற்றுள் இருக்கலாம். எனவே இதுபோன்ற வற்றைக் கருத்தில் கொண்டு பதிப்பிக்க முற்படின் வந்தவை மீண்டும் அச்சில் வருவது தவிர்க்கப்படுவதோடு, அச்சில் வெளிவந்த நூல் தொடர்பான இதுவரை கிட்டாத பல புதிய செய்திகள் கிட்டவும் வாய்ப்பு ஏற்படும்.

### முடிவுரை

பதிப்பின்போது மருத்துவச் சுவடிகளில் அச்சு நூல்களில் ஏற்படும் அய்யங்கள் பலவற்றிற்கு விடை காண விரிந்த நிலையில் ஆய்வு மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. இவ்வாய் விற்குத் துணை புரியும் வகையில் சித்த மருத்துவச் சுவடிப் பதிப்புகள் குறித்த சில செய்திகள் இவண் சுட்டப் பெற்றன.

சித்த மருத்துவச் சுவடிகள் அறுபது விழுக்காடு வெளியிடப் பெறவில்லை என்று கூறப்படுகிறது. ஆயின் ஒரு பெரிய நூலிலிருந்து பல நூல்கள் உருவாதல், ஒரு சிறு நூலிலிருந்து சில நூல்கள் உருவாதல், பல நூல் செய்திகளைத் தொகுத்து ஒரு நூல் உருவாதல், பிற நூற் செய்திகள் உரைநடையில் உருவாதல் என்ற நிலைகளைக் கருத்தில் கொண்டு பார்க்கும் போது அச்சாகாத நூல்களின் எண்ணிக்கை அறுபது விழுக்காட்டிற்கும் குறைவாகவே இருக்கும்.

சித்த மருத்துவ நூல்கள் பல ஒரு நூற்றாண்டுக்கு முன்னரே அச்சிடப் பெற்றுள்ளன. அவற்றுள் பல நூல்கள் பெயரளவி லேயே கிடைக்கின்றன. இந்நூல்கள் பலவற்றில் பாடியோர், பாடப்பட்டோர் வரலாறு, காலம் என்பன பற்றிய குறிப்பு

களைக் காண முடிவதில்லை. பெரும் பான்மையானவை தொகுப்பு நூல்களாக உள்ளன. இவற்றின் தொகுப்பு பற்றிப் பெரும்பாலான சுவடிகளில் எவ்விதமான விளக்கமும் இல்லை.

இந்நூல்களில் முதல் நூல், வழிநூல், விரிநூல் என்பன வற்றைக் கண்டறியும் நோக்கு இதுவரை இல்லை. பெரும் பான்மையான சித்த மருத்துவ நூல்கள் மறு அச்சு, மறுபதிப்பு, மறு வெளியீடு என்பன இல்லாததால் கிடைப்பது அரிய வாய்ப்பாக உள்ளன. இனிவரும் மருத்துவ நூல் வெளியீடுகளில் பொதுவான முன்னுரை மட்டுமின்றி நூலோடு தொடர்புடைய ஆய்வு முன்னுரையும் இடம் பெற வேண்டும். இத்தகு ஆய்வுரைகள் பலவும் தொகுக்கப் பெற்று நிகழ்த்தப் பெறும் ஆய்வானது சித்த மருத்துவ நூல்கள் சுவடிகளில் இடம் பெற்ற வரலாறும், எங்ஙனமெல்லாம் சுவடிகளில் எழுதப் பெற்றன என்ற தெளிவும் பெற வழிவகுக்கும்.

தற்போது வெளிவந்துள்ள பல பழைய மருத்துவப் பதிப்புகளை ஓலைச்சுவடிகளைக் கொண்டு பதிப்பித்தனரா, வேறு அச்சுநூல் பதிப்புகளைப் பார்த்துப் பதிப்பித்தனரா என்பது தெரியவில்லை. மேலும் அவ்வப் பதிப்பாசிரியர் தம் மனநிலைக் கேற்பவும் கிடைத்த தகவல்களுக் கேற்பவும் பதிப்பித்து இருக்கக் கூடும். அதில் எழுத்துப் பிழைகளும் கவனமின்மையும் அச்சுப் பிழைகளும் சேர்ந்திருக்கக் கூடும். எனவே அப்பதிப்புகளில் உள்ளவற்றையெல்லாம் பாட வேறுபாடுகளாகக் கொள்வது முழுவதும் பொருந்துமா என்பது அய்யமே. எனவே இயன்றவரை கிடைக்கும் ஓலைச் சுவடிகளை மூலமாகக் கொண்டே பதிப்புகளை அமைப்பது பயனுடையதாகும். அனைத்து சித்த மருத்துவ நூல்களும் கிடைப்பது அரிதாக உள்ள இன்றைய நிலையில் திறனாய்வு நூல்கள் வெளியிடுதல் என்பதும், ஆய்வு முறையில் நூல்களை இத்துறையில் எதிர்பார்ப்பதும் இயலாத ஒன்றாகும். எனவே சித்த மருத்துவ வளர்ச்சிக்கு நூல்களைப் பதிப்பித்தல் என்பது மிகவும் தேவையாகிறது.

பெரும்பாலான சித்த மருத்துவ நூல்கள் செய்யுள் வடிவில் அமைந்துள்ளதால் இக்கால மருத்துவ மாணவர் களும், பொதுமக்களும் இவற்றைப் படித்தறிவதில் ஆர்வம் கொள்வ தில்லை. எனவே மருத்துவத்தைப் பற்றிய உண்மைகளை,

நுணுக்கங்களைக் கூறும் செய்யுள் வடிவிலுள்ள அனைத்து நூல்களும் எளிய உரை விளக்கங்களுடன் வெளிவருதல் வேண்டும்.

சித்த மருத்துவத்தின் வரலாறு எழுதப்படுதலும், இம்மருத்துவத்தின் வளர்ச்சிக் குறிகள், புதுக் கருத்துகள் போன்றன பற்றிய ஆய்வு நிகழ்த்தப்படுதலும் தமிழர் வரலாற்றையும் பண்பாட்டையும் உணர வழி வகுக்கும். எனவே இத்துறை ஆராய்ச்சிக்குத் தேவையானது மூல நூல்களே. ஆதாரபூர்வமான, இடைச் செருகல்கள் இன்றிப் பழைய ஓலைச் சுவடிகளைத் துருவி ஆராய்ந்து தமிழ் தெரிந்த ஆராய்ச்சி மாணவர்களின் ஒத்துழைப்புடன் பழந்தமிழ் சித்த மருத்துவ நூல்களை வெளியிடும் முயற்சி விரிந்த அளவில் மேற்கொள்ளப் பெறவேண்டும்.

## 1. அகத்தியர் 16

**அ. 487:742; ஆ** *103-105* ஏடுகள்; **இ.** *26.5 x 3* செ.மீ; **ஈ.** *7,8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

அரிதாரம் பிரிதிவி யாகி நிற்கும்
ஆனதொரு சவ்வீரம் அப்பு வாகும்
பெரிதான கெவுரிதான் தேயு வாகும்
பின்னுமொரு வெள்ளைதான் வாயு வாகும்
அரிதான லிங்கமது ஆகாச மாகும்
வருந்தியே பச்சையுடன் மாட்ட லாகுந்
தெரியாத வயித்தியரே இன்னூ லப்பா
சித்தரையர் சொன்னவித்தை செகத்திற் பாரே (1)

முடிவு

பாத்திடில் பறங்கி தீரும் பார்வை சூனியமுந் தீருங்
கோர்த்திடில் கண்ட மாலை குன்மங்கள் முதலாய்த் தீரு
மேத்திடில் வியாதிக் கெல்லா மேழுநாள் பத்திய மாகும்
போத்திடத் தீரு மென்று பொறுப்பு மேலிருந்து சொன்னார் (16)

குறிப்புரை: அகஸ்த்தியரருளிய பதினாறு

**1-16 பாடல்கள்.** தாளக பற்பமுறை, வீரச்சுண்ணம், வெள்ளைப்பாஷாணபற்பம், சாந்தசெந்தூரம், லிங்க செந்தூரம், அரிதாரப்புகை, தாம்பிரபற்பம், கருவங்கப் பற்பம், அரிதாரக்கட்டி, சவ்வீரக்கட்டி, கற்பூரம் முதலான மருந்து முறைகளும் அவற்றால் தீரக்கூடிய காசம், எலிக்கடி, விசக்கடி, பித்தம், பாண்டு, குளிர்காய்ச்சல், நாட்பட்ட நோய்கள், சன்னி தோடம், குட்ட ரோகம், பறங்கி சூலை, கண்டமாலை, குன்மம், பொறுக்காத நெஞ்சடைப்பு, ஈளகாசம், விசபாக பித்தம், ஆசனப்பிடிப்பு, மூலபவுத்திரம், சோகை முதலான நோய்களும் கூறப்படுகின்றன. 'அகஸ்தியர் காவியம்' *16* என்ற நூல் ச. *236* D இதனினின்றும்

வேறானது. இதில் யோக, இராசயோக முறைகள் புலத்தி யருக்குக் கூறுவது போல் அமைந்துள்ளன.

அகஸ்தியர் பதினாறு (ரஸவர்க்கம்-ச. *267*. B) என்ற நூலும், அகத்தியர் சூத்திரம் *16* (உ.*199: 403*) என்ற நூலும் இதனினின்றும் வேறானவை.

## 2. அகத்தியர் 36

**அ. 487:743; ஆ.** *106-113* ஏடுகள்; **இ.** *26.5 × 3* செ.மீ; **ஈ.** *7,8* வரிகள்; **உ.** *109, 110* ஆகிய இரண்டு ஏடுகள் இடது பக்கத்தில் கால்பாகம் உடைந்துள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பாரப்பா செம்பினுட வெள்ளை கேளு
    பரிவான தாம்பிரத்தைக் குகையில் வைத்து
சேரப்பா பதினாறு பலமே போடு
    செந்துருகும் போதினிலே மருந்து கேளு
காரப்பா அண்டஓடு பலமோ ரெண்டு
    கட்டுநவச் சாரமது ரெண்டு போடு
சீரப்பா கல்வத்திற் தூள தாக்கிச்
    சிறக்கவே வெண்கார மரைதான் போடே (1)

முடிவு

ஆமப்பா ஈந்திடவே வயித்தியம் பாரு
    அட்டதிக்கு மெச்சவுன்னை அழைக்கும் லோகம்
நாமப்பா வயத்தியத்தில் மருந்தை யெல்லாம்
    நலமாகக் குறுக்கிவைத்தோம் முப்பத் தாறில்
வாமப்பா யிந்தவகை மருந்தையெல்லாம் வைத்தால்
    வயத்தியன்பே ருரைக்கையிலே நோய்க ளோடுந்
தாமப்பா யெட்டிரண்டு இருபத் தஞ்சுந்
    தடையறவே யுருவேறச் சித்தி யாமே (36)

குறிப்புரை: அகஸ்தியரருளிய முப்பத்தாறு

**1-36 பாடல்கள்.** செம்புவெள்ளை, நாகவெள்ளை, தங்கவெள்ளை, லோகவெள்ளை, மெழுகு, பூநீர், பாதாள

கத்து உண்டை, பரிவெள்ளை லிங்கம், தாமிரபற்பம், நாகபற்பம், அயபற்பம், தங்கபற்பம், பரியங்கச்செந்தூரம், சாதிலிங்கச்செந்தூரம், காந்தச்செந்தூரம், தங்கவெள்ளை, சந்திரோதயம், சிவபூபதி முதலான மருந்துகளின் செய்முறைகளும், பித்தம் 40, சிலேற்பனம் 96, உள்மூலம், பிரமூலம் முதலான நோய்களுக்கு மருந்துகளும் கூறப்படு கின்றன. ச.15.b, ச.324.c, ச. 276.A என்ற நூல்கள் இது போன்றவையே. 'அகத்தியர் சூத்திரம் 36' என்ற பெயரில் அச்சாகியுள்ள ஒருநூல் இதைப்போன்றதே.

## 3. அகத்தியர் 205

**அ. 511:764; ஆ.** 75 ஏடுகள்; **இ.** 23 × 4.5 செ.மீ.; **ஈ.** 13-16 வரிகள்; **உ.** சிதைவு; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

முடிவு

மக்கவாருக்கு அருள்கொடுக்கும்
கெந்தி யுண்டாகும்.......
.......டன் பொதிகைதனை நினைக்க வேணும்
சித்தர்போல் யென்னாளும்
புவியில் வாழ்ந்து தேசிகனா யிருப்பா
யென்றுஞ் செய்திட் டோமே (205)

பிற்குறிப்பு

1848 ஆம் வருசம் வையாசி மாதம் 3ஆம் தேதி திங்கட்கிழமை காலமே 9 மணிக்கு, மோர்மெனில் பாலு...ரை வீட்டுக்குச் சினியில் காரைக்காலில் ருக்கு மயாங்கி மேஸ்த்திரி பேரன் அந்தோணி குமாரன் மலையப்பனங் கையியால் அகஸ்தியுர் அருளிச் செய்த 205 யெழுதி முடிந்தது. தூமுத்து மலையப்பனுக்குச் சொந்தமானது. கடவுள் துணை. பொதிகை முனிவர் துணை.

குறிப்புரை: அகஸ்தியர் அருளிச் செய்த 205

ஏட்டு எண்களைக் கொண்டோ பாடல் எண்களைக் கொண்டோ நூலிலுள்ள ஏடுகளை வரிசைப்படுத்த முடிய

வில்லை. ஆயினும் இதிலிருந்து நூற்றுக்கும் மேற்பட்ட முழுமையான பாடல்களை எடுத்தெழுதல் இயலும். இங்கு முடிவுப் பகுதி என்று தரப்பட்ட ஏட்டில் பாடல் எண் 205 என்று இருப்பினும் இது போன்ற அகத்தியர் 205 என்ற பெயரை உடைய வேறு நூல்களில் 205 ஆவது பாடல் வேறுபாடலாக இருக்கின்றது.

செம்முள்ளித்தைலம், கெருடபச்சைகற்பம், நாக பற்பம், சூசிகாபற்பம், முத்துப்பற்பம், ரசகற்பூரம், சுண்ணம், வாததைலம், வெட்டிவேர் தைலம், கொமுட்டிக் காய் லேகியம், கற்பம், திரிவித பற்பம், மேகனாதித்தைலம், கெந்திச்செந்தூரம், செயநீர் முதலான மருந்துகளின் செய்முறை பற்றியும் காமாலை, சோகை, பாண்டு, உப்பிசம், மாந்தம், கிறுகிறுப்பு, வெடடை, சுரம், விரணரோகம், வாதவலி, கபாலகுட்டம், கபாலவாய்வு, குலைவலி, கைகால் குடைச்சல், சூலைபதினெட்டு, சூலைரோகம், மேகம், வாதம், மகோதரம், வாய்வு, குன்மம், கண்ரோகம் முதலான நோய்கள் பற்றியும் கூறப்படுகின்றது.

## 4. அகத்தியர் இரத்தினச் சுருக்கம் 360

**அ.** 180: 379; **ஆ.** 23-100 ஏடுகள்; **இ.** 26.5 × 3 செ. மீ.; **ஈ.** 7-8 வரிகள்; **உ.** சில ஏடுகள் சிதைந்தும் முறிந்தும் உள்ளன; **ஊ.** மிகக் கடினம்; கிறுக்கலான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்து.

தொடக்கம்

பூரணமாய் நிறைந்தகும்பப் பரைதாள் போற்றிப்
புகலுகின்றேன் வயித்தியத்தின் சுருக்கந் தன்னை
வாரணமா முகத்தோனைப் பணிந்து போற்றி
வயித்தியந்தான் இந்தமுந்நூற் றறுப துக்குள்
காரணமாஞ் செந்தூரம் பற்பம் லேகியம்.....
கருவான தயிலமொடு கிருத மெண்ணை
ஆரணமாக் கிருதமொடு கலிக்க மாத்திரைச்
சூளுகுரு நாடிமுதல் சொன்னோம் பாரே (1)

முடிவு

கேளப்பா லிங்கமதைப் பலந்தான் கூட்டிக்
கெடியான குமரிச்சார் சாமம் எட்டு
நாளப்பா அரைத்து வில்லை ரவியில் காய்ந்தால்
நன்றாக முப்பதெருப் புடத்தில் போடு
வேளப்பா செந்தூரம் அருணன் போலாம்
வெகுசெருக்காய்ச் சஞ்சீவிச் சூர ணத்தில்
தாளப்பா பணவிடைதான் நெய்யில் கொள்ளத்
தப்பாது மேகநீர் தவறிப் போமே (359)

*அகத்தீசுர நாயனாருடைய இரத்தினச் சுருக்கம் 360 எழுதி நிறைந்தது. முற்றும்.*

குறிப்புரை

**1-359 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** நூலின் தொடக்கத்தில் வயித்தியம் 360 என்றும், முடிவில் அகத்தீசுர நாயனார் இரத்தினச் சுருக்கம் 360 என்றும் நூலின் பெயர் சுட்டப்பெறுகிறது. பூபதி, கபாட மாத்திரை, வாதராட்சதன், கோரோசனைக் குளிகை முதலான மாத்திரை வகைகள், கரிசாலைலேகியம், சித்தாதிலேகியம், பஞ்சதீபாக்கினி லேகியம் முதலான லேகிய வகைகள், தாளிசபத்திரிச் சூரணம், நிலவாகைச்சூரணம் முதலான சூரண வகைகள், சந்தனாதித்தைலம், பொன்னாங்காணித்தைலம் முதலான தைலவகைகள், நிலப்பனைக்கிருதம், பொன்னாங்காணிக் கிருதம் முதலான கிருத வகைகள், பூசணிக்காய்நெய், கண்டங்கத்திரிநெய் முதலான நெய்வகைகள், செந்தூர வகைகள், பற்பவகைகள், எண்ணெய்வகைகள், இரசாயன வகைகள், கசாயவகைகள் முதலியவற்றின் செய்முறைகள் பயன்பாடுகள் ஆகியனவும் இடம் பெறுகின்றன. கிருதம் என்பதும் நெய் என்பதும் ஒன்றே. இறுதியில் மருத்துவம் தொடர்பான எண் இல்லாத ஏடு ஒன்றுள்ளது. அடுத்து வெற்றேடு ஒன்றுள்ளது. *491:749* என்ற எண்ணில் இடம் பெற்றுள்ள நூல் இந்நூல் போன்றதே. இரண்டிலும் தொடக்கப் பாடல் ஒன்றாக இருப்பினும் முடிவுப் பாடல்கள் வேறாக இருக்கின்றன. இறுதியில் மருத்துவம் தொடர்பான தனி ஓலை ஒன்று உளது.

## 5. அகத்தியர் இரத்தினச் சுருக்கம் 360

**அ.** 200:406; **ஆ.** *2-79 (65)* ஏடுகள்; **இ.** *24 × 3.5* செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** மிக நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை; இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

காணப்பா யேகமூலி கையி னாலே
    கட்டான கிருதங்கள் லேகி யங்கள்
பூணப்பா தயிலங்கள் சூர ணங்கள்
    பூட்டினேன் ரசாயனங்கள் கஷாயத் தோடு
தோணப்பா வெகுசுளுவு உலகத் தோர்க்கு
    சொல்லவில்லை இதுபோலச் சுருக்கு மில்லை
நாணப்பா பாய்ந்ததுபோற் செந்தூ ரங்கள்
    நாட்டினேன் வெகுசுளுவு நன்றாய்க் கேளே (6)

முடிவு

மூழ்கவே வியாதியெல்லாம் கடலே புக்கும்
    முக்கியமாய் அகஸ்தியர்க்குச் செபமே பண்ணு
நெகிழவே தியானமதை யந்திரம் பண்ணு
    நேரான தேவியைத்தான் தியானம் பண்ணு
நெகிழவே சிவன்தன்னைப் பூசை பண்ணு
    தீராத வியாதியெல்லாம் தீர்ந்து போகும்
மகிழவே யிந்தவிதம் செய்வா னாகில்
    வையகத்தி லொப்பாகும் யீசந் தானே (364)

பிற்குறிப்பு

அகத்திய சுவாமியார் திருவாய் மலர்ந்தருளிய ரத்தினச் சுருக்கம் முடிந்தது. முற்றும். *1853* ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் 30 ஆம் தேதி வெள்ளிக்கிழமை பகல் ஐந்து மணிக்கு எழுதி நிறைவேறினது. இந்தப் புஸ்தகம் ஐந்தும் பட்டாளின் கொல்லந்தால ஆறட்டிலரிடி கம்பெனி கலைசக்காரங்கைய னாருடையது என்றறியவும். இப்படிக்குச் சிங்கப்பூரில் எழுதியது.

குறிப்புரை

**5-364 பாடல்கள்.** ஐந்தாம் பாடல் குறையாக உள்ளது இடையிடையே பாடல்கள் இல்லை இந்த ஏடு சிங்கப்பூரில் எழுதியது என்பது குறிப்பிடத்தக்கது. அயபற்பம், பம், தாம்பரபற்பம், வங்கபற்பம், வெங்கலப் பற்பம், பித்தளைப்பற்பம், கெருடக்கல் பற்பம், கல்நார் பற்பம், நாகப் பற்பம், வெள்ளி பற்பம், தங்கப் பற்பம், கெந்தகப் பற்பம், அஞ்சனக்கல் பற்பம், தாளக பற்பம், வீர பற்பம், கார்போக்கின பற்பம், கண்டங்கத்திரிலேகியம், பஞ்ச தீபாக்கினி லேகியம், உப்புநீர், முத்துப் பற்பம், மகாகண்டங் கத்திரி லேகியம், திப்பிலிரசாயனம், வேம்பட்டைத் தயிலம், சீரகத் தயிலம், கொடிவேலித் தயிலம், கீழா நெல்லித் தயிலம், சங்கன் தயிலம், கொர்ப்பத் தயிலம், பழம்பாசிதயிலம், உள்ளுக் குதியில் கிருதம், கரப்பானுக்குத் தயிலம், திரிகடுகுக் கிருதம், தூதுவளைக் கிருதம், மேனி சூரணம், அக்கினி குமாரன் பொடி, பிள்ளையில்லாதவளுக்குத்தயிலம், காதில் வியாதிக்கு, வாயில் வியாதிக்கு, பல்நோவுக்கு, வாய் நோவுக்கு, வில்லவேர் கசாயம், காந்தசுத்தி, திரிலோகச் செந்தூரம், பஞ்சலோகச் செந்தூரம், கிட்டச் செந்தூரம், துருசு சுண் ணம், வாதசுர கசாயம் பித்தசுர கசாயம், முதலான தலைப்புகள் உள்ளன.

## 6. அகத்தியர் இரத்தினச் சுருக்கம் 360

**அ.**491:749; **ஆ.** *1-81* ஏடுகள்; **இ.** *28.5 × 3.5* செ.மீ.; **ஈ.** *6,7* வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** நன்று; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்து (*1874, 1886, 1887, 1894, 1903, 1915, 1918, 1919, 1928, 1934, 1958*).

தொடக்கம்

பூரணமா நிறைந்த பராபரையைப் போற்றிப்
புகலுகிறேன் வயித்திய ரத்தினச்சுருக்கந் தன்னை
வாரணமா முகத்தோனே பணிந்து போத்தி
வயித்தியந்தா னிந்தமுன் னூத்தரு பதுக்குள்
காரணமாஞ் செந்தூரம் பற்பம் லேகியம்
கருவான தயிலமொடு கிருத மெண்ணை
சூரணமாங் கிருதமொடு கலிக்க மாத்திரை
சுளுகு குருநாடி முதல்சொன்னேன் பாரே (1)

முடிவு

மூழ்கவே வியாதியெல்லாங் கடலே புக்கும்
முக்கியமாய் அகஷ்த்தியர்க்குச் செபந்தான் பண்ணு
நெகிழவே தியானமது யென்னேரம் பண்ணு
வேரான தேவியைத்தான் தியானம் பண்ணு
திகழவே சிவன்தனையே பூசை பண்ணு
தீராத வியாதியெல்லாம் தீர்ந்தே போகும்
மகிழவே யிந்தட்டம் வைத்தியஞ்செய்தா னாகில்
வையகத்தில் ஒப்பாகு மீசந் தானே (363)

அகஸ்த்தியர் சுவாமியள் அருளிச் செய்த வையித்திய
ரெத்தினச் சுருக்கம் முற்றும்.

குறிப்புரை : **அகத்தியர் அருளிச் செய்த ரத்தினச் சுருக்கம்**

பூபதி, கபாடமாத்திரை, சிரோமணி மாத்திரை, சிலோதாரி உண்டை, கண்டங்கத்திரிலேகியம், பஞ்சதீபாக்கினி லேகியம், திப்பிலி ரசாயனம், களசாலைலேகியம், கூழ்பாண்ட லேகியம், சித்திராட்சதச் சூரணம், குமரித்தைலம், ஆம்பல்தைலம், கணத்தெண்ணை, கண்டங்கத்திரிநெய், அப்பிரகச் செந்தூரம், நாகபற்பம் முதலான தலைப்புகளில் மருந்து செய்முறைகளும், அவற்றால் தீரும் நோய்களும் கூறப் பெறுகின்றன. அகத்தியர் அருளிச் செய்த ரத்தினச் சுருக்கம் 360 என்பதே நூற்பெயர். ஆயின் நூல்தலைப்பில் 360 என்பது கூறப் பெறவில்லை. காப்புப் பாடல்களையும் சேர்த்து 363 பாடல்கள் உள்ளன. இதே நூல் *180:379*; *200:406* என்ற எண்களிலும் இடம் பெற்றுள்ளது. இவற்றில் முறையே *359, 364* பாடல்கள் உள்ளன. தொடக்கப் பாடல் ஒன்றுபோல் அமையினும் பாடவேறுபாடு உள்ளது. *200:406* இல் உள்ளது போல் முடிவுப் பாடல் இருப்பினும் பாட வேறுபாடு உள்ளது.

## 7. (அகத்தியர் இரத்தினச் சுருக்கம்)

**அ.** **556:903; ஆ.** *81-144(57)* ஏடுகள்; **இ.** *36.5* × *4* செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; *139* ஆவது ஏட்டின் வலதுபக்கக் கால்பாகம் உடைந்துள்ளது; **ஊ.** ஓர்ளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சான நூல்களினின்றும் இச்சுவடி பல வேறு பாடுகளை உடையது.

தொடக்கம்

வாட்டிடு சிலேட்டு மத்தில் வந்திடும் வாத மாகில்
நாட்டிய காய்கள் போலே நரம்பெல்லாம் வலித்து நிற்கும்
கூட்டியே பிடரி தானுங் குன்னவே வலிக்கு மாகில்
காட்டிய விழியின் மேலாய் நாக்குவாய் குளருந் தானே (21)

முடிவு

முழுகவே வியாதியெல்லாம் கடலே புக்கும்
 முக்கியமாய் அகஸ்த்தியர்க்குச் சிவந்தான் பண்ணு
நிகழவே தியானமது யென்றென்றும் பண்ணு
 நேரான தேவியைத்தான் தியானம் பண்ணு
நகிழவே சிவன்தனையே பூசை பண்ணு
 சாகாதே வியாதியெல்லாம் தவறுண் டேபோம்
மகிழ்ந்த வயித்தியமே செய்யா னாகில்
 வையகத்தில் ஒப்பமும் விசன முத்தே (363)

பிற்குறிப்பு

இது எழுதினது மகுதும்பிசா பண்டிதர் மகன் மாலிமீயா பபிசா பண்டிதர், அவர் மகன் காதரு மீரா பபிசா பண்டிதர், அவர் மகன் ஜமாலு முகிய்தீன் என்று பேர் விளங்கிய மாலிமீயா பபிசா பண்டிதன் கை அச்சாம். 1015ஆம் வருஷம் மார்கழி மாதம் ஞாயித்துக்கிழமை விடிந்து ஒரு நாழிகை நேரத்தில் எழுதி முடிந்தது. **ஆமீன்.** இந்தச் சுவடி எழுதத் துடங்கினது திருச்சனாப் பள்ளி சில்லாவைச் சேர்ந்த கொனாடு தாலுகா வயலூர் வட்டத்தைச் சேர்ந்த நாச்சிக் குறிச்சிக் கிராமத்தில் எழுதத் துடங்கினது. அல்லா உதவி கொண்டு அந்த ஊரிலே நானே கூடிச் சுவடி எழுதி முடிவானது. **ஆமீன்.**

குறிப்புரை

**20-363 பாடல்கள்.** 20ஆவது பாடல் குறைப் பாடல். 556:902 என்ற எண்ணினுடைய நூலின் தொடர்ச்சியாக அடுத்துவரும் இந்நூல் அமைகிறது. ஆயின் இந்நூலில் முதல் 20 பாடல்களும் நூல் தலைப்பும் இல்லை. இந்நூலில் ஏடுகளுக்கு 81-144 என்ற தொடரெண்ணும் 2-65 என்ற

வரிசை எண்ணும் இருக்கின்றன. 'அகத்தியர் இரத்தினச் சுருக்கம்-360' என்ற நூல் போல் தெரிகின்றது. இதில் வரும் 363 ஆவது இறுதிப்பாடல் அகத்தியர் இரத்தினச் சுருக்கம் 360 (200:406) என்ற நூலின் இறுதிப் பாடலைப் போலவே உள்ளது. இருப்பினும் தொடக்க அடிகளில் வடிவ வேறுபாடும், இறுதி அடியில் பொருள் வேறுபாடும் உள்ளன. இந்நூல் இரண்டையும் ஒப்பு நோக்கும் போது வேறுபாடுகள் இருப்பினும் ஒப்புமைக் கூறுகளும் உள்ளன. எனவே இந்நூல் அகத்தியர் இரத்தினச் சுருக்கம் 360 என்ற நூலாக இருத்தல் கூடும்.

சுயம் அக்கினி, கபாட மாத்திரை, பூபதி, ரசசிந்தாமணி, குளிகைகள், கோரோசினை, பூமணி, அத்தனாரீசர் பானம், சிலோதாரிமணி; லேகியங்கள்- கரிச்சாலை, கண்டாத்திரம், பஞ்சதீபாக்கினி, மகாகண்டங்கத்திரி, கபாடம், திப்பிலி ரசாயனம், சவுபாக்கியசுண்டி, கூழ்பாண்ட லேகியம்; சூரணங்கள்- திரிராசம், அசுவகெந்தி, கண்டாத்திரி, தாளிசபத்திரி, பஞ்சதீபாக்கினி, நிலவாகை, வல்லாரை, சஞ்சீவி, ஏலாதி, அசுவகெந்தி; தைலங்கள்- குமரி, கொம்பரக்கு, பிரங்காமலம், சந்தனாதி, பொன்னாங்காணி, சிரசூலைக்குத் தயிலம்; கிருதங்கள்- பொன்னாங்காணி, புளியாரை, வல்லாரை, கூழ்பாண்டம், கண்டங்கத்திரி நெய்; கணத்தெண்ணை, மேகஎண்ணை, கெற்ப நோய்க்கு வீளீயெண்ணை, சுக்கிதபேதி எண்ணை, பலத்தெண்ணை, வீரபத்திர ஆக்கிராணம், கண்டா அவுழ்தம், சூரணசுத்தி; செந்தூரவகை- காரீயம், அயகாந்தம், திரிலோகம், பஞ்ச லோகம்; பற்பவகை- துரிசி, தாளகம், வங்கம், வெள்ளி, தங்கம், பவளம், சன்னிக்குத் தயிலம், சுரநிதானம் வாத சுரத்துக்குக்கிசாயம், பித்த சுரக்கிசாயம், சிலேற்பன சுரத்துக்குக்கிசாயம்; செந்தூரம் வைக்க, ரசலோகச் செந்தூரம், ரசகற்பூரபற்பம், பூரணசந்திரோதையம் முதலான செய்திகள் இடம் பெறுகினறன.

அகத்தியர் வைத்திய ரத்தினச் சுருக்கம் முந்நூறு (ச. 20), அகஸ்தியர் வைத்திய ரத்னச் சுருக்கம் (ச.249), அகஸ்தியர் ரத்தினச் சுருக்கம் [ச. 296. J.] என்ற நூல்கள் இது போன்றவையே.

## 8. அகத்தியர் கம்பு சூத்திரம்

**அ. தாள். 10:39; ஆ.** *1-5* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

தொடக்கம்

கானென்ற பொதிகைத் தடாகத்தில்
சதாகோடி ரிஷிகள் தவமிருக்கும்
கோனென்ற அகத்தியர் பாதம்பணிந்து
அனுதினமும் வாழுவோமே (1)

காலில்லா மனிதனும்
நூலில்லா வித்தையும்
கவைக்கு உதவாது (2)

முடிவு

ஆட்டப்பா மிருகமென்ற செந்துக் கெல்லாம்
மகத்தான உயிர்நிலைதான் சிரசு மைந்தா
நாட்டப்பா சிரசில் உயிரங்கே யானால்
நலமான புருவமத்தி தன்னி லாகும்
மூட்டப்பா சிரசில் அடிபட்ட போது
முளிகலங்கும் அவ்வேளை முழித்துக் கொள்ளும்
ஆட்டப்பா ஆட்டமெல்லாம் அறிவும் கண்ணும்
அஃதுபோனால் ஒன்றுமில்லை எல்லாம் பாழே

குறிப்புரை

**10 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** சிலம்பத்திலுள்ள *18* அடவுகள், சிறந்த ஆசானாக இருப்பதற்கானதகுதி முறைகள், மிருகங்களுடன் சிலம்பப் போர் புரியும் முறைகள், சிலம்பத்தில் உயர்ந்த போர் முறையான வர்ம அடிகள் ஆகியன உள்ளன. இதன்வழி சுமார் முந்நூறு ஆண்டுகளுக்குமுன் உள்ள சிலம்பம் பற்றிய அரிய உண்மைகள் தெரிய வருகின்றன.

## 9. அகத்தியர் கன்மகாண்டம் 300

**அ. 487:740; ஆ.** *37-100* ஏடுகள்; **இ.** *26.5 × 3* செ.மீ.; **ஈ.** *7,8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது *(1881, 1883, 1976).*

தொடக்கம்

பூரணமா யுள்மூலம் பொறியிற் சூடாம்
புகையெழும்பி மேகமதாய்ச் சிரசில் சூடாங்
காரணமாய் நீரெழும்பிப் பீனிசம் போலக்
கனலெழும்பி வாயுவதாங் கபால மெல்லாஞ்
சீரணமாய் போகாது வாத பித்தஞ்
சிலேற்பனமு மூன்றாலே நோய்க ளெல்லாம்
தாரணமாய் தசவாய்வு மூன்று வாய்வுஞ்
சமானனொடு பிராணனொடு அபானன் தானே (1)

முடிவு

சித்தியுண்டாம் மவுனத்திற் செல்லு வோர்க்கு
தெளிவான மனதுருமை அறிவி னோடு
பத்தியாய் நிலைத்தபின்பு பாவம் போச்சு
பஞ்ச பொறி புலனுண்மை பறந்து தையா
புத்தியாய்ப் பிழைப்பதற்குச் சக்கரத்தைச் சொல்லும்
புகழான மனவாசி வாயு வேக
முத்தியா மிருவினையு மற்ற தேசி
முதலான சொர்க்கபத முத்தி தானே (301)

குறிப்புரை : அகஸ்த்திய சுவாமியார் கன்மகாண்டம் முன்னூறு

301 எண்சீர் விருத்தப்பாக்கள். மகோதரம் வந்த வரலாறு, குன்மம் வந்த வரலாறு, மேகம், பாண்டு, நீரிழிவு, வாதகுன்மம், சய ரோகம், கிராணி வகை, நவ மூலம் வந்த வரலாறு, வாத கர்மம், பித்தகர்மம், மாந்தை வலி கர்மம், குட்ட கர்மம், கெர்ப்ப கர்மம், ஆக்கிராணம், கரிசாலைலேகியம், அமுதசஞ்சீவி, வங்கபற்பம், கொமட்டிக் காய்க்குழம்பு, மேகராஜாங்கத் தைலம், வங்கபற்பம், அயக்கட்டுச்செந்தூரம், வாலைரசம், சயத்துக்குத் தைலம், அப்பிரோகநவனீதச் செந்தூரம், மதன காமேஸ்வரம், அயக் கட்டுச்செந்தூரம், ஏலாதித்தைலம், சயத்துக்குத்தைலம் முதலான செய்திகள் உள்ளன. நோய்களுண்டாகும் விதமும் அவற்றுக்கேற்ற சாந்தியும் மருந்துகளும் கூறப்பட்ட 'அகத்தியர் கர்ம சூத்திரத்தில்

கர்மத்தால் இன்ன நோய் வந்த தென்றும் அதற்குச் சாந்தி இன்ன தென்றும் அதனைத் தீர்ப்பதற்கு மருந்து இன்னதென்றும் கூறப்பட்டுள்ளது.

அகத்தியர் வைத்திய சூத்திரம் *205 (221:431; 493:751)* என்ற நூலின் முதல் பாடலைப் போலவே இங்குத் தரப்பட்டுள்ள முதற்பாடல் இருப்பினும் பொருளை வேறுபடுத்தும் வண்ணம் பாட வேறுபாடு உள்ளது. அகத்தியர் கர்ம காண்டம் முந்நூறு (ச. *9*; ச. *323*. b ) என்ற பெயரில் அமையும் நூல் இது போன்றதே. ச. *9*இல் *1-298* பாடல்களே உள்ளன.

## 10. அகத்தியர் கன்ம காண்டம்

**அ. 512:785; ஆ.** *1-7* ஏடுகள்; **இ.** *27 × 3* செ.மீ. ; **ஈ.** *7,8* வரிகள், **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

**தொடக்கம்**

**பூரணமாய் மூலமுத லாரா தாரம்**
**புரியஷ்ட்டந் திசைவாய்வு நாடி மூன்றும்**
**காரணமா யிடைபின்னாய்ச் சுழினை யாகிக்**
**கலந்துநின்ற வாதபித்தஞ் சிலேற்பன மாகி**
**மாரணமாய் சிடத்தினுள்ளே தத்து வங்கள்**
**மனம்புத்தி யாங்காரஞ் சித்தத் தாலே**
**வாரணமாய் கடத்திவித்த கர்மத் தாலே**
**வந்துதடா நோய்களெல்லாம் மனிதர்க் காமே (1)**

**முடிவு**

**வாங்கிடுவாய் பீங்கானில் பாண்டத் துள்ளே**
**வைத்திடுவாய் மண்பலந்தான் நெற்குளியி னுள்ளே**
**பாங்குடனே தயிலமது வடிக்கும் போது**
**பரைபூசை சிவபூசை விட்ணு பூசை**
**ஓங்காரம் முதலான மூல மந்திரம்**
**உறுதியாங் கணபதியும் வயிரவனுங் கூட்டி**
**யேங்கியே திரியாதே வயித்திய சாபம்**
**யேகிடவே லெக்ஷ்முரு வேத்திக் கொள்ளே (26)**

குறிப்புரை: அகஸ்த்தியர் கன்ம காண்டம்

**1-27 பாடல்கள்.27 ஆவது பாடல் குறைப்பாடல்.** மேகம் வரலாறு, வாதசெலம், பித்தசெலம், சிலேற்பனசெலம், தொந்தித்தசெலம், எலும்புருக்கு, வாதபித்தம் முதலான நோய்களின் குறிகுணங்களும், மருந்துகளும் கூறப் பெறுகின்றன.

487:740 என்ற நூலின் பெயரைப் பெற்றிருப்பினும் முதல் பாடல் இரண்டிலும் ஒத்து அமையவில்லை. இந்நூலின் முதல் பாடல் அகத்தியர் கர்ம சூத்திரம் 300 (ச.8) என்ற நூலின் முதல் பாடலோடு ஒத்து அமைகிறது. இந்நூல் அகத்தியர் கர்மசூத்திரம் 300 என்ற நூலின் முதல் காண்டமாக இருத்தல் கூடும்.

## 11. அகத்தியர் காரண சூத்திரம் 48

**அ.** 534:864; **ஆ.** 1-12 ஏடுகள்; **இ.** 45 × 2.5 செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; ஒவ்வொரு பக்கமும் மூன்று பாகங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளது; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

நாடியதோர் பூரணமாம் வேதாந் தத்தில்
நடனதிரு சூஸ்திரத்தைப் பாடு தற்கு
ஆடியதோர் கணபதி யுங்கந்தன் காப்பு
அருள்பெருகும் சித்தர்முதல் ரிஷிகள் காப்பு
கூடியதோர் ஞானமருள் வாலை யாலே
கூறுகிறேன் அகாரமுடி ரீங்கா ரத்தில்
பாடியதோர் பலனூல்க ளரூபியாயிப் போக
பாலாகு மெந்தனுட னூல தாமே

முடிவு

தானென்ற லிங்கச்செந் தூரஞ் சொல்வேன்
தாம்பிரப்பொடி வெண்கருவா லரைத்துப் பூசி
மானென்ற தேன்வளகில் முலைப்பால் மேலே
மடல்துத்தம் எருக்கம் பாலதற்கு மேலே

நானென்ற சாம்பிராணி சூடன் ரெண்டு
நால்சீலை மண்செய்து காடைபுடம் மூன்று
வேனென்ற ஜாதிலிங்கம் வெகுனோயிக் காகும்
விளம்புநாற் பத்தெட்டு சூஸ்த்திரந்தான் முற்றே(48)

குறிப்புரை: அகஸ்த்யர் காரண சூஸ்த்திரம்-48

**1-48 பாடல்கள்.** முதல் 21 பாடல்களுக்கு எண்கள் இல்லை. பூரண சூத்திரம்-48 எனபதில பூ என்ற எழுத்து 'கா' போல் எழுதப்பட்டுள்ளதா அல்லது காரண சூத்திரம் என்ற நூல் உள்ளதா என அறியமுற்பட்டபோது அகஸ்தியர் காரண சூத்திரம் 48 என்ற பெயரில் அச்சுநூல் இருப்பது தெரியவந்தது.

பூநீரு, பாடாணம், செம்புசுத்தி, மவுனயோகம், உப்புச் செந்தூரம், மனோசிலை சுத்தி முப்பு, தங்கம், வசியம், சுட்ட லேகியம், திசைவாய்வு, பூரணம், செகசாலம், அரிதாரக் கட்டு, வாதம், சீலைமண், புடம், வயிரவன் தியானம், வெட்டை வாய்வு, சூலை, லிங்கச்செந்தூரம் முதலான செய்திகள் உள்ளன. நூல் முடிந்த பின் அதே ஏட்டில் 'ராம தேவர் பூஜா விதி' எனும் தலைப்பில் எதிரி இறப்பதற்கான மந்திரமும் செய் முறையும் கூறப்படுகின்றன.

## 12. அகத்தியர் குரு நாடி

**அ.** **486:737;** **ஆ.** *1-25* ஏடுகள்; **இ.** *23 × 2.5* செ.மீ.; **ஈ.** *7,8* வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சீர்பெறு முனிவர் வேகம் தெளிந்துபின் னுலகத் தோர்கள்
பேர்பெறு கருவி லுற்ற பிணிபல துணர்ந்து நேர்ந்து
ஊர்பல நாடிக் கெல்லாம் யுயர்பெறு நாடி மூன்றில்
சேர்குரு நாடிநேர்மை சியலுடன் கூற லுற்றார் (1)

முடிவு

பவுத்திரந்தான் வரும்வாறு காக்கக் கேளாய்
பாரிலுள்ளோ ருட்டினத்தால் மலந்தான் சிக்கி

குவிந்திருந்த நீரடக்கிக் கொள்கை யாலே
கொண்டிளகுஞ் சிறுநீர்தான் கிருமி யெல்லாந்
தவித்திருக்கும் கிருமிசென்று மூலந் தன்னில்
சதிரமுறுந் திடத்திமேலே தண்டுமுதல் குத்திக்
குதிரமட்டுஞ் சார்ந்துநின்று குழல்குழலா யரிக்கும்
குறிப்பறிவீர் பவுத்திரத்தின் குறியி தாமே (97)

குறிப்புரை

**1-97 பாடல்கள்.** வளி, அழல், ஐய்யம் என்னும் நாடிகளின் நடை ஏற்படக் காரணம் குருநாடியின் தத்துவமே என்பதும், குருநாடியானது வளி, அழல், ஐய்ய நாடிகளுக்கு நடுவில் இருந்து அதற்கு வலுவைக் கொடுக்கும் என்பதும், குரு நாடியின் தன்மையால் நோய்களை எவ்வாறு அறிதல் இயலும் என்பதும், நாடி படபடத்து ஓடும் நிலைமைகள் எத்தன்மைத்து என்பதும் விளக்கம் பெறுகின்றன.

நிறுவன ஆய்வேடு *(1996)*

## 13. அகத்தியர் குழம்பு முதலியன

**அ.257:477; ஆ.***1-5* ஏடுகள்; **இ.** *23 × 3* செ.மீ.; **ஈ.4-5** வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் 'வேறிடங்களில்' அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பர்வத மதனில் வாழும் பரமனா ரருளி னாலே
பொறுமையா யுலகில் வாழும் புண்ணியர் சனங்களுக்கு
உறுபல வியாதி வந்தால் ஓடு மென்று நந்தி சொல்ல
பெருபல முனிவர் தாமும் பேசிய மருந்து கேளே (1)

முடிவு

யேத்திடும் சன்னி தோசம் யெழும்பிடிற் குஷ்ட ரோகம்
பாத்திடிற் பறங்கி சூலை பலகடி முதலா யுள்ள
தீத்திடும் வயித்தியரே செகத்தில் மானி டர்கள் மெச்ச
போத்திடிற் தீருமென்றே பொறுப்பின்மேல் முனிவர்
சொன்னார் (16)

குறிப்புரை

**1-16 பாடல்கள்.** சன்னி, குட்டம், பெருஞ்சிலந்தி, முலைக்குத்து, நீர், கல்லடைப்பு முதலான நோய்களுக்குரிய மருந்து செய் முறைகளும், இதனைத்தொடர்ந்து ஒன்று முதல் நான்கு ஏடுகளில் கோடாசூரிமாத்திரை என்ற தலைப்பிலும், அடுத்து 17 ஏடுகளில் அகத்தியர் பச்சைபதி னாறு, சன்னியின் குணங்கள், கோரோசன மாத்திரை-குழந்தைகளுக்கு, வீரமெழுகுசெய்யும் வகை, இருமலுக்கு, காசத்துக்கு, சுவாச காசத்துக்கு மருந்து, சுரத்துக்கு மருந்து, பாசாண முறை முதலான தலைப்புகளிலும் செய்திகள் அமைகின்றன.

## 14. அகத்தியர் குழம்பு

**அ.** 509:770; **ஆ.** 47-51 ஏடுகள்; **இ.** 40 × 3 செ.மீ.; **ஈ.** 6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங் களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பருபதந் தன்னில் வாழும் பரமனா ரருளி னாலே
பெருமை யாமுலகி லுள்ள புண்ணிய சனங்க ளுக்கு
யொருபல வியாதி வந்தால் தீருமென் றுண்மை யாகப்
பெருபல னிதுவே யென்று பேசினார் முனிவர் தாமே (1)

முடிவு

கேளா யிந்தவகை யெல்லாங் கிளியே பேதி மிகவுண்டாம்
பாளே மயங்கா வசம்புதட்டிப் பாங்காய்க் கசாயம் வைத்ததனில்
சூளாய் வெண்ணை பாக்களவு சுருக்காய்ப் போட்டுக் குடிப்பீரால்
மீளாப் பேதி யுள்ளதெல்லாம் மின்னே தீரு மெய்யிதுவே
முன்தேங் காய்ப் பாலில் விட்டரைப்பது குழம்பு (23)

பிற்குறிப்பு

தெண்டாயுதபாணி துணை. தொட்டியத்திலே யிருக்கும் முத்துக் கருப்ப பிள்ளை குமாரன் மொட்டையப் பிள்ளை பொஷ்த்தகம். கணபதி துணை செய்ய வேண்டியது. யிது யெழுதினது மேற்படி மொட்டையப் பிள்ளை கையெழுத்து.

குறிப்புரை

**1-23 பாடல்கள்.** சுரத்துக்கு, இருமல், குளிர்சுரம், ரத்தமூலம், பாண்டு, மகோதரம், பெருவயிறு, சன்னி, பிளவை, துடவாழை, அரையாப்பு, பிள்ளையில்லாதவர்களுக்கு, சூதகவலிக்கு, பிரவீச்சுக்கு, நெஞ்சுவலிக்கு, விரியன் கடிக்கு, நாகம் கடித்தால், செய்யான் கடிக்கு, வழளைக்கடிக்கு, நீர்க்கட்டுக்கு, வீக்கங்களுக்கு, மருந்தினால் தேதி அதிகப்பட்டால் கசாயம் ஆகிய தலைப்புகள் உள்ளன. 257:477 என்ற எண்ணில் இடம் பெற்றுள்ள நூல் இது போன்றதே. இரண்டிலும் முதற்பாடல் ஒன்று போல் அமைகின்றது. ஆயின் அந்நூலில் 16 பாடல்களே அமைய இந்நூலில் 23 பாடல்கள் அமைகின்றன. இரண்டு நூல்களிலுள்ள பாடல்களும் 'அகத்தியர் குழம்பு' என்ற நூலிலிருந்து எடுத்தெழுதப் பட்டவை என்பது தெரிகிறது.

## 15. அகத்தியர் குழம்பு

**அ.** 549:892; **ஆ.** 34-44 ஏடுகள்; **இ.** 21.5 × 2.5 செ. மீ.; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** சிதையும் நிலை; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது..

தொடக்கம்

பருபதந் தன்னில் வாழும் பரமனா ரருளி னாலே
பெரும்பெயர் உலகு தன்னில் புண்ணிய சனங்க ளுக்கு
ஒருசில வியாதி வந்தால் உண்மையாய்த் தீரு மென்று
பெருபல முனிவன் தானும் பேசிய மருந்து கேளே (1)

முடிவு

செய்யவே அனுபா னங்கள் திறமாயறிந்து வயிற்றி யஞ்செய்
உய்யும் படியேபிணி கண்டு உறுதிபடவே தெரிந்து செய்ய
அய்ய மின்றிநோய்தீரும் **மலை** சேர் மலை முனிவன் சொன்ன மொழி
மெய்யென்று குழம்பு தன்னை மேதினியோர்க்கு மறிந்து
செய்யே (55)

பிற்குறிப்பு

பங்குனி மாதம் 21 ஆம் தேதி சதய நட்சத்திரம்,
சோமவாரம் முற்றிற்று.

குறிப்புரை

**1-55 பாடல்கள்.** குளிர் சுரங்கள், மகோதரம், பெருவயிறு, சன்னி-*18*, பிரவீச்சு, நெஞ்சுவலி, தேள்விசம், வாதசுரம், பித்த சுரம், மூலவாய்வு, கொடியபிணி, வயிற்றுக் கடுப்பு, சூலை-*18* முதலான நோய்களுக்குரிய மருந்துகளின் செய் முறைகளுடன், குழம்பு சேர்த்துத் தயாரிக்கப்படும் முறைகள் விளக்கப் படுகின்றன. **34-44** என்ற தொடரெண் மட்டுமின்றி **1-12** என்ற இந்நூலிற்குரிய வரிசை எண்ணும் தரப்படு கின்றது. அடுத்துள்ள **44 ஆ, 46** என்ற இரண்டு ஏடுகளில் அனைத்து ரோகங்களுக்கும் பற்பம், லிங்கம், பூரம், பாடாணம், ரசச் செந்தூரம் ஆகியனவற்றை உருக்கும் முறை முதலியன கூறப்பட்டுள்ளன.

## 16. அகத்தியர் கேசரிநூல்

**அ. 570:927; ஆ. 1-24** ஏடுகள்; **இ.** 22.5 x 3 செ.மீ; **ஈ.** 7-*8* வரிகள்; **உ.** நன்று; சில ஏடுகளில் துளைகள்; **ஊ.** கடினம்; கிறுக்கெழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

**தொடக்கம்**

கொள்ளுற பேரைக் கேழு குருமொழி தவறா னாகில்
தெள்ளிய தாய்தந்தை சீறடி வணங்கிக் கொள்வோன்
ஒள்ளிய தாம்பூலங்க ளோதி அருதியர்க் கீய்வோன்
வள்ளலார் ஈசன் பாதம் மனத்தினில் மறவாதி...(3)

முடிவு

முற்றுமிதைக் கற்றறிவால் கருவைக் கொண்டு
முறையான கைமுறையாய்க் கருணைச் சேர்த்துச்
சத்துநிலை அறிந்து கண்ணொளியைப் பார்த்துச்
சற்குருவே யென்று மனதொன்ற நின்று
உற்றமொழி நூலறி வாய்க்கண்டு கொண்டால்
உனக்கு நிகரில்லை என்றுமுண்மை சொன்னோம்
முத்தியிது முத்திதரும் அருளே வாய்க்கும்
மோட்சகதி ஆச்சிபதம் அறிவாய் முற்றே (100)

பிற்குறிப்பு

அகத்தீஸ்வரரருளிச் செய்த கேசரி நூல் முற்றிற்று. பு. சண்முகப் பண்டாரம் சாஸ்திரம் ஏடு. 1909 வருஷம் ஆடிமாசம் 11 ஆம் தேதி.

குறிப்புரை

**1-100 விருத்தப்பாக்கள்.** முதல் இரண்டு பாடல்களில் தொளைகள் மிகுதி. மனம் சித்தியாக, கற்பமுண்ண தியானம், மணியும், கருவும் அறியும் முறை, ஆழ்கடலில் எழுகடலை அறியும் முறை, சூட்சநிலை, கற்பத்தில் கரு ஓமெனும் நவசூட்சமூலம், சாத்திரத்தில் ஆருடம் அடக்கமென்பது, நினைத்ததெல்லாம் சித்தியாகப் பசிவிலக்குங் கற்பத்தின் வித்தை, அமுர்த கற்பம், உருவம் கண்ணுக்குத் தெரியாது மறைதல், செத்தவன் மூன்றே முக்கால் கடிகை வரை பேசி மரணமாதல், ஆண் பெண்ணுருப் போலாதல், கருவித்தை, தியானம், திலதவகை, மவுனவித்தை, திரிகோணம், திருநீற்றின் செயல், கண்ணுறக்கம் வருதற்கு பூரம், காந்தம், ஏரண்டத் தெண்ணை முதலான மருந்துப் பொருட்களைக் கொண்டு செய்யப்படும் எண்ணெய், தைலம் இவற்றின் பயன்பாடுகள், ஆடாத ஆட்டமெல்லாம் அவளே என்று ஆடுதற்குக் கருவெடுத்து ஆடச்செய்தல் முதலான செய்திகள் ஞானத்தின் வழி விளக்கம் பெறுகின்றன. அகஸ்தியர் கேசரிநூல் ஜாலத்திரட்டு (சு.289E)என்ற சுவடி நூலும் உள்ளது.

## 17. அகத்தியர் சூத்திரம் 10

**அ.** 199:404; **ஆ.** 8-11 ஏடுகள்; **இ.** 26.5 x 2.5 செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** சுமார் நிலை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

காணப்பா எரியிலே வளர்ந்த பிண்டம்
கடிதான மாங்கிஷத்தோ டெடுத்து வந்து
பூணப்பா பொரிகாரம் பொரித்துக் கொண்டு
பிண்டத்தை வாய்பிளந்து அதனில் போட்டு

ஆணப்பா பெண்ணோடு கூடி னாப்போல்
அப்பனே நாதமங்கே யிறங்கும் பாரு
சாணப்பா லோகத்தால் கட்டி யொன்று
சரதமா யினங்களையு மதனுள் போடே (1)

முடிவு

ஆடலா மதுகொண்டு கோடா கோடி
அளவிறந்த வித்தையெல்லாம் இதுக ளாச்சு
ஓடலாம் இதனாலே குளிகை செய்து
உசத்தியுள்ள மலைகளெல்லா மேறிப் பார்க்க
நாடெல்லாம் திரிந்தாலும் இந்தப் போக்கு
நல்லமுறை இதுபோலே எங்கு மில்லை.
பாடல்போல் சொன்னதென்று எண்ண வேண்டாம்
பற்றுமே குலைத்திறமாய்ப் படித்தேன் முற்றே(10)

குறிப்புரை

**1-10 எண்சீர் விருத்தப் பாக்கள்.** *இரசவாதச் செய்திகளடங்கியது. முப்பைப் பற்றியும் விளக்குகிறது. அகத்தியர் சூத்திரம் 30, அகத்தியர் சூத்திரம் 110, அகத்தியர் சூத்திரம் 120 (கலைஞானம்), அகத்தியர் சூத்திரம் (இரண்டாம் பூரணம்) 200, அகத்தியர் சூத்திரம் 250, அகத்தியர் சூத்திரம் 300 முதலான சுவடிகள் உள்ளன.*

## 18. அகத்தியர் சூத்திரம் 12

**அ.** 199:405; **ஆ.** *12-15 ஏடுகள்;* **இ.** *26.5 × 2.5 செ.மீ.;* **ஈ.** *5-6 வரிகள்;* **உ.** *நல்ல நிலை;* **ஊ.** *தெளிவு;* **எ.** *முழுமை;* **ஏ.** *அச்சானதாகத் தெரியவில்லை.*

தொடக்கம்

தேசிப்பாய் பத்தான அகாரத் தாலே
திறமலமாய் திருவாய்வு உண்டாச் சப்பா
வாசிப்பா யானாக்கால் யோக மெய்தும்
மகத்தான அகாரமென்ற வழியைச் சொல்வேன்
ஆசிப்பாய் அகாரமதில் உகாரங் கூடி
அப்பனே மகாரமென்ற வாறே தோக்கும்

வீசிப்பாய் மகாரமென்ற மவுனப் போக்கு
வித்தையடா ஓங்கார மூல மாச்சே (1)

முடிவு

மாட்டினேன் கவடம்விட்டுச் சொன்னேன் பாரு
மக்களே இதைவிட்டால் வாத மில்லை
காட்டினேன் கருக்கிடையும் குருக்கிடையுங் காணும்
கைமுறையுந் தவறாமல் காணச் சொன்னேன்
ஆட்டினேன் சுண்ணத்தால் மெழுகு மாகும்
அப்பனே பன்னிரண்டில் அடக்கி னேனே (12)

குறிப்புரை

**1-12 பாடல்கள்.** இப்பாடல்கள் யோகம், வாதம், கருக்கிடை, சுண்ணம், மெழுகு முதலானவற்றை விளக்குகின்றன.

## 19. அகத்தியர் சூத்திரம் 16

**அ.** 199:403; **ஆ.** 3-7 ஏடுகள்; **இ.** 26.5 × 2.5 செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** சில ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

ஆதிநடு மூலத்தின் வெளிக்குள் ளான
அய்ங்கரனை தொழுது அரனைப் போற்றி
சோதிமணி வடிவான தேவி சொல்லச்
சூத்திரந்தான் பதினாறுஞ் சுருக்குப் பாட
வேதமா யாயிரத்தில் நூறு சூத்திரம்
விளங்கியதோர் சவுக்கார குருவாம் சூட்சம்
நீதியாம் மூன்றுக்கு இந்நூல் சூத்திரம்
முக்கியமாம் பதினாறுந் திறவு கோலே (1)

முடிவு

இட்டது சூலத் துக்கு இருபுறம் எழுததைக் கேளாய்
விட்டதோ ரெழுத்தி னோடே விடாவெழுத் திரண்டுஞ் சாத்திப்
பட்ட தோர்குலத் தின்மேல் பகர்ந்திடுஞ் சத்தி யிட்டு
அட்டமா மேக சூட்சம் அதீதமென் றறிந்து கொள்ளே (16)

குறிப்புரை

அகத்தியர் சூத்திரம் ஆயிரத்திற்குத் திறவுகோலாக அமைந் தவை இப் பதினாறு பாடல்கள். பூநீர், கற்சுண்ணம், சூட்சம், நவாச்சாரம், வெடியுப்பு, வழலை போன்று பலவகைச் சரக்குகளினால் ஆகும் கூட்டுப் பொருள்களின் செய்முறை முதலான இரசவாதச் செய்திகள் அடங்கிய் இந்நூல் முப்பு பற்றியும் விளக்குகிறது. அகத்தியர் *16 (487:742)* என்ற நூலினும் இது வேறானது.

## 20. அகத்தியர் சூத்திரம் 50

**அ. 487:744; ஆ.** *114-125* ஏடுகள்; **இ.** *26.5* × *3* செ.மீ.; **ஈ.** *7,8* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

நாடியதோ ரகண்டபரி பூரணமாய் நின்ற
நாதமொடு கிணேசனொடு கந்தன் காப்பு
ஆடியதோர் சிவனாரு மென்னைப் பெத்த
ஆத்தாளு நாவுதனிற் குடிகொண் டேதான்
பாடியதோர் வயித்திய மன்பதுந்தான் சொல்வேன்
பண்பான புலத்தியனே யின்னூ லூடே
தேடியதோர் பூரணசூஸ்த் திரத்தில் நன்றாய்
தீட்சையொடு கருக்குருவுந் திறமி தாமே (1)

முடிவு

கண்டாக்கால் வாதமெல்லா மடிக்கீழ் பொத்துங்
கருவான சவுக்கார மகிமை தன்னை
விண்டாக்கால் நசித்திடுவாய் நூல்கு டாதே
வேதாந்த ஞானியென்றா லீயான் பாரு
தொண்டுசெய்துப் பதினாறு வருடங் காத்தால்
சோதித்துப் பின் பவர்க் கீவாயப்பா
சண்டமாருதம் போலே வெளிய தாகச்
சாத்தினதோர் வயித்திய மன்பதுந்தான் முத்தே (50)

குறிப்புரை : **அகஸ்த்தியர் சூஸ்த்திரம் அன்பது**

நீலகண்டச் செந்தூரம் நான்குநிறவெள்ளை, திராவகச்சவுக்காரம், சவுக்காரச் சுண்ணம், இரசவாதத்திற்குரிய கல்லுப்புச் சுண்ணம், வெள்ளீயப்பற்பம், சிவனுப்பு, செந்தூரம், கற்பம், செயநீர், கியாழம், பவளச்சுண்ணம் நெய் முதலான மருந்துகளின் செய்முறைகளும், இவற்றால் தீரக்கூடிய கண்டமாலை, குட்டம், மேகம், பவுத்திரம், அரையாப்பு, பித்தம், நீரிழிவு, காந்தல், பொருமல் முதலான நோய்கள் பற்றியும், கருட பச்சை, இரும்பு முதலியன உருக வழி முறையும் கூறப் படுகின்றன. அகத்தியர் சூத்திரம் 50 (வயித்தியக் குருநூல்- ச. 330. b ) என்ற நூற்பொருள் இத்தன்மைத்தே ஆயினும் பாடல் அமைப்பில் மிகுதியான வேறுபாடுகள் உள்ளன.

## 21. அகத்தியர் சூத்திரம் 100

**அ.** 494:752; **ஆ.** *15-40* ஏடுகள்; *28.5 × 3.3* செ.மீ.; **ஈ.** *7,8* வரிகள்; **உ.** நன்று.; **ஊ.**; அழகான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

பூரணமாஞ் சுழினைநடு கமல மீதே
புகழ்பெரிய மூலக் கணபதி காப்பு
காரணமா யெனையாண்ட பரனைப் போத்தி
கட்டாக வாதத்தில் லஷ்சங் காப்பு (1)

பாரப்பா கட்டுவகைச் செந்தூ ரங்கள்
    பற்பங்கள் செயநீர் கள்மெழுகு சுத்தி
சீரப்பா வழலைக் குயிடபா கங்கள்
    திறமாக உள்க் கருவு மேக மூலி
கூறப்பா மித்திரங்கள் தேவி பூசை
    குறுக்குவழி மித்திரங்கள் கோடா கோடி
ஏறப்பா தொந்தங்கள் விபர மாக
    இயம்புகிறேன் துருசுனுட சுண்ணப் போக்கே (2)

முடிவு

மனம்வேறு பூரணமே யென்று பூண்டு
வாழ்வதெல்லாம் மத்தொன்று நினையா தய்யா
மனம்வேறு தட்டுண்டால் யெல்லாம் போச்சு
மாய்கையுத்துத் திரிந்தலைந்து மாள்வா ரைய்யோ
மனம்வேறு சாதகமாய் சாஷ்த்திரத்தைப் பாரு
மனம்பிலத்த குருவினுட வணங்கி நின்றால்
மனம்வேறு வாராது சித்தி முத்தி
வாய்க்குமே சூஷ்த்திரந்தான் நூறு முஷ்த்தே(100)

குறிப்புரை: அகஸ்த்தியர் சூஷ்த்திரம் நூறு

**100-பாடல்கள்.** வாலைபூசை, நாக செந்துரப் பற்பம், வங்கப் பற்பம், செயநீர், லிங்கச்சுத்தி, மூலிகை, நவச்சாரம், துருசுவெள்ளி, மெழுகு, லேகியம் முதலான தலைப்புகள் உள்ளன. அகத்தியர் தைல முறைகள் *100* என்ற அச்சு நூல் உள்ளது.

## 22. அகத்தியர் சூத்திரம் 150

**அ.** 240:456; **ஆ.** *114-134* ஏடுகள்; **இ.** *30* × *3* செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

சீரணி கொன்றை சூடும் சிவனிரு பாதம் போற்றி
வாரண முகத்தோன் பாதம் வணங்கி னூத்தன்பதும் சொல்ல
பூரண வாலை ஞான சரஸ்வதி போத்தி போத்தி
காரண மான செஞ்சொல் கர்ம சூத்திரங் காப்பாமே (1)

ஆதியா யுலகில் வாழு மனுசர் செய்அறம் கர்மஞ்
சோதி யாஞ்சூத் திரத்தில் சுருக்கியா னுரைக்கக் கேள்மோ
வாதியா யுலகில் வாழும் வயித்தியஞ் செய்வா னாகில்
நீதியாம் மனுசர் செய்யும் கர்மத்தி நிவர்த்தி செய்யே (2)

முடிவு

சொன்னது துகைதான் னூத்தன்பது சூட்ச மாகும்
முன்னமே சொன்ன நூலின் முக்கிய மின்னூல் சூட்சம்

வண்ணமே வாரு லோக மார ணமதி சூட்சம்
முன்னமே சொன்ன னூற்று அன்பது அறிவீர் முத்தே (152)

அகத்திய சுவாமியார் வயித்திய சூத்திரம் 150 எழுதி
நிறைந்தது முற்றும்.

குறிப்புரை: அகஸ்தியர் கர்ம சூஸ்திரம் நூத்தன்பது

**காப்புப் பாடலுடன் 152 பாடல்கள்.** இலிங்கச்சுத்தி, வீரசுத்தி, பூரசுத்தி; வெள்ளைப்பாடாணச்சுத்தி, கெவுரி சுத்தி, குதிரைபல்சுத்தி, மனோசிலைசுத்தி, அரிதாரசுத்தி, சிலாசத்து சுத்தி, கல்நார்சுத்தி, அரிதாரம், அஷ்டலோக மாரணம், லோக பற்பம், வெள்ளிச்செந்தூரம், தங்கச் செந்தூரம், திரிபலை, கடுக்காய் லேகியம், தான்றிக்காய் லேகியம், கற்பூர சுத்தி, வெள்ளைப்பாசாண சுத்தி, குக்கில சுத்தி, குந்திருக்கம் சுத்தி, காரம் சுத்தி, துருசுகெந்தி சுத்தி மிருதார்சிங்கு சுத்தி, அஷ்ட லோக பற்பம் முதலான செய்திகள் இடம்பெறுகின்றன. அகத்தியர் சூத்திரம் (ச. 354.a) என்ற நூல் இது போன்றதே.

## 23. அகத்தியர் சௌமிய சாகரம் 1200

**அ.** **488:746;** **ஆ.** *1-185* ஏடுகள்; **இ.** *29.3* × *3* செ.மீ.; **ஈ.** *7,8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது. (*1935*).

முற்குறிப்பு

மங்கையம்மாள் திதி. தைமாதம் அமரபட்சம் திரிதிகை திதியில் மங்கையம்மாள் பரிபூரணம். ராட்சத வருஷம் தைமாதம் அமரபட்சம் திரிதிகை திதி. அலமேலு அம்மன் திதி. ருத்ரகாரி வருஷம் அப்பிசி மாதம் 28ஆம் நாள் பூர்வபட்சம் திரியோதசி சுக்கிரவாரம் கோனினேரி தாசன் திதி. பிரசோபதி வருஷம் பங்குனி மாதம் 9ஆம் தேதி பூர்வபட்சம், ஏகாதேசி, நித்திய விபூதி பூசம் நட்சத்திரம். காணிலாப்பாடி நாராயண சுவாமிகளுக்குச் சாதகக் குறிப்புச் சொன்னபடியால் எப்படியாகிலும் அதில் சொன்னபடி நடக்க வேண்டியது. சமாதிக் குறிப்புக்கு 35 ஆவது ஏடு பார்க்கவும்.

தொடக்கம்

சோதியெனும் மனோன்மணியைத் தியானஞ் செய்து
சுகமாகச் சவுமியசா கரத்தைப் பாட
வாதியெனுங் கணபதி வல்லபையுங் காப்பு
அரசான பிரம னோடு சரஸ்பதியுங் காப்பு (1)

மானான சதுரகிரி மூலங் கண்டு
  தவமான சிவயோகத் திருக்கும் போது
கோனான வேதியரை அடுத்து நானுங்
  குறியான பூரணத்துக் குறுதிகேட்டேன்
ஊனான பூரணத்துக் குறுதி கேட்டே
  உண்மையுள்ள புலத்தியனே வாவென் றேதான்
தேனான வடமொழியைக் கையி லீய்ந்து
  நிருவாண பூரணத்தின் திறஞ்சொன் னாரே (6)

முடிவு

கேளப்பா விந்துவென்ற வளையத் துள்ளே
  கெணிதமுடன் நவகோணம் நன்றாய்ச் செய்து
வாளப்பா நவகோணம் நடுமுக் கோணம்
  மையமென்ற மத்தியிலே ஓங்காரஞ் சாத்தி
ஆளப்பா ஓங்கார மதனுள் மைந்தா
  அவையடக்க மான ரீங்காரஞ் சாத்தி
வாளப்பா அறிந்து நவகோண பூசை
  நன்மையுடன் சொல்லுகிறேன் நாட்டங் கேளே (717)

குறிப்புரை: அகத்தீசரருளிய ஞான சவுமிய சாகரம்-1200

ஏட்டெண் இல்லா முதல் ஏட்டில் சமாதிக் குறிப்பு 35ஆம் பக்கம் உள்ளது என ஏன் குறிப்பிடப்பட்டிருக்கிறது என்பது தெரியவில்லை. **1-718 பாடல்கள்.** இவற்றுள் முதல் ஐந்து பாடல்கள் காப்புப் பாடல்களாக இருக்கின்றன. 718 ஆவது பாடல் குறைப் பாடல். வகார சவுமிய சாகரம் பார்க்கவும், திருநடனம், சத்துவம், தத்துவ விபரம், வித்தியாதத்துவம், பஞ்சபூத விபரம், ஆக்கினை, பிரமரூபம், முச்சுடர், கரும வினைதீர, வயிரவர்தியானம், குருமூலம், சரிதையறிய, ஞான வழியறிய, இல்லாத காலம், நவசித்தர், மோகனம், தம்பனம், உச்சாடனம், அஷ்டாங்கயோகம், அயச்செந்தூரம், செயநீர், ரேசக பூரக கும்பகம், ஆதார பூசை, வாலை, காயம்,

பஞ்சபூத விபரம், வெள்ளி பற்பம், சக்தி சிவம், வெளி யொளி, திரிகோணபூசை, குடவன் செம்பு, வேதை, ருத்தி ராட்ச மகிமை, புட விவரம், நீத்தினம், உருக்கினம் அறிய, சுவாசம் இருக்கும் விபரம், துருசு சத்ரு மித்ரு, சதாசிவன் தரிசனம் மாலயன் காணாதது, அஷ்ட கணபதி, தாரணை, நவகும்பகத்தி பூசை, நாகரச மெழுகு, நவபற்பம், தசவித சரக்குச் செந்தூரம், கைபாகம், அமிர்தம், லிங்கக் காட்சி, சிவயோகவழி, நாசிநுனிதரிசனம், சொரூப தரிசனம், பொய்ஞானி, நடுவண் பூசைச் சக்கரம்; மௌன யோக மந்திரம் முதலியன உள்ளன. இது ஒரு யோக சூத்திர நூல். அகத்தீசுவரர் இந்திர சாலம் 1200, அகத்தியர் சூத்திரம் 1200 என்ற மருத்துவ நூல்களும் உள்ளன. சவுமிய சாகரம் (ச.319) என்ற நூல் இந்நூல் போன்றதே. ச. 348 ம் இது போன்றதே.

## 24. அகத்தியர் தீட்சை விதி 200

**அ.** 352:585; **ஆ.** *1-42* ஏடுகள்; **இ.** *24* × *3.2* செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நல்லநிலை; சற்றுச் சிதைவு; **ஊ.** நன்று; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

**தொடக்கம்**

வானைத் தாவிய பொதிகை மகத்தான ரிசியுடைய வாக்
கின் நேர்மை
பானைத் தாவிய பூசை பரிவான சிவயோகம் பண்போர் கேளு
மீனைத்தாவிய ராசி விளங்கிநின்ற கன்னிமுதல் வில்லுமேடஞ்
சேனைத் தாவிய துலாத்தின் சென்மராசிக் கருவைச்
செப்புரேனே (1)

முடிவு

பணிமாறு காலத்தே மணியி னோசை
பாங்கான சிகண்டியின் நாத வோசை
பணிமாறு காலத்தே மவுன தோத்திரம்
பத்தியுறும் வாலைகையி லேகியத்தை யீந்து
பணிமாறு காலத்தே சகல சித்தும்
பரிவாகத் தாவென்று கையில் வாங்கிப்
பணிமாறு காலத்தே பணிந்து தெண்டம்
பண்ணுவாய் பூசைவிதி தீட்சை முத்தே (201)

அகத்தீசுரர் தீட்சை விதி முற்றும்.

குறிப்புரை: அகஸ்தியர் தீக்ஷைச விதி 200

**1-201 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** முதலிலுள்ள மூன்று வெற்றேடுகளில், முதலிலுள்ள ஏட்டில் 'அகஸ்திய தீக்ஷைச மேற்படி பூரண சூத்திர வைத்தியம்' என்றுள்ளது. பிராணாயமம், காந்த கற்பம், காந்த சோதனை, பாத்திர வகை, அயமுருக்க, சிவ தீட்சை விபரம், ராசிபலன், வாசியோகம், பிராணாயமப் பலன், குருதோத்திரம், நாற்பத்து முக்கோணப் பூசை விதி, சிதம்பரச்சக்கரம், சிதம்பரரகசியம், பூசை வகை, அட்டகர்மம், அட்டகர்மப் பலகை, அங்காயம், சிவசக்தி சக்கரம் சமனிக்க, சாப நிவர்த்தி, சிவதீட்சை, சடாதர தீட்சை, சத்தி தீட்சை, பாடல் விபரம், செந்தூரப் பத்தியம், சமாதி தீட்சை, வல்லபை பூசை, நந்திகுருபூசை, சிவபூசை, தேவி பூசை, நிர்வாண பூசை, கணபதி பூசை, காயசித்தி கற்பங்கள் முதலான தலைப்புகளின் வழி சரப்பயிற்சி, சுத்தி முறை, தாமிரத் தகட்டில் சக்கரங்கள் எழுதி பூசை செய்தல், பூசை வகைகள், சாபநிவர்த்தி, தீட்சை முறை, யோகப் பயன்கள், பன்னிரண்டு இராசிகளுக்கு ஏற்பக் கரு உற்பத்தி, இன்னின்ன இராசியில் பிறந்தோர்க்கு இன்னின்ன சித்திக்கும் என்பன வற்றை அறிய முடிகிறது. அகத்தியர் தீட்சா விதி - ச.322. g;ச. *19* b;.*228*.e; ச.*160* என்பன இது போன்றவையே.

## 25. அகத்தியர் நிகண்டு தெரியும் வகை

**அ. 257:475; ஆ.** *1-5, 8, 9, 12* எனும் ஏடுகள்; **இ.** *23* X *2.7* செமீ; **ஈ.** *4-5* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

எருவடக்கியாவது - கோடாசாலை
புறங்கையாவது - ஆடாதோடை
பேய்வதமாவது - பேய்த்துமுட்டி
பேய் மிறட்டியாவது - நெட்டிப் பிறமட்டை
முடிமேல் முடியாவது - தும்பைச் செடி
வாதமடக்கியாவது - தழுதாழைச் செடி
வெதுப்படக்கியாவது - யேறுமட்டைப் பீனாரி

முடிவு

சண்டியாவது - எருமைக்கிடா
தண்டாவது - கீரைத்தண்டு
அண்டமாவது - தலைமண்டை
சித்தண்டமாவது - கோழிமுட்டை
துளபமனந்தன்யிலை - துளசியிலை
கிளிஞ்சியிலையாவது - வேலிகாத்தான்
ஆள்கொல்லியாவது - உடமை பொன்வெள்ளி

குறிப்புரை

இருநூறுக்கும் மேற்பட்ட மூலிகைகளுக்கு உரை நடையில் பொருள் தரப்பட்டுள்ளது. மூலிகைகளுக்கு உள்ள வேறு பெயர்களும், பரிபாசைச் சொற்களும் இதன் வழி தெரிய வருகின்றன.

## 26. அகத்தியர் பரிபூரண சூத்திரம்

**அ.** 565:919; **ஆ.** 15ஆ-21 ஏடுகள்; **இ.** 31 × 2.5 செ.மீ.; **ஈ.** 4-5 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஈவதுதான் யாருக்குச் சிவயோ கிக்கு
    இகத்திலுள்ள மாண்பருக்குச் சார்ந்தா யானால்
நோய்மிகுந்து சாவாரே சொன்னேன் மைந்தா
    நுண்மையாய் மனத்தில் வைத்து நுணுக்கங் கண்டு
தாய்பதத்தைப் பூசித்துக் கற்பங் கொண்டு
    சமாதிக்குள் ளிருந்துரைத்துத் தலைவ னாகி
நீ மலைமே லேறிவிடு லோகத் துள்ளே
    நின்றாக்காற் கொல்லுமடா நிசம்சொன் னோமே (1)

முடிவு

ஆறாறு பனிரெண்டு நலமுஞ் சொல்லி
    அதில் நிற்கு மட்சரஞ் சக்கரமுஞ் சொல்லி
ஏறாத வாசியது எற்றஞ் சொல்லி
    ஏகடா சரபூரண மெடுத்துக் காட்டி

கூறாத கருவையெல்லாங் கூறி னேன்யான்
கூற்றநின்ற விடதுதான் குறித்துப் பாரு
தேறாத பேருக்குத் தேறும் தேறுஞ்
சிவாசிவா பூரணத்தின் திறந்தான் காணே (24)

பிற்குறிப்பு

இந்தப் புத்தகம் சின்னக்காவனம் முனுசாமிப் பிள்ளையுடைய புத்தகம். ஆங்கிரச வருஷம் ஆடிமாதம் 10ஆம் தேதி எழுதி முடிந்தது

குறிப்புரை

**1-24 எண்சீர் விருத்தப்பாக்கள்.** 'தட்சிணா மூர்த்தி பரிபூரணம்' என்ற நூலில் இருந்து இப்பகுதி எடுத்தெழுதப் பட்டுள்ளது. மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்கினை ஆகிய ஆறு ஆதாரங்களைக் கூறி அமுர்தமது கீழே பாயும் முறை இதுவென்றும், அக்கினி மண்டலம் சூரிய மண்டலம், சந்திர மண்டலம் முதலான மேல் ஆறு ஆதாரங்களைக் கூறி, ஆறெழுத்து, எட்டெழுத்துகளின் மகிமை கூறி, வாசியைக் கண்டு கொள்ளும் முறை இதுவென்றும் நூல் விளக்குகின்றது. இறுதியில் வசியம் மாரண சக்கரம் என்ற தலைப்புகளில் சக்கரங்கள் இரண்டும், எந்திரங்கள் நான்கும் எழுதி வரையப் பட்டுள்ளன.

## 27. அகத்தியர் பாடிய சரக்குகள் பிறந்த விபரம்

**அ. 509:774; ஆ.** *63* ஏடுகள் **இ.** *40* × *3* செ.மீ.; **ஈ.** *6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார் ; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

ஆதியிலே சரக்குனுட விபரங் கேளு
அப்பனே பிறந்தயிடஞ் சொல்வேன் யானும்
நீதியாய்த் தன்னுடைய குலங்கள் தன்னை
நிச்செயமாய்ச் சொல்லுகிறேன் நினவாய்க் கேளு
வாதியென்னும் பேரெடுத்துத் திரிவா ரப்பா
வகையறியார் பிறந்தயிட மறிய மாடடார்
சோதியாய் விளங்குகின்ற ஆயி பாதம்
துணையாகக் கருத்தில் வைத்துச் சொல்லு வேனே (1)

முடிவு

தானென்ற முப்பத்தி முக்கோடி தேவர்
　　தன்னுடைய விந்துவப்பா னாதந் தானும்
பானென்ற படத்துக்கடா மகாமுனியின் விந்து
　　பாடினார் நவச்சார முந்தானா மப்பா
வேனென்ற பெலிசக்கிர விர்த்தி விந்து
　　வெகுவாகப் பாடினா ரப்பிரேகந் தானே
தானென்ற சாபங்கள் நிபர்த்தி பண்ணி
　　தப்பாமல் அவுழ்தங்கள் செய்வீர் தானே (3)

முற்றும்.

குறிப்புரை

63ஆம் எண் தரப்பட்டு, அதன் அருகில் 'ளு' என்ற முக் காலைக் குறிக்கும் வடிவமும் தரப்பட (சாயஙளு) ஓர் ஏட்டில் இந்நூல் கூறப்பெறுகிறது. சரக்குடைய விபரம், சிவனுடைய விந்து சூதம், பார்வதியாள் விந்து கெந்தி, அரியினுட விந்து தாரம், லெட்சுமியாள் விந்து மனோசிலை, பிரமனுட விந்து செம்பு, சூரியனுடைய விந்து வெள்ளி, சந்திரனுடைய விந்து தங்கம் அவுழ்தங்கள் முதலியன கூறப்பட்டுள்ளன.

## 28. அகத்தியர் பூரண சூத்திரம்

**அ.** 291:516; **ஆ.** *1-74* ஏடுகள்; **இ.** *23.5*× *3* செ.மீ; **ஈ.** 7-*8* வரிகள்; **உ.** இறுதி ஏடுகளின் தொடக்கப் பகுதிகள் சிதைந்துள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

கார்செறி மெய்யன் வண்ணம் கடவுளும் காணாப் பாதம்
பேர்பொரு ளுண்மை தன்னைப் பூரண னூலி லோத
தார்செறி கொன்றை சூடி தாய்சர் சோதி கந்தன்
நேர்மதம் வெள்ளைப் பிள்ளை யார்பதம் காப்பு தாமே (1)

முடிவு

ஆச்சப்பா மனங்களித்தால் பூரணந்தா னாச்சு
　　அரகரா ம.. முருகஅருமை மெத்த

காச்சப்பா நின்றதொருகல் நெஞ்சர்க்கு
காயசித்தி ஞானசித்தி கடின மாகும்
பூச்சப்பா ஞானந்தான் பூலோ கத்தில்
பூரணமே தெய்வ மென்பான் பூசை
பேச்சப்பா மெல்லமெல்ல படித்துச் சொல்வான்
...முருக பெருமை யாமே (210)

குறிப்புரை: அகஸ்த்தியர் அருளிச்செய்த பூரண சூத்திரம் **1-214 பாடல்கள்.** இறுதியிலுள்ள பாடல்கள் சிதைந்துள்ளன. தொடக்கத்தில் ஒரு வெற்றேடு உள்ளது. மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிப்பூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்கினை, சூரிய மண்டலம், சாபநிவர்த்தி, வயிரவர் தியானம், சுப்பிரமணியர் தியானம், அயனித்துக் கொள்ள விபரம், மூல சுத்தி, திசை மனுஷர், செயநீர், சவுக்காரவைப்பு, ரிஷி தெரிசனம், தலவாசம், கருநெல்லி சயிலாயுத கற்பம், வாதம், சாறு வருகிற முறை, கெந்தகத் தயிலம், வெள்ள பாஷாணக் கட்டு, கற்பூரவைப்பு, வீரவைப்பு, அஞ்சனம், முப்பு விபரம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 29. அகத்தியர் முப்பு 16

**அ.** 532:861; **ஆ.** 1-4 ஏடுகள்; **இ.** 44.5 × 2.5. செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; ஒவ்வொரு பக்கமும் மூன்று பாகங்களாகப் பிரித்தெழுதப்பட்டுள்ளது; **உ.** நன்று; முதல் ஏட்டில் வலது பக்க ஓரப்பகுதி உடைந்துள்ளது; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பூரணமாம் புங்கவன் தன்பாதம் போற்றி
புகழ்பெறவே சிவகாமி பாதம் போற்றி
காரணமா மறிவில்நின்று மனத்தைப் போற்றி
கந்தனுக் கருள்பெறச் சிஷ்ய னாகி
வாரணமா முகத்தோனே பணிந்து போற்றி
வல்லமையா யின்னூலின் பொருளைக் காண
சீரணமாயிப் போகாமல் தெளிந்து சொல்வேன்
சித்தர்பதம் மனத்தில் வப்பாய் (1)

முடிவு வெடியுப்பு ஜெயநீர்

தானான வெடியுப்பு செயநீர் கேளு
சாதகமா பலம்பத்து நிறுத்திக் கொண்டு
வேனான சொட்சமா குருபூ நீரு
விளங்கியே காசஞ்சாகும் கல்லுப் பந்து
கோனான நவாச்சார மன்ன பேதி
கொடியதொரு அப்பிரகம் துருசு சுண்ணம்
வானான சூடன்வெள்ளை வெண்காரம் பூரம்
வரிசையுட னினதுப்பு கடல் நுரைதான்/கூட்டே (14)

குறிப்புரை: அகஸ்திய மகாமுனிவர் முப்பு தீஷ்ஷை சூத்திரம் 16

**முதல் இரண்டு பாடல்களில் ஓரிரு சீர்கள் சிதைவு காரணமாய் இல்லை. 1-15 பாடல்கள்.** *15*ஆம் பாடல் முடிவு பெறவில்லை. முப்பு தீட்சை மார்க்கம், அறுவகை நிறச் சுண்ணம், வெடியுப்புச் செயநீர் முதலியன கூறப்பட்டுள்ளன.

அகத்தியர் முப்பு *16* என்ற நூலில் (*ச.311.* C) பொருள் வேறுபாடுள்ளது. இதில் காயசித்தி முறைகள் கூறப்படுவதால் இது வேறுபட்ட நூல் ஆகும். இதே பெயரில் அமையும் *ச.236.*C என்ற நூல் இச்சுவடி நூல் போன்றதே.

## 30. அகத்தியர் முப்பு 30

**அ. தாள். 11:40; ஆ.** *1-13* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

வானும் புவியும் மதியுங் கதிரொளியும்
தேனுள் ளிருந்து சிவகுருவை யறியாமல்
நாலாவித மாய்ஆராய்ந்து நன்னூ லென்பதையும்
கோலக்கணேசரருள் கூடும்பா யிரம்காப்பே (1)

சித்திதரு மூலமல வாய்வு முப்புவின்
காவியத் தால்விவ ரித்துச் சொன்னேன்
செயமாகக் கணபதியின் கந்த னாரும்
குளிர்ந்த சலமுண்டா மைந்தனே

கொதிதண்ணீர் மிகவு முண்டாம்..
சதிராகும் வேதமுறை யுணர்ந்து சொன்னேன்.
சத்தியந்தான் இந்நூலைச் சார்ந்து பாரே (2)

முடிவு

நில்லடா மனமொன்றாய் நிறுத்தி யாடு
நிசமுள்ள வித்தையடா மவுன வாலை
அல்லடா கோடியிலே யொருவன் காண்பான்
அவனுக்கே சித்தர்களும் அறிந்தே யுரைப்பார்
உல்லவடா உண்மையிது உறுதி கொண்டு
ஒருமையாய் அவருமாய் வந்து கண்டு
கல்லவனைப் போல்காட்சி கொள்ளு கொள்ளு
கருணைமேவுங் கைலாசமுப்பதுவே கணக்கோ
முற்றே (31)

பிற்குறிப்பு

முற்றும். முற்றுப் பெற்றது.
சிவசுப்பிரமணியப் பிள்ளை எழுதி முடிந்தது.

குறிப்புரை: அகஸ்தியர் அருளிய முப்பு 30

**காப்புப் பாடலையும் சேர்த்து 31 பாடல்கள்.** உவர்மண், சுண்ணக்கல்லு (வேதாந்த மூர்த்தி), நவச்சாரம், செம்பு, வெங்கலம், வெள்ளி முதலானவற்றைக் கொண்டு உப்பு, காயகற்பம் முதலானவற்றின் செய்முறைகளை, பயன் பாடுகளைக் கூறுவதோடு ஆசைகளை ஒழித்து மகிழ்ச்சி யினை எய்த வழியினையும் கூறுகின்றது. அகத்தியர் முப்பு 50' எனும் சுவடி சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் உள்ளது. அதில் வரும் 2 ஆவது காப்புப் பாடல் இங்கு முதலில் இடம்பெற்றுள்ளது. அகத்தியர் முப்பு சுருக்கம் ஆறு, அகத்தியர் முப்பு சூத்திரம் 200, மச்சமுனி முப்புதீட்சை 80 முதலான சுவடி நூல்கள் உள்ளன.

## 31. அகத்தியர் முப்பு 50

**அ.** 532.860; **ஆ.** *1-14* ஏடுகள்; **இ.** *44.5 × 2.5* செ.மீ.; **ஈ.** *5-6* வரிகள்; ஒவ்வொரு பக்கங்களும் மூன்று பாகங்களாகப் பிரித்தெழுதப்பட்டுள்ளன. **உ.** ஓரளவு

நல்லநிலை; முதல் ஏடு இரண்டாக உடைந்துள்ளது; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

மயமான முப்புவின் மார்க்கந் தன்னை
　　வைத்தியத்தில் ஆக்கியே விரித்துச் சொல்ல
செயமான கணபதியுங் கந்தன் தானுஞ்
　　சிவனோடு உமைபார் வதிகீர் வாணி
நயமாக எப்போதும் முன்னே நின்று
　　நாடியே முப்புவை நயந்து கேட்க
வயமாகச் சொல்லு கிறேன்ஐம் பதுக்குள்
　　வைத்தியரே நீர்தாமும் வணங்கிக் கேளே (1)

முடிவு

காலான வைத்தியத்தை உறுதி யாக
　　கைமுறைகள் தப்பாமல் கருவாய்ச் செய்தால்
பாலான மனமுடைய பிரம்ம னாவான்
　　பாரிலே வாழ்வதற்குக் குருவு மாவான்
சேலான குருவுடைய செல்வ னாவான்
　　சிந்தையிலே களங்கமற்ற சித்த னாவான்
நாலான மணிபெற்று பிரமன் சொன்ன
　　நலமுடைய முனிவன்மொழி நாடி முற்றே (50)

பிற்குறிப்பு

........ குமாரன் வேங்கிடசாமி எழுதினது.
விளம்பி வருடம் மாசி மாதம் 3ஆம் தேதி.

குறிப்புரை: அகஸ்தியர் முப்பு 50

பல மருந்துப்பொருட்கள் செய்யப் பயன்படுத்தும் மூலப் பொருளான முப்புவின் செய்முறையும், முப்பு செய்யப் பயன்படும் பூநீர் பற்றியும், முப்பைச் சேர்த்து உருக்கினம், பாடாணம், உலோகம், நவரத்தினம் ஆகியவற்றைப் பற்பம் செய்து அதனால் விலகும் நோய்களைப் பற்றியும் குருசுண்ணம், இரசவாத முறை, முப்பு முடித்தல், முப்புச் சுண்ணம், கடுங்காரம், அறியாதார், காந்தச் சத்து, அயம்,

அப்பிரகம், கல்நார், அண்ட ஓடு, அஸ்தி, கலங்கொம்பு, ஆமையோடு இவற்றில் சத்து எடுக்கும் முறை பற்றியும், அனுபானங்கள் பற்றியும் கூறப்படுகின்றது. மிக அதிக அளவில் பயன்படுத்த வேண்டிய மருந்துகளின் அளவை மிகக் குறைந்த அளவில் வழங்கினால் போதுமானது என்ற நிலைக்காகவும், சித்த மருந்துவத்தின் சிறந்த மருந்து தயாரிப்புகளான கட்டு, களங்கு, உருக்கு, சுண்ணம், செந்தூரம், பற்பம் போன்ற மருந்துகளின் செயல் திறனை ஊக்குவிக்கவும் முப்பு பயன்படுத்தப்பட்டது. ச.236.Iஎன்ற எண்ணுடைய நூல் இது போன்றதே ஆயினும் மிகுதியான பாட வேறுபாடுகள் உள்ளன. இங்குத் தரப்பட்டுள்ள நூலின் தொடக்கப்பாடல் அதில் மூன்றாவது பாடலாக அமையினும் இறுதிப் பாடல் 50 என்ற எண்ணுடன் இந்நூற்பாடலை ஒத்து அமைகிறது. ச.357.b இந்நூல் போன்றதே.

## 32. அகத்தியர் முன்னூத்தறுபதில் கபாட மாத்திரை- அதிசார கிராணி

**அ.** **509:776; ஆ.**65-66 ஏடுகள்; **இ.** 40 × 3 செ.மீ.; **ஈ.** 6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

போடவே கபாடமென்று மாத்திரைதான் கேளும்
புகழான சாதிக்காய் பத்திரியுங் காயம்
நாடவே சீரகமும் விடைய கிராம்பு
நலமான அவுரிகடை வன்னி கற்பம்
தேடவே வெந்தையமும் கதச்சி வித்து
திரமான குருசாணி பதினொன் றுந்தான்
ஆடவே சமன்தூக்கிக் கல்வத் திட்டு
அப்பனே ஆனந்த மூலிச் சாரே (1)

முடிவு

போமப்பா உஷ்ணங்கள் பிற்ற வாய்வு
பொருமலுடன் சரீரத்தி லுலவு குத்து
ஆமப்பா வலிகடுப்பு எரிச்சல் பேதி
அப்பனே வாயுவென்ற கிராணி தீரும்

வேமப்பா அஷத்திசுரம் அஷத்தி வெட்டை
விருதான வாந்தியெல்லா விழலாய்ப் போகும்
சாமப்பா அரக்குனுட தயில முளகு
சகலசுரம் விட்டோடுஞ் சார்பு தானே (5)

குறிப்புரை

**1-5 எண்சீர் விருத்தப் பாக்கள்.** அகத்தியர் 360 என்ற நூலிலிருந்து 5 பாடல்கள் தரப்பட்டுள்ளன. கபாட மாத்திரை, கற்பம், தைலம் முதலான மருந்து செய்முறைகளும், அவற்றால் தீரும் அதிசார கிராணி, வாதம், சகல சுரம் முதலான நோய்களும் கூறப்பெறுகின்றன.

## 33. அகத்தியர் மூலிகைப் பிரயோக வண்ணம்

**அ.** 509.772; **ஆ.** 59-63 ஏடுகள்; **இ.** 40 × 3 செ.மீ.; **ஈ.** 6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சம்புடனே வேர்விரையை யுண்பவர்க் கிராணி மூலம்
தெம்புடனே தீருமென்று கும்பமுனி தானுரைத்தார்
சித்திரபெ லத்தின்மூலம் மெத்தாவலா யுணர்ந்து
சத்தாகிலுங் கிஷாயம் வைத்தாகிலுங் குடிக்கில்
ரெத்தமொடு சீதமும் பெருத்த தொருமேல்வயறு
அஸ்திசுரத் தாபமுட னித்தினைனோ யேகிவிடும்

முடிவு

புங்கதனில் மூலிகையில் மங்குசொரி தேமல்களும்
பொங்குமண்ட வாதசன்னி யிங்கிதமோடு புரைகள்
மாக்கொழுந்தி னால்நசியம் மூக்கதனிலே விடவே
தாக்குடனே கூடுவள் போக்கிவிடு மேதலையில்
ஆற்றில் வறா மூலிகைப் பிரையோகமே

பிற்குறிப்பு

அகத்தியர் மூலிகை பிரயோக வண்ணம் முற்றிற்று. சம்பூரணம் தொட்டியம் முத்துக் கருப்பப்பிள்ளைக் குமாரன் மொட்டையப் பிள்ளை பொஷ்த்தகம் கணபதி துணையாக வேண்டியது.

குறிப்புரை

பின்வரும் 560:914 என்ற எண்ணை உடைய நூல் இது போன்றதே. பாடல்களுக்கு எண்கள் தரப்படவில்லை. இறுதிப்பாடல் ஒன்று என்ற எண்ணைப் பெறுகிறது. ஆதண்டைத் தளை, கொல்லன் கோவை, முத்தம், சிவனார் வேம்பு, தூதுவளை, ஆடாவின் தோடை முதலான மூலிகைகளினால் தீரக்கூடிய, தலைநோய், குத்திருமல், கோழை சலம், பித்தம், வாதம், சன்னி, சுரம் முதலான நோய்கள் கூறப்பெறுகின்றன. ஏக மூலிகாப் பிரயோகம் என்ற முறையில் மருந்தின் குணங்களைக் கூறும் இந்நூலில் கசாயம், நசியம், கல்கம் முதலிய பக்குவங்களைச் செய்து நோய்களைத் தீர்க்கும் முறைகள் கூறப் பெறுகின்றன. அகத்தியர் வண்ணம் (மூலிகை நிதானம்) என்ற நூல் (ச. 320. d. ) இது போன்றதே.

## 34. அகத்தியர் மூலிகை வண்ணம்

**அ.** 563:912; **ஆ.** *1-3* ஏடுகள்; **இ.** *35 × 3.1* செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; சில இடங்களில் துளைகள்; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

சன்பிடனே வேர்விரையை **உண்பவர்க்குக்** கிராணிமூலம்
தென்புடனே தீருமென்று கும்பமுனி தாமுரைத்தார்
சித்திரமூலத் தின்மூலம் மெத்தாவலா யுணர்ந்து
சத்தாகிலுங் கிஷாயம் வைத்தாகிலுங் குடிக்கில்
பித்தமொடு சீதமும் பெருத்ததொரு மேல்வயறு
அத்திசுரந் தாபமுடன் யித்தனைநோ யேகிவிடும்

முடிவு

புங்கதனில் மூலிகையில் மங்குசொரி தேமல்களும்
பொங்குஅண்ட வாதசன்னி யிங்கிதமா யோடும்புரை
மாக்கொழுந்தி னால்நசியம் மூக்கதனி லேவிடவே
தாக்குடனே கூடுவன் போக்கிவிடு மேதலையில்
ஆரறிவார் மூலிகைப் பயிரை யோகமே (1)

சற்குருவே துணை - அகத்தீசர் மூலிகை வண்ணம். எழுதி முகிஞ்சது முற்றும்.

குறிப்புரை: அகத்தீசர் பாடிய மூலிகை வண்ணம்

வேம்பு பித்தம் அகத்தும், ஆவாரை பிரமூலமாத்தும், நன்னாரிவேர் சோகை, காமாலை, பித்த மகத்தும், கொடிவேலி அஷ்ட்ட குட்டம் போக்கும், குப்பைமேனி உப்பிசங்கள் போக்கும் என்றவாறு நூற்றுக்கணக்கான மூலிகைகளும் அவை தீர்க்கும் நோய்களும் கூறப்படுகின்றன.

## 35. அகத்தியர் வழலைச் சுருக்கம்

**அ. 536:867; ஆ.** 3-4 ஏடுகள்; **இ.** 44 × 2.5 செ.மீ.; **ஈ.** 4-6 வரிகள்; ஒவ்வொரு பக்கமும் மூன்று அல்லது நான்கு பகுதிகளாகப் பிரித்தெழுதப் பட்டுள்ளது; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

வாதமென்றா லுப்புவித்தை அறிய வேணும்
　　வாயிப்பேச் சினால் வருமோ வாதம் தானும்
வேதமென்ற அறிவுகொண்டு நிலைக்க வேணும்
　　வஞ்சனங்கள் பேசினால் வருமோ ஞானம்
காதமென்றால் வெகுதூரம் போக வேணும்
　　கண்மூடி யிருந்துவிட்டால் நடந்த தெங்கே
நாதமென்றால் வாசிகொண்டு ஊத வேணும்
　　நாயிபோலே திரிந்தாக்கால் ஞானமா காதே (1)

முடிவு

செய்யயிலே இடபாகம் சிதறி டாதே
　　தீஷ்சையிலே முதல்தீஷ்சை மறந்தி டாதே
கொய்வதிலே உப்பெடுக்கும் நாள்வி டாதே
　　குருமுடிக்கும் காலமதை வொழிந்தி டாதே
பொய்வசனம் சீஷர்கள் சேர்ந்தி டாதே
　　பூவையர்க ளாசையிலே புக்கி டாதே
தாய்வதிலே மந்துதான் பேதி யாதே
　　தொண்டாகவே இருந்து தொழிலைச் செய்யே (7)

குறிப்புரை

**1-7 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** பிழைமிகுதி. பூநீர், சாரம், காரம், உப்பு முதலானவையும், வழலை மார்க்கமும், சிவயோக வாழ்க்கை வாழ்ந்தால் இவையாவும் கைவரப் பெறும் என்பதுவும் கூறப்படுகின்றன.

## 36. அகத்தியர் வாகடம்-நாடி பரிச்சை

**அ.** 509:773; **ஆ.** *1-8* ஏடுகள்; **இ.** *40 × 3* செ.மீ.; **ஈ.** 6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது. இதில் இதுவரை அச்சாகாத பாடல்களும் உள்ளன.

தொடக்கம்

தேன்தின மொழியாக வந்து சிறந்திடு நாக்கு மெய்யில்
ஊனமாய் எழுந்த நேர்மை வையித்தி யனுக்குச் சொல்ல
ஆனையின் முகத்தான் பாதம் அடியினை இரஞ்சித் தாது
வானவர் புகலுந் தெய்வ மாமுனி அருளிச் செய்தார் (1)

வாதமும் பித்தம் அய்யம் வகுப்பது மொன்றில் காண
நாதமு வேத மோதும் நயந்தன ரோக பேதந்
தீதேன் னருதி யென்று சீர்பா னருளைக் கொண்டு
பூதல மறிய வேதான் பொதியமா முனிவன் சொன்னார் (2)

முடிவு

மலங்கி நின்ற சீவனுற வந்து நின்ற தெப்படி
நிலகு ளிர்ந்த பித்தமும் நீதி யொத்த வாயுவும்
மலசலங் கலங்க லின்றி வாயு வும்பி றந்திடிற்
கலங்கி டாதி ருந்திடுங் கண்டு கொள்ளு முண்மையே(50)

பிற்குறிப்பு

*சிவமயம் அகத்தியர் வாகடம் நாடி பரிச்சை யெழுதினது சம்பூரணம். வாலை ஞான சரஷ்பதியம்மன் துணை. மொட்டையப் பிள்ளை பொஷ்த்தகம். தொட்டியம் மருத வீரசுவாமி துணை.*

குறிப்புரை

மொட்டையப் பிள்ளை வைத்திருந்த சுவடி என்பது தெரிகிறது. தனக்குத் தேவைப்படும் மருத்துவக் குறிப்பு

களைத் தொகுக்கும் நோக்கில் எழுதப்பட்டிருக்கிறது. வாத, பித்த, சிலேத்தும மாறுபாட்டால் ஏற்படும் நோய்களும், அவற்றின் குறிகுணங்களும், நாடி பற்றிய செய்திகளும் கூறப்படுகின்றன.

## 37. அகத்தியர் வாக்கியம்

**அ.** **496:756; ஆ.***1-5* ஏடுகள்; **இ.** *18.3 × 3* செ.மீ.; **ஈ.** *7,8* வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

ஆதியாய் வேதாந்தப் பொருளாய் நின்ற
அன்பான மயேஸ்பரனைத் தொழுது போற்றி
சோதியாய் விளங்குகின்ற ஆயி பாதந்
துணையாகக் கருத்தில்வைத்துத் துன்பம் நீங்க
நீதியாய் நடக்கும் பெரியோர்கள் பாதம்
நினைவுகளில் மறவாமற் சுருக்க மாக
வாதியென்ற பேரெடுத்து வந்தோர்க் கெல்லாம்
வசனித்தேன் அவிழ்தமொன்று வசனித் தேனே (1)

முடிவு

தானென்ற திப்பிலி தேனிலுள்ளுக் கொண்டால்
தவறாத வண்டுக்கடி பதிநெண்டு குஷ்டம்
கானென்ற பயுணிசூலைக் கிரந்தி சூலை
கைக்கடங்கா னோய்களெல்லாங் கழன்று போகும்
வானென்ற வயித்தியர்க்காய்ச் சொன்னோ மப்பா
மைந்தனே யின்னூல் மடையர்க் கீயாய்
நானென்ற ஆணுவமே பேச வேண்டாம்
நலமான அகஸ்தியர்தனி வாக்கிய முற்றே (10)

குறிப்புரை: அகஸ்த்தியர் தனி வாக்கியம்

**1-10 எண்சீர் விருத்தப் பாக்கள்.** சன்னி, சூலை, தோடம், வலிப்பு, காசம், வாதம், உப்பிசம் முதலான நோய்கள் தீர மருந்துகளும் அவற்றின் செய்முறைகளும், பயன்படுத்தும் விதங்களும் கூறப்பெறுகின்றன.

## 38. அகத்தியர் வாத சுருக்கம் 6

**அ.** **536:872;** **ஆ.** *1-2* ஏடுகள்; **இ.** *44* × *2.5* செ.மீ.; **ஈ.** *4-6* வரிகள்; ஒவ்வொரு பக்கமும் நான்கு பகுதிகளாகப் பிரித்தெழுதப்பட்டுள்ளது; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை, **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சித்தாதி ஆதியிலே பதினெண் பேரும்
    சிவனறிய தேவியுட வரத்தி னாலே
கத்தாதி சிவனுடைய திருக்கூத்துக் கப்பா
    காரணமாம் சிவமுனிவர் பாரு பாரு
வித்தாதி சாஸ்த்திரங்கள் கோடா கோடி
    விளம்பினேன் யின்னூலில் விரைந்து பாரு
அத்தாதி யானவர்க்கு எய்து மெய்தும்
    அல்லாட்டா லெய்தாது அறிந்து பாரு (1)

முடிவு

வகாரமடா ஆறுக்குள் ஒழிக்க யில்லை
    மைந்தனே சமுத்திரத்து உப்பு ஆதி
சிகாரமடா வேதைகளோ கோடா கோடி
    சகமதிலே யிதைவிட்டால் சாப மாகும்
வகாரமடா யின்னூலே அண்ட பிண்டம்
    ஆகுந்தா னறியவே வெளியில் வந்தேன்
நகாரமடா சூத்திரமே இன்னூல் போலே
    நாடார்கள் வாதத்தின் சைகை முற்றே (6)

குறிப்புரை: **அகஸ்த்தியர் வாத சுருக்கம் 6**

**1-6 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** வாதநூல் *12* லட்சம் இருப்பினும், சுருக்கமாகக் கூறிய இந்நூல் வாதத்திற்குச் சிறந்தது, வாசி கைவ்ரப் பெற்றவனுக்கு இந்நூல் கிட்டும், அவனால் சுழியில் நிற்கும் வாதத்தை அறிய முடியும் என் பனவும் வாதத்திற்குப் பூசக் கூடிய உப்பு, சுண்ணம் இவற்றால், செய்யப்பட்ட மருந்துகளின் செய்முறைகளும் கூறப்பெறுகின்றன. அச்சுநூல்: அகத்தியர் வாதச் சுருக்கம் *12 (1880)*.

## 39. அகத்தியர் வாத சூத்திரம் - 100

**அ.** **574:931;** **ஆ.** *206-223;* **இ.** *30 x 39* செமீ. **ஈ.** *7-8* வரிகள். **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பூரணமாம் சுழினைநடு கமல மீதே
புகழ்பெரிய மூலகண் .. ..
காரணமா யெனையாண்ட பராபரனைப் போற்றி!
காட்டாக வாதத்தி லட்சங் காப்பு
தாரணமாய் படுபாதி குறுக்கிச் சொன்னேன்
சார்வாக ஆயிரத் திருநூறு சூத்திரம்
வாரணமாய் குறுக்கிவைத்தேன் சூத்திரம் நூறில்
வகைதோன்றக் கருக்குருவும் வகுத்தேன் பாரே (1)

முடிவு

மனம்வேறு பூரணமே என்று பூண்டு
வாழ்வதல்லால் மற்றொன்றும் நீசெய் யாதே
மனம்வேறு தட்டுண்டால் எல்லாம் போகும்
மாய்கையுற்றுத் திரிந்தலை வாழ்வா யையோ
மனம்வேறு சாதகமாய் சாத்திரத்தைப் பார்த்து
மனம்போல குருவினிடம் வணங்கி நின்றால்
மனம்வேறு மாறாது சித்தி முத்தி
வாய்க்குமே சூத்திரந் தான்னூறு முற்றே (100)

அகஸ்த்திய சுவாமியார் வாதசூத்திரம் எழுதி நிறைந்தது.
முற்றும்

குறிப்புரை : அகஸ்திய சுவாமியாள் சூத்திரம் வாதம் நூறு

**1-98 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** செந்தூரம், பற்பம், செயநீர், மெழுகு சுத்தி, பூநீறு, நவலோக மாரணம், லிங்க சுத்தி, முப்பு, தைலம், மாங்கிசத் தைலம், யோகம், ஞானம், மூலிகை, கடவுள் வழிபாடு, உலோகம், காய், அளவு, ஊர் முதலான கூறுகள் விளக்கம் பெறுகின்றன. முதலிலும் முடிவிலும் ஒவ்வொரு வெற்றேடுகள் உள்ளன. 26:57 என்ற எண்ணில் இதற்குரிய தாள் சுவடியும் உள்ளது.

## 40. அகத்தியர் வால தீட்சை சூத்திரம்

**அ.** 563:910; **ஆ.** *31-35* ஏடுகள்; **இ.** *35×3.1* செ.மீ.; **ஈ.** *7* வரிகள்; **உ.** நன்று; சில துளைகள்; **ஊ.** தெளிவு ; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

பூரணமே குருவாகத் தன்னைப் போத்தி
போதரவா மறிவுடனே மிகுந்து பாரு
காரண வாய்வதனால் நீர்ச்சலங்க ளாகி
கனமான ரசமதுதான் சுரோணிதங்க ளாகித்
தாரணமாய்ச் சுரோணித சுக்கிலங்க ளாகித்
தழைத்துதப்பா உலகத்தில் கதையில் தேடி
வாரணியுஞ் சிகாங்கை மடல்முன்னால் வந்து
கிழந்திருந்து ஒருமணியால் வாங்கி னாளே (1)

முடிவு

கூட்டு வெண்ணைச் சாரணைவேர் கொத்தான வேர்தான்
கோதரை யேழுவகை பலம்ரெண் டாக
யிட்டுருக் கெண்ணை நாழிசமது சேர்த்து
யேலஞ்சீ ரகமிரண்டு ரோகணி காயம்
திட்டுவகைப் பலமிரண்டு பொடித்துப் போட்டு
தீயெரித்துமெ ழுகாய்க் காச்சி காசிடையே வாரு
முட்டோடே யோடுமடி வலியஞ் சுந்தான்
மூன்றுநாள்தான் பத்தியந்தான் முனைந்து பாரே (21)

குறிப்புரை: அகஸ்தியர் வால தீஷ்சை சூஸ்திரம்

**1-21 எண்சீர் விருத்தங்கள்.** உளமாந்தைக் கணத்தின் குணம் - மருந்துயெண்ணை, சலமாந்தைக்கு எண்ணை, கணத்தின் குணம் இதுக்கெண்ணை, சுழிமாந்தை குணம், சுழிமாந்தை எண்ணை, அக்கிரமாந்தை குணம், இதுக்கு எண்ணை, பிறகணையின் குணம், இதுக்கு எண்ணை, சொன்னி மாந்தை குணம், இதுக்கு எண்ணை ஆகிய தலைப்புகள் உள்ளன.

## 41. அகத்தியர் வாத சூத்திரம் 200

**அ.** 355:588; **ஆ.** *172-205* ஏடுகள்; **இ.** *29.5 × 2.3* செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; ஒரிரு துளைகள்; *204* ஆவது

ஏடு பாதியாக முறிந்துள்ளது; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

ஆதியாய் மனக்கோலஞ் செய்யு நாளி
லாதிமுதல் தேவரிசி கூட்ட மாச்சு
வேதியனு மாயோ னுழவர் கூடி
விமலனார் விசுவருக்கு வார்த்தை யீந்தார்
நீதிபெறு சாதியால் தெஷ்ஷனாய்
நிமலனார் சார்பொதிகைக் கிரியிற் சென்றே
ஆதியொரு காரணத்தால் பரைதா னின்ற
அடங்கந் தானம் பலமாமே பாரே (1)

முடிவு

இந்தாலே இரவிதனைக் கட்ட வேணும்
எடுத்ததொரு அண்டத்தி லேற வேணும்
வந்தாலே கருரெண்டு மறிய வேணும்
மகத்தான குக்கிடத்தைச்
சந்திரனால் ரஷ்ஷியொன்றாய் முடிக்க வேணும்
சராசரத்தி னிரந்தவள் யெக்கர் வேணும்
கொந்தாள பூரண மெச்சார மாகும்
கூட்டுகின்ற வலிகோடா கோடி முத்தே (200)

பிற்குறிப்பு

அகஸ்திய சுவாமியா ரருளிய யிருனூறு..மார்கழி மாதம் முகிந்தது. முற்றும்

குறிப்புரை : அகஸ்த்திய சுவாமியார் அருளிச் செய்த வாத சூத்திரம் இருனூறு

**1-200 பாடல்கள்.** முதலிலுள்ள 100 என்ற எண்ணிட்ட ஏட்டின் முதற் பக்கத்தில் மிகப் பெரிய எழுத்துகளில் ரங்க நாயகர் கடாட்ச மிருக்கவும். மீனாட்சி அம்மன் பாத கமலம் துணை. சற்குரு கடாட்ச மிருக்க வேணும், பரமேஸ்பரர் பாத கமலம் துணை என்று எழுதப்பட்டுள்ளது. ஏட்டு எண் 172 இல் தொடங்குவதால் ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் உள்ள சுவடியிலிருந்து இப்பகுதி பிரித்து எடுக்கப் பட்டிருக்கலாம், அல்லது வேறு ஒரு சுவடியிலிருந்து இப்பகுதியை மட்டும் எடுத்து எழுதி இருக்கலாம். கல்லுப்புச் சுண்ணம், முப்புச்

சுண்ணம், செயநீர், வீரம், பூரம், இலிங்கம்,செந்தூரம், வழலை உப்பு, அண்டசுண்ணம், கட்டு, பாடாணம், கற்பம், பூரணம், சூரணம், கந்தகம் முதலான வற்றைப் பற்றிக் கூறும் இந்த வாத நூலில் முப்பு, கற்பம், பற்றிய செய்திகள் விரிவாகக் கூறப்படுகின்றன.

அகத்தியர் வாத சூத்திரம் *202* (ச.*324*.Iகுறைச்சுவடி), அகத்தியர் வாத சூத்திரம் *50*(ச.*347*.I) என்ற பெயர்களிலும் நூல்கள் உள்ளன. அச்சு நூல்: அகத்தியர் வாத சூத்திரம் *300* *(1963)*.

## 42. அகத்தியர் வைத்திய காண்டம் 300

**ஆ. 492:750; ஆ.** *1-79* ஏடுகள்; **இ.** *28×3* செ.மீ.; **ஈ.** *6,7* வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** நன்று; **எ .** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

ஆயிரத்தி யிருநூறு முன்னூ லாய்ந்த முற்காண்ட சூத்திரம்
பாயிரத் தொகுதி போன்று பாடிய வயித்திய பாகம்
ஏயிரக்க கவிமுன் னூறு முமைக்கா னுரைக்க வீன்ற
தாயே னுக்கு உரைப்ப தாலுஞ் சாத்திய நூல்தானே (1)

முடிவு

உண்டுபார் குருவுண்டு மருந்து முண்டு
உலகமுண்டு நன்மையுண்டு உதவி யுண்டு
கண்டுபார் சிவமுமுண்டு பூசை யுண்டு
கருத்துண்டு வழியுண்டு விழியு முண்டு
திண்டுமுண்டு செய்யாதே குலையோ ரதுஎத்
தீவினைக்குள் ளாகாதே செடம்போக் காதே
பண்டுசொன்ன தென்முறையை விட்டி டாதே
பண்டிதனே வயித்திய நூல்கண்ட முத்தே (300)

வயித்திய காண்ட முகிந்தது முற்றும்

குறிப்புரை: வைத்திய சூத்திரம் முதலாவது வைத்திய காண்டம் 1500

**1-300 பாடல்கள்.** நயனவிதி, சன்னிக்கு, விசத்துக்கு, சாதிலிங்கச் சவுக்காரம், வாலை விசத்துக்கு, அரையாப்பு,

வெடி சூலைக்கு, களிம்பு, அண்டசூலை, பண்டிதனறிவு, பூசை, பேதிக்கு, விந்துவகை, கைகால் முறிவுக்கு எண்ணெய், சீரகம், ஓமம், நத்தைச்சூரி கற்பமுறை, பிளவைக்கு மருந்து, கற்பக்குறிப்பு குட்டம், காமாலை, காசம், வாளசுத்தி, சன்னி, சூலைக்கு மருந்து, சூலைக்குத் தைலம், அரிதார மாத்திரை, சவ்வீரம், சாதிலிங்கம், சவுக்காரம், வில்வவேர் தைலம், பலகரை பற்பம், ஆவாரை, சன்னி, சுரம், புண்களுக்குக் களிம்பு, கண்நோய்க்கு மருந்து, பூவரசு, மாவிலிங்கம், வெடி சூலைக்கு மருந்து, நீரிழிவுக்கு மருந்து, கஸ்தூரி மாத்திரை, கை கால் வலிக்கு மருந்து, அண்டவீக்கத்திற்கு மருந்து, இரச வங்கச் செந்தூரம், அனுபானம், கற்பம், அப்பிரகம், சிப்பி சுண்ணம், வங்க சுண்ணம், சீரகம் முதலான தலைப்புகள் உள்ளன.

அகத்தியர் வைத்திய காண்டம், அகத்தியர் வைத்திய காண்டம் பாண்டு வைப்பு 600, அகத்தியர் வைத்திய காவியம் 1500 என்ற பெயர்களில் நூல்கள் அச்சாகி யுள்ளன.

## 43. அகத்தியர் வைத்திய காவியம் 1500

**அ.** 241:457; **ஆ.** *1-651* (*325*) ஏடுகள்; **இ.** *38*×3செ.மீ.; **ஈ.** 2-5 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலையிலிருப்பினும் பல ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது (*1878, 1880, 1890, 1897, 1908, 1923, 1929, 1935*).

தொடக்கம்

பாகுடன் கணேசர் பாதம் பணிந்து முக்கனங்க லாய்ந்து
வாகடந் தொகுதி யெல்லாம் வகுத்த சூத்திர மதாக்கி
ஆகம விதியின் ஞாலத் தடர்ந்திடும் நோய்க ளெல்லாம்
போக நலமறிந்து சொல்வோம் புலத்தியர் புரிந்து கேளே

பாடுகிறேன் கண்டத்தின் மேலண் டத்தின்
பதங்கிநின்ற விதியல்ல பறக்க வேண்டி
ஓடுகிறேன் நாசிகாச் சூரணத்தின் வகுப்பை
நலமான திரிகடுகு நெல்லிச் சீரம்
கூடுகின்ற மயில்பீலி கடைய னோடு
குணமான குறுவேரும் சாதிக் காயும்

வாடுகின்ற பத்திரியும் துன்பம் கோஷ்டம்
வால்மிளகு வெட்டிவேரு ஏலங் கூட்டே

முடிவு

போமப்பா காமாலை தீர்வ தற்கு
போக்குடனே எருமையுட சாணிப் பாலில்
நாமப்பா .... .... ...
.. சீரகம் வங்காயம் கூட்டி
தாமப்பா அரைத்தந்தப் பாலில் சேர்த்துத்
தான்குடிக்கக் காமாலை கனிந்து
ஊமப்பா உண்மையுடன் நன்மை யானால்
உன்னுடைய அஸ்தமது விசேஷ மாச்சே

குறிப்புரை : அகஸ்த்திய முனிவ ரருளிச் செய்த வைத்திய காவியம் 1500

பாடல்களுக்கு எண்கள் இல்லை. பொதுவாகச் சுவடிகளில் ஏடுகளுக்கு மட்டும் எண்கள் தரப்படுகின்றன. ஆயின் இச்சுவடியில் ஒவ்வொரு ஏட்டின் இருபக்கங்களுக்கும் எண்கள் தரப்படுகின்றன. மேலும் தமிழ் எழுத்துகளில் எண்கள் தரப்பட்டிருப்பதுடன், இன்று வழக்கிலுள்ள அராபிய எண்களும் தரப்பட்டுள்ளன. சில ஏடுகளில் ஒரு பக்கம் மட்டுமே எழுதப்பட்டுள்ளது. எழுதப்படாத பக்கங்களுக்கு எண்கள் இல்லை. பீனாசிகச் சூரணம், நாசிகா பரணச் சூரணம், வல்லாரைச் சூரணம், துஷ்டரைத் தண்டித்தல், கெற்ப வாயுவுக்கு உப்பு, குட்டத்திற்குத் தைலம், கலிக்கம், சன்னி முறிய, பீனிசங்கள், தூதுவளை நெய், முப்பு வரலாறு, உப்புப் பற்பம், நவச்சாரக் குழம்பு, அண்டகற்பம் வரலாறு, சத்துரு வசியம், அக்கிரான நசியம், நசனம், குட்டம் 18க்கும் சூரணம், பீனிசங்கள் 8, பெண வசியம், விந்துஸ்தம்பனம், மாமோகச் சித்து, சூரணம், களிம்பு, மெழுகு, பற்பம் முதலானவற்றின் வகைகள், பூரண மகிமை, மாரணம், தம்பனம், காமாலை, ஞானம் முதலான செய்திகள் உள்ளன.

*அகத்தியர் 1500 (ச.1), அகத்தியர் 1500 (ச.2), அகத்தியர் 1500 (ச. 316a)என்ற* நூல்களினின்றும் இந்நூல் வேறு பட்டது போல் தெரிகிறது. *அகத்தியர் 1500 (ச. 301.h)* என்ற

நூற் பொருள் இதனுடன் ஒத்து அமைவதுபோல் தெரிகின்றது. இந்நூல்கள் அனைத்தையும் எடுத்து ஒப்பு நோக்குதல் வேண்டும். மேலும் அகத்தியர் வைத்திய காவியம் *1000* (*1895*) என்ற அச்சு நூலிலுள்ள பாடல்களை இதனுடன் ஒப்பு நோக்குதல் வேண்டும். அகத்தியர் காவியம் *16* (*ச.236.*D) என்ற பெயரிலும் ஒரு சுவடியுள்ளது.

## 44. அகத்தியர் வைத்திய சூத்திரம் 205

**அ.** 221:431; **ஆ.** *1-30* ஏடுகள்; **இ.** *35×3* செ.மீ; **ஈ.** *7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. அகத்தியர் வைத்திய பூரணம் *205* என்ற நூல் வெளி வந்துள்ளது.

தொடக்கம்

பூரணமாய் உள்மூலம் பொறியிற் சூடாம்
புகையெழுந்து மேகமதால் சிரசிற் சூடாம்
காரணமாய் நீர்கலந்து கண்ணில் ரோகம்
கனலெழுந்து வருவதுபோல் சூலை ரோகம்
மாரணமாம் வாதத்தில் எழுந்த ரோகம்
மதியதோர் பித்தத்தால் கிராணி யாச்சு
தாரணமாம் வாதத்தில் பிறந்த மேகம்
சார்ந்தபித்த சிலேட்டுமத்தால் சயம தாமே (1)

முடிவு

இந்தவகைக் கெல்லாஞ் சரிசமனாய்
எருமை வெண்ணெயில் நறுக்கியிட்டு
விந்தையான அடுப்பில் வைத்து
விதமா யெரித்துத் தான்பதமாய்த்
தந்திர மாகத் தானிறக்கித்
தானே கரண்டி நெய்கொடுக்க
அந்தமாந்தக் கழிச்ச லெல்லாம்
அடவாய்ப் போகுங் கண்டீரே (205)

குறிப்புரை

1-205 எண்சீர், அறுசீர் விருத்தப் பாக்கள். நடுக்குங் குளிர் தோஷத்தின் குணம், வறப்புள்ளு தோஷத் தின் குணம், நீர்ப்புள்ளுதோஷத்தின் குணம், குளிர் தோஷத்தின் குணம் -

மருந்து, காணாப்புள்ளு தோஷத்தின் குணம், எச்சிதோஷ குணம், சகல தோஷத்துக்கும் குளிச்சங்கட்டை மருந்து, தோஷத்துக்கெல்லாம் அதிமதுரனை, சகல தோஷத் துக்கும் கோரோசனை, நெய், கசாயம், மாத்திரை, எண்ணெய், வாலை, கசாயம், பறவை தோஷத்துக்கு குளிச்சங்குடிநீர், போர் மாந்தத்தின் குணம் - மருந்து, விஷமாந்தத்தின் குணம் - மருந்து, செரியா மாந்தத்தின் குணம் - மருந்து, துவாலை மாந்தத்தின் குணம் - மருந்து, வாயு, பெருங்கழிச்சல், கட்டுமாந்தம், சலமாந்தம், பாலமாந்தம், மகாகணம், ஊதுகணம், வறக்கணம், குண்ட லினி கணம், விரைக்கணம், மூலகணம் முதலானவற்றின் குணமும், மருந்தும், சகல கணத்துக்கும் எண்ணை, சகல தோஷ கணங்களுககும் கத்தாழை எண்ணை, அமர் சுரத்தின் குணம்-கசாயம், பிள்ளை பால் சாப்பிடாவிட்டால் குணம் - கசாயம், அதிசார வகையின் குணம் - நெய் வகை, மாந்தை, மாந்தை கணத்தின் குணம் - கசாயம், மாந்த மெட்டுக்கும் கசாயம், நீர்க்கணை, ஆமைக்கணம் குணம் - மருந்து, மாந்தை சுர கசாயம், ஆமைச் சன்னியின் குணம், அசதி சுரத்தின் குணம் - நெய், மூல ரெத்த கண மாந்த தோசத்துக்கு எண்ணை, அஷ்டட கண மாந்தை எட்டுக்கு எண்ணை, கணமாந்தத்துக்கு பாலெண்ணை, குழந்தைகளுக்கு வலசலங் கட்டினால், சுரம், கண மாந்தம், பொருமல் இதுக்கு எண்ணை, அஷ்டட கண மாந்தத்துக்கு அமுர்த சஞ்சீவி உண்டை, வெதுப்பு சுரத்துக்கு வாலசஞ்சீவிக்குளிகை, மாந்தை கணம், சுரந்தோஷம், வயத்தோடல், வாந்தி, இருமல், நாய்முள்ளுக்கு வால சஞ்சீவி, வாலக்கிறுகைக் குணம், சுழி கணைக்கு எண்ணை, வயத்துக் கடுப்புக்கு, மாந்தை கசாயம், சகல மாந்தத்துக்கும் கசாயம், மாந்தை தோஷத்துக்குத் துவாலை, மாந்தை வலிப்புக்குத் துவாலை, மாந்தைக்குக் கசாயம், மாந்தத்துக்கு நெய், போர் மாந்தைக்குக் கசாயம், கட்டு மாந்தத்துக்கு மாத்திரை, மாந்தை உண்டை, கட்டு மாந்தத்துக்குச் சவுக்கார உண்டை, வெங்கார உண்டை, மாந்தை உண்டைக்கு அனுபானம், பிள்ளைக் கரப்பானுக்கு எண்ணை, வால சஞ்சீவிக் குளிகை, மாந்தைக்கு எருமை வெண்ணையில் நெய் வைக்கும் விபரம், கட்டு மாந்தத்துக்கு எண்ணை முதலான தலைப்பு களில் மாந்தத்தின் வகைகள், குணங்கள் அவற்றிற்குரிய மருந்துகளின் வகைகள், குழந்தைகளுக்கு வரும் பல்வேறு தோடங்கள் முதலியன தெளிவுபடுத்தப் பட்டுள்ளன.

# 45. அகத்தியர் வைத்தியம் 205

**அ.** **493:751; ஆ.** *1-56* ஏடுகள்; **இ.** *28.5×3.5* செ.மீ.; **ஈ.** *6,7* வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** நன்று **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

பூரணமாய் உள்மூலம் பொறியிற் சூடாம்
புகையெழும்பி மேகமதாஞ் சிரசிற் சூடாம்
காரணமாம் நீர்கலந்து கண்ணிலே ரோகம்
கனலெழுந்து வாயுவினால் சூலை ரோகம்
மாரணமாம் வாதத்தி லெழுந்தமேக
மதியதொரு பித்தத்தால் கிராணி யாச்சு
தாரணமாம் வாயுவினால் குன்ம மாச்சு
சார்ந்தசிலேற் பனங்கூடில் சயம தாச்சே (1)

முடிவு

தாயிருந்து பிள்ளைக்கித் தவக்கா மில்லாதத்
தன்மைபோ லின்னூலைச் சாத்தி னேன்னான்
நோய்மிகுந்து சாவில்லை யொருநா ளுந்தான்
நுண்மையாய்ச் சரக்கெல்லாம் நீத்துக் கொண்டு
வைய்யமுடன் யெண்ணை யேகுகிறதுஞ்
செய்துவை யந்தி ...
... ... .. ..
... வயிற்றிய முற்றே. (205)

குறிப்புரை: அகஸ்தியர் வயித்தியம் 205

**1-205 பாடல்கள்.** 204, 205 ஆம் பாடல்களையுடைய இறுதி ஏடு மிகவும் சிதைந்துள்ளது. 221:431 என்ற எண்ணின் முதல் பாடல் இப்பாடல் போன்றதே ஆயினும் பாடவேறுபாடு உள்ளது.

தாம்பிரப் பற்பம், இரசப்பற்பம், காரீயப் பற்பம், வெங்காரப் பற்பம், பூரப்பற்பம், கருட பச்சைப் பற்பம், கல்நார்ப் பற்பம், நாகப்பற்பம், வெள்ளி பற்பம், கந்தகப் பற்பம், மண்டூரப் பற்பம், லிங்கப் பற்பம், வீரப் பற்பம்,

லோகப் பற்பம், சாத்திரபேதிப் பற்பம், பவளப் பற்பம், இரத்தினப் பற்பம், லவனப் பற்பம், ஆமையோடுப் பற்பம், முத்துப் பற்பம், கற்பூரச் சுண்ணம், துருசுச் சுண்ணம், அகிற்கட்டைச் சூரணம், அருகின் வேர் தைலம், தங்கப் பற்பம், மேகத்துக்குத் தைலம், வில்வவேர்த் தைலம், சங்கமம் வேர்த்தைலம் முசுறுமுட்டைத்தைலம், வேங்கை வேர்த்தைலம், குறுந்தொட்டித் தைலம், சென்னகரப் பட்டைத்தைலம், சீரகத் தைலம், அமுக்கரா வேர்த்தைலம், கீழாநெல்லித் தைலம், செம்முள்ளித் தைலம், சதாவேரித் தைலம், சூரித் தைலம், மேனிச் சூரணம், அகிற் சூரணம், கிராணிக்குச் சூரணம் சரக்குளிகை முதலான தலைப்புகளில் கிருமி, கெர்ப்பநோய் சுரவாயு முதலானவற்றிற்கு மருந்துகள் உள்ளன. *ச. 294*.h, *ச. 311*.b, *ச. 317*. k,*ச. 323*.a என்ற நூல்கள் இது போன்றவையே. *ச.311*.bயில் மட்டும் *206* பாடல்கள் உள்ளன. இந்நூலின் இறுதிப்பாடலுடன் *ச.294*.h இன் இறுதிப் பாடல் மட்டுமே ஒத்து அமைகிறது.

அகத்தியர் பற்ப முறை *205* (*ச.17*.b) என்ற நூல்கள் இந்நூல் போன்றவையே.

## 46. அகத்தியர் வைத்திய சூத்திரம் 205

**அ. 563:911; ஆ.** *1-30* ஏடுகள்; **இ.** *35×3* செ.மீ; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

குறிப்புரை: அகஸ்தியர் அருளிச்செய்த வயித்திய
சூஸ்த்திரம் 205

*221:431* என்ற நூலினைப் போன்றதே. *30* ஆவது ஏட்டில் *205* ஆவதுபாடல் முடிந்த பின்பு தொடர்ந்து'கட்டு மாந்தத்துக்கு விளக் கெண்ணை' எனும் தலைப்பில் செய்முறை எழுதத் தொடங்கி முடிவு பெறாமல் உள்ளது. *30* ஆவது ஏட்டின் பின்பக்கம் எழுதப்படவில்லை. *31* ஆவது ஏட்டில் 'அகத்தியர் வால தீட்சை சூத்திரம்' என்ற நூல் தொடங்குகின்றது. மாந்தத்திற்கு மேலும் செய்திகளைத் திரட்ட இச்சுவடி எழுதியவர் முயன்று பின் தொடராமல் வேறு நூலை எழுதியிருக்கின்றார் என்பது தெரிகிறது.

*560:911; 221:431* என்ற இவ்விரு நூல்களிலும் *1-205* பாடல்களும் மருத்துவம் பற்றிய செய்திகளாகவே அமை

கின்றன. ஆயின் 'அகஸ்தியர் இருநூற்றைந்து' (ச. 294.H) என்ற நூலின் தொடக்கப் பாடல் இவ்விரு நூல்களில் இருப்பதைப் போன்றிருப்பினும் இறுதியில் 2 பாடல்கள் (204, 205) நூற்பயனைக் கூறுவனவாக உள்ளன. மேலும் இதிலுள்ள செய்திகள் இவ்விரு நூல்களினின்றும் மாறுபட்டமைகின்றன. அகத்தியர் 205 (ச. 311.e; ச. 323. a) அகத்தியர் அருளிச் செய்த வாகடம் 205 (ச.317.K) என்ற நூல்களின் தொடக்கப் பாடல்களும் இவ்விரு நூல்களில் உள்ளவற்றைப் போலவே இருக்கின்றன. ஆயின் நூற் செய்தி மாறுபடுகிறது. நூல் இறுதியில் (ச. 317.K) அகத்தீச ரருளிச் செய்த வயித்திய மிருநூற்றஞ்சு முற்றும்' என்ற குறிப்பு உள்ளது. மேலும் அகத்தியர் பற்பமுறை 205 (ச. 17.A) என்ற நூலின் தொடக்கப் பாடலும் ஒத்து அமைந்து, செய்தி வேறுபடுகின்றது. அகத்தியர் 20-க்குச் சூத்திரம் என்ற நூல் (ச. 317I) தொடக்கப் பாடல் உட்பட முற்றிலும் இவ்விரண்டு நூல்களினின்று வேறானதாக அமைகின்றது.

இவற்றிலிருந்து நூல் தலைப்புகள் ஒத்து அமைந்து பொருள் மாறுபடலாம் என்பதும், நூல் தலைப்புகள் மாறுபட்டு அமைந்து பொருள் ஒன்றுபடலாம் என்பதும் தெரியவருகின்றன. ஆயின் பொருள் மாறுபடக்கூடிய நூல் களில் நூல் தலைப்பும், முதற்பாடலும் ஒத்து அமைவதற் கான காரணம் அறியப்படுதல் வேண்டும்.

அகத்தியர் வைத்திய பூரணம் 205 என்ற பெயரில் (1882, 1872, 1956) மூன்று நூல்கள் வெளிவந்துள்ளன.

## 47. அகத்தியர் வைத்திய சூத்திரம் 300

**அ.** 183:383; **ஆ.** 200-252; **இ.**34×3 செ.மீ.; **ஈ.** 7-9 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சு நூலினின்று இச்சுவடி வேறுபடுகிறது.

தொடக்கம்

பூதலத்தில் தென்பொதிகை தன்னில் வாழும்
பூரணமே என்குருவே சிவமே அய்யா
மாதலத்தில் அட்டசித்தி எட்டும் பெற்ற
வரிசையினால் வயித்தியநூல் வகையாய்ச் சொல்வேன்

போதகத்தின் முகத்தானைக் கடைகேட் டானை
புழுக்குழியில் விழுந்தலைப் புதல்வன் தன்னைச்
சாதகமாய் மனமடங்கி அறிவில் கூடித்
தற்பரனாய் நின்றகண பதியே காப்பாம் (1)

முடிவு

மூலத்தி லெழுந்தாலே மவுனங் கொண்டு
மூடினால் வடுகனங்கே நிறுத்தஞ் செய்வார்
ஆலத்தில் குண்டலிக்குள் அடுக்கப் பாரு
ஆசையவன் வைப்பதற்கு வடமாலை சாத்து
சீலத்தின் நந்தியுடன் பூசை பண்ணு
சேகண்டி நாதவொலி மணியி னோசை
காலத்தின் கருவறிந்து பூசை தீர்ந்தாற்
கைக்குள்ளாம் வயித்திய முந்நூறு முற்றே (306)

முற்றும்

குறிப்புரை

**1-301 பாடல்கள்.** 202 ஆவது ஏட்டை அடுத்து அளவில் சிறிய 202 என்ற எண்ணிட்ட ஏடு ஒன்றுள்ளது. அதில் செந்தூரம் தின்பதற்குச் சிவனை, தேவியை வணங்கிக் கணபதியைப் பூசை பண்ணு என்று கூறப்பட்டுள்ளது. கற்பூர சலாசத்துப் பற்பம், அப்புரகச் செந்தூரம், தாளகபறபம், சூதபற்பம், வேப்பம் பட்டைத் தைலம், 18 குட்டத்துக்கு, அண்ட ஓடு செந்தூரம், பொன்னிமிளைச் செந்தூரம் ஆடா தோடை லேகியம் அமுர்த சக்கரை, அமுர்த சக்கரை லேகியம், கருநாகச் செந்தூரம், அயச் செந்தூரம், துருசுச் செந்தூரம், பாண்டு வகைக்கெல்லாம் லேகியம், நவசிந்தா மணி லேகியம், கெந்தகப் பற்பம், வெண்கலச் செந்தூரம், முத்துமணிச் செந்தூரம், தாம்புரம் ஊறல் வாங்க, நவசிந்தா மணி லேகியம், அயகாந்தச் செந்தூரம், கிரகாதி லேகியம், ரசவங்கச் செந்தூரம், பூனீற்றின் கூறு, தங்க பற்பம், பூரண சந்தி ரோதையம், அக்கினி குமாரன், ஆனந்த வயிரவன், வயிர பற்பம், பேதிக்கு லேகியம், செய செந்தூரம், மண்டூரச் செய செந்தூரம், பதங்கச் செந்தூரம், நவலோகச் செந்தூரம், சலாசத்துச் செந்தூரம், 64 சரக்கு சுத்தி வகை, காந்தச் செந்தூரம், சயத்துக்குப் பூநாகச் சூரணம், வேப்பெண்ணைத்

தயிலம், சகல வியாதிக்கும் கெந்தகத் தயிலம், குட்டத்துக்கு, கருவங்க நெய்த் தயிலம், மகாதிராவகம் முதலான தலைப்புகள் உள்ளன. இறுதியில் எண் இன்றி மூன்று ஏடுகள் உள்ளன. அதில் குன்மம், சூலைக்கு மருந்து, எண்ணை, நெய், மருந்து செய்முறை, பலிக்க வேண்டு மானால் கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகள், மருந்து செய்முறை, அவற்றால் தீரும் உள்மாந்தை, பாண்டு, சோகை, வாதசூலை, மலக்கட்டு, சலவாய்வு பிசாசு பிணிக்கிற தோடம் நீங்க மணி மந்திரம் முதலான செய்திகள் உள்ளன.

## 48 அகத்தியர் வைத்திய சூத்திரம் 300

**அ.** 562:908; **ஆ.** *1-85* ஏடுகள்; **இ.** *30* × *3* செ.மீ.; **ஈ.** 5-*6* வரிகள்; **உ.** சிதைவு; **ஊ.** தெளிவின்மை; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

கணபதியின் பதத்தாலே கீழ்முக் கோணம்
    கரையடங்காப் பிறப்பான கடவு ளானை
கணபதியைக் குண்டலியிற் கண்டு தேறி
    கனலெழுந்து வாயுவந்தப் புரியட் டத்தாற்
கணபதியே பிறபிறப்பு ஆண்பெண் ணாகிக்
    கரைகொள்ளா விந்துவொடு நாத மாகிக்
கணபதியைப் பெற்றெடுத்த விந்து வாசல்
    கலருகின்ற இடுகுழியும் காணுங் காணே (2)

முடிவு

காணப்பா பார்த்துரைத்த வாதி மகனார்
    கைவண்ணம் தப்பாமல் வைத்தியம் செய்வான்
தோணப்பா வடுகனுடை பூசை செய்வாய்
    சொற்குருவை மறவாதே லெட்சியத்தி னுள்ளே
பேணப்பா நந்திகுரு உபதே சித்தார்
    பேசாதே சூட்சமாம் பேணிப் பாரு
ஆணவத்தை விட்டுவிடு கற்பங் கொண்டால்
    அரகரா சங்கேறு மூலம் காணே (300)

குறிப்புரை

**1-301 எண்சீர் விருத்தப் பாக்கள்.** முதலிலுள்ள எண் இல்லாத ஏட்டில் அகத்தியர் நிகண்டு அகத்தியர் சூத்திரம் 205, அகத்தியர் கர்ம சூத்திரம் 150, அகத்தியர் முப்பு 50, அகத்தியர் வாதம் 100, அகத்தியர் சூத்திரம் 200, அகத்தியர் வைத்தியம் 301, மருந்தகராதி ஆகிய நூல்களின் பெயர்கள் உள்ளன. ஆயின் சுவடிக் கட்டில் இந்நூலை அடுத்து 1-34 ஏடுகளில் அகத்தியர் சூத்திரம் 205 என்ற நூல் மட்டுமே முழுமையாக உள்ளது. பிற ஏடுகளில் கர்ம சூத்திரம் 150, அகத்தியர் சூத்திரம் 200, அகத்தியர் வாதம் 100, மருந்தகராதி ஆகிய நூல்களின் ஒரு சில பகுதிகளே உள்ளன.

அயகாந்தச் செந்தூரம், நூல்வரலாறு, கற்பூர சிலாசித்து, அப்பிரகச் சத்து, நிமிளைச் சத்து, தாளகப் பற்பம், சூதப் பற்பம், வேப்பம் பட்டை லேகியம், அண்டச் செந்தூரம் கிருஷ்ண அப்பிரகச் செந்தூரம், சீந்தில் சர்க்கரை, அமிர்த சஞ்சீவி லேகியம், பவள வங்கச் செந்தூரம், அயச் செந்தூரம், உலோகச் செந்தூரம், கந்தக பற்பம், வெங்கலச் செந்தூரம், முத்து மணி செந்தூரம், தாளகம், தாமிரப் பற்பம், குன்மம் தீர நவசிந்தாமணி லேகியம், அயகாந்த செந்தூரம், ரசவங்கச் செந்தூரம், வைத்தியர்க்குப் புத்தி, சாப நிவர்த்தி, பூநீருகுரு, கிளிஞ்சி சுண்ணம், அண்டச் சுண்ணம், ஆதிகுரு, குட்டம் தீர, அயனாகம், பாத ரோகத்துக்கு, நாகச் செந்தூரம், கருவங்கக் கட்டு, கருவங்கச் செந்தூரம், தங்கபற்பச் செந்தூரம், பூரண சந்திரோதயம், அக்கினி குமாரன், ஆனந்த வயிரவன், சூத பற்பம், வைர பற்பம், விரோசனம், செயச் செந்தூரம், அயச் செந்தூரம், காந்தச் செந்தூரம், மண்டுரச் செந்தூரம், துய்யானச் செந்தூரம், நவலோகச் செந்தூரம், சங்கார ராசபூபதி, நாக பற்பம், சிலாசத்துப் பற்பம், சிலாசத்துச் செந்தூரம், காந்த சத்து, வேப்பெண்ணெய் தைலம், சுலுப தைலம் முதலான தலைப்புகள்.

வாத, பித்த, சிலேற்பனத்தால் வரும் நோய்கள், வாதம், வைத்தியம், ஞானம், யோகம், மௌனம், தீட்சை, பூசை விதி, மாந்திரீகம், எந்திரம், மயேந்திர ஜாலம், வாதபித்த சிலேத்துமத்தால் வரும் நோய்க்கு மருந்து, மருந்தை நம்பிக்கையோடு உட்கொள்ள வேண்டுமென்பது, கற்பூர

சிலாசத்து உட்கொள்ளும் அளவு, தீரும் நோய்கள், சரியை, கிரியை, சட்டை முனி, ரோமரிசி, திருமூலர் முதலான செய்திகளின் வரிசையில் நூல் அமைகின்றது.

*183:383* என்ற நூலினைப் போன்றதே. முதல் பாடலான காப்புப் பாடலும், இறுதிப் பாடலான 301 ஆம் பாடலும் இரண்டிலும் ஒன்று போலவே அமைகின்றன. எனினும், இச்சுவடி அழியும் நிலையிலிருப்பதாலும், தலைப்பு ஒன்றுபோல் இருப்பினும் செய்திகளில் வேறுபாடு உள்ளதா என்ற ஆய்விற்கு உறுதுணை புரியலாம் என்ற வகையிலும் இந்நூற் குறிப்புரை இயன்றவரை விளக்கமாக அமைகின்றது. இரண்டு நூல்களிடையேயும் மிகுதியான பாடவேறுபாடுகள் உள்ளன. அகஸ்தியர் வைத்திய சூத்திரம் என்ற பெயரில் அமையும் ச. 235.A;ச. 251.B;ச. 298 என்ற நூல்களும் இது போன்றவையே. ச.298 என்ற எண்ணில் உள்ள தொடக்கப்பாடல் ஒத்து அமைந்து பாடல் எண்ணும் ஒன்று என்ற எண்ணையே பெற்றுள்ளது. ஆயின் இறுதிப் பாடல் வேறாக அமைந்து 302 என்ற பாடல் எண்ணைப் பெறுகின்றது.

ச.235.Aஎன்ற எண்ணுடைய நூலின் முதல், இறுதிப் பாடல்கள் இந்நூலுடன் ஒத்து அமைகின்றன. இந்நூலின் இறுதிப் பாடல் 301 என்ற எண்ணைப் பெற, அந்நூலின் இறுதிப் பாடல் 300 என்ற எண்ணைப் பெறுகிறது.

அகத்தியர் வைத்தியம் (ச. 323.I) என்ற நூலில் 300 பாடல்கள் உள்ளன. ஆயின் இறுதிப் பாடல் இந்நூற் பாடலுடன் ஒத்து அமையவில்லை.

அகத்தியர் செந்தூரம் 300 (ச. 15.a) என்ற நூல் இந்நூல் போன்றதே.

## 49. அகத்தியர் வைத்தியம்

**அ. 509:773; ஆ.** 64 ஆவது ஏடு; **இ.** 40×3 செ.மீ.; **ஈ.** 6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

அகஸ்த்தியர் சொன்ன முறையை மிகவும்
அன்புடனே கேளுங்க ளின்பமதாய்
சிகத்தினில் மனிதருக்கு -நோய்கள்
தீரவென் றேமுனி செப்பினரே
விஸ்த்தார மாக யின்னம்
மேகத்துக் கெண்ணை
விளம்புகிறே னுன்னிதமாய்

முடிவு

உடம்பெங்கு மேலெரிவுங் கைக்கா லெரிவும்
கக்கிஷ னோய்களெல்லாம் யெண்ணையைக்
கண்டால் பறந்தோடு முண்டிடவே
திக்கிலுள்ள மனிதருக்கு-நோய்கள்
தீரவென் றேமுனி செப்பினரே
தாதை தோந் தான தன தானம் - தன - தானத் தோதானந்

பிற்குறிப்பு

யிந்த பொஷ்த்தகம் தொட்டிய முத்துக்கருப்ப பிள்ளைக் குமாரன் மொட்டையப் பிள்ளை பொஷ்த்தகம். இது யெழுதியது மேற்படி மொட்டையப் பிள்ளை கையெழுத்து

குறிப்புரை : அகஸ்த்தியர் வயித்தியம் - நொண்டி சிந்து

முந்தைய நூலின் இறுதி *63* ஆவது ஏட்டில் முடிகிறது. இவ்வேட்டில் *'63 இ'* என்று எழுதப்பட்டுள்ளது. மேகத்துக் கெண்ணை, செய்கின்ற முறை கூறப்பட்டு அதனைக் காசெடை உண்டால் உள்காந்தல், மேக வெட்டை, நீர்க்கட்டு, நீர் அடைப்பு, கண்ணெறிவு, மேலெரிவு, கக்கிஷ நோய் முதலானவை தீருமென்று கூறப்பெறுகின்றது.

## 50. அசாத்தியம் அறியும்படி

**அ.** 509:725; **ஆ.** *30-46* ஏடுகள்; **இ.** 40 × 3 செ.மீ; **ஈ.** *6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

நிறமதி யருக்கன் றன்னை வட்டகை நீரில் நோக்கக்
குறைவது றென்பா லாகில் குறித்திருந் திங்க ளாண்டில்
முறையறல் மேல்பா லாகில் மொழிந்தன மூன்று திங்கள்
அறைந்திடும் வடபா லாகு லாறுதிங்களிற் சாவாம்
யுறையு மேகீழ தாகி லொருதிங்கள் சாவா றென்றே (1)

முடிவு

யின்னநீ சொல்லக் கேளாய் யெழுந்திடும் ரோகத் தோர்க்கு
கன்னல் போல்மொழி நவலாளே கருவி னலைகள் காணீர்
சொன்னதோர் தீபமிரண்டாய்த் தோன்றில் நாளெட்டே யென்று
பன்னினாள் பரமன் சொன்ன படியிது மீளா தென்னே (95)

பிற்குறிப்பு

சிவமயம், குரு கடாட்சம் உண்டு. காளம்மன் துணை தெட்சணாமூர்த்தி துணை, நீலமேகம் துணை, மருதபாண்டியன் துணை, காளியம்மன் துணை, தொட்டியம் முத்துக் கறுப்பப் பிள்ளை குமாரன் மொட்டையப் பிள்ளை பொஷ்த்தகம் யிது. யெழுதினது மேற்படி மொட்டையப் பிள்ளை கையெழுத்து ராமசெயம், கணபதி சகாய முண்டாகதாகவும்.

குறிப்புரை

**1-95 பாடல்கள்.** நேர்த்தின குறி, நீரின் குறி, அசாத்தியம் அறியும்படி, மரணக்குறி, விரல், புருவம், செவிகள், மூக்கு, கைகள் இதில் குறி அறியும்படி, ஓசைக்குறி, தேகக்குறி, வாதநாடி பிரட்டல் முதலான தலைப்புகளில் நாடி நடைகளைக் கொண்டும், அதனால் ஏற்படும் குறி குணங்களைக் கொண்டும் ஒருவர் பிழைப்பது கடினம் என்பது அறியப்படுகிறது.

## 51. அனுபவ மருத்துவம்

**அ.** **183:382;** **ஆ.** *109-152 (44)* ஏடுகள்; **இ.** 34 × 3 செ.மீ; **ஈ.** 7-9 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம் வியாதியின் குணம்

ஆதியில் கடவுள் தன்னை அடியினைப் போற்றி நின்று
தீதறு வியாதி தன்னைத் தெளிவுடன் தீர்க்க வேண்டிக்
கோதிலா நல்லோர் பேசுங் குணமிகு பாடல் தன்னை
நீதிசேர் படியின் மீதே நெறியுடன் உரைத்தார் மேலோர் (74)

முடிவு கிரந்திக்கு வேறு மருந்து

தழுதாழை இலைச்சாறு, களச்சி இலைச்சாறு, சங்கம் இலைச் சாறு, சங்கம் குப்பிச்சாறு, கழுதைலத்திச்சாறு, ஈரவெங் காயச் சாறு இது வகைக்குப்படி அரைக்கால், விளக்கெண் ணெய் அரைப்படி இதுக்குக் கடைமருந்து கார்போகஅரிசி, கருஞ் சீரகம் எடுத்து இடித்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சவும். வியாதியின் பலமறிந்து கொடுத்து வரவும். பத்தியம் வெந்நீரும் சோறும் கொடுக்கவும். இதுக்குக் கிரந்தி, சூலை, அரை யாப்பு, அத்திக்காய்ப்புண்... இதுவெல்லாம் தீரும். இந்த எண்ணெய் கைகண்டது (ஏடு.382).

குறிப்புரை

**பாட்டும் உரைநடையும் கலந்துள்ளன.** முதலும் முடிவு மின்றிப் பெயரறிய இயலாமையால் செய்தி நோக்கில் அனுபவ வைத்தியம் என்று பெயரிடப் பெறுகிறது. நூற்றுக்கும் மேற்பட்ட வியாதிகளின் குணம், அவற்றிற்குரிய மருந்து, பரிகாரம், பத்தியமுறை ஆகியவை எளிய நடையில் தெளிவாகக் கூறப் பெறுகின்றன. இறுதியில் உரைநடையிலும் சில நோய்களுக்கு மருந்து கூறப்பெறுகிறது.

வியாதியின் குணம், சுரலட்சணம், சித்தபிரமச்சன்னி குணம், குடிநீர், வாதசுர கசாயம், பித்த சுரத்தின் குணம் - கசாயம், சேத்துமசுரத்தின் குணம் - கசாயம், வாதபித்த சுரத்தின் குணம் - மருந்து, சன்னிவாத குணம் - கசாயம், விசசுரத்தின் குணம் - கசாயம், ஸ்ரீதோசத்தின் குணம் - கசாயம், நாசிய டைப்புக்கு நசியம், சன்னி செய்யும் குணம் அறியும்படி, வாத சூலை கிரந்திக்கு, சூலைக்குச் சூரணம், கிரந்திக்கு எண்ணை, சூதக வாய்வுக்கு லேகியம், உள்மாந்தைக்குப் புட்டு மருந்து, சந்தனாதித்தைலம், சுரோணிதவாத குன்மத்துக்கு நெய், குன்ம சூலைக்கு

மருந்து, பித்தசூலையின் குணம், சூலையின் குணம், இரத்த ரோகம், வாதகாயம், கெர்ப்பவுற்பத்தியின் குணம், கெர்ப்பரோகங்களின் குணம், அண்டவாதத்துக்கு மருந்து, நீரிழிவுக்கு மருந்து, மேகத்துக்குச் சூரணம், நீர்க்கடுப்பு, கல்லடைப்பு, சகல பிரமியம், உஷ்ணம், இருமல், சுழல் பித்தம், இரத்த இருமல், மூக்கு நீர்ப் பாய்ச்சல், பித்தபாண்டு, விரைவீக்கம், பக்க நேத்திர சன்னி, சுத்திமுறை, மாத்திரை, குளிகை, நெய் முதலான செய்திகள் உள்ளன.

## 52. அனுபவ மருத்துவம்

**அ. 297:522; ஆ.** 26 ஏடுகள்; **இ.** 25 ×3.5 செ.மீ; **ஈ.** 7-8 வரிகள்; **உ.** ஏட்டின் ஓரப்பகுதிகள் செல்லரிக்கப்பட்டுள்ளன; **ஊ.** கடினம்; இரண்டுவிதக் கையெழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### குமாரசாமி முறை பவழ பற்பம்

சாதிலிங்கப் பற்பம், சாதிலவனம் படி- ½, சாதிலிங்கம் பலம் - 1½. லவனம் பொடித்து மேலே பாதியும் கீழே பாதியும் போட்டு, ஆறு சீலை செய்து அடுப்பில் ஏற்றி மூனு சாமம் எரித்துக் குளிர ஆறவைத்து எடுத்துக் கொள்ளவும். பவழப் பொடி பலம் ஒன்று அகலிலே வைத்துச் சுண்ணாம்பும் தண்ணியும் விட்டுப் பிசரி மேல் அகல் கொண்டு மூடி, 5 சீலை செய்து, அம்பது வறட்டியில் புடம் போடவும். பற்பமாகும். பிறகு யெடுத்துக் கொள்ளவும்.

### முடிவு

உப்புப்பசுவம் - உஷ்ண வாய்வு, குன்மத்துகளுக்கு மருந்து. கல்லுப்பு பலம்-¾, வெடியுப்பு பலம்-¼, அன்னபேதி பலம்-¼, உத்தாமணியிலை பலம்-1¼, அரைத்துப் பில்லை தட்டி பூவரசம் பட்டை இடித்துக் கீழும் மேலும் வைத்துப் பத்து வறுளையிலைப் புடம் போடவும். இதுக்கு அனுபானம் மிளகுத் தூளும் கல்கண்டும் போட்டுப் பண்ணி, பணவிடை உப்புப் பசுவம் வைத்து நெய்யில் ஆவது, தேனில் ஆவது இழைத்துக் கொடுக்கவும்.

குறிப்புரை

**உரைநடை.** சாதிலிங்கக் கட்டு, மாந்தத்துக்கு எண்ணை, சகல காசங்களுக்கும் உப்பு பசுவம், அரக்குத் தயிலம், நாசிகா பரணம், நீரிழிவுக்கும் கிராணிக்கும் மருந்து, அகத்தியர் சூரிய சஞ்சீவி யிது-எப்படிப்பட்ட கழிச்சலுக்கும் சுரத்திற்கும், நெடுநாள் பட்டதுக்கு, பஞ்சலோக மெழுகு, மசான சூத்தியன், சூலைக்கு மருந்து, கிரந்தி சூலை, விரை ஏத்த இறக்கம் இதுக்கு மருந்து, புண்ணுக்கு, இரணத்துக்கு, மூலத்துக்கு, குன்மத்துக்கு, உஷ்ணவாயு, குளுத்தி சூரணம், குழந்தைகளுக்குக் கியாழம், **சின்னு முதலியார் வெள் ளெண்ணை முறை,** குன்மத்துக்கு, உப்புசம், உஷ்ணவாயு குன்மத்துக்கு மருந்து, இளைப்பு முதலான தலைப்புகள் உள்ளன.

## 53. அனுபவ மருத்துவம்

**அ.** 317:543; **ஆ.** 33 ஏடுகள்; **இ.** 24.5 × 3 செ.மீ; **ஈ.** 7-9 வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; **ஊ.** கடினம்; தெளிவின்மை; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

வெங்காயம் பலம்-2, இஞ்சி பலம்-2, கோழி முட்டை-2, வெங்காயமும் இஞ்சியும் ரெண்டும் நன்னாய் கோந்தி முட்டைக் கருவிட்டு லேகியமாய்க் கிளரிக் கெச்சக்காயளவு ரெண்டு வேளைக்கும் குடுக்கவும்.

முடிவு

**பொன்னப்ப முதலியார் கரப்பான் எண்ணெய்** - ஆதண்டம் வேர், சீவிக் கொள்ளு, வட்டக்கிலி கிலிப்பை வேர்ப்பட்டை, பூண்டு, வசம்பு, வெளக்கெண்ணை ரவியில் வைக்கவும்.

குறிப்புரை

**பாட்டும் உரைநடையும் கலந்ததுள்ளன.** காரீயச் செந்தூரம், இருமலுக்குக் குருசு மாத்திரை, நசியம், சகலச் சன்னி விசத்துகளுக்கு மாத்திரை கலிக்கம், பேதிக்கு, மேகத்துக்கு மாத்திரை, வீரச்செந்தூரம், அயச்செந்தூரம், நீரிழிவுக்கு, காமாலைக்கு, பெரும்பாட்டுக்கு, விரைவாதத்துக்கு, பெருவ

யிற்றுக்கு, **பொன்னப்ப முதலியார் கரப்பான் எண்ணை,** வாத ராசாங்கத் தைலம், குழந்தைகளுக்கு மாத்திரை, பேதிமாத் திரை, அகத்தியர் குழம்பு, விக்கலுக்கு, திரிலோகச்சிந்தாமணி மாத்திரை, ஆண்டியப்பன் சுரத்துக்கு மாத்திரை, **குளுத்தி யெண்ணை பண்ணும்படி கொடியம்மாள் குடுத்த டாப்பு அனுபோகம், சன்னி வெப்பு இதுகளுக்கு மாத்திரை- குருசாமி முறை முதலான தலைப்புகள் உள்ளன.**

## 54. அனுபவ மருத்துவம்

**அ. 319:545; ஆ.** 5-97 (52) ஏடுகள்; **இ.** 32.5 × 2.5 செ.மீ; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** நன்று; ஓரிரு ஏடுகள் சற்றுச் சிதைந் துள்ளன; **ஊ.**கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

தான்றிவேர் கழஞ்சு-1, ஓரிலைத்தாமரைவேர் கழஞ்சு-1, கொடுப்பை வேர் கழஞ்சு-1, மயனத்தளை கழஞ்சு-1, உலு வாயரிசி கழஞ்சு-1, கோரோசினை கழஞ்சு-1, தென்ன மிளம்பூ-1, கடுக்காய்-3, அத்திப்பட்டை, அத்திப்பிஞ்சு, மாதுளம் பிஞ்சு குப்பைக்கீரை வேர், பளம்பாசி, பருத்திக் காய்ப்பிஞ்சு இதுவெல்லாம் ஒரு பத்துப்படித் தண்ணீர் வைத்து இரண்டு படியாகக் காய்ச்சிக் கடை மருந்தெல்லாம் சரகத்தில் அரைத்துச் சரகமும் மருந்தும் எருமை நெய் உழக்கு, நறுநெய் உழக்கு இதுவெல்லா மொரு சருவத்தில் வடித்து உள்ளுக்குக் கொடுக்க (ஏடு. 5).

முடிவு

**வயிற்றுக் கழிச்சலுக்கும் கீரி, பாம்புக்கடிக்கும் நாய்க் கடிக்கும் மருந்து-** புளியங்கொட்டைத் தோடு அரைத்து அதிமதுரமும் சுறா மிளகும் மோரில் காய்ச்சிக் கொதிப்பிச்சி, சிறுகச் சிறுகக் கொடுக்கவும். வேறு-ஆடாதோடையிலை யும், மிளகும் அரைத்துக் கொடுக்க வேண்டும். ஓருள்ளிப் பூடும், வசம்பும், அறுகும், கீழ்வாய் நெல்லி, முடக்கொத் தான், கொளிஞ்சி, நாயுருவி, தலைசூடுவள்ளி, கருவிலாஞ்சி, கருவேப்பிலை, ஊமத்திலை, சித்தாமணக்கிலை, நாரத்தை யிலை, எலுமிச்சையிலை, பரவனஇலை, மொசுமொசுக்கை, சழலம், சுரை யிலை, பூசணியிலை ஒவ்வொன்றும் பலம்-20 இடித்துச் சரகம் கொள்ளவும் (ஏடு 90).

### குறிப்புரை

**உரைநடை.** வாயுவுக்கு மருந்து, புண்ணுக்கு மருந்து, பவுத்திரத்துக்கு மருந்து, சன்னிக்கு உண்டை, உள்ளுரோகத்திற்கு நெய் வைக்கிறது, வயிற்றுக் கடுப்புக்கு மருந்து, சன்னிக்கு எண்ணெய் வைக்க மருந்து, சூலெண்ணை வைக்க மருந்து, காமாலைக்கு மருந்து,மதன காம சுரத்துக்குச் சூரணம், சர்வ சங்காத்திச் செந்தூரம், அண்ட வாதத்துக்கு மருந்து, இருமல், இளைப்புக்கு ஈளை வலிக்கு, சோகை, காமாலைக்கும் பல வியாதிக்கும், தொண்டைப் புண், கொ்ப்பத்துக்கும் இருமலுக்கும், குவளை விற்புருதிக்கும் மருந்து, எலிகடித்தால் துவாலை யிட மருந்து,மஞ்சநோவுக்கு மருந்து குடிநீர், கொர்ப்பவிற் புருதிக்கு நறு நெய் வைக்க மருந்து, வகுத்து வலி உள்ளுக்கு மருந்து; பித்தத்துக்கு மருந்து, பஞ்சரோகச் செந்தூரம், ஆனந்த வாயுவுக்கு எண்ணை வைக்கறது, குளிக்கவும், உள்ளுக்குக் குடுக்கவும், புண்ணுக்குப் பொடி வைக்க, நீர்செரிப்புக்கு மருந்து, மகாபூசிக்காய் தயிலம், நீலசோதிக் கிழங்கில் பொடி, கொர்ப்பிணியாயிருக்கிறவள் வாயால் கக்குறதுக்கு, இரதபற்பம், காந்தச் செந்தூரம், பரங்கிப்பட்டை லேகியம், சிலேற்பன இருமலுக்கு, பறங்கிப் புண் எண்ணை வைக்க, கூழ்பாண்ட லேகியம்,வாதசன்னிக்கு எண்ணை, கோடா குடியுண்டை, பிள்ளைக்கு எண்ணைவைக்க, சூலைப்புண்ணுக்கு முதலான தலைப்புகள் உள்ளன.

## 55. அனுபவ மருத்துவம்

**அ.** **450:697; ஆ.** *131* ஏடுகள்; **இ.** 36.5 × 3.5. செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

### தொடக்கம்

தாளிச பத்திரி பலம்-*1*, மிளகு பலம்-*1*, சாதிக்காய், கடுக்காய், கொட்டைபோக்கி பலம்-2. எந்த அனுபானத்திலும் கொடுக்க வாய்வுக் குன்மம், பயித்திய வாயு, கிறுகிறுப்பும்.... ரோகந் தீரும்.

### வேறு

தாளிசபத்திரி பலம்-*1*, மிளகு பலம்-*2*, சுக்கு பலம்-*3*, திப்பிலி பலம்-*4*, திரிசாதகம் வகைக்கு பலம்-*1*, கூகைநீறு பலம்-*3*, பச்சையாக இடித்துச் சூரணம் பண்ணி, சீனியிலை கலா

சமபாகங் கூட்டிக் கொள்ளவும். அந்தி விடிய வெறுகடிப் பிரமாணங் கொள்ளவும். பயித்திய வாய்வு, அன்னத் திவசம், அரோசிகம், கிறுகிறுப்பு, வாய்நீரூறல் இவை தீரும்.

### முடிவு

#### பவுத்திரத்திற்கு எண்ணெய்

கொடுவேலி வேர் பலம்-5, சித்தகத்திச்சாறு படி-3, இரதம் இரண்டு பலம், சாதிலிங்கம் ஒருபலம், கறுப்பட்டி பலம்-3, வெள்ளவெங்காயம் பலம்-3, நற்சீரகம் பலம்-2, வெங்காயம் பலம்-2, நல்லெண்ணை நாழி, விளக்கெண்ணை உரி. இந்த மருந்தெல்லாம் அரைத்து வெந்த பதத்தில் இறக்கி எண்ணெய் ஒரு கரண்டியும் கடுகு ஒரு பாக்களவும் கொள்ளவும். பவுத்திர வகையெல்லாம் தீரும்.

### குறிப்புரை

**உரைநடை.** பலவகைச் சூரணம், கியாழம், இரசாயனம், கடுகு, லேகியம், தைலம் முதலான தலைப்புகள். ஒவ்வொரு தலைப்பிலும் பலவகை மருந்துகளின் செய்முறைகளும், தீரும் நோய்களும் விளக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றன. அனுபவ முறையில் கண்ட மருந்துகளாகக் காணப்படுகின்றன. மகாசந்தனாதித் தைலம், கூழ்பாண்டத்துக்கு, எருமைப்பால், சிரங்கு கரப்பானுக்கு, சிரங்கு பிரமியத்துக்கு, வால சூரியன் குளிகை, துவாலைக்குக்குளிகை, சந்தனாதித்தைலம், அசன வில்வாதித்தைலம், தேங்காய்ப்பால்குணம், பசுவின் நெய் குணம், அந்தப் பிரமியத்துக்கு மருந்து முதலான செய்திகள் உள்ளன.

## 56. அனுபவ மருத்துவம்

**அ.** 554:898; **ஆ.** 9 ஏடுகள்; **இ.** 25 × 2.5 செ.மீ; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** ஏட்டின் ஓரப்பகுதிகள் முறிந்துள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

வயிறு கழிய ஆமணக்கெண்ணை குடுக்கவும். பல விஷத்துக் கும் எலுமிச்சம்பழச் சாத்திலரைத்துக் கூட்டி வாயில் பூசவும். எல்லாப் பாம்புக்கும் கொத்துமல்லி, பசுவின் வெண்ணெயில்

கூட்டிக் கொடுக்கவும். வாதபித்தங் கூடின சுரத்துக்குக் கொத்துமல்லி, சுக்கு உழக்காய்க் காச்சிக் குடுக்கவும்.

### முடிவு

நரை திரை மாற-கையாந்தகரைச் சாறும் இரண்டு உண்டையும் உள்ளே கொள்ளத் தீரும். **வாலிபமாக**-நெல்லிக்காய் கெந்தகமும் இரண்டுண்டையுமாகக் கொண்டு கையில் ஆறு மாதமிருக்க **நஸ்து**.

### குறிப்புரை

**உரைநடை.** மிக எளிய நூற்றுக்கும் மேற்பட்ட மருத்துவ முறைகள். வயிற்று வலிக்கு, வாதபித்த சுரம், விஷசுரம், பிரமியம், நீர்க்கடுப்பு, குன்மம், கொடிய சுரம், தாகசுரம், உடம்பில் திமிர், பூப்பட்ட கண்ணு, இளைப்பு, இருமல், சூலை, சன்னிவாத, முகவாத சன்னி, பிள்ளை பெற்றவர்கள சன்னி, மூலம், பாண்டு, முசலகண்டன், வாயு-10, கொம்பு குளிகையும், அனுபோகங்கண்டது சன்னிக்கு, பலத்துக்குக் கைகண்டது, காச்சல், நாலுநாள் மாறல், தேளுக்கு, சுரம், ரத்தப் பிரமியம், அசீரணம், பித்தம், தலைநோய், சேத்துமம், பல்வியாதி, சுவாசம், சலப்பிரமியம், மலடிக்கு, சத்தி, முகவாதம், சன்னிவாதம், நாய்க்கடி, தம்பனம், விரோசனம், கண்புகை, திமிர் முதலான தலைப்புகள் உள்ளன. தொடக்கத்தில் இரண்டு வெற்றேடுகளும், இறுதியில் ஒரு வெற்றேடும் உள்ளன. முதலிலுள்ள வெற்றேட்டில் 'குளிகைவகை' என்று மட்டும் எழுதப்பட்டுள்ளது. இதில் கூறப்படும் மருந்து வகைகள் பலவற்றுடன் உண்டையையும் சேர்த்துப் பயன்படுத்தப்படுகின்றது. எனவே முன்பே தயாரிக்கப்பட்ட 'குளிகை' பல்வகையான மருந்து தயாரிப்பில் சேர்க்கப்படுகின்றது என்பது தெரிகிறது.

## 57. அனுபவ மருத்துவம்

**அ.** 573:930; **ஆ.** 25 ஏடுகள்; **இ.** 9 x 2.5 செ.மீ; **ஈ.** 5-7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குன்று; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

**மாந்த உருண்டை-** சுக்கு, மிளகு, திப்பிலி, காயம், கிராம்பு, அவுரிவேர், வெத்தலை இதுவெல்லாம் தண்ணீர் விட்டு அரைத்து உருண்டை செய்து ஒரு உருண்டையை வென்னீரில் கொடுக்கவும். ஒரு கஞ்சியாய்ச் சாப்பிடவும்.

முடிவு

**வாயுவுக்கு மருந்து-** மிளகு பலம், ½ பலம் சீரகம், ½ பலம் வெந்தயம் இந்த மூன்று மருந்தும் பொன் வறுவலா வறுத்துப் பாண்டத்தில் போட்டு ஆறுபடி கடும்புளிச்சத் தண்ணீர் ஊத்தி அது கூட அவரை வேரு, இலந்தை வேரு, கண்டகண்டமாய் நறுக்கிக் கூடப்போட்டு, எட்டில் ஒன்றாக வைத்துக் கொடுக்கவும். தீரும். பத்தியம் கிடையாது. அலங்கார வள்ளியம்மன் துணை.

குறிப்புரை

**உரைநடை** மூலகூட்டிற்கு மருந்து, கொர்ப்பப்பூச்சி மருந்து, பிள்ளைமருந்து, லேகியம், காது கேளாததுக்கு மருந்து, நீரடைப் பானுக்கு மருந்து, வயிற்று வலி வாயுவுக்கு மருந்து, வெட்டை, சூரணம், திரளாத பெண்ணுக்கு மருந்து, கசாயம், தேள்கடி மருந்து, கனகலிங்க மெழுகு - மந்தார காசம், வயிற்றுவலிக்கு, சூதகவாயுவுக்கு, தோஷத்துக்கு, பிரமிய மேகத்துக்கு, காமாலைக்கு, அறுநீரு, சிறுநீரு, நீர்க்கடுப்பு, மேகசுரம், தாபசுரம், அரையாப் புக்கு, உதிரக்கடுப்புக்கு, எந்த மருந்துக்கும் பத்தியம் முறித் தெடுக்க முதலான தலைப்புகள் உள்ளன. மருந்து உண்ணும் அளவு, உண்ண வேண்டிய நாட்கள், அனுபானம், பத்தியம் முதலான குறிப்புகள் உள்ளன. குமரியப்பன் என்ற குருசாமித் தேவர், தென்னமநல்லூர், மு. குருசாமித் தேவர், தென்னமநல்லூர், விபா வருசம் சித்திரை 5 ஆம் தேதி என்பன போன்ற குறிப்புகள் குருசாமித் தேவர் என்பவர் எழுதித் தொகுத்த அனுபவக் குறிப்பு என்பதைக் காட்டுகிறது.

## 58. இராசாங்க நாடி

**அ.** 509:771; **ஆ.** 51-58 ஏடுகள்; **இ.** 40 × 3 செ.மீ.; **ஈ.** 6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

வாதமது முன்னெழுந்து தாழ்ந்து சற்றே
  மயிலதுபோல நடைநடந்து மயங்கு மாகில்
சேதமது யில்லைஎண் பத்தாறா மாண்டில்
  செய்யலர் மரணமென்றே தீர்க்க மாக
நாதமது குறைந்துவிடில் போலே கண்டால்
  நாளெட்டில் மரணமென்று நம்ப லாகும்
பேதமது யில்லையிது பிசகி டாது
  பெரியவராம் ராசமுனி பேசுங் காலே (1)

நடையிதுவே அறிந்தாக்கா லாரா தாரம்
  நாளதிலே அறிவார்கள் நாத னுவாற்
விடைதனிலே யேறிவரும் சிவனாற் சொல்ல
  வேதாந்த ராசமுனி வெளியில் போட்டார்
கதைதனிலே யின்னமொன்று சூட்சம் சொல்லேன்
  கருவறியா மானிடர்கள் கருத்ததாய்ப் பாடு
விடைதனிலே எழலானால் சாவா னென்று
  விதமாக ராசமுனி விளம்பி னாரே (24)

பிற்குறிப்பு

ராசாங்கனாடி யெழுதியது சம்பூரணம். தொட்டியத்திலே யிருக்கும் முத்துக்கருப்பப்பிள்ளைக் குமாரன் மொட்டையப் பிள்ளை பொஷ்த்தகம்யிது. யெழுதினது மேற்படி மொட்டையப் பிள்ளை கையெழுத்து. கணபதி துணையாக வேண்டியது. காராளம்மன் துணை, தெட்சணாமூர்த்தி துணை, காளியம்மன் துணை, மருதகாளியம்மன் துணை, மருதுபாண்டியன் துணை, குரு கடாச்ச முண்டாக வேண்டியது. பதினெண் பேர்களுடைய பாதார விந்தமே துணை. சம்பூரணம்.

குறிப்புரை

**1-24 எண்சீர் விருத்தப்பாக்கள்.** முதல் ஏட்டின் வலதுபுற ஓரத்தில் ***ராசாங்கனாடி யறிவுபடி யிது நிசம்*** என எழுதப்பட்டுள்ளது. நாடிகளின் நடை வேறுபாடுகளைக் கொண்டும், அவை உடம்பில்ஏற்படுத்தும்மாற்றங்களைக் கொண்டும் ஒருவன் பிழைக்க முடியாத நிலை என்ன என்பதை விளக்குகிறது.

# 59. இராமதேவர் 81

**அ. 548:885; ஆ.** *81-93* ஏடுகள்; *92* ஆவது ஏடு இல்லை; **இ.** 35.5 × 3.5 செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகான தெளிவான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாக வில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஆதியிலே அமைந்த விதியெழுத்தைக் காண
அருளான நதியங்கு மன்பாய்க் கொண்டு
சோதியென நின்றிலங்கும் நாத ரூபி
சுருதியுள்ள வாலைமனோன் மணியைப் போற்றி
நீதியுடன் சஞ்சார சமாதி செய்து
நின்றாட ஆதியந் தம்நிலைக் கவேதான்
வாதியென்று வந்தோருக்குக் குருவா மென்னூல்
வசனித்தேன் யெண்பதுமே லொன்று மாச்சே (1)

முடிவு

தானான கற்பமது உண்ணக் கேளு
தரணிதனில் விள்ளாதே நாவா டாதே
ஊனான கீயமடா அங்கா யந்தான்
உண்மையுடன் கொண்டுவந்து உரலில் தாக்கிப்
பூனான கம்பமதா லிடித்துக் கொண்டு
போடுகிற மருந்துதனைப் புகலக் கேளு
தேனான பூரமொடு காரஞ் சேர்த்துச்
சேர்த்துமெல்ல யிடிக்கையிலே முலைப்பால் வாரே (76)

குறிப்புரை: இராமதேவர் அருளிச்செய்த 81 **1-76 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** *77-82* பாடல்கள் இல்லை. *83* ஆவது குறைப் பாடலுடன் நூல் முடிவு பெறுகிறது. காரம், சாரம், கட்டு, அயங்காயம், அஞ்சனம், வாதம், யோகம், அட்டசித்து, சுண்ணம், வாதனாடி, காசம், மூர்ச்சை, வாயு, மண்டையிடி, மேலுளச்சல், வயிற்றுக் காந்தல், நீரிழிவு, மகோதரம், தியானம், குண்டலினி, நவநீதங்கள், மோட்சம், அண்டம், பிண்டம், மணி, மந்திரம், ஔசதம், முப்பு, சிவயோகம், பூரணம், ரேசகம், பூரகம், அய்ங்கோலத் தைலம், மை, தோடம், விடபாகம், கண்டமாலை, கபால இடி, சூலை, கடுகுசூரணம், வாசி முதலான செய்திகள் உள்ளன. ர.

அச்சுநூல்: இராமதேவர் என்னும் யாகோபு வைத்தியச் சூத்திரம் *83 (1914)*.

ஏமம், நேமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம் தாரணை, தியானம், சமாதி எனும் எட்டு அங்கங்களைக் கொண்ட அட்டாங்க யோகத்தில் பலர் வெற்றியடைய தவறியிருக்கின்றனர். அப்படிப்பட்ட அட்டாங்கயோகத்தை வாலையை வணங்கி எப்படிச் செய்யவேண்டுமென நூல் விளக்குகிறது. கொங்கணர், மச்சமுனி, குறுமுனி முதலான அட்டகர்மத்தில் திறமை வாய்ந்தவர்களுடைய பாடல்களி லிருந்து அறிவுரைகளை, யோக சத்தியை எடுத்துக் கொண்ட தற்கு நன்றி கூறுகிறார். மூலிகைகளைப் பயன்படுத்துவது பற்றி, பூசைகள்பற்றி, மருந்துவ எண்ணெய், களிம்பு, லேகியம், சவுக்கார வழலை, சூதகட்டு முப்பு அவற்றின் மூலப் பொருட்கள், அமிலங்கள், எலுமிச்சை, கால்சியம், உப்பு, செந்தூரம், வேதியல் பொருட்கள் முதலியன தயாரிப்பது பற்றி எனப் பலவற்றைத் தமது நூல்களில் எழுதி உள்ளார். இராமதேவர் சூத்திரம் 30 (ச.228 E), இராமதேவர் அஷ்டாங்க பட்சணி (ச.228 F), இராமதேவர் 1000இல் சூத்திரம் 10 (ச.289 A) முதலானவை இவரது சுவடி நூல்கள்.

## 60. இராமதேவர் அட்டாங்க யோக பட்சணி 50

**அ. 548:886: ஆ.** 94-100 ஏடுகள்; **இ.** 35.5 × 3.5 செ.மீ; **ஈ.** 8-9 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகான, தெளிவான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஆதியிலே வாலைமனோன் மணிதான் கூவி
அழைத்திட்டு ஆதியந்த மறியச் சொன்னாள்
சோதியிலே கருவுருவை யூனிப் பாரு
சொல்லவொண்ணா அதிசயங்கள் தானே தொத்தும்
நீதியிலே சதாநந்தி யென்னைப் பெத்த
நீளத்திசையி லுள்ள சித்தர் மெச்சிக் கொள்ள
வாதியென வந்தோர்க்குத் திறவு கோல்போல்
வசனித்தேன் பத்துமொரு எட்டும் ரெண்டாய் (1)

முடிவு

எட்டுரெண்டு தந்தவர்க்கே யெய்து மெய்தும்
இல்லாட்டா லின்னூல்தான் கிட்டா கிட்டா

துஷ்ட்டருடன் ஒருநாளுங் கூட வேண்டாம்
துடியாக ஒருவரையும் பேச வேண்டாம்
இஷ்ட்டமுடன் யின்னூல்தான் அன்பத் தொன்றும்
ஏகமாய் மவுனமுடன் யிருந்து கொண்டு
அஷ்ட்டாங்க யோகத்தைத் தினமும் பாரு
அருளான மனோன்மணி தான்காப்பாள் முற்றே (51)

குறிப்புரை : இராமதேவர் அருளிச் செய்த அஷ்ட்டாங்க யோக பட்சணி 50

**1-51 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** இரசவாதநூல் பரிபாசைகளுள்ளது. வாலை மனோன்மணி, சிவநிஷ்டை, நாதாந்தம், ஆதியந்தகுணம், தவம், பேயர்மிரட்டிவேர், அஷ்ட்டாங்கப் பச்சிலை, ரேசகம், பூரகம், தம்பனம், பூடு, அஞ்சன முறைகள், வசீகரணத் திலதம், மோகனம், தைலம், சதாசிவம், சித்து, காரம், குளிகை, அஷ்ட்டசித்து, சின்மயம், நவச்சாரம், செயநீர் வகை, பற்பம், தவமகிமை, சாரம், கற்பூரவிந்து நீர், மெழுகு, சிறியாநங்கை வேர், தியானம், துருசுபற்பம், பட்சணியின் மார்க்கம், குண்டலினி, சத்துரு வசியம், வடவேர், பிண்டம், சமாதி, குழம்பு, உடல்ஒளி, நாதவிந்து, அஷ்டாங்கந்திரம், ஆதியந்தநிலை, பூரணம், செந்தூரம், நவமணி போன்றவற்றையும் அஷ்ட்டகாமா நாதவிதை, நீர், தாய்ப்பால் முதலான மூலிகையினால் தயாரிக்கப்படும் மையின் பயன்பாட்டையும், அதன்வழி களவுபோன பொருட்களைக் கண்டு பிடிக்க உதவும் என்பதையும், கடவுள் அனுக்கிரகம் பெற்ற பின்புதான் இது போன்றவற்றைத் தயார் பண்ண வேண்டுமென்பதையும் கூறுகின்றார்.

ராமதேவர் அஷ்டாங்க பட்சணி (328.E) என்ற நூல் இதுபோன்றதே. அச்சுநூல்கள்: இராமதேவர் என்னும் யாகோபு அட்டாங்க யோகம் 50 (*1914*).

## 61. இராமதேவர் சிவயோகம்200

**அ.** **276:498;** **ஆ.** *1-66* ஏடுகள்; **இ.** 38.5 × 3 செ.மீ; **ஈ.** 5 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

மூலமெனு முதற்பொருளா முத்திநடு வணையில்
　　மூதண்ட மானதொரு பிரமத்துக் கப்பால்
ஞானமெனும் தவமுடைய சத்திபதி மேலே
　　நாதாந்தப் பெருவெளியின் ஒளியின் கீழே
நீலமிகு நெருப்பாறு மயிர்பாலத் தப்பால்
　　நிறைந்த பரிபூரணமாய் நிஷ்கள மதாகிச்
சீலமிகுந் தவமுடையோ ரிருதயமே தானாய்
　　சிறந்துநின்ற பரமகுரு சீர்பாதந் துணையே (1)

### முடிவு

முத்தான சிவயோகம் இருநூறு தன்னை
　　முறையான குருவே என்றெடுத்துப் பார்த்துச்
சித்தான சித்து விளையாடு மைந்தா
　　சிவயோக மார்க்கமடா திறந்தான் மெத்த
பத்தாசை கொண்டு மனமவுன மாகப்
　　பதிவாகச் சிவயோகம் இருநூ றும்பா
வித்தான பிறவியது அற்றுப் போகும்
　　மேலான சிவயோகம் விளங்கு முற்றே (201)

### பிற்குறிப்பு

இராமதேவர் சிவயோகம் 200 முற்றிற்று. கோட்டையூர் உலகநாத உபாத்தியார் பிரதி செய்தது. விகுரதி வருஷம் ஆவணி மாதம் 18ஆம் தேதி எழுதி முடிந்தது.

### குறிப்புரை

ஏட்டெண் இல்லா முதல் ஏட்டில் நூற்தலைப்பு மட்டும் எழுதப்பட்டுள்ளது. காப்புப் பாடலையும் சேர்த்து 201 எண்சீர் விருத்தப் பாடல்கள். இறுதிப் பாடல் குறிப்பின்படி இந்நூலில் 200 பாடல்கள் என்பதை அறிய முடிகிறது. ஓர் உலோகத்தைப் பிரிதொரு உலோகமாக மாற்றிய விஞ்ஞான சித்தருள் ஒருவராக இராமதேவர் கருதப்படுகிறார். தன் இயற்பெயரை 'யாக்கோபு' என மாற்றிக் கொண்டவர். மருத்துவமுறை, உலோக மாற்று முறை, யோகம், இரசவாதம் முதலியவற்றில் ஆழ்ந்த பயிற்சி உடையவர். 46

உட்தலைப்புகளில் யோகத்தின்வழி நோயைக் கட்டுப் படுத்தி, கடவுளை வழிபட்டு மனித வாழ்க்கையை மேம்படுத்த பல்வேறு முறைகள் எடுத்துக் கூறப்படு கின்றன. பூசைவிதி சக்கரம், தயிலம், மயேஸ்பர நிஷ்டை, உருத்திர நிஷ்டை, மாலினிஷ்டை, நிஷ்டை விபரம், பிறநிஷ்டை வெள்ளி வித்தை, வேதை மார்க்கம் கூறுவது. சாஸ்திர விபரம், சிவயோகப் பெருமை, வர்ணக் களிம்பு, அஞ்சனம், கட்டும் கொடி கருவித்தை, அண்ட பிண்ட சமாதி வைப்பு மெழுகு, பூரணத்தின் குணம், மந்திரத்தின் குணம், வாரணி குணம், திலதமை, லோகவாதி குணம், சுண்ணத்தொந்தம், புருவமைய தியானம், பூசையில் கூடும் பேர்கள், பத்தியம், முப்புச்சுண்ணம், லிங்கந்தார குரு, நாதவிந்து மெழுகு, இராப்பகல், லிங்ககுரு, செம்பு சுத்தி, நந்தியுப்புகுரு, சத்த பற்பம் மதியமுர்த லேகியம், வல்லாரை கற்பம், கடுக்காய் லேகியத்தயிலம், பூசை செய்யும் மார்க்கம், வாசி மார்க்கநிலை சாஸ்திர விபரம், வேதமார்க்கம், வரசிமார்க்க நிலை முதலான தலைப்புகள் உள்ளன. நிறுவன ஆய்வேடு (*1995*). 'இராமதேவர் சிவயோகம் 200' எனும் பெயரில் (*1885, 1877*) இரண்டு நூல்கள் வெளிவந்துள்ளன.

## 62. இராமதேவர் சூத்திரம் 16

**அ. 548:889; ஆ.** *171, 172* ஏடுகள்; **இ.** 35.5 × 3.5 செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; ஓரிரு துளைகள்; **ஊ.** தெளிவான அழகிய எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாக வில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

**தொடக்கம்**

**யேமத்தில் நில்லு வாமத்தை உண்டு**
**ஊமைஎன நின்று ராமனுரை செய்யே (1)**

**முடிவு**

**சொன்னாரே யென்குரு சூட்சாதி சூட்சத்தை**
**அன்னாரிதைக் கொண்டு ஆடினேன் வாதந்தான்**
**மன்னாரு லோகர் கும்பை விடச்சொன்னேன்**
**பன்னாரும் பொய்யில்லை ....யானை முற்றுமே (17)**

குறிப்புரை

**1-17 பாடல்கள்.** முதல் பாடல் மட்டுமே இரண்டு வரிகளில் அமைய ஏனையவை நான்கு வரிகளில் அமைகின்றன. சித்தர் பெருமை, தோடம் நீங்கும் முறை, வாதம், பஞ்சபூதம், சுண்ணநீர், அக்கினி சாலம், கெடியோகம், புடமிடுமுறை, சுண்ணம் தயாரிக்கும் முறை முதலான செய்திகள் இடம்பெறுகின்றன. அச்சுநூல்: இராம தேவர் என்னும் யாகோபு ஞானத் திறவுகோல் *16 (1914)*.

## 63. இராமதேவர் நிகண்டு 560

**அ.** **548:884;** **ஆ.** *1-80* ஏடுகள்; **இ.** 35.5 × 3.5 செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலையில் இருப்பினும் தொடக்கத்திலுள்ள *40* ஏடுகள் பாதியாக முறிந்துள்ளன; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

செய்யப்பா பராபரத்தின் கியான பூசை
　　செய்துநீ முடித்தபின்பு சொல்லக் கேளு
ஐய்யப்பா அதிகாலம் உதய சோதி
　　அப்பனே பெருவிரலில் தடவிக் கொண்டு
உய்யப்பா உண்ணாவில் பிறள ஏத்தி
　　ஓமென்று வாசியைநீ கும்பித் தாக்கால்
கைய்யப்பா கலீரென்று கபமெல் லாம்தான்
　　கழண்டுவிடும் இன்னமொரு சுத்தி கேளு (305)

முடிவு

குருவான என்னுடைய கோவைக் கண்டால்
　　குருடர்களே சகலசித்தி ஞானிஆவர்
புருவான புலத்தீசர் கடாட்சத் தாலே
　　புகழ்பெற்ற நிகண்டப்பா புகலக்கேளு
அருவான அவருடைய கிருபை யாலே
　　அய்நூற்றி அறுபதுந்தான் முகுந்த தப்பா
பருவான பதினெண்பேர் என்மொழிதான் கண்டு
　　பாடலுக்கு அதிகமென்றார் பாஷை முற்றே (569)

இராமதேவ சுவாமியார் அருளிய நிகண்டு முடிந்தது.

முற்றும்

பிற்குறிப்பு

இவை நெட்டெழுத்து பதினெட்டு ரிசுமிட்டு 4, கும்பிணி லாஷ்நாயக் அமராபதி. இப்படிக்கு நாகப்பூருக்கு அடுத்த சித்தாபல்லி மேலங்குபுருதிலாட்டுப் பட்டாளம் மேஜர் அவல்தார் சிவமயம்.

குறிப்புரை : இராமதேவ நாயனார் அருளிச்செய்த நிகண்டு-560.

குருவணக்கம் உட்பட 569 பாடல்கள். 40 ஏடுகள் பாதியாக முறிந்துள்ளதால் 305ஆம் பாடலே தொடக்கப் பாடலாக தரப்பட்டுள்ளது. நூல் கோர்வை, நூலக்கோர்வை போன்ற தலைப்புகளில் ஜாலம் பற்றிய செய்திகள் தொடக்கத்தில் காணப்படுகின்றன. அடுத்து மேடராசி, கன்னிராசி, துலாராசி, கும்பராசி, மகரராசி, தனுசுராசி, ரிஷபராசி என்னும் தலைப்புகளில் சில இராசிப் பலன்கள் கூறப்பட்டுள்ளன. பக்க எண்கள் ஒழுங்காக அமைந்திருப் பினும் இராசிகள் முறைமாறி அமைந்துள்ளன. தொடர்ந்து சரஸ்வதி தீர்த்தம், தீட்சை முறை, வாதசித்தி போன்ற சில தலைப்புகளில் நூல் முழுமை பெறுகிறது. அச்சுநூல்கள் இராமதேவர் என்னும் யாகோபு சுண்ணக் காண்டம் 600 (1954, 1964).

## 64. இராமதேவர் பட்சணி 50

**அ.** 548:887; **ஆ.** *101-108* ஏடுகள்; **இ.** 35.5 × 3.5 செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகான, தெளிவான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

ஆதியந்த நடுவிருந்த சோதி காப்பு
அகண்ட பரிபூரணமே அறிவே காப்பு
நீதியறி வாணிகுரு கந்தன் காப்பு
நிரஞ்சனமாய் நிற்குணவ தீதங் காப்பு
பாதியாங் குளிர்கனலுங் காலொன் றான
பட்சணியே நிட்செயமாம் பாகங் காப்பு
வீதியாம் பட்சணியாம் விளங்கும் சித்தர்
விக்கினேஸ்சு பரன்பாதங் காப்பு தானே (1)

முடிவு

சித்திரமா யிருந்துவிட் டாலேதுண் டாகுந்
தீர்க்கமென்ன திறமையென்ன அதனால் மைந்தா
உத்திரமா யோட்டிவித்தாய் சித்த னாவாய்
உருவழிந்தால் ஞானமென்ன ஒக்கப் போச்சு
அந்தரமாச் சடமிருந்தா லெல்லா மாச்சு
ஆதவனு மாதியுரு சுழியு முண்டாம்
அந்திரமா யெந்தனுட நூலைப் பாரும்
எளிமையாய் விசிதமடா நாடிப் பாரே (50)

குறிப்புரை: இராமதேவர் அருளிய பட்சணி 50

**1-50** எண்சீர் விருத்தப் பாடல்கள். பரம ஞானம், அகண்ட பரிபூரணம், வசியம், கற்பம், ஸ்ரீவசியம், புருடவசியம், சத்துருவசியம், மிருகவசியம், வடவேர், தும்பைவேர், மந்திரம், மானிலத்துராசர்வசியம், செம்பருத்திவேர், மூலிகை களுக்குக் காப்புக்கட்டு, பஞ்சலோக மகிமை, தம்பனம், குளிசம், முள்ளெலியின் வசியம், வெள்ளைத் தாமரைக் கிழங்கு, பொறிபுலன் அடங்க, கோழி, ஆடு பலி, பூசை, மூலிகை களுக்குக் காப்புக் கட்ட கிழமை, திதி, நட்சத்திரம், நாகபாடாணம், புவனை, பூதலத்து மாதர் வசியம், திகைப்பூடு. வாடைபட்டு மாதர் மயங்குதல், உலகம் வசியம், செகசால வித்தை, தோடங்கள், பேய், பிசாசுகள் விலக, வாடைவித்தை, மூல மந்திரம், வாலை, அட்டசித்தி, சகலசவுபாக்கியம், தேகங் காந்தி, குழம்பு, உருத்திரன் தியானம், தோத்திரம், அட்ட கர்மம், துருசு முதலான செய்திகள் உள்ளன.

அச்சுநூல் : இராமதேவர் என்னும் யாகோபு சுத்திமுறை 50 (1947.), அகஸ்தியர் பட்சணி (சு.228.B) என்ற சுவடிநூல் உள்ளது.

## 65. இராம தேவர் பலதிரட்டு 500

**அ. 548:888; ஆ.** *109-171* ஏடுகள்; **இ.** *35.5×3.5* செ.மீ.; **ஈ.** *7-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகான தெளிவான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

ஆதியந்த மேனிறைந்த சோதி பாதம்
அகண்டபரி பூரணத்தி னறிவிற் கூடிப்
பாதியாய் முப்பொருளு மூன்று மொன்றாய்
பரவெளியாய் நின்றபரா பரையின் பாதம்
நீதியாய் வாரணத்தில் முகவன் பாதம்
நிறைந்த மலர்வாணி குருகந்தன் பாதம்
சோதியாய் நாதாக்கள் பாதம் போத்திச்
சொல்லுவேன் சூஸ்திரத்தில் சொல்லுவேனே (1)

முடிவு

வையப்பா சகலகலை சேதி யெல்லாம்
வளமாகி வடக்கியொரு தெளிவாய்ச் சொன்னேன்
ஐயமொன்று நினையாதே பொய்பே சாதே
ஆத்தாளை அனுதினமும் மறவா தேநீ
செய்யாதே தீவினைதான் கொடிது பாவஞ்
செந்துவெல்லா மீசனென்று தெளிந்து காணு
மெய்யான குருபதத்தைப் பணிந்து போற்றி
விளக்கினேன் கருக்கிடை சூஸ்த்திரந்தான் முற்றே

பிற்குறிப்பு

இராமதேவநாயனாரருளிய சூத்திரம் 500 முற்றும். தெட்சிணா மூர்த்தி நாயனார் பாதமே துணை. பதினெண்பேர் பாத விந்தமே கெதி. இப்படிக்குக் கையெழுத்து 18 ரிசுமிட்டு 4 கும்பினி லாஷ நாயக்கன் அமராபதி 5ஆம் தேத, அகடோபர் 1844 ஆம் வருஷம் இப்படிக்கு நாகப்பூருக்கு அடுத்த சித்தாபட்டி முற்றும்.

குறிப்புரை: இராம தேவர் அருளிச்செய்த பல திரட்டு 500

**1-522 எண்சீர் விருத்தப்பாக்கள்.** எண்களுடன் தரப்பட்டு இங்கு முடிவுப் பகுதியில் தரப்பட்டுள்ள இறுதிப்பாடல் எண்ணில்லாமல் உள்ளது. இந்நூலுக்கு இராமதேவர் சூத்திரம் 500 என்ற பெயருமுண்டு. அதில் இவ்விறுதிப் பாடல் 521 ஆம் பாடலாக இடம் பெற்றுள்ளது. சாரம், கல்லுப்பு,

தாளகம், வழலை, துருசு முதலான சுண்ண வகைகள், நாகம், பாடாணம், மெழுகு, சூதம், அயச்செம்பு, இலிங்கம், கருவங்கம், அயனாகம், வெண்காரம், கந்தகம் முதலான கட்டுவகைகள், இரசம், வங்கம், நாகம், அட்டலோகம் முதலான செந்தூர வகைகள், பொற்சீந்தில், வெள்ளையாவரை, பேய்க்கடலை, சிவந்தவரிக் கத்தாழை, மயிலாரை, சதிரைக் கள்ளி, கருந்துளசி, கல்தாமரை, புல்லுருவி, சூதமாமூலி, வெண்கரந்தை, சிவனார்வேம்பு முதலான மூலிகை வகைகள், காந்தகக் கிண்ணம், சூதமணி, சூதப்பதங்கம், இரசப்பதங்கம், குரு வழலை, முப்பு வழலை, சூதபற்பம், தங்கபற்பம், கந்தக மெழுகு, பாடாண மெழுகு, வெடியுப்புத்திராவகம், வெடியுப்புச் செயநீர், யெக்கிய சமுதை நெய், தாம்பிர சுத்தி, வாதத்தின் திறவு கோல், அட்டகர்மக் கரு, அட்ட சாமமை, திலதம், அஞ்சனம், வசியம், சவுக்கார வழலை, ஞானசத்தி, மவுனவாலை, யோகதீட்சை, வாசி, வேதாந்தம், அட்சர மாறல், சிமிள் வித்தை, அடைக்கலங்குருவிக் கூடு, மோடி, அக்கினி மோடி, வாயுதம்பனம், பயிர் விளைவு, மாரணம், வில்வித்தை, தேவாங்கு முதலான செய்திகள் இடம்பெறுகின்றன.

இராமதேவர் சூத்திரம் 500 (ச. 365.b)என்ற நூல் இதுபோன்றதே. 1-51 பாடல்கள்.

## 66. உடல் குறி அறிதல் (வர்மம்)

**அ. தாள். 3:29; ஆ.** *177-197* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

**தொடக்கம்**

ஆயுர் வேத முன்னோர் அறிவுடனே ஓதி வைத்த
நோயல்ல முறிவு தன்னை நொய்துடன் பார்க்க வென்று
வாய்மையாய்த் தெரிந்து யானும் மருந்துள்ள மற்றோ டெண்ணெய்
தூய்மையாய்த் தெரிந்து யாதும் சுகம்வர உரைத்துச் சொன்னோம்

கேளப்பா வாதவர்மம் அறுபத்தி நான்கு
கெடிதான பித்தவர்மம் இருபத் தாறு
... ... .. ..
திறமான சிலேற்பனந்தான் ஆற தாகும்

நாளப்பா வாதவர்மம் நயந்து செய்வோம்
நடுவான பித்தவர்மம் ஐய்யமே யில்லை
மாளப்பா சிலேற்பனந்தான் உண்டால் நீயும்
வளமாக எண்ணாதே மரணம் பாரே (1)

முடிவு

வேப்பெண்ணெய் படி-*1*, பசுவின் பால் படி-*1* செந்தெங்கு, இளநீர் படி-*1*, காஞ்சிரம் பழம்-*25* ஆகமருந்து நாலும் ஒன்றாய்ச் சேர்த்துக் காய்த்துப் பருவத்தில் இறக்கி வர்மத்தில் அதாவது வர்மம் கொண்ட தலம் தேய்த்து வைக்கவும். நாள் சென்ற வர்மம் இளகும்.

குறிப்புரை

வர்ம இளக்கு முறை பற்றிக் கூறுகிறது. எண்ணின்றி 2 காப்புப் பாடல்களுடன் 1-57 பாடல்கள். ஓர் ஏடு இன்மை காரணமாய் *11,12, 13* ஆம் பாடல்கள் விடுபட்டுள்ளன. பின்னர் *14* ஆம் பாட்டுக்குப் பின் வரும் பாடலுக்கு *18* என்ற எண் சுவடியில் தரப்பட்டிருப்பதாகத் தாள் சுவடியில் குறிப்பு உள்ளது. 57 ஆம் பாடலுக்குப் பின் ஒரு சிறு உரை நடைப் பகுதி அமைகின்றது. வர்மத்தில் நீரிழிவு வந்தால், உறப்பாக மண்டையில் அடிபட்டால், தீராத முடந்தீர, வர்மசன்னி முட்டிக் கொண்டால், கால் பெருவிரல், கைவிரல் கெள்ளி எனில் முதலானவற்றிற்குப் பயன்படுத்த வேண்டிய மருந்துகளின் செய்முறைகள் கூறப் பெறுகின்றன.

## 67. உருக்கினம் மாத்திரை

**அ.** 538:873; **ஆ.** *1-25* ஏடுகள்; *17* ஆவது ஏடு இல்லை; **இ.** *45* ×*3.5* செ.மீ; **ஈ.** 5-7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சற்றுக் கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம் .

**தாம்பிர சுத்தி** -மனுஷன் எலும்பு பலம் - ¼, சவிட்டு உப்பு பலம் - ¼, கல்லுப்பு பலம் - ¼, பாசாணம் பலம் - ¼, சிலாசித்து பலம் - ¼, பொட்டுலுப்பு பலம் - ¼, புண்டிகல்லு பலம் - ¼ ஆடுதின்னாப்பாளை பலம் - ¼, வெங்காரம் பலம் ¼, வெள்ளையெருக்கன்பால் பலம் - ¼, வாழப்பூப்

பட்டைச் சாறு, அண்டத்தோல், அண்டக் கருவு, மாத்திரை, சுண்டைக்காய் அளவு தாம்பரம் உரிக்கி முகத்தில் குடுக்கவும், சுத்தியாகும்.

முடிவு

**முழுகத் தயிலம்-** கொடி வேலி வேர் பலம் - 2, கொமரிச்சாறு விட்டு அரைத்து நல்லெண்ணை சேர் - 1 அதில் கலந்து காச்சிப் பதத்தில் வடிச்சி ஒண்ணு விட்டு ஒரு நாள் முழுகவும் ..னிசில் யெடுத்த வியாதி யெல்லாம் தீரும்.

குறிப்புரை

**உரைநடை.** தாளகம், மனோசிலை, இரசம், கெந்தகம், இலிங்கம், பூரம், குன்மத்துக்கு உப்புச் சுண்ணம், அப்பிரக பற்பம், சூத பற்பம், லிங்கக் கட்டு, காமாலைக்கு நசியம், பிள்ளை பெற மாட்டாதவளுக்கு மருந்து, பிள்ளை பிறப்பு நோக்க மருந்து, கக்குவானுக்குக் குளிசம், வெள்ளைக் குஷ்டத்துக்கு, கரி மேகத்துக்கு நல்லெண்ணை, வெண் மேகத்துக்கு நல்லெண்ணை, வெள்ளைக் குஷ்டத்துக்கு மருந்து, அதிசார பேதிக்கு மருந்து, புறனாதி லேகியம், நெஞ்சு எரிப்பு, புளி ஏப்பம், வயிறு எரிச்சல், வயிறு கழிச்சலுக்கு உண்டை, தண்ணி தாகத்துக்கு, வயிறு கழிச் சலுக்கு, பிள்ளைக்கு ஒரு விரை தொங்கினால் மருந்து, பிள்ளைக் கட்டிக்குப் பத்து மருந்து, கட்டி பழுக்க, கழிச்சலுக்குக் கசாயம், மேகசண்டி, மாந்தத்துக்கு மேகத்துக்கு எண்ணை, கொழந்தைக்குப் பேதி மாத்திரை, ராக்காலத்தில் காய்ச்சல் வருகிறதுக்கு எண்ணை, கட்டுவாதி கிசாயக் குளிகை, கோரோசினைக் குளிகை, சுரத்துக்குக் குளிகை, நீரிழிவிற்கு அவிழ்தம், மாதர் விடையம், தேளுக்கு மருந்து, தலைபாரம், தலையிடிப்பு, பீனிசம், மண்டையிடி, கண்ணோவு, இருமலுக்கு மருந்து, காமாலைக்கு லேகியம், முளை மூலம், ரத்த மூலம், ஆசன பவுத்திரம், மேக காங்கைக்கு, நீர்க்கட்டுக்குச் சூரணம், சீதன வாயுவுக்கு மருந்து, வேப்பெண்ணைத் தயிலம், புண்ணு கிரந்திக்கு, இருமலுக்கு, தந்த நோவுக்கு, பக்க சூலைக்கு மருந்து, இரசபற்பம், கரிமேகத்துக்கு, உடம்பு ஆதிந்தம் செரங்கு கிரந்திக்கு அவிழ்தம், மைக்கண் தெரிய, கண்ணு படலம் நீங்க, காது நோவுக்கு யெண்ணை, பித்த காமாலை, பாண்டு

ரோகத்துக்கு, விக்கலுக்கு, கலிக்க மாத்திரை, மபரும்பாட்டுக்கு மருந்து, வெள்ளி கெழங்கு, கபாட லேகியம், லவங்காதிச் சூரணம் சகல ரோகத்துக்கு, பதினெட்டுக் குஷ்டத்துக்கு, சகல ரோகத்துக்கு மருந்து, தலைமுழுகத் தயிலம், வெள்ளை விழுகுறதுக்கு மருந்து முதலான செய்திகள் இடம்பெறுகின்றன. முதல் ஏட்டின் இடதுபக்க ஓரத்தில் உருக்கினம் மாத்திரை என்ற தலைப்பு இருந்ததால் நூலுக்கு இத்தலைப்புத் தரப்பட்டுள்ளது. ஆயின் நூற்பொருள் தலைப்பை ஒட்டியதாய் அமையவில்லை.

## 68. ஊர்வசிப் பெண் இரத்தினச் சுருக்கம் 18

**அ. 486:739; ஆ.** *1-6* ஏடுகள்; **இ.** *23×3.5* செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஏக மாக யிருந்த பராபரன்
றேக சீவன் சதன்ய சிகாரனை
யோக மாக நினைக்கு முருவசி
தோகை யாட்சொலு மிரத்னச் சுருக்கமே (1)

முடிவு

ஆதியின் விலாச மிவையான செகமியாவும்
பேதக மதாயறிஞர் பேசுவது முண்டோ
சாதிபல வானதுயர் சேகரமி தென்றே
நீதிமொழி யானபதி னெட்டுமிவை முற்றே (18)

பிற்குறிப்பு

இந்தப் புஸ்தகம் யெனக்கு வந்து சேர்ந்தது *1867* இல், செப்டம்பர் மாதம் *18* புதன்கிழமை பகல் **2** மணிக்கு குருபாதம் துணை. அடியேனுக்குச் சேர்ந்தது. இப்படிக்கு இராஜகோபாலு.

குறிப்புரை

**1-18 பாடல்கள்.** நீதிமொழிகள் கூறப்பெறுகின்றன. அச்சு நூல்கள்: *ஊர்வசிபஞ்சரத்தினம்; ஊர்வசிரசவாதசிகிச்சை; ஊர்வசி ரத்ன சுருக்கம்; ஊர்வசி வைத்திய சிட்கா; ஊர்வசி வைத்திய சிகிச்சை.*

## 69. ஒடிவு முறிவு சாரி (வர்மம்)

**அ. தாள். 3:26; ஆ.** *43-146* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

அண்டபிண்ட மெண்டிசை யும்அண் டபகி
ரண்டமதின் பற்றது மாகி நின்று
அண்டபிண்ட மதிரைகிரி நாலு யோனி
அதிலெழுந்த ஊர்வனமும் பறவை தேவர் (1)
போக்கான கைகால் செய்யும் போக்கும்
பொட்டணத் தினால்கிழிக ளானும் போக்கும்
தீர்க்கமாய் கண்டிதங்கள் செய்யும் போக்கும்
தெரிந்தமட்டும் சொல்லுகிறேன் திறமாய்ப் பாரு
ஆக்கையுற்று குருபரனை நினைத்துக் கொண்டு
அன்னியமாய் உயிரையுண்ணு யிலாப் போலும்
வாக்குமனம் ஒன்றாக நின்று கொண்டு
வர்மங்கள் முறிகாயம் எல்லாம் காணே (9)

முடிவு

ஆராய்ந்துபார் இந்நூல் தொன்னூ லப்பா
அருளான குருநூலாய் அடங்கல் பாடி
தூயவெளி சுடர்போன்ற சுடர்வி ளக்காய்
தூண்டாத மணியதுபோல் துலக்க மாகி

நேயமுடன் அருள்பெருகி நேசம் வைத்து
நின்றமுனி ரிசியோர்க்கும் செகத்தோர் கண்வா
தேர்ந்துமே ஆராய்ந்து சூட்ச மாக
சொல்லிவிட்டேன் இந்நூலைத் தொகுத்துப் பாரே (293)

குறிப்புரை

வர்ம ஒடிவு முறைகளின் குணங்களையும், அவற்றிற்கான இளக்கு முறைகளையும் பற்றிக் கூறுகிறது. *1-293* பாடல்களுள் முதல் எட்டுப்பாடல்கள் காப்புப் பாடல்கள். மணி பந்தம் கட்டும் முறை, குண்டு மணி விலகல், முட்டெலும்பு கழறல்,

கைப்புசம் சிப்பி தாழல், படுவர்மம், தொடுவர்மம், நாடிகள், வாசிவர்மத் தலங்கள், வர்மம் கொண்டு மயங்கும் விதம், காலங்கொண்டதினால் குணம், காலங்கொண்டு நோய் புகல், நடுக்கெலும்பு விலகல், மேலெலும்பின் முன்னெ திரியின் ஒடிவு, கைப்புச எலும்பு முறிவு, கதிர் வின்னவர்மம், கீழிடை முறிவு, தடவு முறை, பதிவிரதை வர்மத்தின் முறிவு முதலான தலைப்புகளில் வர்மம் தொடர்பான செய்திகள் விரிவாக விளக்கம் பெறுகின்றன.

## 70. கணபதி அஷ்டகர்மம்

**அ. 485:735; ஆ.** *7-15* ஏடுகள்; **இ.** *21* ×*2.5* செ.மீ. **ஈ.** 5 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

காணவே தூலமுடன் சூட்சங் கண்டால்
காரணமாய் சென்று விளையாட லாகும்
பூணவே நின்று விளையாடு தற்கு
புத்தியுடன் அஷ்ட்ட கர்மம் சித்தர் கேளும்
தோணவே அஷ்ட்ட கர்மம் சித்துகாண
சொல்லுகிறேன் வசீகரத்தின் சூஷ்மந் தன்னை
ஊணவே தானிணைந்து மூலம் பார்த்து
உருமையுடன் குருபதியை யுகந்து காணேன் (1)

முடிவு

கேளப்பா சுரமுடன் சன்னி தீரும்
கேடான கர்மமுடன் காசம் தீரும்
வாளப்பா கர்மமொடு கெர்ப்ப ரோகம்
வயத்திலுள்ள தீட்சியெல்லாம் வாங்கிப் போகும்
சூளப்பா.வஞ்சனையு மெல்லாந் தீரும்
ஆதியென்ற பூரணத்தில் அழுந்து வானே (30)

குறிப்புரை

**1-30 பாடல்கள்.** சன்னி, சுரம், காசம் கெர்ப்பரோகம், முதலான நோய்கள் தீருவதற்கான முறைகள் கூறப்படுகின்றன.

## 71. கணபதி அஷ்டகர்மம்

**அ. 565 : 918; ஆ.** *7-15* ஏடுகள்; **இ.**31 x 2.5 செ.மீ; **ஈ.** 5 வரிகள்;
**உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

காணவே தூலமுடன் சூஷ்சங் கண்டால்
    காரணமாய் சென்று விளையாட லாகும்
பூணவே நின்றுவிளை யாடுதற்கு
    புத்தியுடன் அஷ்டகர்மம் சித்தா கேளும்
தோணவே அஷ்ட்டகர்மம் சித்து காணச்
    சொல்லுகிறேன் வசீகரத்தின் சூஷ்சமம் தன்னை
ஊணவே தானிணைந்து மூலம் பார்த்து
    உருமையுடன் குருபதியை உகந்து காணே (1)

முடிவு

கேளப்பா சுரமுடனே சன்னி தீரும்
    கேடான கர்மமுடன் காசம் தீரும்
வாளப்பா கர்மமொடு கெர்ப்ப ரோகம்
    வயத்திலுள்ள தீஷ்சியெல்லாம் வாங்கிப் போகும்
சூளப்பா வஞ்சனையும் எல்லாந் தீரும்
    சுறுக்கான பலவிதமும் தோஷம் தீரும்
ஆளப்பா அஷ்டதிசைகள் சாய நின்று
    ஆதியென்ற பூரணத்தி லமுந்து வானே (30)

**சுபமஸ்து**

குறிப்புரை

**1-30 எண்சீர் விருத்தப்பாக்கள்.** *485:735* என்ற நூலினைப் போன்றதே. மோகனம், உச்சாடனம், வித்துவேஷணம், தம்பனம், மாரணம், பேதனம் முதலான அட்டகர்மங்கள் எட்டினையும் செய்கின்ற வழிமுறைகளும், அவற்றால் சித்தியாகும் செயற்பாடுகளும் கூறப்படுகின்றன. கணபதியைச் செபிப்பதற்குரிய மந்திர முறை, நினைத்த காரியங்களுக்கு வசியம் செய்முறை, தேவர், முனிவர், மிருகம், பட்சி முதலானவற்றை வசியம் செய்யும் முறை, காட்டேரி, பிசாசு, வினை முதலியன நீங்க செய்திகள் கூறப்படுகின்றன.

## 72. கந்தனுடைய நூலருமை ஐந்து

**அ. தாள். 2:23; ஆ.** *155-157* பக்கங்கள்; **இ.** முழுமை **ஈ.** அச்சாகாதது.

தொடக்கம்

சீர்மேவு நாவினா லடைத்தி டாமல்
 செலுத்தடா மனந்தனையும் அண்ணாக்கில் நேராய்
பார்மேவும் அண்டவுச்சி தன்னி லேதான்
 பாயுமடா வாசியுந்தான் பரத்தி லூடே
தார்மேவு மூலமடா லிங்கம் தன்னில்
 தண்டுக்கும் அண்டத்துக்கும் தமர்தான் நிற்கும்
கார்மேவும் விந்துவடா பிடரி மார்க்கம்
 கனிந்துமிகப் பிறங்குமடா கண்டு பாரே (1)

முடிவு

ஆகாசச் சங்கு அதில்குழல் ரெண்டுண்டு
அதைவா காகஊத வகையறிவா ரிங்கில்லை
அதைவா காகஊத வகையறிவா ளர்க்கு
காடா யிரும்பும் கனகதங்க மாகிடுமே (2)

குறிப்புரை

யோக முப்பினைப் பற்றிய குறிப்பும், இரசவாதம் பற்றிய குறிப்பும் காணப்படுகின்றன. 5 அறுசீர், எண்சீர் விருத்தங் கள். யோகத்தின் வழி மனத்தைச் செலுத்தினால் அடையும் ஆற்றலும், அவ்வாற்றலைப் பெற்றவன் இந்நூலில் கூறிய படி தயாரிக்கக்கூடிய உப்பாகிய முப்பின் ஆற்றலும், அதனால் மருந்துக்குக் கட்டுப்படாத நோய்களும் தீரும் என்பதும் கூறப்பெறு கின்றன. அதனைத் தொடர்ந்து வருகின்ற இரண்டு பாடல்களில் ஞானவழியினைச் சரியாக அறிந்து மருத்துவம் செய்பவர் மிக அரிது என்பதும், அங்ஙனம் அறிபவர் இருப்பின் அவர்களுக்கு இரும்பும் தங்கமாகும் என்பதும் கூறப்படுகின்றன.

# 73. கர்ம சூத்திர காண்டம்

**அ.** 575:933; **ஆ.** *1-5* ஏடுகள்; **இ.** *22.5 x 2.5* செ.மீ; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; முதல் ஏடு முறியும் நிலை; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஆரணம் பொதிகை மீதில் அகஸ்தியர் சீர்பா தத்தைப்
பூரண சுந்த ரன்பொற் பாதம் பணிந்து நின்று
காரண மாக வந்த கலியுகம் தன்னி லன்ன
வாரண மான பூமி மனுடர் கள்செய்கை கேளீர் (1)

முடிவு

மலடியாம் என்றுசொல்லி இருந்தி டாதே
மாத்துவாய் தோஷந் தீர்த்தா லுண்டு
பலனுண்டு நாக பிரதிஷ்டை செய்தால்
பைங்கொடிக்குப் பிள்ளையுண்டு பதிவு கேளு
மூலமது நவக்கிரக சக்கி ரத்தை
முக்கியமாய்த் தங்கத்தி லெழுதிக் கட்டு
ஆலவிஷ முண்டசிவன் வாக்குக் கேட்டு
அன்பாக உனக்குரைத்தேன் சுருக்க முற்றே (44)

கர்ம சூஸ்திர காண்டம் முடிவு பெற்றது.
சற்குருவே துணை தேவிசகாயம் ரெட்டிகுளம்.

குறிப்புரை

**1-44 பாக்கள்.** கர்மவினை காரணமாக எத்தகைய நோய்கள் ஏற்படும் என்பதும், அவை தீர பரிகார முறைகளும் கூறப்படுகின்றன. கர்மதோசம், பழிசெய்தோசம், தாய்தந்தை தோசம், சிவதலத்தை வெகுளியாய்ப் பழித்த தோசம், குருடு, குன்மம், மலடு, கிரகசாந்தி, கர்மசாந்தி, நாகசாந்தி, நாகபிரதிஷ்டை, மந்திரம், பூசை, பூசைக்குரிய பொருட்கள், அறுகோணம், முக்கோணம், நவக்கிரகச் சக்கரம் முதலான பொருண்மைகள் உள்ளன. 'அகத்தியர் கர்ம சூத்திரம் 300' என்ற நூலின் இறுதிக்காண்டமாக இந்நூல் இருத்தல் கூடும்.

## 74. கருவூரார் பலதிரட்டு

**அ.** 17:35; **ஆ.** *1-60* ஏடுகள்; **இ.** *36.5×3* செ.மீ.; **ஈ.** *7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவான அழகிய எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சானது (நிறுவன வெளியீடு, *1982*).

தொடக்கம்

பாடுகிறேன் பலதிரட்டு முடிவை யெல்லாம்
பதறாமல் சிதறாமல் பண்பாய் மக்காள்
பாடுகிறேன் சாத்திரமுஞ் சூத்திரமு மைந்து
பாசையெல்லாம் பிறக்கியொரு கோர்வை யாகப்
பாடுகிறேன் கருக்கிடையுங் குருக்கிடையு மொன்றாய்ப்
பருவமுட னொருமித்துப் பாரு பாரு
பாடுகிறேன் வேதாந்த முடிவை யெல்லாம்
பரையரனுங் கணேசகுகன் பதத்தைப் பாத்தே (1)

முடிவு

வழங்கினதோர் சாஸ்திரமு மைந்தா சேர
விபரமுடன் பலதிரட்டில் விரித்துச் சொன்னேன்
அளங்கிநின்று அலையாமல் பலநூல் தேடி
ஆத்தாளைப் பூசித்து அமிர்தங் கொண்டு
தளங்கிநின்ற மனத்தோடே கற்பங் கொண்டு
சதாநித்த மேறுவாய் திரட்டு முத்தே (298)

பிற்குறிப்பு : கருவூரார் பல கலம்பத்திரட்டு

அரகர குரோதன வருஷம் மார்கழி மாசம் ஐந்தாம் தேதி புதன்கிழமை யன்னைக்குத் தாண்டவமூர்த்தி வாத்தியார் கருவூர் நாயனார் பல கலம்பாகித் திரட்டு எழுதி முடிந்தது. முற்றும். சம்பூரணம். தேவி சகாயம். குமரகுருபரன் துணை. சரவணபவகுகன் துணை. கணபதியார் துணை, சரஸ்வதி ரட்சிக்க

குறிப்புரை

**1-298 பாடல்கள்.** பாடாணக் கட்டு, தம்பனம், தாம்பரத்தில் அமுதம், அயச் செம்புச் சிமிழில் செந்தூரம், எட்டிவிரைத் தைலம், வெள்ளி வித்தை, போகர் கல்சிலையை அழைத்து

வந்தது, லிங்கக் கட்டு, சவ்வீர வைப்பு, தம்பனம், மோகனம், மாரணம், உச்சாடனம், வசியம், பேதனம், வித்துவேசனம், ஆகர் ஷணம் ஆகிய எட்டுக் கர்மங்களுக்கு உதவும் மூலிகை களின் திறம், வசியம், மூலிகை பறிப்பதற்கு உரைக்க வேண்டிய மந்திரங்கள், பறிக்கும் முறைகள், கற்பவகைகள், மன்னர் சித்தி, நீர்த்தம்பம், மழைச்செல்வம் ஆகியவை கிட்டுவதற் குரிய மந்திரம், சங்கிராம சட்சரம், தேவ கன்னியரை வெற்றி கொள்ளக் கூறும் மந்திரம், சத்வம், ராஜசம், தாமசம் என்னும் முக்குணத்தை வெற்றி கொள்ளும் மந்திரம், நினைப்பவை உடன் கண்முன் வந்து நிற்கும் மந்திரம், உற்பனம், வாமம் சத்தியோசாதம், குண்டலினி சக்தி, அனாகதம், தியானம், செயநீர் முதலான செய்திகள் இடம்பெறுகின்றன. அடுத்து வரும் 223:433; 494:754 என்ற எண்ணிட்ட நூல்கள் இது போன்றவையே. கருவூரார் வைத்தியம், இரசவாதம், மைதயாரித்தல், பூசைவிதி, வேதாந்தம் பற்றிய தனித்தனி நூல்களையும், இவை அனைத்தும் அடங்கிய பொதுநூற் களையும் (இதனுள் யோகம், சமாதி போன்றனவும் அடங்கும்) ஆசிரியர் இயற்றியுள்ளார். சுமார் 36-க்கும் மேற்பட்ட சுவடிகள் இவர் எழுதியவையாகக் கிடைத்துள்ளன.

காட்டு: கருவூரார் பாடல் 30 (ச.289.D), கருவூர் சாமியார் சாஸ்திரம் (சூத்திரம் 30) (ச.231.F).

15-17 நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்ட காலக்கட்டத்தைச் சேந்ததாக இச்சுவடியின் மூலஏடு அமையக் கூடும்.

## 75. கருவூரார் பலதிரட்டு

**அ.** 223:433; **ஆ.** 1-102 ஏடுகள்; **இ.** 24.5 × 3.5 செ.மீ., **ஈ.** 5-8 வரிகள்; **உ.** சுமாரான நிலை; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் நிறுவனத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பாடுகிறேன் பலதிரட்டு முடிவை யெல்லாம்
பதறாமல் சிதறாமல் பண்பாய் மக்காள்
பாடுகிறேன் சாத்திரமும் சூத்திரமு மைந்தும்
பாஷையெல் லாஞ்சுருக்கி ஒருமுகமாகப்

பாடுகிறேன் குருக்கிடையும் கருக்கிடையும் பார்த்துப்
பராபரத்தின் நிலைமுதலாய் பத்தி யாகிப்
பாடுகிறேன் வேதாந்த முடிவை யெல்லாம்
பராபரையுங் கணேசனுமே காப்பு தானே (1)

முடிவு

வழங்கினதோர் சாத்திரமுஞ் சூத்திரமும் பார்த்து
மைந்தனே பல்கலைபல் சூத்திரத் திரட்டும்
விளம்பினதோர் கருவெல்லாம் என்நூலில் சொன்னேன்
வேறொன்றும் ஒளிப்பில்லை விரும்பிப் பாடு
அடங்கினதோர் மந்தத்தோடே பலநூல் தேடி
யலையாமல் பூசித்து அமிர்தங் கொண்டு
தாங்கினதோர் நூல்பார்த்துக் கர்ப்பங் கொண்டு
சாதகமா யேறியோர் திரட்டு முற்றே (300)

கருவூரார் பலதிரட்டு முற்றும்

குறிப்புரை

**1-300 பாடல்கள்.** கருவூரார் என்பவரால் இயற்றப் பெற்ற இந்நூல் சுத்தி முறைகள், மெழுகு வகைகள், அஞ்சனக்கட்டு வகைகள், மைவகைகள், குளிகை வகைகள், மூலிகை வகைகள், அட்டகர்மம், மந்திரத்தால் விளையும் பலன் முதலான செய்திகளைத் திரட்டிக் கூறுகிறது. இவையாவும் ஒழுங்கு பட இன்றிப் பலவாறாக மாறிமாறி அமைந்துள்ளன. கருவூர் சுவாமியார் சாஸ்திரம் (சு.231.F) என்ற நூல் இது போன்றதே.

## 76. கருவூரார் பல திரட்டு 300

**அ.** 494:754; **ஆ.** 54-79 ஏடுகள்; **இ.** 28 × 3 செ.மீ.; **ஈ.** 7,8 வரிகள்; **உ.** நன்று; சில துளைகள்; **ஊ.** அழகான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் நிறுவனத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பாடுகிறேன் பலதிரட்டு முன்னூ றெல்லாம்
பதறாமல் சிதறாமல் பண்பாய் மக்காள்
பாடுகிறேன் சாத்திரமுஞ் சூஷ்த்திரமும்
பாசையெல்லாஞ் சுருக்கியொரு மாலை யாகப்

பாடுகிறேன் கருக்கிடையுங் குருக்கிடையும் பார்த்து
பராபரத்தின் நிலைமுதலாய்ப் பகுதியாகப்
பாடுகிறேன் வேதாந்த முடிவை யெல்லாம்
பராபரை கணேசன் குருபதத்தைப் போற்றி (1)

முடிவு

பிரித்துக்கேள் தாமரையின் யிலைதோ லப்பா
பெரிதல்ல சிறிதாகப் பூச்சிவப்பு முண்டு
பிரித்துக்கேள் பூக்கசக்கில் ரெத்தம் போலும்
பேரான நிலத்தில் நீலம் போலாம்
பிரித்துக்கேள் ரெண்டிலொன்று கொண்டு வந்து
பிசகாமல் சமூலந்தான் சாறு வாங்கிப்
பிரித்துக்கேள் சூதமொரு கழஞ்சி பத்து
பேர்பெரிய மனோசில்தா னொன்று கூட்டே (124)

குறிப்புரை

**1-124 பாடல்கள்.** தலைப்பில் 'முன்னூறு' என்று இருப்ப தால் குறைச் சுவடி என்பது தெரிகிறது. அஞ்சனம், தாளகம், நாதாக்களிருந்த விடம், பாஷாணக் கட்டு, வினோதம், வாலு ளுவைத் தைலம், அயச் செம்பு, வெள்ளி வித்தை, தங்க வித்தை முதலான தலைப்புகள் உள்ளன.

## 77. குணவாகடம்

**அ.** 68:96; **ஆ.** *1-62* ஏடுகள்; **இ.** *37.5×3* செ.மீ. **ஈ.** *7-8* வரிகள்; **உ.** ஏடுகளின் ஓரப் பகுதிகள் சிதைவுற்றும், மையப் பகுதிகள் ஆங்காங்கே சிதைந்தும் உள்ளன; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சானது (நிறுவன வெளியீடு, *1995*).

தொடக்கம்

ஆதியாங் கடவு ளாணை அடியினைப் போற்றி போற்றி
தீதுறு வியாதி தன்னைத் தெளிவுட னறிய வேண்டி
கோதிலா நல்லோர்க்கு ஏற்குங் குணமிகு பாடல் தன்னை
நீதிசேர் படியின் மீதே நெறியுடன் உரைத்தார் மேலோர் (1)

முடிவு

சொன்னபடி... வினிபன் னிருகடிஞ்சு துலங்க
வனைத்துங் கூட்டிப் பொடிநீர் தன்னில்

மன்னுசிறு மஞ்சாடி யளவ தாக
    வாருடனே யருந்திடுகில் மாதே நீகேள்
முன்னவினை யாலெழுந்த பிரமே கந்தான்
    மூவேழு வகையுடனே தீருந் தன்மை
மன்னுதிறக் கவிராய ராயன் தந்த
    மருவியசஞ் சீவிதன்னில் மருந்து தானே (465)

பிற்குறிப்பு

குரோதன ஆண்டு மார்கழி மாதம் 5- ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை செணசாலை மங்கா கவுண்டர் குமாரன் தாண்டவ மூர்த்தி வாத்தியார் குணவாகடம் எழுதி முடிந்தது.

குறிப்புரை

சுவடியின் முதல் ஏட்டில் நூலின் பெயர் குணவாகடம் என்று உள்ளது. 1-465 பாடல்கள். நாடி, நீர்க்குறி, மரணக்குறி, வாத நோய்கள், பித்தநோய்கள், தலைநோய்கள், இருமல் நோய்கள், காச நோய்கள், சுரநோய்கள், சன்னிவாத நோய்கள், சூலை நோய்கள், குன்ம நோய்கள், வயிற்று நோய்கள், கிராணி நோய்கள், விப்புருதி நோய்கள், பாண்டு நோய்கள், மூல நோய்கள், நீரிழிவு நோய்கள், பிரமிய நோய்கள், மகளிர் நோய்கள், குழந்தை நோய்கள், கரப்பான் நோய்கள், முதலான நோய்களின் பல வகைகளும், உண்டை, சூரணம், மாத்திரை, கியாழம், குழம்பு, எண்ணெய், தைலம், நெய், பற்பம், செந்தூரம், பற்பம், பூச்சுமருந்து வெண்ணெய், கலிக்கம், நசியம், புகை, ஒற்றடம் முதலான மருந்துகளின் செய்முறை களும் கூறப் பெறுகின்றன.

## 78. குணவாகடம்

**அ.** 509:768; **ஆ.** 9-29 ஏடுகள்; **இ.** 40 × 3 செ.மீ.; **ஈ.** 6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் நிறுவனத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

குடலிடை யோடி மீண்டு உளைந்து கால்கை கரங்கள்
குடலிடைக் கூப்பிட் டோடி குமிறிடுங் குடலிற் றங்கும்

கடலிடைத் தரங்க மென்னக் கலக்கிடும் அது இளகி நிற்கும்
நடலிடை குடல் வாதத்தின் குணமென நவில லாமே (1)

முடிவு

தொக்கமும் பதட்ட முத்தோர் தூரத்திற் சுமந்தார் மற்ற
மிக்க பாரிடத்தோர் பிள்ளை விடமுண்டோ ரய்ய மென்றார்
தீயக் கெனக்கமாத் தீயால் பிவுண்டோர் சிறியோர் முற்றோர்
கெர்ப் பிணிகிரா ணியானொரிக்கண் மொழியாழ்
கேளாயிவற்கு லெங்கண மாகாதே (114)

பிற்குறிப்பு

குணவாகடம் முற்றிற்று. குணவாகடம் யெழுதினது சம்பூரணம். பிரசோத்பதி வருஷம் மாசி மாதம் இரண்டாம் தேதி தொட்டி யத்திலே யிருக்கும் முத்துக் கருப்பப் பிள்ளை குமாரன் மொட்டைய பிள்ளை பொஷ்த்தகம். கையெழுத்து மேற்படி மொட்டையபிள்ளை யெழுதினது தான். வாலான சரசுபதி யம்மன் பாதார விந்தங் கமலங்களே சரணம். தெண்டாயுத பாணி முன்னிற்க்கவும். குருகடாட்சம் உண்ட ாகத் தக்கதாக. திருவிளம் துணை செய்யத் தக்கதாகவே போற்றி போற்றி. அகிலாண்ட கோடி பிரமாண்ட நாயகி அவள் பாதார விந்தமே சரணம், மருத பாண்டியன் துணை, தெட்சணாமூர்த்தி துணை.

குறிப்புரை

**1-114 பாடல்கள்.** குடல்வாதத்தின் குணம் அறியும்படி, வாதங்கொண்டால் குணம், வாதவாய்வு குணம், வாத கரப்பான் குணம், வாத குன்மம் குணம், பித்தத்தாலே ரோக குணம், எரிகுணம், சத்தி குன்மத்தின் குணம், சேத்தும யிருமல் குணம், பிரமேக நிதானம், கெர்ப்ப ரோகத்தின் குணம், பித்த காமாலை குணம் முதலான தலைப்புகளில் நோய்களின் குறிகுணங்கள் விளக்கம் பெறுகின்றன. 29ஆவது ஏட்டின் முன் பகுதியில் நூல் முழுமை பெறுகிறது. அதன் பின்பகுதியில் தொண்டைக் கம்மலுக்கு மருந்து அகத்தியர் பாடியது கூறப் பெறுவதால் தனக்குத் தேவையான மருத்துவக் குறிப்புகளைத் தொகுக்கும் நோக்கில் இந்நூல் எழுந்துள்ளது என்பது தெரிகிறது.

## 79. குணவாகட வெண்பா

**அ. 257:473; ஆ.** *1-17* ஏடுகள்; **இ.** *23 × 3* செ.மீ.; **ஈ.** 4-5 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

சுக்கு, மிளகு, இஞ்சி

முண்டதெல்லா நீரா முதிரங் கடுப்பகத்தும்
வெண்புமல சத்தியாம் வெப்பகத்தும் நம்பி
வகைதண்ணீர் தாகமந் தஞ்செ வியடைப்பு
சோகை சுரங்க ளறும் (1)

முடிவு

குறியா மணக்கெண்ணை குடல்வாதறி யுண்டா
மறிசந்து தோறும்வா தம்போ மெரிகுடலி
லிரத்தம்போம் சூலை மிகவும் பூமணமாம்
ரத்தஞ் சீழ்முக மாறும் (67)

நன்று

குறிப்புரை : குணவாகிடம் வெண்பா

**1-67 பாடல்கள்.** கடுகு, காயம், மஞ்சள், தானிக்காய், நெல்லிக்காய், சீரகம், கருஞ்சீரகம், பெருஞ்சீரகம், காட்டுச் சீரகம், கொத்தமல்லி, கார்போலரிசி, சதகுப்பி, செவ்வியம், ஏலம், கோஷ்ட்டம், வெந்தயம், சிவிதை, வாவிளங்கம், தேவதாரம், திப்பிலி முதலானவற்றின் மருத்துவ குணங்கள் கூறப்பட்டுள்ளன.

## 80. குறுமுனி வைத்தியம்

**அ.339:571; ஆ.** *1-33* ஏடுகள்; **இ.** *23 × 4* செ.மீ.; **ஈ.** *6-8* வரிகள்; **உ.** மிக நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

பாடக்கறுக் கும்பயன்பரி சால்மும்பாட் டின்பமும்
தொடிதுதி சாலரம்தரு வீர்என் குறுமுனியே
அச்சிப் பிழைகள் விழாமல் அனுதினமும்
என்நாவில் குடியிருப்பீர் என்குறு முனியே

வாதராச்சிதன் மாத்திரை பெரியது

ஆதார மாகவே வாதராச்சிதன் அழகுசொரி விதக் குளிகை
யோடரிசி
வகையாறுடன் திரிகடுகு திரிபலை அதிமதுர மான போது
கோதுத்த வெள்ளுள்ளி இந்துப்புடன் நாவியும் மல்லி
யேலமுடன்
குறையாத இறுங்கைசிரம் கெந்தகம் கோல வசம்பு பச்சை

முடிவு

**தாகச் சுரத்துக்குக் கசாயம்**. வேப்பன் நெட்டி, பேய்ப்புடல், சீந்திக் கொடி, முத்தக்காசு, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், அனுபானம்-சீனி, தேன் விட்டுக் கொடுக்கவும். தாகசுரம், பித்தச் சுரம், பித்தசிலேப்பனம், சுரம் தீரும். கை முறை அனுபோகம். தீரும். திட்டம்.

குறிப்புரை

அகத்தியருக்குக் குறுமுனி என்ற பெயரும் உண்டு. எனவே இதன் ஆசிரியர் அகத்தியர் எனக் கொள்ளவும் இடமுண்டு. சோகை, பாண்டுக்கு மாத்திரை, சிறுபிள்ளைகளுக்கு உள்சளி, இருவிலாவு வெட்டி இருக்கக் கண்திறவாது-இதுக்கு மருந்து, சரஸ்வதி திடபானம், மருந்து முறிக்கவும், எலிக் கடிக்கு மருந்தும் குணமும், பிள்ளை இல்லா மலடிக்குக் குணமறிதல், மலடி குணமறிதல், வாதத்துக்கு, தீட்டுயில்லாப் பெண்ணுக்கு வாதராச்சிதன் மாத்திரை பெரியது, வாத சுரத்துக்குக் கசாயம், ஈளைக்கு இருமலுக்கு எண்ணெய், தீராத வயிற்றுவலிக்கு மருந்து, சுரம் வரலாறு, வயிரவன் மாத்திரை, சுரத்துக்கும், வாத சன்னிக்கும் தயிலம், பறங்கிப் பட்டைச் சூரணம், கிருமி, புழுவுக்கு மருந்து, சகல நயனத்திற்கும் பிதரோகிணி மாத்திரை, தாளக பற்பம், குளிர் தாமரைத் தயிலம், கெந்தக பற்பம், சிறு பிள்ளைகளுக்குக் கரப்பான் எண்ணை, மேகநாதக் குளிகை, குரல் கட்டுக்குப் புலிப்பாணி வாக்கியம், உச்சிக் குத்துக்கு, மாபாதச் சன்னி, கழிச்சலுக்குக் கசாயம், காத்தட்டித் தயிலம், தாகச்சுரத்துக்குக் கசாயம், வாதம் எண்பதுக்கும் தயிலம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 81. குஷ்ட நோயும் மருந்தும்

**அ. தாள். 1:1; ஆ.** *1-12* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

தொடக்கம்

**துவாதச் செந்தூரம்** - சுத்தி செய்யப்பட்ட ரசம், சுத்தி செய்யப்பட்ட நெல்லிக்காய் கந்தகம், சுத்தி செய்யப்பட்ட கவுரிப் பாஷாணம், சுத்தி செய்யப்பட்ட தாளகம், சுத்தி செய்யப்பட்ட லிங்கம், சுத்தி செய்யப்பட்ட மனோசிலை, சுத்தி செய்யப்பட்ட சங்கு பாஷாணம், சுத்தி செய்யப்பட்ட துரிசு, சுத்தி செய்யப்பட்ட துத்தம், பாகஞ் செய்யப்பட்ட படிகாரம், பாகஞ் செய்யப் பட்ட கம்பிவெடியுப்பு, பாகஞ் செய்யப்பட்ட வெண்காரம் இப்பன்னிரண்டு சரக்குகளும் வகை ஒன்றுக்கு வராகன் எடை ஒன்றேகால்.

முடிவு

**துராவதிச் சூரணம்** - உலர்ந்த துராயிலைச் சூரணம் வராகனெடை-*16 ½*, சுத்தி செய்யப்பட்ட சிவதை வேர்த்தோல் சூரணம், புங்கம்விதைப்பருப்புச் சூரணம், மஞ்சட் கடுக்காய்த்தோல் சூரணம், தான்றிக்காய்த்தோல் சூரணம், நெல்லிமுல்லிச் சூரணம் இவை வகை ஒன்றுக்கு வராகனெடை-16½, கார்போகரிசிச் சூரணம் வராகனெடை-6½. செய்முறை: சூரணங்களையெல்லாம் ஒன்றாய் மிஸ்ர மித்துக் கார்க்குள்ள சீஷாவிற் பத்திரப் படுத்த வேண்டும்.

குறிப்புரை

**உரை நடை.** தொழுநோய் பற்றிய செய்திகளையும் அவற்றுக் கான மருத்துவ முறைகளையும் கூறுகிறது. துவாதச் செந்தூரம், நிவாரணம் பற்றிய குறிப்புகள், நோய் பற்றிய கவனிப்பு, குஷ்ட ரோகம் பிறப்பும் பொது லட்சணமும், குஷ்ட ரோகப் பொது சிகிச்சை என்ற பகுதிகளில் அசாத்திய குஷ்டங்கள் தவிர மற்றெல்லா வகைக் குஷ்டங்களுக்கும் நோய் நிவாரணி யாகத் துவாதச் செந்தூரம் பயன்படும் என்பதும், அதன் செய்முறையும், இந்நோய் தோன்றி வெளிப்படும் முறை, குணம் என்பதும் சுட்டப் பெறுகின்றன. துவாதச் செந்தூரத்தின்

அனுபானம், வல்லாரைச் சூரணம், துராவதிச் சூரணம் ஆகியன தயாரிக்கும் முறைகளும் கூறப் பெற்றுள்ளன. தொழுநோய் பற்றிய செய்திகளும் அவற்றுக்கான மருத்துவ முறைகளும் கூறப்பட்டுள்ளன.

## 82. கெர்ப்ப உற்பத்தி

**அ.** 563 : 915; **ஆ.** *1-4* ஏடுகள்; **இ.** *35 × 3.5* செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; *சில துளைகள்;* **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

அத்தியுரித் தோனிடத்தில் அமர்ந்தவுமை யாளீன்ற
சத்திக் கணபதியின் தாள்போத்தி-யெத்திசையுங்
கெற்பமின் னார்க்களித்தக் கெடுபிணிகள் தான்தீர
கற்ப மதகரியைக் காப்பு.

ஆகநாள் விந்துண் டாகில் அஞ்சுநாள் கருப்போலாகும்
போகமூ வைந்து நாளில் பொருந்திய முட்டை போலாம்
யேகமா மாதந் தீர்கம் யிரண்டினில் மாரமட் டாகும்
பாகமா மூன்றாந் திங்கள் பகருந்தி மட்டு மாமே (1)

முடிவு

குடித்த பாலுந் தங்காது குஞ்சி யுடலு மிகநொந்து
மிடித்த நெஞ்சு முயர்தளர்த்தி மிகவே கைய்க்கும் செடிநாரும்
படிக்குங் கையிகால் புணக்சலாகப் பதைத்து வருத்தம் படுமாகில்
துடிக்கும் சமனிடை யாளே சொல்லு மழிந்தாள்
தோஷமிதே (27)

குறிப்புரை

**27 பாடல்கள்.** முழுமை; *28* ஆவது பாடல் குறை. செங்கிரந்தி ரோகம்-குணம், கெர்ப்பஞ் சிவிகை நாள், பட்சி தோடம், நீர்ப்பறவை தோடம், குளிதோடம்-குணம், மருந்து, தேரை குணம், மாந்தம், மஞ்சள் காமாலை, கற்பூரவள்ளி, யீருள்ளி குணம், கருங்கிரந்தியின் குணத்துக்கு எண்ணை, புள்ளு தோடத்தின் குணம், மருந்து, கெர்பபம் அளி தோசத்தின் குணம், குளிசங்கட்ட மருந்து முதலானவை பற்றிய செய்திகள் உள்ளன.

## 83. கெர்ப்பக் கோளின் விபரம்

**அ.** 509:777; **ஆ.** 67-70 ஏடுகள்; **இ.** 40 × 3 செ.மீ; **ஈ.** 6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங் களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பாரப்பா பெண்மலடாங் கெர்ப்பக் கோளின்
பக்குவத்தைச சொல்லுகிறேன் பண்பாய்த் தானே
ஆரப்பா ஆண்மலடே ஆகு மல்லால்
அப்பனே பெண்மலடு ஆரு மில்லை
நேரப்பா தவசிருந்து பொருளை யீய்ந்து
நேரான திவலையது சூலுங் காணும்
வேரப்பா தேவதையா லேழாங் கற்ப்பம்
விரிந்துநன்றாய்ப் புகலுகிறேன் விரும்பிக் கேளே (1)

முடிவு

மதுவாகும் குளிர்ந்தசலம் கிட்ட வாகா
மைந்தனே கொதித்ததண்ணீர் மிகவு மாகும்
சதிராக வேதமுறை நான்கண்டு சொன்னேன்
சத்தியந் தானிந்த னூல்கண்டு பாரு
அதுவாகு மிதுவாகு மென்று யெண்ணி
அலமலர்ந்து திரியாமல் அருளை நோக்கு
பொதுவாகும் நினவுகொண்டு இருப்பா னாகில்
புத்திசித்தி முத்திமுதல் புனித னாமே (16)

முற்றும், சம்பூரணம்.

குறிப்புரை

**1-16 பாடல்கள்.** பெண்மலடு இல்லையென்றும், ஆண்மலடே மலடென்றும், அதற்குரிய காரணங்களும் மருந்துகளும், மலட்டு நோய்க்குக் காரணங்களும், நிவர்த்தி முறைகளும் கூறப்படுகின்றன. ஆண் பெண் மலட்டுக் குறிகள் தசை வளர்ச்சி, வாயு, கிருமி, இரத்தம் மதர்ப்பு முதலானவற்றின் குறிகளும், ஏரமருந்து, திப்பிலி, கற்பூரம், கர்ப்பமுண்டாக மருந்து முதலான மருந்துகளும், கருவின் விபரம், சாந்தி செய்யும் முறை, பத்திய வகைகள் முதலானவையும் கூறப்படு கின்றன. கெர்ப்ப கோளம் 16 என்ற பெயருடைய நூல்களும்

(ச. 197. A. ச. 243. A. ), கர்ப்ப சாத்திரம் (317. M.) என்ற நூலும் இந்நூல் போன்றவையே.

## 84. கொங்கணர் செந்தூரம்

**அ. 543:879; ஆ.** *1, 10-31* ஏடுகள்; **இ.** *26 × 2.5* செ.மீ; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; ஏடுகள் கறுத்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

**நவசுரமாய் கைகால் அதச்சி வீங்கியிருந்தால், முகம் வெளுத்து இருந்தால் யிந்தச் சுரத்துக்கு மருந்து**

களச்சிக் கொழுந்து, பொன்னாவரைக் கொழுந்து, பூச்சக் கொழுந்து, நீர்முள்ளிக் கொழுந்து, ஆவாரைக் கொழுந்து, சீறிக் கொழுந்து, விடாங் கொழுந்து, நல்ல பொருமிக் கொழுந்து, பாப்பார் முள்ளிக் கொழுந்து யிந்த ஒன்பது வகைக்கொழுந்தும் கொண்டு வந்து பொன்னிறமாக வறுத்து மூனு படித் தண்ணீர் விட்டு நல்லா சுண்ட விட்டு அரைப்படியான வாறே யிதெல்லாம் அதக்கிப் பிழிந்து போடவும்.

### முடிவு

ஒரு வெங்காயத்தைக் கிள்ளி ஒரு செந்தூரத்தை வைத்து விளக்கெண்ணைச் சீலை சுத்தி அது கும்பியில் போட்டு திரும்பி ரெண்டு வெங்காயம் சும்மா கும்பியில் போட்டு யிதுவும் அதுவும் மெண்ணு தின்னவும். இப்படி மூனு நாளைக்கு மூனு வெங்காயம் ஒன்பது வெங்காயம் தின்னவும். மூனு வருஷம் குலை நோவு நொந்தால், 30 [illegible] நொந்தால் யிந்த மேரைக்கு மூனு நாளைக்குச் சாப்பிடவும்.

செந்தூரச் சேவடி யெழுதி முகிஞ்சது முத்தும்.

கொங்கணர் செந்தூரம்.வேலும் மயிலும் துணையுண்டாகவும்.

### குறிப்புரை

**உரைநடை.** பிழை மிகுதி. முதல் எட்டில் **'காட்டுவழி போனாலும் கள்ளர் பயமானாலும்'** என்ற காப்புப் பாடலை அடுத்துச் 'செந்தூரச் சேவடி **எடுத்தவன் குடுக்க,**

**குடுக்காமல் போனால் பாவம் மென்றாம்,**' என்றுள்ளது. ஏட்டின் பின் பக்கம் 'செந்தூரக் குளிகை பண்ணும்படி' எனும் தலைப்பு மட்டும் உள்ளது.

தாபசுரத்துக்கு, விஷ்ணு பரியாகி சிறுநீரில் இரத்தம் விழுந்தால், வலம் கட்டிக் கெண்டால், சிறுநீர் கடுத்து இறங்கி னால் இந்தச் சுரத்துக்கு, கர்ப்பமுண்டாவதற்கு, விஷ்ணுச் சிறுநீர் கடுத்து விழுந்தால், சிறுநீர் சுண்டு விரல் அளவு, கழுதை மூத்திரம், சுண்ணாம்புத் தண்ணீர் போல விழுந்தால், அக்கினி வாய்வு, அக்கினி மாந்தம், வயிற்று நோயிற்கு, சீழ் விழுதற்கு, வேதாளம் அவிசாதாளிக்கு, சுரத்துக்கு, வயிற்றுக் கடுப்பிற்கு முதலான நோய்களுக்கு மருந்துகளின் செய் முறை கூறப்பட்டு இம் மருந்துகள் அனைத்திலும் செந் தூரத்தைக் கலந்து கொடுப்பதால் நோய்தீரும் முறைகளும், செந்தூரம் செய்யும் முறைகளும், செந்தூரத்தைப் பற்ப மாக்கும் முறைகளும், பத்திய முறைகளும் அனுபானமுறை களும் கூறப்படுகின்றன. கொங்கணர் பதினெண் சித்தர் களுள் ஒருவர். கொங்கணரும, கருவூராரும் சமகாலத்தவர். போகர் இவர்களது குரு. காலாங்கிநாயன் போகரது குரு. இவர்கள் திருமூலர் வழிவந்த மூலவர்க்கத்தடியார்கள். யோகம், தத்துவம், தெய்வங்களை வணங்குதல், தியானம், மனத்தைக் கட்டுப்படுத்துதல், வாத நோய், மருந்து முதலானவற்றை இவரது நூல்கள் விளக்குகின்றன. சிறப்பாக மனிதனைக் குறித்துப் பாடப்பட்டவை இவரது பாடல்கள். இவர் கொங்கண நாயனார், கொங்கண முதலியார் என்றும் சுட்டப் பெற்றிருக் கிறார். திருமூலர், காலங்கி நாயன், காகபுஜண்டர் ஆகியோர் அவர்களுடைய நூல்களில் கொங்கணரைப் புகழ்ந்து கூறி யுள்ளனர். மேலும் அகத்தியர், கருவூரார், சுந்தரனாண்டார் ஆகியோரும் இவரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர். கொங்குப் பகுதியில் பிறந்த இவரைப் பற்றி ஒரு சில கதைகள் மக்களி டையே நிலவுகின்றன. 'கொக்கென்று நினைத்தாயோ கொங் கணவா' என்பது அவற்றுள் ஒன்று. நல்லது நடக்கப் பொங்கல் வைத்து, மூலிகைகளின் வேர்களை வைத்துப் பூசை செய்து, மேலும் சிவபூசையை மேற்கொள்ளும் போது ஒருவர் அட்ட கர்மம் கைவரப் பெறுவர் என்று இவர் கூறுகிறார். மேலும் மாயா ஜாலம் செய்வதற்கான மூலிகைகளையும் குறிப்பிடு கிறார். இவையெல்லாம் மிகவும் வியக்கத்தக்கவை இவற்றை யெல்லாம் ஒரு நல்ல நோக்கத்தோடு செய்தல் வேண்டும்; தவறுதலாகப் பயன் படுத்தக் கூடாது என்று எச்சரிக்கிறார்.

இத்தகைய திறமைகளைத் திருமூலர், நீலகண்டர் ஆகியவர்களிடமிருந்து தான் பெற்றதாகக் கூறுமிவர், ஒருவர் பட்சிணியைச் செய்வதற்குத் தீவிர யோகத்தின்வழி சிவனுடைய நெற்றிக் கண்ணைப் பெற்றிருக்க வேண்டும் என்று கூறுகிறார். கொங்கண நாயனார் பட்சணி, கொங்கண நாயனார் முதற் காண்டம் - *1000*, அதிசய சூத்திரம் (*ச.226* ஐ), கொங்கணர் ஐநூற்றுத்திரட்டு சரக்கு வைப்பு, கொங்கணர் கடைக் காண்டம்-*500*, கொங்கணர் கற்பவிதி-*25*, கொங்கணர் கெர்ப்பிணி ரோகம், கொங்கணர் ஞானம்-*60* முதலானவை இவரது நூல்கள்.

## 85. கொங்கணர் முப்பு 4 முதலியன

**அ. 532:862; ஆ.** ஓர் ஏடு; **இ.** *44.5 × 2.5* செ.மீ.; **ஈ.** *4* வரிகள்; இருபக்கங்களும் இரண்டு பாகங்களாகப் பிரித்தெழுதப்பட்டுள்ளன; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சொல்லும் பூநீர் பலமொன்று
புல்லு மேபடி கார மிருபலம்
வெல்லு மாமதி யுப்பு மிருபலம்
கொல்லு மேகரி யுப்புச் சமனெடை (1)

முடிவு

போட்டிடு செயநீ ராகும் பாலெல்லாம்
மாட்டிடு வருபத்து ’ùபரசம்
காட்டிடு சுண்ணம் கடின மகாவேதை
பூட்டினார் கொங்க நாயர் புகன்றதே (4)

குறிப்புரை: கொங்கண னாயனார் அருளிச் செய்த முப்பு-4

**1-4 பாடல்கள்.** உபரசம், சுண்ணம், பூநீர், காரம், கரியுப்பு, செயநீர், முப்பு செய்முறை முதலியன கூறப்பெறுகின்றன. அடுத்து **‘முப்புப் படலம்’** என்ற தலைப்பில் இரு ஏடுகள் உள்ளன. இவற்றில் பூநீர் எடுக்கும் முறை, உப்பு எடுக்கும் முறை, சுண்ணம், களங்கு, செந்தூரம், பற்பம் தயாரிக்கும் முறை அவற்றால் தீரும் நோய்கள் கூறப்படுகின்றன.

## 86. சஞ்சீவி நல்லமுர்த லேகியம் முதலியன

**அ.** 419:663; **ஆ.** 5 ஏடுகள்; **இ.** 49 × 3 செ.மீ.; **ஈ.** 4 வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சீரான தென்பொதிகைச் சித்தரகத் தீசர்சொன்ன
சார்வான நந்திமையைச் சாற்றக்கேள்-நேராக
நந்திவித்து நாற்பதெடு நன்றாய் முகிழ்போக்கி
அந்த முள்ள சாணாங்கி நீரிலவி-சொந்தமதாய்
ஒன்றுரெண்டாய் வெட்டி உழக்காவி நெய்யிலிடு
அன்றிஎட்டி வித்துஐந்து காசிடைதான்-நன்றாக
நாவல்தோல் சாத்தில் நால்சாமம் ஊறிஎடு
தாவுவிரை நாலுதுண்டாய் தான்நறுக்கிப்- பாவகமாய்

முடிவு

பத்தியமோ இல்லை பகர்வோம் குளிர்சலத்தில்
சுத்தமாய் மூழ்கலாம் சொல்லக்கேள்-சத்தியமாய்க்
குமரிசந்தனாதி குளிரு-மிருகமலம்
அமரும் செண்பகாதி ஆகுமே-குமரனும்
நாலினில் மூன்றினில் நலமுடனே இத்தயிலம்
சீலமுடனே மூழ்கச் சித்தியாம்-ஞாலமதில்
நந்திவித்துச் சஞ்சீவி நல்லமுர்த லேகியத்தைச்
சொந்தமாய்ச் சொன்னார் சுகமாய் முற்றுப்பெற்றதுவே

பிற்குறிப்பு

சௌமிய வருஷம் மார்கழி மாதம் ஆறாம் தேதி திங்கட் கிழமை எழுதி முடிந்தது.

குறிப்புரை

தொடக்கத்தில் சோதிடம் தொடர்பான 9 ஏடுகள் கிரந்த எழுத்தில் உள்ளன. 10 ஆவது ஏடு தொடங்கி 5 ஏடுகளில் 'சஞ்சீவி நல்லமுர்த லேகியம்' என்னும் நூல் காணப்படுகிறது. இது கலிவெண்பாவால் ஆனது. சௌமிய ஆண்டு எழுதப் பட்டதாகக் குறிப்பு காணப்படுகிறது. தைலம், லேகியம் ஆகியவற்றின் செய்முறைகள் கூறப்பட்டுள்ளன. இந்நூலைத்

தொடர்ந்து கயிலாச சதகம் என்னும் நூல் 27 ஏடுகளில் அமைகின்றது. இந்நூலில் பெண்டிர் இயல்பு, கர்வத்தால் பங்கமுற்றார், இதற்கு இது நன்றெனல், கருமிகளாவோர், கோபக் கொடுமை, வறுமை குணம், வேதியர் சிறப்பு, அரசர் சிறப்பு என்னும் தலைப்புகளிலமைந்த பாடல்கள் காணப் படுகின்றன. நூல் முழுமையாக இல்லை.

## 87. சட்டை முனி 8

**அ.** 516:796; **ஆ.** *1-2* ஏடுகள்; **இ.** *30 × 3.5* செ.மீ.; **ஈ.** *8,9* வரிகள்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாக வில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஆயியென்ற கயிலாச தாயி பாதம்
    அருளாக எனையீன்ற அய்யர் பாதம்
சோதியெனும் தென்பொதிகை ஆசான் பாதம்
    தொழுதிறஞ்சி வேதாந்த சூஷ்ஷஞ் சொல்வேன்
ஊதியே உம்மென்று அம்மென் றூணு
    ஊதிடவே சாபமெல்லாம் ஓடிப் போகும்
சாதினையால் வகாரமது சிகாரங் கூட்டி
    வகுத்திட பத்துலஷ்ஷம் வாதி யாமே (1)

முடிவு

ஆச்சிந்த வகையாலே சித்தி யானால்
    அரனிடத்தில் உமைபாதம் போற்றாற் றாலே
போச்சிந்தத் தாயைவிட்டால் வித்தை யெல்லாம்
    புகழாகக் குருவருளா லகன்று தேரு
யேச்சிந்தக் குருவருளால் வாங்கிக் கொண்டால்
    யியல்பான பரதேவிக் கிடம தாகும்
பாச்சிந்த குருபாதத்தில் பொருளை யெல்லாம்
    பாங்கான மனதுவைத்துப் பகுரு வாரே (8)

குருவேதுணை

குறிப்புரை: சட்டை முனி நாயனார் அருளிய எட்டு

**1-8 பாடல்கள்.** உமையின் பாதத்தை வணங்கி, மந்திர மோதினால் சாபம் நீங்கும், நினைத்தது சித்தியாகும் என்று

கூறும் இந்நூல் உள்ளம் ஒளிபெற வழி முறைகளைக் கூறுவ தோடு சுழினை, அயங்கோண முத்திரை, இரண்டெழுத்து, வித்தை, செந்தூரம் முதலானவை பற்றியும் கூறுகிறது.

## 88. சட்டை முனி கற்பம் 100

**அ.** 325:553; **ஆ.** 8-32 ஏடுகள்; **இ.** 29 × 3.2 செ.மீ.; **ஈ.** 7-8 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகிய தெளிவான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாக வில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

பாடுகிறேன் காயசித்தி ஐங்கரனே காப்பு
　　பரிவான சின்மயத்தின் பாதங் காப்பு
நாடுகிறேன் சித்தருட பாதங் காப்பு
　　நாதாந்த மனோன்மணித்தாய் பாதம் காப்பு
தேடுகிறேன் என்றாலும் இன்னூல் போலே
　　செப்பார்கள் சித்தரப்பா காய கற்பம்
பாடுகிறேன் காயசித்திக் காதி யந்தம்
　　சொல்லுகிறேன் கற்பநன்றாய்க்கேளு கேளே (1)

முடிவு

கேளப்பா ஐம்பதுபோய்ப் பதினா றாகும்
　　கெடியான எழுபதிலே தின்னா ராகில்
வாளப்பா இருபதுபோ தலன்னா ளுந்தான்
　　வாங்காமல் நின்றுவிடும் வளர்த்தி கூடார்
நாளப்பா இதுமேலே வயது மிஞ்சில்
　　நரம்பெல்லாம் தளர்ந்துபோம் கிழமை பாரு
வேளப்பா டரித்தசிவன் சொன்ன மார்க்கம்
　　வெவ்வேறே சித்தர்சொன்ன வித்தை பாரே (100)

குறிப்புரை : சட்டை நாதர் பலப்பம் நூறு

**1-100 எண்சீர் விருத்தப்பாக்கள்.** சித்த மருத்துவ அக-மருந்துகளுள் ஒன்றாக விளங்கி, இவ்வுடலை நீண்ட காலம் வாழ வைக்கும் மூலிகைக் கற்பங்களின் செய் முறைகளும், அம்மருந்துகளால் தீரும் நோய்களும் கூறப்படுகின்றன. காய கற்பங்களாக விளங்கும் மூலிகைகள் அவற்றின் சுத்தி முறைகள், மருந்து தயாரித்தலுக்குத் தேவையான பொருட் கள், மருந்து செய்யும் போது அந்தந்த மருந்திற்கேற்ப வறுத்தல், காய்ச்சல்,

கிண்டுதல், இடித்தல், பொடித்தல் முதலானவையும், கடுக் காய், மிளகு, சீந்தில், கரிசாலை, சிவனார் வேம்பு, தூதுவளை, கரந்தை, பூனாகம், கோரக்கர் மூலிகை, வேம்பு, அண்டம், சுண்ணம் முதலான கற்பங் களின் செய்முறைகளும், கெந்திக் கட்டு, கெந்தகச் செம்பு, உப்புக்கட்டு, தலைமுழுகத் தைலம், காயச் செந்தூரம், பூனாகச் சத்து, மூலிகை பயிர் செய்யும் முறை, மூலிகை சோதனை, சித்தர்கள் கற்பம் சாப்பிட்டது, அண்டநீர், தங்கச் செம்பு, கற்பத்தின் பயன், மந்திரங்களுக்கு தத்துவிளக்கம் முதலானவையும் விளக்கம் பெறுகின்றன.

சட்டைமுனி 16 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சித்தர்களில் ஒருவர். இவர் கொங்கணருடைய மாணாக்கர். சட்டைமுனி, கம்பளி நாதர், கம்பளிச் சட்டை நாதர், கைலாச சட்டை நாதர், கைலாச நாயனார் போன்ற வேறு பெயர்களும் இவருக்கு உண்டு. இவர் இறுதிக் கயிலாயப் பரம்பரையைச் சார்ந்தவர். கம்பளி அணிந்ததனால் கம்பளிச் சட்டைமுனி என்றழைக் கப்படுகிறார். இவர் மிருகசீரிட நட்சததிரத்தில், ஆவணி மாதத்தில் பிறந்தவர். இவருடைய நூல்கள் மருத்துவம், யோகம், இரசவாதம் பற்றியவை. சட்டைமுனி நாயனார் கற்ப விதி 100 (1881) என்பது மட்டுமின்றி 100 பாடல்களை யுடைய சட்டைமுனி முன் ஞானம் 100, பின் ஞானம் 100, சட்டை முனி நாயனார் பின் ஞானம் 100, சட்டைமுனி அருளிய திரிகாண்டம், சட்டை முனியார் பாடல், சட்டை முனியார் அகவல், சட்டைமுனி 1200, சட்டைமுனி சரக்கு வைப்பு, சட்டைமுனி வைப்பு முதலான நூல்களும் உள்ளன. சில மருந்துகள் எவ்வாறு பல நோய்களைக் குணப்படுத்து கின்றன என்பதும், மனித உடலைத் தூய்மைப்படுத்து வதற்கான வழிமுறைகளும், கடவுளை அடையும் வழி முறை களும், தீட்சை முறைகளும், தத்துவ விளக்கங்களையுடைய மந்திரங்களும், ஆன்மா விடுதலை பெற உதவும் யோக முறைகளும், பல்வேறு மருத்துவச் சிகிச்சைகளும்,64 வகை மருத்துவப் பொடிகளும் கற்பங்களும் பற்றிய விளக்கங் களை இவரது நூல்கள் தருகின்றன. கொங்கணர் கற்பவிதி 25, கொங்கணர் பற்பவிதி 100, போகர் கற்பவிதி 300 முதலான சுவடிநூல்கள் உள்ளன.

## 89. சட்டைமுனி கற்பம் 100

**அ.** 364:604; **ஆ.** *1-23* ஏடுகள்; **இ.** *26.5 × 3.5* செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

கேளப்பா முந்திமுந்தி வழலை மார்க்கம்
கெடியாக வாங்குகிற தோர்வரிசை சொல்வேன்
நீளப்பா பெருவிரலில் கரிசாலைச் சாறு
நெய் யோடே மத்திச்சுப் பூசிக் கொண்டு
சூளப்பா அண்ணாக்கில் விரலை ஒட்டிச்
சுழுத்தியிலே கபாலத்தில் கபமெல்லாம் வீழும்
நாளப்பா நாற்பதனுள் உதையத்தில் செய்வாய்
நலமான குணத்தையினிச் சொல்லு றேனே (2)

முடிவு

பாரப்பா காயசித்தி செய்யும் மார்க்கம்
பஞ்சிட்டுப் பரமவயித் தால்போலே சொன்னேன்
ஏரப்பா சித்தர்சொன்ன கற்பத் துக்கும்
என்னுடைய நூலுக்கு மிசைத்துப் பாரு
தூரப்பா தொட்டல்லோ முடிவரைக்குஞ் சொன்னேன்
சொல்லாதே ஒளித்திட்டார் சித்த ரெல்லாம்
காரப்பா குருபதத்தைக் காக்கவே சித்தி
காயசித்தி பாடினது காட்சி முற்றே (100)

பிற்குறிப்பு

சட்டை முனியார் கற்பவிதி முற்றும். சற்குரு பாதமே துணை. ஐயாவும் எனக்குத் துணையாக வேணும். திரு வேங்கிடம் கையெழுத்து.

குறிப்புரை: சட்டை முனிவர் கற்பம் நூறு

**1-101 பாடல்கள்.** *325:553* இல் உள்ள நூல் இது போன்றதே. ஆயின் இதில் வரும் *101* ஆவது பாடல் மட்டும் அதிலில்லை. கைலாஸச் சட்டை முனி பாடல் (ச.202. B) என்ற நூலின் முதல்பாடல் இந்நூலின் முதற் பாடலுடன் ஒத்து அமைகிறது. சட்டை முனி கற்பவிதி (ச. 26.a) என்ற நூல் இந்நூல் போன்றதே.

# 90. சட்டை முனி சொட்ச சூத்திரம்

**அ.** **371:612; ஆ.***1-9* ஏடுகள்; **இ.** *26* x *2.5* செ.மீ; **ஈ.** *6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

சோதியெனும் துரியவெளிக் குருவே அய்யா
  சொற்பெரிய கயிலாசச் சின்மயமே ஞானத்
தாதியெனு ஞானத்துக் கேதுமார்க்கம் அருந்த
  தேயென் றுரைத்தால் யார்தான் காணும்பார்
வாதியென்று பேர்கொண்ட சுந்தரமே அய்யா
  வரிசையுடன் நவச்சார வழலை மார்க்கம்
நீதியாய்ச் சொல்லுகிறேன் நினைவாய்க் காணும்
  நிகண்டுபனி ரெண்டுநூறு நிலைத்திட்டோர்க்கே (1)

முடிவு

ஆமப்பா சாரமே அய்யா கேளு
  அண்டத்தில் சுண்ணமொடு வாசி மூல
நாமப்ப நிகண்டு பனிரெண்டு நூறு
  நாடினேன் சூஸ்திரம் சொட்சம் பாடி
வாமப்பா ரெண்டுகாண் டம்வாதத் துக்கு
  கூடத்தான் சூஸ்திர மிருநூறும் சொன்னேன்
தாமப்பா சூஸ்திரம் நிகண்டுச் சொச்சம்
  சாஸ்திரமும் பார்த்தவர்க்கு முத்தி யாமே (53)

குறிப்புரை: சட்டைமுனி நாயனார் சொட்ச சூஸ்திரம்

**1-53 பாடல்கள்.** 'சட்டைமுனி நாயனார் நிகண்டு ஆயிரத்தி இருநூறு' என்ற நூல் பெயர் இறுதி ஏட்டில் உள்ளது. அந்நூலில் விடுபட்ட 53 பாடல்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன என்பது தெரிய வருகிறது. வெடியுப்பு, சுண்ணம், சாரம், காரம், வீரம், பூரம், துரிசு, இந்துப்பு, சவுக்காரம், அண்டநீர், வெள்ளை, கிளிஞ்சில், உவரசம், பூநீரு, சூடன், கல்லுப்பு முதலியவற்றின் உதவியுடன் குழம்பு, எண்ணை, முப்பு, நவகுண்ட அண்ட நற்சுண்ணம், சுண்ணக்குடோரம் முதலியவற்றின் செய்முறைகள் ஞானத்தின் உதவியுடன் கூறப்பெறுகின்றன.

## 91. சண்முக நிகண்டு

**அ. 527:850; ஆ.** *1-40 (38)* ஏடுகள்; **இ.** *35 x 4* செ.மீ; **ஈ.** *10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

வடமொழிய வைத்திய நிகண்டு வாய்ந்தசொல்
அடவுறு தமிழ்நிகண் டாகச் செய்யவே
துடர்மளந் தனக்குறு துளைய தானது
கடக்கரி முகனிரு கமல பாதமே

சந்தனப் பெயர்

அரிசந்தம், சந்தனம், ஆரம், ஏமம், கெந்தசாரம், மலைய சம்பத்திரம், சுவேத சந்தம், சந்திர காந்தி, சிசிரம், காராக்கியம், சிறுகெந்தம், திலகம், பன்னம், நிரந்திர போக்கிம், சீதம், கோசிரிட்டம், சந்திர திலகம், சாந்தென ஸ்ரீதிய பெறுமீ ரோனம் பதும சந்தினத்தின் பெயரே.

முடிவு

**பல பல பாஷாணத் தொகுதி** - வக்கிராந்த பாஷாணம், சவ்வீர பாஷாணம், தால பாஷாணம், முறந்த பாஷாணம், நீல பாஷாணம், கெந்த பாஷாணம், சோர பாஷாணம், காக பாஷாணம், லவண பாஷாணம், நாக பாஷாணம், கற்கடக பாஷாணம், கோளக பாஷாணம், காந்த பாஷாணம், சாரகாண்ட பாஷாணம், அளமல பாஷாணம், இந்தப் பாஷாணப் பெயர்த் தொகுதியிலே கண்டு கொள்ளவும்.

எழுதினது முற்றும்

குறிப்புரை

சந்தனம் முதலாகப் பாடாணங்கள் ஈறாகப் பல்வேறு மருந்துப் பொருட்களின் வெவ்வேறு பெயர்கள் கூறப்பட்டுள்ளன.

## 92. சர்வ சம்ஹார விஞ்சை

**அ. தாள். 2:22; ஆ.** *148-155* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

தொடக்கம்

சீர்மேவும் வாலையபி ராமி சூலி
திரிபுர சம்ஹாரி கவுமாரி வாமி
தார்மேவும் மயிட சங்கரி துர்க்கை
சாமுண்டி கங்காளி சத்த மாதா (1)

சிவவளரு முருத்திரன்முடி முருகனென வானோர்
சேவலது தசமாது நான்முகனோர் மாலை
நவ்வெனவீ திக்கும்மா னிடதுபுய மானோன்
நற்சித்தி வடிவேலன் சூரரை வென்றோன்
மவ்வொருஇவ் வொருநவ்வென்று நத்திரி எழுத்தை
மசிநசியென் றதைச்செபித்து உருலட்சமுரு வாகில்
வெவ்விவளர் வினையக லுமிது தடனே
வேல்முருகர் சர்வசம் ஹாரமிது வாகும் (2)

முடிவு

ஒண்ணான மேல்ம காரம் முயர்நடு சிகார மாகும்
எண்ணிய நகாரம் கீழே இதன்வட்டம் வெளியில் சூலம்
புண்ணான சித்த ரெல்லாம் பகர்ந்த நூலுக்கிது மேலாக
கண்ணான லட்ச மோதக் கடுவினை யளவும் போமே (2)

குரு சண்முக மூர்த்தி அகஸ்தியர் சுவாமிகளுக்கருளிச் செய்த விஞ்சை பனுவன் முற்றிற்று.

குறிப்புரை

**1-21 பாடல்கள்.** சர்வ சங்கார மந்திரத்தை இலட்சம் முறை உருச் செய்தபின் அதனைப் பலவழி முறைகளில் பயன் படுத்தி அதனால் அடைய விருக்கும் நன்மைகளைக் கூறுகிறது. பிள்ளையுண்டாக, இறந்த குழந்தை வயிற்றிலிருந்து வெளிவர, சுகப் பிரசவம் ஏற்பட, தானிருக்கும் ஊரில் விடம் அண்டா திருக்க, கண்ணெதிரே அரவம் தோன்றாதிருக்க, ஏவல், பில்லி, சூனியம், கண்ணேறு, சுரம், சன்னி, குட்டம், கண்ட மாலை, பெருவியாதி முதலியன அண்டாதிருக்க மந்திரத் துடன் கூடிய மருத்துவ வழிமுறைகளை விளக்குகிறது. மருத்துவமும் மந்திரமும் இணைத்துக் கூறப்பட்ட நூலாக அமைகின்றது.

## 93. சரக்கு சிந்தாமணி

**அ. தாள். 4:30; ஆ.** *1-15* பக்கங்கள்; **இ.** குறை; **ஈ.** அச்சாகாதது.

தொடக்கம்

சுக்குக் குணம்

சுக்குமிக தாதுவாம் சொல்லறிய ரூபனமாம்
....சூமம்போம் மெல்லியரே-தக்கதொரு
மூக்குநீர்ப் பாச்சல்போம் மூலரோ கம்போம்
தாக்கும்நோய் போக்குந் தான் (1)

முடிவு

நில்லாத நோய்க ளென்ற நிமிடிமாது யோது வாலே
வல்லாத அஷ்ட யோக மாரண மான தாலே
சொல்லாத மரணத் தைச்செந் தூரஞ் செய்கை யாலே
சொல்லாத சூட்சந் தன்னைச் சொல்லிய நிவர்த்தி யாலே (90)

குறிப்புரை

மருந்துப் பொருட்களின் குணங்களையும், சில மருந்துகளின் செய்முறைகளையும் கூறுகிறது. **1-91 பாடல்கள்.** *91* ஆம் பாடல் முற்றுப் பெறவில்லை. இடையில் ஓர் ஏடு இன்மை யால் 57 முதல் 64 வரையுள்ள பாடல்கள் விடுபட்டுள்ளன. முதல் 56 பாடல்கள் வெண்பாவில் வருகின்றன. 65 முதல் 90 வரையுள்ள பாடல்கள் அறுசீர் விருத்தத்தில் வருகின்றன. சுக்கு, திப்பிலி,ஓமம், கடுகு, மிளகு, வசம்பு, தாளிசபத்திரி, அதிமதுரம், கற்கடகசிங்கி, வெங்காரம், கௌரிபாடாணம், வெள்ளைப்பாடாணம், தொட்டிப்பாடாணம், துத்தம் துருசு முதலியவற்றின் மருத்துவ குணங்களும் தாம்பிரப் பற்பம், தங்கப்பற்பம் முதலியவற்றின் செய்முறைகளும் கூறப் பெற்றுள்ளன. **அச்சான பதார்த்த குண சிந்தாமணி என்ற நூலினின்றும் வேறானது.**

## 94 சவ்வீர வைப்பு திராவகம்

**அ. 536:871; ஆ.** 3-6 ஏடுகள்; **இ.** 44 × 2.5 செ.மீ.; **ஈ.** 4-5 வரிகள்; **உ.**நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

வெடியுப்பு நாலு பங்கு, ரசம் ரெண்டு பங்கு, நவாச்சாரம் ரெண்டு பங்கு, சீனம் ஒரு பங்கு இந்த நாலும் கூட்டிப் பொடித்துக் கலையத்திட்டு கெந்தகம் போலதீநீர் வாங்கி மூட்டி அரக்கினால் சவ்வீரம் வைப்பாகும்.

முடிவு

ஆடுமிந்த மணிஅறிவுக் கோட்டை யேறி
அப்பாலே செல்லுமாம் இலங்கு தூரம்
தேடு மிந்த மணியி ருக்க
வெடிமருந் தில்தீப் பிடியா தென்னே
ஆடுமிந்த மணியாலே யோக சித்தி
நன்றாகக் காயசித்தி கவுன சித்தி
ஆடுமே ஆகுவது நாலு சித்தி
அப்பனே கேசரியின் மார்க்கம் தானே

குறிப்புரை

**பாட்டும் உரைநடையும் கலந்துள்ளன.** சவ்வீரவைப்பு, விசங்களுக்குப் பூ மெழுகு, பேய் பிசாசு ஓட கேசரி அஞ்சனம், மைவகையால் உலகிலுள்ளோர், மங்கையர் வசியம், துன்புறுத்துகின்றவனுக்கு அழிவு, இராசாக்கள் வசியம், அஷ்ட்டமாசித்தி முதலான செயற்பாடுகளுக்குரிய மாயசித்துகளின் செய்முறைகள் விளக்கம் பெறுகின்றன. இதனை அடுத்துப் **போகர் வீர வைப்பு எனும் தலைப்பு** 1-2 என்ற எண்ணிட்ட ஏடுகளில் உள்ளன. செந்தூரம், பற்பம், நவலோகம் முதலியன தங்க மாதல், தாம்பர சுத்தி, வீர வைப்பு முதலான இரசவாதம் பற்றிய செய்திகள் உரைநடையில் கூறப்படுகின்றன. அடுத்துப் **'போகர்' பொம்மைக்காகி, தங்க ஓட்டம் வர்ணமிடுகுற முறை** என்ற தலைப்பிலமைந்த செய்திகள், 1-2 என்ற எண்ணிட்ட இரு ஏடுகளில் உள்ளன. இதில் தங்க வர்ணம் பிரகாசிப்பதற்குச் செய்யவேண்டிய முறை உரைநடையில் கூறப்படுகின்றது.

## 95. சன்னி, சுர குறிகுணங்கள்

**அ.** 549 : 890; **ஆ.** 1-17 ஏடுகள்; **இ.** 21.5 × 2.5 செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** சிதையும் நிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சொல்லவே சுரத்தினுட சேதி கேளு
தூலத்தின் பிணிக்கெல்லா..வாகும்
எல்லவே இயமனுக்கு மொக்கு மொக்கு
மேலிலொடு பித்ததாப கோப மாகித்
தள்ளவே தரக்கனுட வேள்வி யைத்தான்
சாடிசிவன் கோபத்தா லழித்த போது
நல்லவே நெத்திக்கண் சுவாலை தன்னில்
நோயாகப் புறப்பட்டு நேர்ந்த வாறே (1)

முடிவு

கறுப்பான தோஷங்கள் ஏழுங் காணல்
காரியமாம் பத்தியம் விட்டபத்தி யத்தால்
தெருப்பான திரிதோஷம் ஒன்றோ டொன்று
சேர்ந்துபின் னித்தாதுவது குடில மாகி
நெருப்பான நாபிதனில் தோஷம் பத்தி
நாக்கு முகமூக் கொடுகண் சுறுக்கல்
விருப்பான நாளொரு பதினஞ் சாகில்
வியாதிசம னாகிவிடும் வெற்றி யாமே (50)

முற்றும்

குறிப்புரை

**1-50 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** பிழை மிகுதி. பித்த சுரம், சந்தபவயசுரம், பித்தசிலேற்பனம், கரன்னியாசச் சன்னி தோடம், நாடியின் தன்மை, அபிகாதசுரம், தருணசுரம், சாத்தியம், அசாத்தியம், தாந்திரிகச்சன்னி, சிங்குவாகச்சன்னி, சன்னி சுரம், பிரலாபச்சன்னி, சீதாங்கச் சன்னி, சேத்துமம், அந்தகச்சன்னி, வாதசுரம், மாறல் சுரம், இரத்தச்சுரம், வாமிஷத்துச் சுரம், ஆமச்சுரம், சீதசுரம், தொந்தசுரம், அசீரணம் முதலானவற்றின் வழி சன்னி சுரத்தின் வகைகளும் குறி குணங்களும் கூறப்படுகின்றன.

## 96. சித்த மருத்துவ மணிகள்

**அ. 68:97; ஆ.** *63-153* ஏடுகள்; **இ.** *37.5× 3* செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; ஏடுகளின் ஓரப்பகுதிகள் சிதைவுற்றும், மையப் பகுதிகள் ஆங்காங்கே சிதைந்தும் உள்ளன; **உ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சானது (நிறுவன வெளியீடு, *1996*).

தொடக்கம்

**மலசலங் கட்டுப்பட்டதற்கு மருந்து** - நல்ல கற்றாழை கொண்டுவந்து ஒரு விளாங்காய் அளவு கற்றாழைச் சோறெடுத்து, நான்கைந்து தரம் கழுவிப் போட்டு, அந்தச் சோற்றில் எலுமிச்சங்காய் அளவு கருப்பட்டி, ஒரு சேர் விளக்கெண்ணையும் கூட்டி இதனுடன் சிந்தாமணி மாத்திரையை உரைத்துக் கொடுக்க மலசலம் உடையும்.

முடிவு

சொன்னோம் மடவார் தங்களுக்குக் கா்ப்பம் வரும்படி கேள்
மின்னே அரசங் கொழுந் துடனே மிகவே பசும்பால் விட்டு
முன்னா் குழம்பு பணவெடையை மூட்டி மூன்று நாள் கொள்ள
பொன்னார் புதல்வர் உண்டாகிப் புவியி லுடையோர் குரு
... டீர் (10)

குறிப்புரை

**1-510 பாடல்கள்.** ஒரு சில செய்திகளே உரைநடையில் இடம் பெறுகின்றன. பல நூல்களிலுள்ள மருத்துவச் செய்திகள் இந்நூலில் தொகுக்கப்பட்டுள்ளன. இச்சுவடி நூல் சித்த மருத்துவ மணிகள் என்ற பெயரில் வெளிவந்திருப்பதால் அதே பெயர் இங்கும் தரப்பட்டுள்ளது. நாடியின் இயல்பு, நாடி பார்க்கும் முறைமை, நோயுள்ள நோயில்லா நாடி, நாடி அதிகரிக்கும் காலம், நாடி நடக்கும் நாழிகை, வளி, அழல், ஐயம் ஆகியவற்றின் தன்மை, இம்மூன்றின் வேறுபாட்டால் தோன்றும் நோய்கள், பெண்களுக்கு வரும் கர்ப்பபை தொடர்பான நோய்கள், ஆண்களுக்கு வருகின்ற பால்வினை நோய்கள், அதிசாரம், தோடம், குட்டம், மூலம், மூத்திர ரோகம், பவுத்திரம், எலும்புருக்கி, பெரும்பாடு, விப்புருதி, குமர கண்டம், வாதபாண்டு, நீர்ப்பிசிரி குணம், மருத்துவரின் இலக்கணம், மருத்துவனை அழைக்க வந்த தூதுவன் இலக்கணம், மருத்துவம் பார்க்கச்சகுனம், நோய்களின் குறி குணங்கள் முதலானவை இடம் பெற்றுள்ளன.

## 97. சில நோய்களும் சில மருந்துகளும்

**அ. தாள். 1:2; ஆ.** *13-20* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

தொடக்கம்

**வசியமை -** செந்தாமரைப்பூ உள்மஞ்சள் இதழ் உலர்த்தி விராக னெடை-1, புன்னைப் பூவின் மஞ்சள் இதழ் உலர்த்தி விராகனெடை-2, குங்குமப்பூ விராகனெடை-1, கோரோ சனம் விராகனெடை -1, கூட்டிப் புல்லாமணக்கெண்ணை (சிற்றாமணக் கெண்ணெய்) விட்டு மைபோல் அரைத்து வசிய கணபதி அல்லது வேறு வசியம் ஜபித்துத் திலதமிடச் சர்வவசியம்.

முடிவு

**நஞ்சு முறிப்பு-** ஆவாரைக் கள்ளி, அலரி, இரு கடுக்காய், தேன், மஞ்சள், நேர்வாளம், நல்வசம்பு, வேற்றும் சிவதைக்கு வெண்வேலம், போற்றரிய நெல்வேரும், சர்க்கரையும் நேராகக் கொள்வோர்க்கு எல்லாரும் சொன்னா ரிலாமிச்சு. நல்லோரே நாவி, சிறுகீரை, நற்குன்றி, வெண் காரம், நிச்சய மென்றே முனிவர் போதித்த நஞ்சுவகைபோம்.

குறிப்புரை

**உரைநடை.** புணர்ச்சியின் மீது விருப்பம் அதிகம் ஏற்பட வசிய மருந்து செய்முறைகளும், பிரமி, கற்பிரமி, நெல்லிமுள்ளி, நெல்லிப் பூ, கிளிமூக்கு, வெள்ளி, சுவாமி ஸ்ரீ சிவநந்த பிரமஹம்சர் முதலான கற்பங்களின் செய்முறைகளும், தித்திப்பு நீர், சீரா பித்தம், கர்ப்பம் தங்குதல், பலவீனம், சிலவியாதி, சிலசுரம், நஞ்சு முறிப்பு முதலான நோய்களுக்குரிய மருந்து செய் முறைகளும் கூறப்படுகின்றன. இதிலுள்ள சில மருத்துவக் குறிப்புகள் பொருள் புரியாத நிலையிலிருக்கின்றன. இவை போன்றவற்றை ஆய்வுக்குட்படுத்தும் போது சில உண்மை கள் தெளிவாக வாய்ப்பு ஏற்படும்.

## 98. சுகாதாரக் களஞ்சியம்

**அ. தாள். 5:32; ஆ.** 1-23 பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை,' இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம் துருசு பற்பம்

சிகப்பு பாலைச் செடியின் வேர்ப்பட்டையை விளாங்காய்ப் பிரமாணம் அரைத்து உண்டை செய்து அதற்குள் ஒரு பலம் துருசுக் கட்டியைப் பொதிந்து வைத்து அதன்மேல் ஏழு சீலைமண் வைத்து ஒரு வறட்டியில் புடம் போட்டெடுத்துப் பார்த்தால் நீறி வெண்மையாயிருககும். அதைக் கல்வத்தி லிட்டு இரண்டு பலம் பாதரஸத்துடன், எலுமிச்சைச் சாறு ரஸம் .விட்டரைக்க இரண்டு சாமத்தில் தூள் ரஸம் படிந்து இருக்கும்.

முடிவு தீரும் வியாதிகள்

சூலை பத்தும், பித்தம் நாற்பதும், கை, கால் பிடிப்பு, வாதம், மார்நோய், வயிற்றுவலி, மலபந்தம், தலை மயக்கம் இன்னும் அநேக வியாதிகளைக் கட்டாயம் கண்டிக்கும். இதை எடுத்துத் துடங்கினால் விரிவாகும். ஆறுமாதம் ஒருமுறை தவறாது இக்குளிகையை உட்கொள்வது மிகவும் நன்று. ஏனெனில் வியாதிகளைத் தலையெடுக்காது நாசப் படுத்திக் கொண்டு வரும்.

பிற்குறிப்பு

சுகாதாரக் களஞ்சியம் முதற்காண்டம், இரண்டாம் காண்டம், மூன்றாங் காண்டம்.

இரங்கோன் ஆர்டலன்ஸ் வொர்க்ஷாப் மேஸ்திரியும், சென்னை ஆயுள்வேத பாஸ்கர பண்டிதருமாகிய ஸ்ரீமான் எச்.எம்.கந்தசாமி நாயக்கர் இயற்றிய இரங்கோன் பர்மா யெக்கோ பிரஸில் பதிப்பிக்கப்பட்டது. 1906. சிவமயம்.

குறிப்புரை

சில மருந்துகளின் செய்முறை விளக்கங்கள் பற்றிய குறிப்பு களைக் கொண்டது. நாகபஸ்பம், பவழ பற்பம், பனித் தண்ணீர் எடுக்கும் முறை, பஞ்சமுகப்பிரமாஸ்த்திரம், படிகாரத் திராவகம், புருஷரத்தினத் தைலம், பூரணச் சந்திரோதையம், மனோன்மணித் தைலம், மேகநாதச் செந்தூரம், ரோக வச்சிர குடோரி, கேசரி, ரஸபற்பம், லிங்கரச வாலை, ஜீவரத்தினக் குளிகை, வெடியுப்புச் சுண்ணம் முதலான தலைப்புகளில் பல அரிய மருந்துகளின் செய்முறைகள் விளக்கம் பெறுகின்றன

## 99. சுந்தரமூர்த்தி ஆனந்த கேசரி 50

**அ. 494:753; ஆ.** *41-53* ஏடுகள்; **இ.** *28.5* ×*3.5* செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

கேளப்பா வினோதவித்தை கோடி யுண்டு
   கேசரிபோல் சுருக்கமாக யொன்றுமில்லை யப்பா
மாளப்பா மாண்டுடனே யெழுந்து வந்து
   மாண்டேதான் ஆளப்பினங் காயிடத்தில் போட்டு
சூளப்பா செவர்வைத்து மேலே மூடி
   சுகமாகக் காத்துவெய்யில் மழைப டாமல்
வாளப்பா மண்டலந்தான் கடந்த பின்பு
   ..மாகச் சமூலம் வாங்கு வாங்கே (1)

முடிவு

உருச்செவித்து சிரசுதன்னில் வைத்துக் கொண்டால
   உத்தமனே தண்ணீர்தனில் நடக்க யாரும்
கருச்செவித்து முனைமுகத்தில் போனால் மக்காள்
   கண்ணுனக்குத் தெரியாது மாத்தா னாகும்
மதிசெவித்து இரக்குறது தோத்துந் தோத்தும்
   செயமுத்த யிக்கருவைச் செப்பொண் ணாதே! (50)

ஆனந்த கேசரி அன்பது முகிந்தது முஷ்த்து.

குறிப்புரை

**1-50 பாடல்கள்.** தண்ணீரில் நடத்தல், பிறர் கண்ணுக்குத் தெரியாது மறைதல், கண்கட்டி வித்தை செய்தல், சூரியனும், சந்திரனும் தேவரும் செல்லுகின்ற காட்சியைக் காணுதல், அகத்தியர்க்கு ஒப்பு ஆதல் முதலான சித்து வேலைகளைச் செய்யக் காய சித்தி அடையும் வழிமுறையும், தைலம், மெழுகு, பாடாணம், அஞ்சனம் போன்றவற்றைச் செய்யும் முறையும், அவற்றையும் மந்திரத்தையும் பயன்படுத்திச் சித்தி அடையும் வழிமுறையும் கூறப்படுகின்றன. சுந்தரானந்தர் எழுதியதாகப் பல சுவடிகள் கிடைக்கின்றன. கர்ப்ப சிந்தாமணி 350 (சோதிடம்), அதிசயம் 36 (சு.226 !),

சுந்தரானந்தர் சூத்திரம் *3* (*ச.236* G), சுந்தரானந்தர் சூத்திரம் *25* (*ச.228*.H) சுந்தரானந்தர் சூத்திரம் *110*, சுந்தரானந்தர் தண்டகம் (*ச.235*.C) முதலானவை அவற்றுள் சில.

## 100. தங்கச் செந்தூரம்

**அ.** 315:541; **ஆ.** *1-5* ஏடுகள்; **இ.** *24.5 × 3* செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள். **உ.** மிக நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

ஆகுமே தங்கவுரஞ் சொல்லக் கேளு
ஆச்சரியம் இதுவெகு முன்னே பாரு
வாகுபெறத் தங்கவுரங் கண்ட போதே
வலுவான நோய்களெல்லாம் மாண்டு போகும்
பாகுபெற நீர்யெல்லாம் தவிடு பொடியாகும்
பண்பாகச் சொல்லுகிறே னுற்றுக் கேளு
தாகுபெறத் தங்கம்போல் வைத்துக் கொள்ளு
தாஷ்டிகமா யிம்முறையை வைத்தி டாயே (ஏடு.1)

### முடிவு

ஆமைதான் தங்கவுரந் தன்னைக் கண்டா
லடைவான நோயெல்லா மோடிப் போகும்
வாமைதான் தங்கவுரம் வைத்த பின்பு
வாதாடும் வயித்தியத்தில் வலுமை மெத்த
தாமைதான் பார்த்திடவே ஜீவ னத்தை
தாஷ்டகமாய் செய்திடவே பின்பு புரியுங்
காமைதான் பஞ்சபூ தத்தைக் காணு
கனிவாகப் பார்த்திடவே சித்தி யாமே (ஏடு.5)

### பிற்குறிப்பு

தங்கச் செந்தூரம் முற்றிற்று. இந்தக் கோர்வையை ஒருவருக்கும் கொடுக்கக்கூடாது.

### குறிப்புரை

நூல் தொடங்குகின்ற இடது பக்க ஓரத்தில் தங்க உரம் என்றும், இறுதியில் **தங்கச் செந்தூரம்** என்றும் உள்ளன.

தங்க உரத்தால் நோய்கள் எப்படியெல்லாம் நீங்குகின்றன என்பதை விவரிக்கிறது. தங்க உரம் பற்றிய செய்திகள், வெளிவந்துள்ள மருத்துவ நூல்கள் சிலவற்றில் இடம் பெற்றுள்ளன.

## 101. தட்சிணாமூர்த்தி குருமுகம் 100

**அ.** **தாள். 2:21;** **ஆ.** *118-148* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

மனோன்மணியாள் பாதத்தை மனத்தில் வைத்து
மார்க்கமுள்ள குருமுகமாய் வந்த நூல்தான்
வனம்பெருத்த மலைச்சார்பில் தவசு பண்ணு
மகாயோகி தன்பதத்தை வணங்கிப் போற்றி (1)

செப்புவேன் சித்தரிட பாதம் போற்றி
செந்தூர பற்பமுறை தீர்க்கம் சொல்வேன்
அற்புதமாய்ச் சொல்லுகிறேன் அடியேன் நானும்
அடக்கினேன் நூறுக்குள் அறிந்து பாரு
முப்பொருளு முடிந்த விடம்இன் னூல்தான்
முக்கண்ணி மனோன்மணியாள் எனக்குச் சொன்னாள்
தப்பிதங்க ளில்லையடா இந்த நூலில்
தாய்சொன்னாள் நான்சொன்னேன் தரணி யோர்க்கே (4)

முடிவு

உரைத்திட்டா ருத்தார மடிபேடன் கேட்டு
உண்மையுடன் அமர்பதத்தைத் தொழுது போற்றி
நிறைத்திட்டம் தப்பாமல் நின்றே னப்பா
நீங்காத சிவயோகம் புனித மாச்சு
அசைந்திட்ட கல்பமெல்லாம் அடியேன் கொள்ள
அனுக்கிரகம் செய்தார்க ளப்பா பையா
குறைந்திட்ட நூலென்று எண்ணி டாதே
குருமுகமாய் வந்தநூல் நூறு முற்றே

ஸ்ரீ தெட்சிணாமூர்த்தி குருமுகம் நூறு முற்றிற்று
தெட்சிணாமூர்த்தி பகவான் அருளிச்செய்த குருமுகம்.

குறிப்புரை

**1-102 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** சித்த மருந்துகளின் செய்முறைக் குறிப்புகளைக் கொண்டது. முதல் மூன்று பாடல்கள் இறைவணக்கம், குரு வணக்கம் என்ற வகையில் அமைகின்றன. தொடர்ந்து உவருப்பு, பிரமம், வெள்ளை என்ற சவ்வீரப் பற்பம், செந்தூரப் பற்பம், சிலாசத்துப்பற் பம், அரிதாரப் பற்பம், இரசபற்பம் ஐங்கோலக் கற்பம், சவ்வீர மெழுகு, கெந்தகத் தைலம் முதலானவற்றின் செய் முறைகள் கூறப்பெற்றுள்ளன. தட்சிணாமூர்த்தி காவிய நிகண்டு (*1-8* காண்டங்கள்), தட்சிணாமூர்த்தி சூத்திரம் *10* (*ச.226*.E. ), தட்சிணா மூர்த்தி *48* (*ச.189*), தட்சிணாமூர்த்தி தீட்சாவிதி *200* (*ச.263*.B.), தட்சிணாமூர்த்தி ரஸக்குளிகை (*ச.236*.K), தட்சிணாமூர்த்தி வைத்தியம் *50*, தட்சிணாமூர்த்தி வைத்தியம் *1500* (*ச.197*. B.) (*ச.239*; *ச.243*.B) முதலானவை இவர் இயற்றியவை. இவர் பெயரால் பல மருத்துவ நூல்கள் கிடைக்கின்றன. **தட்சிணா மூர்த்தி 200** என்ற சுவடியின் இறுதி ஏட்டில் 'அகத்தியர் எழுதிய நூல் முடிந்தது' என்ற பொருளை உணர்த்தும் வரிகள் உள்ளதால் தட்சிணாமூர்த்தி என்ற பெயரும் அகத்தியர் பெயர்களுள் ஒன்றாகவே இருக் கலாம். எனவே இவரது பெயரிலுள்ள நூல்களை அகத்திய ரின் நூல்களுடன் ஒப்பு நோக்குதல் வேண்டும்.

## 102. தட்சிணாமூர்த்தி பரிபூரணம் முதலியன

**அ.** 272:494; **ஆ.** *1-155* ஏடுகள்; **இ.** *36×3.5* செ.மீ.; **ஈ.** 7 வரிகள்; **உ.** சுவடிகளின் இருபக்கங்களிலும் ஓரப் பகுதிகள் சிதைந்துள்ளன; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம் காப்பு

பூரணமாய் நிறைந்தபூ ரணமே காப்பு
போதமாப் பரிபூ ரணத்தைப் பாடக்
காரணமாய்க் கருவுருவா யெங்குநிறைந் திருந்த
கண்மணியி னடுவாகிக் கருணைதரு மாதருளைப்
பூரணமா முக்கோணத் தடியில்நடு வாகி
அசையாத பொருளாகி அருவுருவு மாகி

வாரணமாய் மூலமெனும் நதியெனும் பிள்ளை
வாசியெனும் பூரணமனோன் மணிகாப் பாமே

முடிவு

பாரப்பா பூரணநீர் தன்னை மைந்தா
பத்தியுடன் குப்பிதனில் பதனம் பண்ணி
நேரப்பா பாஷாணங் கார சாரம்
நிறமான பூரணநீர் கண்ட போது
வீரப்பா கொண்டபா ஷாண மெல்லாம்
விபரமுடன் கட்டியது திட்ட மாகும்
தேரப்பா சொல்லுறேன் கார சாரம்
திறமான பூரணத்தால் மெழுகு மாச்சே (909)

ஆச்சப்பா கட்டுவகை சரக்கெல் லாந்தான்
அப்பனே வேதையிட பத்து மாத்தாம்
காச்சப்பா மெழுகுவகை சரக்கெல் லாந்தான்
கருணையுடன் வேதையிடப் பதினா றாகும்
நீச்சப்பா நிலையறிந்து வேதை பார்க்க
நிலையான பூரணத்தைக் காண வேணும் (910)

குறிப்புரை

**1-910 எண்சீர் விருத்தப் பாக்கள்.** 910 ஆவது பாடல் குறைப்பாடலாக உள்ளது. ஏட்டின் இடது பக்க ஓரத்தில் நூல் தலைப்பு உள்ளது. ஆயின் பாடல் எண்ணிக்கை சிதைந்துள்ளது. 200 என்பது மட்டும் தெரிகின்றது. எனவே **தெட்சிணாமூர்த்தி பரிபூரணம் 1200** என்பது நூல் தலைப் பாக இருக்கும். ஏனெனில் 351:584 என்ற நூலின் செய்தி இத்துடன் ஒத்து அமைகின்றது. அறிய இயலாதவாறு உட் தலைப்புகள் சிதைந்துள்ளன. சிவதீட்சை பத்துக்கும் விபரம், மூன்று தத்துவங்கள், சிவதீட்சை அறிய, சத்தி தீட்சை, ருத்திர நிஷ்டை, சதாசிவ நிஷ்டை, வயிரவன் தியானம், சண்முக தியானம், வெண்சாரைக் கற்பம், செஞ்சாரை மகிமை, பஞ்ச சுவாதிட்டான விபரம், சிதம்பர சூட்சம், அடுக்கு நிலை விபரம், ஆதியந்தப் பொருளறிய, மஞ்சள், தும்பை விபரம், சந்திர சூரியக் கலை விபரம், கலைக் கியானம், நயன சூட்சம், கஞ்சமலை வளப்பம், குற்றாலத்தில் சதாநந்த ரிசி வளப்பம், திங்கள் சவுக்காரச் சுண்ணம், மூடருக்குக் காட்டுங்குறி, பூரண

முப்புச் சுண்ணம், காரநவச்சாரம், பூரண சவுக்காரச் சுண்ணம், ஞானமகிமை, சிவசத்தி பூசை, பூரணத்தின்பேர், பூரண தீட்சை, பத்தியம், நாதத்தில் பேர், சடாட்சரத்தின் பெருமை, நாதத்தில் கெவுனமணி, கமலிமணி பெருமை, ஏகாதேசி வாலை மகிமை, அண்ட பற்பம், பூரணமெழுகு கற்பம், கலப்பம் வேதை, நால் வகையோனி, தேவர் குணம். மிருகாதி குணம், அஞ்சனாதேவி, செந்தூரம், சக்கரம், ஓடுகிற அரவம் நிற்க, நாகக்கட்டு வேதை, வசிய மெட்டுக்கும் மந்திரம், தம்பனம் எட்டுக்கும் மந்திரம், ஆக்கிரானம் எட்டுக்கும் மந்திரம், பேதனம் எட்டுக்கும் மந்திரம், புவனைச் சக்கரம், கலிக்கம், கறியுப்புக் கட்டு, லிங்கக் கட்டு வேதை, மூன்று பால், நெய், பரஞான கேசரி தைலம், குடநீர், நெய், தேவதை காண, வாசி இருப்பிடம் முதலான செய்திகள் உளளன.

நூலின் தொடக்கத்தில் ஒரு வெற்றேடும், அடுத்து ஏட்டெண் இன்றிக் காலச்சக்கரதசா என்ற சோதிடச் செய்தி தொடர்பான இரண்டு ஏடுகளும், அடுத்து நான்கு வெற்றேடு களும் அமைய, நூலின் இறுதியில் வேறு நூல் தொடர்பான செய்தியினை உடைய ஓர் ஏடும், அடுத்து மூன்று வெற்றேடு களும் உள்ளன.

## 103 தட்சிணாமூர்த்தி பரிபூரணம் 1200 முதலியன

**அ.** 351:584; 1-182 **ஏடுகள்; ஆ.** 30 × 3 செ.மீ. **இ.** 8-9 வரிகள்; **ஈ.** மிகுதியான ஏடுகள் சிதைந்துள்ளன; **உ.** தெளிவற்ற எழுத்து; **ஊ.** குறை; **எ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

அண்டமெனும் மகேஸ்வரியாள் பாதம் காப்பு
அருள்பெருகும் பூரணத்தின் அறிவே காப்பு
குண்டமெனும் குண்டலியின் குறியே காப்பு
குருவான பராபரத்தின் குணமே காப்பு
மண்டலங்கள் மூன்றுமொன்றாய் நிறைந்து நின்ற
மகத்தான ரவிமதியின் சுடரே காப்பு
பிண்டமெனும் பொருளான அண்ட பிண்டம்
பேரண்டம் நிறைந்தகண பதிகாப் பாமே

முடிவு நாதவிந்து கண்ட மகிமை

ஆச்சப்பா அறிவான நாத விந்து
அடங்கிஉரு திரண்டு ஒருபிண்ட மாகி
மூச்சப்பா அடங்கிவந்த பிண்டம் தானும்
முத்தியுடன் அசைவாகி ஆஊ வென்று
பேச்சப்பா பேசாத சத்தத் தாலே
பெருகிநின்ற பிராணனல்லோ அறிவா னந்தம்
நீச்சப்பா நிசமான அறிவா னந்தம்
நின்றுவிளை யாடுகிற நிசத்தைக் கேளே (1183)

பிற்குறிப்பு

'வேலும் மயிலும் துணை' *1514* ஆவது வருஷம் ஆனி மாதம் 29ஆம் தேதி எழுதியது. சங்கரப்பனார் கைப்பட்டது.

குறிப்புரை : தட்சிணாமூர்த்தி யருளிச் செய்த பரிபூரணம் ஆயிரத்தி யிருநூறு, பூரணமகிமை

இந்நூலின் காப்புப் பாடலை அடுத்துச் சில ஏடுகள் சிதைந் துள்ளன. முடிவிலும் சில ஏடுகள் சிதைந்துள்ளன. எனவே *1183*ஆவது பாடல் இறுதிப் பாடலாகத் தரப்பட் டுள்ளது. இச்சுவடிக் கட்டின் முதல் ஏட்டில், ''இதிலடக்கம் பரிபூரணம் கவி *1200*, அகத்தியர் காவியச் சுருக்கம் கவி *16*, அகத்தியர் ஞானச் சுருக்கம் கவி, பிரமமுனி வைத்தியச் சுருக்கம் கவி *13*, அகஸ்த்தியர் பரிபாசை 5 காண்டம் கவி 500, அகஸ்த் தியர் வைத்தியச் சுருக்கம் கவி 25, அகஸ்த்தியர் வகார காண்டம் கவி 200, கமலமுனி வெண்பா கவி 76, அதிசய சூத்திரம் கவி 27'' என்ற குறிப்பு உள்ளது. இவ்வேட்டின் இடதுபக்க ஓரத்தில் பிற்குறிப்பில் இடம் பெற்றுள்ள செய்தி உள்ளது. சிவதீட்சை - ஒன்று முதல் பத்து தீட்சை கள்; சத்தி தீட்சை - ஒன்று முதல் பதினொரு தீட்சைகள்; சிவசத்தி தீட்சை, ஞானம், பிரம நிஷ்டை, பிரம ஞான தீப அட்சரம், மயேசு பரத்தின் தியானம், சதாசிவத்தின் தியானம், பிரணவம், ஏகவஸ்து, ரவிமதி சுடர், மத்தியானம், ரவி தியானம், பரம குரு தியானம், வயிரவன் தியானம், சண்முகச் சக்கரம், பூசை விபரம், வெண்கார கற்பம், சத்திசிவ பூசை, நாதவிந்து கமலப்பால், மோட்சநிலை அறியாதவர், பூரண

கற்பம், கற்ப முறைக்கு ஆகாத பதார்த்தம், தீபஒளி, சடாதர விபரம், உப்பு விபரம், சவுக்காரம், கெவுனமணி, அண்ட மெழுகு, கெவுன மணி சிவதாவடம், சுரூபமணி, கமலிமணிப் பெருமை, கமலிமணி சிவமகிமை, ஏகாதேசி மகிமை, பஞ்சல வனம், சத்தியுப்பு மெழுகு கற்பம், விஞ்சை மூலம், பதுமினி லேசனம் வாலை மகிமை, அமுதை சாரம், ரோகம் வரலாறு, அண்டபற்பம் சகல வியாதிக்கும், வால்மிளகு, நெய் தலை முழுக, வீரபூர செயனீர், செயனீர் கற்பம், அண்டச் சுண்ணச் செயனீர், கட்டு முறை, வேதை முறை, கரும்பசளைத் தைலம், ஒடுங்கும் வகை விவரம், வணக்கமில்லா மூடர் விபரம், பூசை மகிமை, மாலினுட நிஷ்டை, ருத்திரன் நிஷ்டை, மயேசுவர நிஷ்டை, சதாசிவ நிஷ்டை, புத்தியறிவு, பஞ்ச நிஷ்டை மகிமை, பூரண மெழுகு கற்பம், விந்து தம்பனம், அரிதார பற்பம், ரசமணி, துருசு, அரிதாரம், ஈயம், ரசகளங்குச் செந்தூரம், காயமே தேவரூபம், வாலை, புவனை திரிபுராதி கரிசல், திரிபுரை தீட்சை, காலை, சந்தி, உச்சிப் பூசை, வாலை முப்பேற தியானம், பூதகணம், பல்லிக்கு, யோகத்துக்கு, பிரம ஆச்சிரம தியானம், குரு புத்திரன், சியாமள அம்பாள் தியானம், முப்பு மகிமை, நாகரசச் செந்தூரம் வேதை, தாம்பிரத்தில் சோதி காண்க, சோதி தீப தரிசனம், கண்காட்சி, அயச்செம்பு களங்கம் வேதை, இராட்சதன் கதை, உபதேச தியானம், சங்கார விஞ்சை அறிதிறம், ஏழுவகைத் தோற்ற விபரம், நால்வகை யோனி, நால்வகை யோனி மாரக விபரம், ஏழு வகைப் பிறப்பு இனமறிய, துகையறிய , குலமறிய, கமலக் கண் மகிமை, கமலரசம், சுத்த ஞானம், நாதவிந்து பெருமை, மூடர் விபரம், மவுன சித்தி மகிமை, நாகரசக் களங்கு, பூரணநூல் மகிமை, மனக்கண்சோதி விபரம், அயசுத்தி, அரிதாரக்கட்டு, அய காந்தச் செந்தூரம், அயதாம்பிர வெள்ளி, களங்கம் வேதை, ஒன்றான வஸ்த்து விரிவு, பருதிமதி சுடரொளி, செந்தூரக் கற்பம், செந்தூர வேதை, அஸ்ட்டாங்க யோக வரிசை, புவனை விஞ்சை மூல மந்திரம், பதினாறு வீட்டில் புவனைச் சக்கரம், அச்சரம், புவனைச் சக்கரம் சிரசு வியாதிக்கு, புவனைச் சக்கரம் கெர்ப்பம் உண்டாக, செம்பு சுத்தி துருசு வெடியுப்பில், செம்பு சுத்தி குரு வேதை, சாகாக்கால், வேகாத தலை, போகாத புனல் விபரமறிய, பஞ்சபூதச் சரக்கு விபரமறிய, பஞ்சலோக விபரமறிய, குரு வோத, பஞ்சபாஷாண பூத குரு, மனவுறுதி,

அரவுதடுக்க மந்திரம், அரவு ஆட்ட மந்திரம், அரவு வாய்கட்ட, பாம்பு விசமிறங்க மந்திரம், புவனைச் சக்கரம் சகல வியாதிக்கும், பில்லி சூனி யங்களுக்கும், புவனை மகிமை, பிரமமயம், புவனைக் கிரக தோசத்துக்கு எள்ளினாலும், கோதுமையாலும், தேனுடன் ஓமம், புவனை மந்திரத்தால் பாலரசம், தேனுடன் ஓமம் பண்ணச் சந்தான பாக்கியம், மனக்கண் பார்வை, காரசாரச் செயநீர், சிவகெங்கை, ஆதார மூலம் பார்க்க, மூன்றெழுத்து தீட்சை, அயத்தாம்பிரக் களங்கு வேதை, கணபதி சக்கரம் மூலமந்திரம், அஷ்ட்டாங்க வரிசை, வசியமெட்டுக்கு மந்திரம், மோகனமெட்டுக்கு மந்திரம், தம்பனமெட்டுக்கு மந்திரம், உச்சாடனமெட்டுக்கு மந்திரம், விளக்கொளி வெளி மகிமை, கமலரச பூசண கற்பம், அண்டமென்றதற்கு விபரமறிய, விந்து வட்டமேழு, மூலமந்திரம், முச்சுடரின் சூட்சம், கமலக்கண், அகார, உகார, மகார பூசை, அண்ட பதம், சோதிகாண அச்சர சிபம், வாசி விபரம், பெருங்காயக் கற்பம், ஆதியந்தத் தயில கற்பம், பூரண லேகியம், யோக மார்க்கம், புத்தி வகை விபரம், முட்டுக்கோல் விபரம், பஞ்சபூதஞ் சேரும் விபரம், அரிவாழி குரு வணக்கம், பரமகுரு செந்தூரம், அயக்களங்கு, குப்பிமுறை, குப்பியில் செந்தூரம், செந்தூர கற்பம், செம்பில் வேதை முறை, வெள்ளியில் வேதை, கலைக்கியான தீபம் விபரம், பூசை நெறியறியார், அடிநடு முடி விபரம், வெடியுப்பு மகிமை அறிய, மெழுகு வகை, உப்பு மெழுகுக் கற்பம், ரசமணி மகிமை, துருசு சுண்ணச் செயனீர், ரசசுண்ணம் தாம்பிர வேதை, பீனிசத்துக்கு எண்ணை, சிரசு நோய் பீனிசத்துக்குத் தலை முழுகப் பச்சிலையில் பால் மிளகு, மூலிகை மகிமை, கல்லுப்பு சத்துரு மித்துரு, காரசத் துரு மித்துரு, கணபதி தியானம், மூலாதாரம், சுவாதிஸ்ட் டானம், பிரமன் விஞ்சை, மணிபூரகம், மாலாதியானம், அனாகதம், ருத்திரதியானம், ஆக்கினையில் சதாசிவ தியானம், மனோன்மணி தியானம், வாசியோகம் முதலான தலைப் புகள் உள்ளன.

*1-182* ஏடுகளில், *1-1200* பாடல்களில் தட்சிணாமூர்த்தி பரிபூரணம் என்ற நூல் அமைகின்றது. இதையடுத்து 9 நூல்கள் இருப்பதாக எண் இல்லாத முதல் ஏட்டில் குறிப் புள்ளது. ஆயின் *183-185* ஏடுகளில், *1-16* பாடல்களில் அகத்தியர் காவியச் சுருக்கம் 16 என்ற நூலும், *186-188*

ஏடுகளில், *1-16* பாடல்களில் அகத்தியர் ஞானச் சுருக்கம் *16* என்ற நூலும், *189-191* ஏடுகளில், *1-13* பாடல்களில் பிரமமுனி வைத்தியச் சுருக்கம் *13* என்ற நூலும் ஆக மூன்று நூல்கள் மட்டுமே உள்ளன. ஒவ்வொரு நூலின் முடிவிலும் முற்றும், தட்சிணாமூர்த்தி துணையுண்டாக வேண்டியது, சங்கரப்பன் எழுதியது என்ற குறிப்புகள் உள்ளன.

## 104. தட்சிணாமூர்த்தி பரிபூரணம்

**அ.** 502:763; **ஆ.** *2-185* ஏடுகள்; **இ.** *25 × 5* செ.மீ.; **ஈ.** *10,11* வரிகள்; **உ.** நன்று;கூந்தல் பனை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

கேளப்பா நீயிருந்து மனதுபூ ரணமாய்
  கேசரத்தி லாடுவது அகார பீடம்
வாளப்பா அப்பீட மிருக்குமிடந் தானும்
  வளமான பிரிதிவியா முகாரம் ரெண்டுஞ்
சூளப்பா ஒன்றான மனோன்மணியின் வீடு
  சுத்தமுள்ள பெரும்பாலில் மகாரம்நடு மனையாம்
ஆளப்பா மகாரமது ஓங்கார மாகி
  அதுவட்டங் கொண்டதொரு விந்துநிலை யாச்சே (7)

முடிவு

முத்தான புலத்தியனே அய்யா கேளு
  முழுதுமிதை ஆதிதொடுத் தந்த மாக
சித்தாக நின்ற பரிபூரணத்தை நீயும்
  செம்மையுடன் பூரணமாய் பார்த்தா யானால்
வத்தாத பாக்கியமும் வயதுஞ் சித்தி
  மகத்தான யோகமொடு ஞான சித்தி
வித்தான மாய்கையது சுத்த மான
  வேதபர வெளியில்மனம் வெளிச்சோ் முத்தே (1200)

பிற்குறிப்பு

தட்சிணாமூர்த்தி அருளிச் செய்த பரிபூரணம் எழுதி முகிந்தது. *1831* ஆம் வருஷம் நவம்பர் மாதம் *38* ஆம் தேதி வாத்தியார் மருதனாயகம் பிள்ளை எழுதினது.

குறிப்புரை

**6-1200 பாடல்கள்.** 6 ஆவது பாடல் குறைப் பாடலாக உள்ளது. அகார முகார மகார ஓகாரமொடுக்கம், முதுகினிடந் தீபம் பார்க்க, கயிலாசகிரி நிதானம், ஆறாதார மாறுக்கும் விபரம். கும்பமுனி யென்று பேரிட்டு அமுர்த மீய்ந்தது, அகஸ்த்தியர் சித்து பெற்றது, புடதி பீடம், பதினொன்றாந் தீட்சை, சிவசத்தி தீட்சை, பிரம்ம நிஷ்டை, பஞ்சபூத மெழுகு, சத்தியுப்பு, தத்துவ சித்தி, ஆத்துமா நிலை, மவுன சமாதி, வெடியுப்பின் சத்துரு, வெடியுப்பு மித்துரு, கபால நோய்க்குத் தைலம் முதலான தலைப்புகளில் மருத்துவச் செய்திகள் ஞான தத்து வத்தோடு இணைத்துப் பேசப்பட்டுள்ளன. பரிபூர்ணம் 1200 என்ற நூல் தட்சிணாமூர்த்தி பெயரில் மட்டுமின்றி அகத்தியர் பெயரிலும், ''அகத்தியர் பரிபூரணம் 1200'' ''அகத்தியர் பரிபூரண காவியம் 1200'' என்றுள்ளன. அகத்தியர் பரிபூரணம் 400, அகத்தியர் பூரண காவியம் 1000, அகத்தியர் பூரண சூத்திரம் 216 என்ற நூல்களும் உள்ளன.

## 105. தட்சிணாமூர்த்தி (அகத்தியர்) பாடல்கள்

**அ. 159:341; ஆ.** 1-79 ஏடுகள்; **இ.** 17 × 2.5 செ.மீ.; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

பூரணமாய்த் தம்மூலர் பெற்றி சூடாய்ப்
புகையெழுந்து மேகமதாய்ச் சிரசிற் சூடாய்
காரணமாய் நீர்கலந்து கண்ணில் ரோகங்
கனலெழுந்து வாயுவினால் சூலை ரோகம்
வாரணமாய் வார்த்ததிலே எழுந்த மேகம்
வரியதொரு பித்தத்தால் கிராணி யாச்சு
தாரணமாய் வாயுவினால் தன்ம மாகிச்
சார்ந்துசிலேற் பனங்கூடிச் சயம தாச்சே (1)

முடிவு

முற்றுமே தட்சிணா மூர்த்தி பாடல்
முன்பின்னு மாராய்ந்து வைத்தியஞ் செய்தால்

சற்றும்நோ யணுகாது நோயெல்லாந் தீருந்
தவமுனியே யென்றுமன் பிருக்க வேணுங்
கற்றவர்க்கு மருள்கொடுக்குங் கதியுண் டாகுங்
கருணையுடன் பொதிகைதனை நினைக்க வேணுங்
சித்தர்போ லெந்நாளும் புவியில் வாழ்ந்து
தேசிகனா யிருப்பனென்று செய்திட் டோமே

தட்சணாமூர்த்தி துணை நிற்கவும், செய்யவும் (205)

குறிப்புரை

**1-205 எண்சீர் விருத்தப் பாக்கள்.** நூற்பெயர் இல்லை. சாத்திரவேதி, பவ்ளம், வயிரம், நவரத்தினம், சாரம், துருசு, நரைதிரை, பற்பவகை, தாம்பிரம், இரசம், வெள்ளை வங்கம், வெங்கலம், பித்தளை, கெருட பட்சி, கல்நார், நாகபற்பம், வெள்ளி, தங்கம், மண்டூரம், தாளகம், சாதிலிங்கம், சவ்வீரம், பொரிகாரம் முதலானவற்றின் மருத்துவப் பயன்பாடுகளும், சீரகம், சந்தனாதி, சித்திரமூலி, செம்முள்ளி, கொடுப்பை, அமுக்கிராவேர், வில்வவேர், வேங்கை, வெட்டிவேர், வேப்பம்பட்டை, இஞ்சி, அகில் கட்டை முதலானவற்றினுடைய தைலங்களின் பயன்பாடுகளும், அதிசாரத்துக்குப் பற்பம், காதுவலிக்கு எண்ணை, பீனிசத்திற்கு எண்ணை, குருந்தொட்டிக்கு, வில்வ வேர், இளைப்பு, சுரம், தாகம், நீர்க்கடுப்பு, காமாலை, வேம்பு, இருமல், சுரம், சன்னி, குட்டம், விசம், புண், கருங்குட்டம், சூலை கிரந்தி, குட்ட ரோகம் முதலானவை பற்றியும் கூறப்படுகின்றது.

## 106. தன்வந்திரி குழந்தை வாகடம்

**அ.** **188:388; ஆ.** *1-62* ஏடுகள்; **இ.** *26.5×3* செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** நல்ல எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சானது (நிறுவன வெளியீடு, *1984*).

தொடக்கம்

கெசமுக னடிவ ணங்கிக் கேசரப் பொருளைக் கண்டு
வசமென யறிவி லுண்க வகையற சிசுவின் ரோகம்
கசவற வளித்து வாதம் கண்டுநான் உரைக்க வேண்டி
திசைமுனி யருளை நோக்கித் திசைமலர் போற்றி னேனே (1)

பணிந்துநான் குழந்தை ரோகம் பலப்பல நாமமெல்லாங்
கணிந்துநா மநிலக் கண்டு கறைகண்டு துறையி லேறி
மொழிந்துமே நூல்கள் தோறும் முறைமுறை சோதித் தேறி
வழிசிசு நோய்ம ருந்து வகைவகை யுரைப்போ மென்றே(4)

முடிவு

அப்பிர வித்தினில் ஆறுநாள் போட்டிடு
தப்பித மில்லைதான் தவமதாய்ச் செருஅண்ட
மப்பி யண்டஓட்டை யண்டமாக் கொண்டுநீ
நப்பிய சயச்சேலை யகலிதில் போட்டிடே (303)

குறிப்புரை

***சிமிட்டு இரத்தினச் சுருக்கம் 360*** என்ற பெயரும் எழுதப் பட்டுள்ளது. ஆயின் *1-303* பாடல்களே உள்ளன. குழந்தை களுக்குரிய நோய்களாகக் கிரந்தி, கரப்பான், மாந்தம், கணம், சுரம், சன்னி, வாதம், வாய்வு, அக்கி, குன்மம், மூலம் முதலான நோய்களும் அவற்றின் குணங்களும், அவற்றுக்காம் மருந்து முறைகளும் தெளிவாகக் கொடுக்கப்பெற்றுள்ளன.

தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைந்து அமிழ்தத்தைப் பெற்றபோது அக்கடலிலிருந்து அமிழ்தம் நிரம்பிய திருக்கலசம் ஒன்றினை ஏந்திய அவதார புருசர் தோன்றினார். அவரே தன்வந்திரி என்று பெயர் பெற்றார். ஆயுர் வேதத்தைக் கண்டறிந்தவர் அவரே. நந்திதேவர் தன்வந்திரியின் குரு என்று கூறப்படுகிறது. ஆதிதேவர், சங்கு சக்கரதாரி, அமிருத கலச அஸ்தர், சல்லிய தந்திரர், கருணா மிருதசாகரர், ஆயுர்வேதப் பிரசாரகர், அஷ்டாங்கயோகி, மகாமேதாவி, புண்டரிகாட்சர் என்ற வேறு பெயர்களும் இவருக்குண்டு. தன்வந்திரி சாஸ்திரம் ஒரு மருத்துவ நூல். இது யூகிமுனி சாஸ்திரம் என்றும் சொல்லப்படுகிறது. இவரது தந்தையார் பெயர் திர்க்கத் திருமன். தன்வந்திரி குணவாடகம் (ச.230), தன்வந்திரி நிகண்டு 302, தன்வந்திரி நிகண்டு 300 (ச.248.F.) தன்வந்திரி வைத்தியம் (ச.287), தன்வந்திரி வைத்தியம் 200 (ச.235.B.), தன்வந்திரி வைத்தியம் 200 கருக்கிடை (ச.248.A.), செயநீர் 50, வாகடம் 100, வைத்திய சிந்தாமணி 200, கலைஞானம் 500, தன்வந்திரி பச்சைவெட்டு முதலான நூல்கள் இவர் இயற்றியவை. தன்வந்திரியின்

மருத்துவம் இன்றும் யாழ்ப்பாணத்தில் பரவலாகப் பின்பற்றப்பட்டு வருகிறது. வடநாட்டில் 5ஆம் நூற்றாண்டில் இவரது பெயரில் ஒருவர் வாழ்ந்ததாகக் கூறப்படுகின்றது.

## 107. தன்வந்திரி சித்து 500

**அ.** **382:623;** **ஆ.** *1-28* ஏடுகள்; **இ.** *30.8 × 3.5* செ.மீ.; **ஈ.** *5-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

வள்ளிக்கு மால்கொண்ட வேலவர்க்கு முன்பிறந்து
வகையாய்த்
துள்ளித் திரியும் பெருச்சாளி வாகனன் தும்பிக்கை யோனை
அள்ளிப் பொரியுடன் அவலுடன் சக்கரை அருத்துமரை
வெள்ளிக் கிழமையிற் சேவித்த பேர்க்கொரு வினையில்
லையே (ஏடு.3)

போச்சப்பா அஷ்ட்ட கர்மமிது விட்டாக்கால்
பொருளெல்லாம் பலியாது போதம் போதம்
ஆச்சப்பா அமுர்த மென்றா லகிதமாச்சு
அப்பனே வலுத்துவென்றால் விந்து வாச்சு
காச்சப்பா கருவாச்சு வுருவு மாச்சு
கண்ணாடி முகம்போல முப்பு வாச்சு
நாச்சப்பா வாய்வச்சு அமுர்த மாச்சு
நலமான சித்தரு இடவுயிரு மாமே (25)

முடிவு

செய்யவே ரேசகபூ ரகமும் பண்ணி
செயமான கும்பகத்தில் மனத்தை யோட்டி
வையவே வாலையைத் தான்தியானஞ் செய்து
வளமாக மூனுநா ளெடுத்துக் கொண்டு
அய்யவே வாடைதனை பரணில் வைத்து
அப்பனே பூசித்துச் சொல்லக் கேளு
மையவே ஸ்ரீகளைத்தான் கண்டா யானால்
மகத்தான வாடையைத்தான் வீசு வீசே (258)

இந்தப் பாடல்கள் மேலெழுத விட்டுப் போனதால் பின்னிட்டு யெழுதலாச்சுது. இந்த வாடையே வீசினவுடனே ஸ்ரீகளெல்லாமுன்னைக்கண்டு காமவெறி கொண்டலைந்து சரணஞ் செய்வார்களென்றவாறு கண்டது.

குறிப்புரை

**தன்வந்திரி பகவான் அருளிச்செய்த அன்னூறு சித்து என்ற பெயரில் நூல் உள்ளது.** முதல் இரண்டு ஏடுகளில் நூல்பற்றிய குறிப்பும், மூன்றாவது ஏட்டில் காப்புப் பாடலும் உள்ளன. நான்காவது ஏட்டில் இரண்டு போற்றிப் பாடல்கள் இடம் பெறுகின்றன. அதன்பின் நூல் தொடங்குகின்றது. நூலில் முதல் பாடல் 25 ஆவது பாடலாக அமைகின்றது. இறுதிப் பாடல் 258 ஆவது பாடலாக இருக்கின்றது. இடையில் விட்டதை இறுதியில் எழுதிச் சேர்த்திருப்பதாகக் குறிப்புக் கிடைக்கின்றது. எனவே ஏட்டெண்கள் ஒழுங்காக அமைந் திருப்பினும் பாடல் எண்களில் தொடர்ச்சி இல்லை. கல்லுப்பு, சவுக்காரம், மாயவித்தைத் தைலம், பிண்டப் பேரு, கேசரிமை, அக்கினித்தம்பனம், சில்லுத்தம்பனம், 1,85, பாடல், வசியசித்து, செகசாலசித்து, மோடிவித்தை, கோகர்ணசித்து, கரிசாத்தான்சித்து, நெல்வளரும்சித்து, நினைத்த பண்டம் தோன்றுஞ் சித்து முதலான தலைப்புகள் உள்ளன.

## 108. தன்வந்திரி பாடல்கள்

**அ.** 555:899; **ஆ.** *1-39* ஏடுகள்; **இ.** *24 x 3.2* செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** சிதையும் நிலை; பல துளைகள்; முறிவுகள்; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

கேளப்பா ... பங்கொடி யான
கம்பத்தில் நவத்துவா ரங்கள்
பாளப்பா துவாரமது அதிற்றா னுண்டு
... பகாரக ளடைப்புக் கேளு
ஆளப்பா அன்னமது போகுந் தொண்டை
அதிலேதான் பிறக்குஞ் சொன்னா ரப்பா
நாளப்பா யான்கேட்டுக் கட்டிக் கொண்டேன்
நலமாக உந்த னுக்குச் சொ...ரே (5)

முடிவு

மாடப்பா அவனுக்கு ... ...
மகத்தான சிவயோகி யுள்ளோன்
ஆடப்பா புத்திவான் சாத்திரம் பாத்தால்
அப்பனே சஷ்ணன் பாரு
வாடப்பா வாசியைத்தான் புத்தி யாலே
வளமாகக் கூட்டினவன் புத்தி யுள்ளே
... யோகி கூட்டிக் கொள்வான்
நலமான வாசியினா லோ.... மாச்சே (159)

குறிப்புரை

**1-160 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** நூல் தலைப்பு முதல் ஏட்டின் இடது பக்கம் எழுதப்பட்டிருப்பினும் சிதைவு பட்டுள்ளது. 'வந்திரி' என்ற சொல் சிதைவுக்கிடையே தெரிவதால் 'தன்வந்திரி பாடல்கள்', எனத் தலைப்பு இடப் பட்டுள்ளது. சுப்பிரமணியர் தியானம், வாலை வயது பத்து, வழலையின் பெயர், செயநீரின் பெயர், சுத்த சலத்தின் பெயர், சிவமுப்பு, சத்தி முப்பு, சிவ முப்புச் சுண்ணம், சுண்ணத்துப் பெயர், மெழுகு, ஞானத்தின் சூட்சம், சாத்திரம், வெடியுப்பு, கல்லுப்பு, கர்மம், அண்டம், சத்தி அண்டச் சுண்ணம், பிரமபிண்டம், அகாரம், உகாரம், சத்தியுப்பு, நாகவல்லி வசியம், நாடி, ஐங்காயம், திசைபூச்சி, வாசி, மந்திரம் முதலான செய்திகள் உள்ளன.

## 109. தன்வந்திரி பாலவாகடம்

**அ.** 189:389; **ஆ.** *1-153* ஏடுகள்; **இ.** 26 × 3 செ.மீ; **ஈ.** 4-7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சு நூலிலிருந்து எழுதப்பெற்றுள்ளது.

முற்குறிப்பு

தன்வந்திரி பகவான் திருவாய் மலர்ந்தருளிய பாலவாகட மென்னும் சிமிட்டு ரத்தினச் சுருக்கம் 360. இது தொண்டை மண்டலம், வல்லக் காளத்திநகர், வீ. அயோத்திதாச கவிராச பண்டிதரவர்களால் பரிசோதித்துப் பிழையறத் திருத்தப் பட்டு, திருவொற்றியூர் இராசப்ப முதலியார் குமாரர் பரசுராம முதலியாரால் தமது பரப்பிரம முத்திராட்சர சாலையிற் பதிப்பிக்கப்பட்டது.

1867 ஆவது வருஷம் டிசம்பர் மாதம்.

விளம்பரம்

இதனால் யாவருக்குமறிவிப்பது யாதெனில் 1867 ஆவது வருஷம் 25 ஆவது ஆக்டின், 20 ஆவது பிரிவில், 6 ஆவது விதியின்படி காப்பி ரயிட் பெற்றிருப்பதால் இதை அச்சுக் கூடத் தலைவர்களும் மற்றவர்களும் வேறு பாஷையில் மொழிபெயர்க்கக் கூடாது.... இதன் விலை பயிண்டுட்பட ரூபா ½. இதன்றி 10 புத்தகம் வாங்குவார்களானால் ஒரு புத்தகம் கமிஷன் கொடுக்கப்படும்.

முடிவு

பதமா யிடித்துப் பகருவோங் கேளு
அதமாக் கருவப் பட்டைப் பலம்பத்து
விதமாங் காயலூர் வெல்லம் பலமஞ்சு
சதமா மிதற்கிரட் டிச்சல மென்றே (327)

குறிப்புரை

**1-327 பாடல்கள்.** *சிமிட்டு ரத்தினச் சுருக்கம் 360* என்ற பெயரும் எழுதப்பட்டுள்ளது. அச்சு நூலினின்றும் சுவடியில் பெயர்த்து எழுதப் பெற்று வந்ததற்கு இச்சுவடி சான்றாகிறது. குழந்தை நோய்களின் பெயர், குணம், உரிய மருந்து போல்வன கூறும் நூலாகும். நோய்களின் பெயர்களைச் சுட்டும் சொல் அகராதி முதலில் அமைந்துள்ளது. *188:388* இல் உள்ள நூலினைப் போன்றதே.

## 110. திருக்கடலூர் அருணாசலம் பிள்ளை வைத்திய மாந்திரீக ஏடு

**அ.** 255:471; **ஆ.** 1-60 ஏடுகள்; **இ.** 20.5 × 3 செ.மீ; **ஈ.** 4-6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** நன்று; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம் வயிரவன் மேல் பாடல்

சத்துரு வஞ்சகச் சண்டாள தேசிகன் தானித்த
குத்துரு வஞ்சவுட னாகு சத்துரு கொடுமை தன்னை
பத்தர்மேல் சாடா தனலா யெரிந்து பறந்திடவே
மற்றுந் துணையா வருவாய்நீ சொல்வயி ரவனே (1)

முடிவு

ஓங்-ஆங் இ யென்று பதினாயிரம் உரு செபித்துத் திலதம் போடவும். லேபனம் அமுக்கிரா, கண்டங்கத்திரிப்பழம், பாம்பரணைக் கொழுப்பு, புளியன், வட்டவிக் கிழங்கு ஒன்றாக அரைத்துப் பூசிப் புணர லேபனம் உண்டாகும். வெள்ளைப்பாசாணம், நெரிஞ்சி முள்ளு, நல்லபாம்பு ஊண் விட்டரைத்துப் புதுக்கலசத்தில் வச்சு வீதியில் போட முடக்க உரைக்கும்.

குறிப்புரை

**பாட்டும் உரைநடையும் கலந்தது.** முருகனைப் பூசை செய்து குறிச்சி எழுதிக் கட்டவும். மோகினி மந்திரம், ஐமலம், உரையிலும் தண்ணீர் ஊற்றி எரிய, காத்துப்புடி பார்க்க, தேங்காய், முட்டையின் நீர், வளை தலை ஓடு, வசிய ஈமரோக வசியம், பிரியாஈடு, வசியச் சந்தனம், வசீகரம், சொக்குப்பொடி, ஆண்பெண் வசிய மூல மந்திரம், பச்சிலைக்கு மூலமந்திரம், செய்வினை மூலிகைகள், விசத்திற்குக் கெருடத் தியானம், குடிகள் தன் வசமாக, தீராத நோய் தீர, புருசனைச் சேராத பெண்ணைச் சேர்க்க, கல்வி மெச்சுதல், சபை மெச்சுதல், தியானப்பூசை, லோகவசியம், செய்வினை, சிவன்கள், சோடி பிரிக்க, யோகி மயக்கம் நீங்குதல், முடக்கு ராச வசீகர லேபனம் முதலான தலைப்பு கள் உள்ளன. *61, 62* எனத் தொடர்ந்து எண்கள் எழுதப்பட்ட வெற்றேடுகள் இறுதியில் உள்ளன.

## 111. திருநாராயணசுவாமிகளுடைய அட்டவணை முதலியன

**அ.** **359:595; ஆ.** *1-41* ஏடுகள்; **இ.** 34.5 × 3.5 செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; பல ஏடுகளில் துளைகள் உள்ளன; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

பதங்கம், சவட்டியினால் ஆறு, விரல் உப்பிட்டு அதில் தெறி விசம், லிங்கம், கெந்தகம், நாபி, காந்தம், திரிகடுகு, மத்தஞ் சாத்தாலரைத்துக் குகை பிடித்து உப்பின் நடுவில் வைத்து

அதில் ரசம் விட்டு மேல்ச்சட்டி மூடி சீலை மண் ஏழு செய்து அறுபது நாழிகை எரித்து, ஆறியெடுத்துப் பதங்கத்தில் சிறுபயறில் பாதி எடை சர்க்கரையில் ஆறுபொழுது கொடுக்கச் சத்திகுன்மம், குடல்வாதம், ஈளை, புண்புறை, கிரந்தி, விசங்கள் தீரும். பத்தியம் வேறு.

முடிவு

உள்ளுக்கு வராகம் ஒன்று வென்னீரில் கொள்ளவும். தீரும் நோய்-கடுஞ்சூலை, அண்டசூலை, லிங்கசூலை, மண்டை சூலை, வெடிசூலை, புண்புரை, கிரந்தி, கண்டமாலை, குட்டம் பதினெட்டு, குறைநோய், சிரசூலை, பதகரி, கருப்பன், வாய்வுக்கு, குழிப்புண், விப்புருதி, கன்னரோகமிது முதலானது தீரும். சூதபற்பம், கெந்திப்ற்பம் சேர்த்துக் கொள்ளவும். பத்தியம் பாலும் சோறும் கொள்ளவும். வென்னீர் கொள்ளவும்.

குறிப்புரை

**உரைநடை.** மேக்த்துக்குத் தயிலம், தலைக்குச் சூடன் மெழுகு, கிரந்திக்கும் சூலைக்கும் மருந்து, சகல வாயுவுக்கும் அசன பிட்ட லேகியம், கற்பம், சகல வாயுவுக்கும் அட்ட லேகியம், விளக்கெண்ணை புண்புரைக்கி, கெந்தக ரசாயனம், நாகலிங்கப் பற்பம், எல்லா சுரத்துக்கும், வாதராட்சிதன் குளிகை, சுரக் குளிகை, சுவாசகாசத்துக்குக் கங்காதரன், சிவனாரமுர்தம், வீரமெழுகு, திரிசூத மெழுகு, பறங்கிப்பட்டைச் சூரணம், கிராணிக்குக் கபாடம், வயிற்றுக்கடுப்புக்குக் கபாடம், வெட்டைக்கு, பெரும்பாட்டுக்கு, கல்லடைப்புக்கு, சுக்கிலப் பிரமியத்துக்கு, சுகபேதிக்கு, கணத்துக்கு, மாந்தயெண்ணை, ரசபற்பம், புகை, கல்னார் பற்பம், சூத பற்பம், பறபவகை, செந்தூரவகை முதலானவை பற்றிய செய்திகள் உள்ளன. சில ஏடுகளில் ஒருபக்கம் மட்டுமே எழுதப் பட்டுள்ளது.

41 ஆவது ஏட்டை அடுத்து 3 வெற்றேடுகள் உள்ளன. அடுத்துச் சிதையும் நிலையிலுள்ள ஒன்பது ஏடுகளில் 27 நட்சத்திர நாட்களில் நோய் ஏற்படின் எத்தனை நாட்களில் நீங்கும், சுக்குக் குடிநீர், உளிசெந்தூரம், கண்பூவுக்குத் தைலம் முதலான செய்திகளும், அடுத்து இரண்டு வெற்றேடுகளும் உள்ளன.

# 112. திருமூலர் தண்டகம்

**அ.** **283:505;** **ஆ.** *18-31* ஏடுகள்; **இ.** 25.5. × 3.5 செ.மீ; **ஈ.** 7 வரிகள்; **உ.** நல்லநிலை; இடையிடையே சில ஏடுகள் இல்லை; **ஊ.** நன்று; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பூமகள் கயிலை மேவி முரண மான தொன்றே
ஆகம வேத ஞான திரதியு மான தொன்றே
நாக ஆபரணம் பூண்ட நந்தி தண்டக்க மோத
வேதம யாக மற்றின் நந்திவினா யகன்காப்ப தாமே (1)

சீருலவு முரணசின் மயமான சோதி
சிதம்பரத் தில்சாதி சூடகந் தன்னை
வாருலவு முலையாள் உமைக்கிச் சொன்னார்
ம்கத்தான விஞ்சை நந்திக்குப தேசிற்றாள்
காருலவு முகத்தானைக் காடியில் நின்று
காரணமாய் செந்துவெல்லாம் நிறைந்து நின்ற
சாறிலடி யத்தள கனநந்தி யீசன்
நற்குருவாய் வந்தெனக்குச் சாற்றி னாரே (1)

முடிவு

ஆமப்பா மூலமந் திரத்தைச் சொன்னோம்
அப்பனே மாலாமந் திரத்தைக் கேளு
தாமப்பா அத்துஉக்கிர ஆலாகாலா
சார்வாள் பாணிபரம சந்தித்துச்சார் வண்ணம்
காணப்பா கெவுரி சகமகுரு முசங்க பூர்சனம் கருணை
கருநீலகண்ட மருதிரப் பார்வை யானென
ஞாமப்பா மாலாமந் திரத்தின் உண்மை
உறுதிபெறச் சொல்லிவிட்டேன் அறிந்து பாரே (73)

குறிப்புரை

காப்புப் பாடல் ஒன்று. அது தவிர்த்து 1-73 பாடல்கள். 74 ஆவது பாடல் குறைப்பாடல். மாலாமந்திரம், எட்டி வித்தை, அமுக்கிரா வேர், வில்வம், வசீகரம், திருமந்திரம், சித்தன், முப்பு, வசியம், மோகனம், அட்டகர்மம், ஐம்பது அட்சரம், கரு, பரிபூரணம், அஷ்டாங்கம், ஞானமார்க்கம், சூட்சம், பாவை, சதாசிவம், சித்து, எட்டி முளையில் எந்திரம், நட்டு

வாக்காலி வித்தை, வாசி, தேசிவித்தை, உச்சாடனம், தீட்சை, முப்பு, மெஞ்ஞானி முதலான பொருண்மைகள் உள்ளன. பேச்சு மொழிச் சொற்கள், இலக்கிய மொழிச் சொற்கள், தத்துவ மொழிச் சொற்கள் ஆகியன இதிலுள்ளன. சட்டியானத்தார், சடோக நாதர், ஆதிநாதர், அனதி நாதர், வகுளி நாதர், மாதங்கநாதர், மச்சேந்திரர், தன்வந்திரி முதலான நவசித்தர்கள் வட தீபகற்பத்தில் வாழ்ந்தனர். இவர்களுள் ஒருவரான மச்சேந்திரர் வடநாட்டில் மட்டுமல்ல தமிழ் நாட்டிலும் சிறப்பிடம் பெற்று விளங்கினார். இந்நவசித்தர்களின் முன்னோடி திருமூலர். 15ஆம் நூற்றாண்டிற்கும், அதற்கு முன்னரும், அருணகிரி காலத்திற்கு முன்னரும் பட்டினச் சித்தர் பலர் இருந்தனர். அருணகிரிநாதர் அற்புதங்கள் பல நிகழ்த்தியிருப்பினும் சித்தர் என அழைக்கப்படவில்லை. கைலாசத்திலிருந்து பதஞ்சலி முனிவரோடு வந்த திருமூலர் மூலன் என்ற இடையனுடைய உடம்பில் நுழைந்ததாகவும், திருவாவடுதுறையில் ஆடுகளை மேய்த்ததாகவும் கதைகள் உண்டு. இவர் 3000 ஆண்டு வாழ்ந்தவர். 3000 பாடல் களைப் பாடியவர். சித்தர்கள் வரிசையில் முதல் சித்தாரகக் கருதப்படுபவர். இவர் காலத்திற்கு முன்பு தமிழ்நாட்டில் காலிங்கர், அக்கோரர், நாதாந்தர், திருமாலிக்காட்டு தேவர், பரமானந்தர், போகர் முதலியோர் இருந்தனர் எனச் சொல்லப் படுகின்றது - திருமந்திர வாகடம் (ச.253. B.) , திருமந்திர வைத்தியம். கர்ப்ப உற்பத்தி, திருமூலர் 120 (ச.190), திருமூலர் எண்ணாயிரத்துள் துருசுகுரு, திருமூலர் எண்ணா யிரத்துள் வகாரத்திரயம், திருமூலர் வகாரவுபதேசம் 200, திருமூலர் திருமந்திரம் முதலியன இவர் இயற்றியவை.

## 113. திருமூலர் நாடிப் பரிட்சை

**அ.** 550 : 894; **ஆ.** *10-22* ஏடுகள்; **இ.** 26.5 × 3 செ.மீ; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** மிகக் கடினம், கிறுக்கலான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

**தொடக்கம்**

**உன்னிய கெற்பக் குறியாம் வெளியில்**
**பண்ணிய நாத பகுந்த பிரிதிவி**
**வன்னி யும்வா யுவுமாய்ச் சுக்கில**
**மன்னியச் சமனாய் வழங்கு முதகமே (1)**

முடிவு

வியாதிகள் போக வெகுளக் கடமுறப்
பயாதி நரைதிரை பாங்காய்த் தவழ்ந்திட
கயாதிக் கவனங் கலந்தெங்குச் சுற்றிட
சயாதிப்பார் ஞானஞ் சாருஞ் சித்தியே (112)

திருமூல நாயன் நாடிப் பரிட்சை முடிந்தது. முற்றும்.

குறிப்புரை : திருமூல நாயனார் அருளிச் செய்த நாடிப் பரிட்சை **1-112 பாடல்கள்.** பிழைகள் மிகுதி. தந்த குறி, கெர்ப்பக்குறி, நாடியைக் கொண்டு நோயறிதல், பித்தம் அட்ங்கினால் மரணமென்றறிதல், சாத்தியம், அசாத்தியம், கிரந்தி விரணம், மேகம், சுரம், வாத, பித்த, சிலேத்துமம், தொந்தித்தல், மூலம், கழிச்சல், நோயின் குறிகுணம், எலும்புருக்கி முதலான செய்திகள் நாடியை அடியொற்றி அமைகின்றன.

## 114. திருவள்ளுவர் சூத்திரம் 16

**அ. தாள். 2:17; ஆ.** *10-15* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

பூரணமாய் நின்றெழுந்த முதலே காப்பு
புகழ்பெரிய அம்பிகைப்பெண் சித்தர் காப்பு
காரணமாம் காரசாரம் குருவே காப்பு
கதிரொத்த சுழிமுனையான் பாதம் காப்பு (1)

காரப்பா என்கருத்துக் கிசைந்த மைந்தா
கருத்துள்ள ஏலேல சிங்க மேகன்
வாரப்பா மறைவான முப்பு மார்க்கம்
வாரறியச் சொல்லுமென்றாய் பணிந்து கேட்பாய்
ஏறப்பா சித்தரெல்லாம் பாடி வைத்த
என்மகனே வறியமென்றால் நாளோ யில்லை
ஆரப்பா யாவருக்கும் அஞ்சி நானே
அறைகிறேன் சிந்தைவைத்து அறிந்து கேளே (2)

முடிவு

ஆடுவாய் செம்பதைத்தான் பத்துக் கொன்று
அடைவாக நீகொடுத்தா வீரஞ் சப்பா

மூடரப்பா முறையறிந்து செய்ய மாட்டார்
முட்டாளுக் குரையாதே முழுகிப் போவாய்
தேடாதே தேய்விதுதான் யேலேல சிங்கா
தெரியவே சொல்லிவிட்டேன் கணக்காய் மைந்தா
காடெல்லாம் திரிந்தயர்ந் தலைய வேண்டாம்
கண்டுகொள் பதினாறும் கணக்காய் முற்றே (17)

சூத்திரம் பதினாறு முற்றிற்று

குறிப்புரை : திருவள்ளுவ நாயனாரருளிச் செய்த சூத்திரம் பதினாறு

**காப்புப் பாடலுடன் 17 பாடல்கள்.** சுத்தசலம் எடுக்கும் முறை, அதற்குள்ள வேறு பெயர்கள், வெண்சாரை, கருநெல்லி, பீஜம், காரம், சாரம், சிறுகண்நாகத்தைக் கொண்டு செய்யப் படும் உப்பு முதலான செய்திகள் இடம் பெறுகின்றன.

## 115. திருவள்ளுவர் பஞ்சரத்தினத் திருப்புகழ்

**அ. தாள். 2:18; ஆ.** *15-19* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

தொடக்கம்

ஆதி யந்தமு மேபடைத் தாண்டருள்
சோதியாம்பர னாதனடி தொழுமருள் மேவி
நீதியா யெனையாண் டருளன் னையாம்
சாதி யென்குல நாரணி பூரணி
போதியென்றுயர் பெற்றதோர் வாலையாம் நின்பதம்
மாது பங்கய மாமலர் சூடியான்
யீத றிந்து யியம்புவேன் பூரணி
யேதுமேதடை யில்லையென் னூலதுயெளி யோர்க்காய் (1)

முடிவு

காட்டுவாய்பரி பத்துக்கேயிது - கடுகொன்றாய்
மூட்டுமூட்டிது வுலக முடியளவும்
ஆட்டுஆட்டு முப்புரநாட்டது காட்டாதே
உன்சிரமும் பொடிபடும் - உரையாதே

ஏட்டைக் கொண்டு படித்தெண்ணினா
லென்பாட்டுமே பயனானது சொல்லுமே
கேட்டுக் கொண்டபடி செய்யும்
சிங்கமே பதினொன்று முற்றே (11)

குறிப்புரை: திருவள்ளுவ நாயனாரருளிச் செய்த பஞ்சரத்தினத் திருப்புகழ் பதினொன்று

**1-11 பாடல்கள்.** சித்த மருத்துவத்தில் முப்பு என்பது தனித் தன்மை வாய்ந்த ஓர் ஒப்பற்ற மருந்து. பல மருந்துப் பொருட்கள் செய்யப் பயன்படுத்தும் மூலப் பொருளாக முப்பு விளங்குகிறது. முப்பு என்பது உப்புகள் பற்றிய செய்தியாக அமைகிறது. இந்நூல் முப்பு செய்முறை பற்றிக் கூறுகின்றது.

## 116. திருவள்ளுவர் பரிமுப்பு சூத்திரம் 30

**அ. தாள்.** 2:16; **ஆ.** *1-10* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

தொடக்கம்

சீர்சிறந்த குணமகமேர் தன்னி லுள்ள
செழுங்கமல விநாயகரைப் பணிந்து போற்றி
கார்புகழ் பிர்மருத்திரன் மாலனை யானும்
கருத்திலே என்னாளும் கருதிப் போற்றி (1)

சொல்லக்கேள் இந்தநூல் யார்க்கும் கிட்டா
சிவயோகி யாமாகிற் சிக்கு மின்னூல்
கல்லிலேதேங் காயை யுடைத்தாற் போல
கருதுகிறேன் முப்பதுக்குள் கருவை யாய்ந்து
நல்லநினை வுள்ளமா ணாக்கர் நீங்கள்
நாட்டாரோ டிணங்காதே நலத்துக் கீனம்
பொல்லாங்குசெய் குணத்தைத் தவிர்த்துப் போடு
பொய்களவு பிறர்தாரம் பெண்ணும் தள்ளே (2)

முடிவு

தானேதானிந்த வொருநூல் தானும்
தனியாக வைத்திதைப் பூசை செய்து

மானேதான் சிவயநம ஓம்கிலி யென்று
    மனத்தினிலே நீநினைக்க நாலும் பேசும்
காணேதா னோடாதே காடே றாதே
    வானேதான் பொருளிதென்று நீயும் வைத்து
வஞ்சனையில் லாமொழிமுப் பதுவு முற்றே (31)

முப்புசூத்திரம் முப்பதும் முற்றியது.

குறிப்புரை: திருவள்ளுவ நாயனார் அருளிச் செய்த
பரிமுப்பு சூத்திரம் முப்பது

யோக முப்பு பற்றியும் ரசவாத முறை பற்றியும் கூறுகிறது. காப்புப் பாடலையும் சேர்த்து 31 பாடல்கள். குருவருள் பெறுதல், யோகம் கைவரப் பெறுதல் முதலான தன்மைகள் இருப்பின் முப்பு கைகூடும் என்பதும், வாதவுப்பு வயனம், காரம், சாரம், செயநீர், பிரமநீர் முதலியவற்றின் செய்முறை பற்றியும், இவற்றின் ஆற்றல், இவற்றால் விளையும் பயன் பற்றியும், அயம், நாடு, மலை, கல், மரங்கள், நிலம் பொன்னாகும் முறை பற்றியும் கூறப்பெறுகின்றன. மருத்துவம், தத்துவ மருத்துவம், தத்துவம் பற்றிய இந்நூல் சித்தர் யோகத்திலும், மருத்துவத்திலும், தத்துவத்திலும் சிறந்து.விளங்கினர் என்பதைக் காட்டுகிறது.

## 117. துருசு - சத்துரு மித்துரு

**அ.** 195:397; **ஆ.** 12 ஏடுகள்; **இ.** 22 × 3 செ.மீ; **ஈ.** 6 வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

கேளப்பா துருசுசத் துருவைக் கேளு
    கிருபையுள்ள சவுக்காரம் வங்கம் நாகம்
சூளப்பா இந்துப்பு காந்தம் சிங்கி
    சூடுகின்ற கல்சவுடு கல்லுப் புத்தான்
நாளப்பா வெள்ளைப்பா ஷாணம் கூடன்
    நலமான அப்பிரேகம் இனங்க ளோடு
மேலப்பா தொட்டியொடு அஞ்சனபா ஷாணம்
    வெகுசுருக்குந் துருசுக்குச் சத்துருவென் றெண்ணே(733)

முடிவு

அஷ்டாங்கம் - ஏமம், நேமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி ஆக 8. ஏமம்-10 நேமம்-10, ஆசனம்-9, பிராணாயாமம்-5, பிரத்தியாகாரம்-6, தாரணை-6, தியானம்-10, சமாதி-5.

குறிப்புரை

209 (ஆ) என்ற எண்ணில் குறிப்பிட்டது போலவே தொடக்கமும் முடிவும் காண இச்சுவடி ஒரு பெருநூலிலிருந்து ஒரு பகுதி மட்டுமே எழுதி வைக்கப் பெற்றதென்பது தெரியவருகிறது. இச்சுவடிக் கட்டின் முதல் ஏட்டில் அகத்தியர் வாக்கிய காவியம் என்ற நூலில் இருந்து சில பகுதிகளைத் தந்திருப்பதாகக் குறிப்பு இருப்பதால் இப்பகுதி அந்நூலினையே சேர்ந்தது. துருசு, சாரம், வெடியுப்பு, கல்லுப்பு, காரம், தங்கம், சூதம், இரும்பு, நாகம், காரீயம் முதலான பொருள்களின் சத்துரு மித்துருக்களின் (பகை-நட்பு) தன்மைகள் எடுத்துக் கூறப் படுகின்றன. இந்நூல் 9 ஏடுகளில் முடிந்தபின் அடுத்த 3 ஏடுகளில் 'அகத்தியர் வைத்திய காவியம் 500' என்ற நூலின் சில பகுதிகள் கூறப்படுகின்றன. அகத்தியர் 1200 இல் கலைக்கியானம், சவுமிய சாகரம், பூரண்டம், அகத்தியர் 100இல் மாந்திரீகம், மனுவிக்கியானம், தத்துவம் முதலியன சொல்லப் பட்டிருப்பது சுட்டப்படுகிறது. உபரச பஞ்சபூதம், நவலோகப் பஞ்சபூதம், கட்டு, லிங்கக்கட்டு, நாகரசச் செந்தூரம், அஷ்டாங்கம் முதலான தலைப்புகளிலான செய்தி சில பாடல்களிலும், உரைநடையிலும் இடம் பெற்றுள்ளது. இறுதியில் இரண்டு வெற்றேடுகள் உள்ளன.

## 118. தேரையர் அந்தாதி

**அ.** 215:425; **ஆ.** 1-59 ஏடுகள்; **இ.** 20 × 3 செ.மீ; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சானது (நிறுவன வெளியீடு-1995).

தொடக்கம்

குலைஎரிவு, காலெரிவு, கையெரிவுக்கு மருந்து

அல்ல வேபழ மாறு வதக்கியே
மல்ல வேரசம் வாங்கிநற் சீரகம்

செல்ல வேபலஞ் சேரு மிளகொடு
வல்ல வேவாய் விளங்கமுஞ் சேர்த்திடே (1)

முடிவு

அடைத்துக் குப்பியில் ஐயாறு நாளினில்
உடைத்துக் காயரைத் துட்சிமிழ் வைத்திடு
படைத்து நாபியில் பணவெடை பூசிட
உடைத்துப் பேதியு மீறினால் மாற்றிடே (281)

குறிப்புரை

சுவடியின் இருபக்க ஓலைச் சட்டங்களில் தேரையர் அந்தாதி, தேரையர் ரத்னாகரம் 1001, தேரையர் மனோகரம் 1001 ஆகிய மூன்று தலைப்புகள் மையால் எழுதி வைக்கப் பட்டுள்ளன. பாடல்களின் அந்தாதி அமைப்பினால் தேரையர் அந்தாதி என்பதே நூலின் பெயராகக் கொள்ளப்பட்டது. முதல் ஏட்டிலே நூல் தொடங்குகின்றது. 1-282 பாடல்கள். 282 ஆவது பாடல் பல இடங்களில் செல்லரிக்கப்பட்டுள்ளது. சுரம், சன்னி, வாத நோய்களுக்குப் பூரக்கட்டு, சன்னிக்கு இலிங்கக் கட்டு, தாளகக்கட்டு, வீரமெழுகு, சகலவியாதி களுக்கும் கந்தக இரசாயன மருந்து, சூதக்கட்டு, மகோதரத் திற்கு வாளநெய், இரத்தபித்தம், காசம்; சயத்துக்குக் கற்றாழை நெய், பீனிசம், கபாலச் சூலைக்கு அறுகன் நெய், பீனிசம், சூலை, மண்டை ரணங்களுக்குக் குங்குமப்பூ மாத்திரை மூக்குரணம், மண்டைக் கரப்பானுக்குப் பங்கம்பாளைத் தைலம், ருத்ர வாய்வுக்கு வெல்லத்தைலம், சுரம், மூலத்துக்கு இரசமாத்திரை, சன்னி, மேகம், சூதகவாய்வுக்கு வீரக்குழம்பு, வாதங்களுக்குச் சுக்குக் கற்கம், கிரந்திப் புண்களுக்குப் பூரகக் கற்கள், மாந்தத்துக்கு வாலசஞ்சீவி முதலான செய்திகள் உள்ளன. தேரையர் வாகடம் (கசாய வகை) (ச.243.C), தேரையர் வைத்தியம் (ச.229), தேரையர் வைத்தியம் 500 (ச.251.A) முதலியன இவர் இயற்றியவை.

## 119. தேரையர் தசகுணகவி பதார்த்த சிந்தாமணி

**அ.** 563 : 914; **ஆ.** 1-12 ஏடுகள்; **இ.** 35 × 3 செ.மீ; **ஈ.** 7-8 வரிகள்; **உ.** நன்று; ஓரப் பகுதிகளில் சில துளைகள்; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

தேரன் கவியுஞ் சிறுகாலை யுண்டி
வார முடைய மனையாளும் - நேரே
வரைத்திருந்த சாந்தும்அ கில்புகையு முண்டே
நரைத்திருந்து சாகார் நலம் (1)

முடிவு

சூதக வாய்வுபோம்சு ரோணிதத்தில் வாதம்போம்
வாதவலி குன்மம் மடியுமே - மாதுநல்லீர்
பேய்கமேபு கைகட்டார் பேசாதே ஓடிவிடும்
நாய்க்கடுகுஞ் செய்யும் நயம் (122)

குறிப்புரை

**1-122 வெண்பாப்பாடல்கள்.** பன்னீர், வாழைநீர், அடுக்கிளநீர், வெண்பசுவின் பால், எருமைப்பால், வெள் ளாட்டுப் பால், செம்பிலிப்பால், முலைப்பால், பசுவின்பால், வேப்பெண்ணை, இலுப்பெண்ணை, எள்ளுப் புண்ணாக்கு, இலுப்பை, தேங்காய்ப் புண்ணாக்கு, வேப்பம் புண்ணாக்கு, எருக்கு, முருங்கை சமூலம், எட்டி, மாமரம் - சமூலம், அகத்தி, நாகல், வேம்பு, மலைவேம்பு, சிவனார் வேம்பு, நிலவேம்பு - சமூலம், கருவேம்பு, வெள்வேலன், கருவேலன், தானிய வகை மூங்கிலரிசி, விழலரிசி, கார்போக அரிசி, வெப்பாலரிசி, வாலுளுவை அரிசி, சாமையரிசி, தினையரிசி, கோதுமை அரிசி, நவதானியங்கள், வெண்ணை வகை, தேன்வகை, சோளவகை, பயிறுவகை, உளுந்து, கடலை, கொள்ளு, மிளகாய், மிளகு, வெந்தியம், கொத்தமல்லி, கடுகு, நாய்க்கடுகு முதலியவற்றின் குணங்கள் எடுத்துரைக்கப்படுகின்றன.

## 120. நந்தி குளிகை 8

**அ. 538 : 874; ஆ.** *1-2* ஏடுகள்; **இ.** 45 × 3.5 செ.மீ; **ஈ. 4-5** வரிகள்; ஒவ்வொரு பக்கமும் மூன்று பகுதிகளாகப் பிரித்தெழுதப்பட்டுள்ளன; **உ.** நன்று; முதல் ஏட்டின் இறுதி சற்று உடைந்துள்ளது; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

தானென்ற விஷக்காரி கண்ட பேரும்
சாதகமாய் சிறப்பறியும் துருசு மாகும்
கோனென்ற நிம்பவேரைச் சிலையும் கூட்டி
கூறாகக் காயமது கூடச் சேர்த்து
தேனென்ற மகரவிந்து பாலா லாட்டி
சிறக்கவே குளிகையது செய்து கொண்டு
வானென்ற ஒருகுளிகை விஷத்துக் கெல்லாம்
மைந்தனே குடுத்தாக்கால் ஓடிப் போமே (2)

முடிவு

ஆச்சப்பா பறங்கி லகிரி தானும்
அப்பனே அகிலியது மூனும் கூட்டி
மூச்சப்பா கருங்கழுத்துக் குருவி தானும்
மூன்றாகவே கிழித்து அரிந்து போடு
வாச்சப்பா நெய்யிலே பொரித்துத் தானும்
மைந்தனே குளிகையது செய்து கொண்டு
நாச்சப்பா திலதமிட யெல்லாம் சித்தி
நலமாக நந்தியுட பாடல் முற்றே (8)

குறிப்புரை: நந்தீசர் 8

**2-8 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** அனைத்து விடங்களும் நீங்க, பில்லியது போக, பிள்ளைப்பிணி 108 ம் நீங்க, எலிக்கடி விசம் நீங்க, தேள், பூரான், செய்யான், கருந்தேள் ஆகியவை கடித்த விடம் இறங்க, பெண்களை வசியமாக்க, அனைத்துச் செயல்களும் சித்தி பெற முதலானவற்றிற்குப் பயன்படுத்த வேண்டிய குளிகைகளின் செய்முறைகள் கூறப்படுகின்றன. அடுத்து 1-2 என்ற எண்ணிட்ட ஏடுகளில் **'சிவகுளிகை'** எனும் தலைப்பு உள்ளது. அனைத்துவிதத் தோடங்களுக்கும், அனைத்து மாந்தங்களுக்கும் குறிப்பாக முட்டுதோடம் ஒன்பதுக்கும், புள்ளிதோடம் பதினெட்டுக்கும் கேட்கக்கூடிய குளிகைகளின் செய்முறைகள் கூறப்படுகின்றன.

நந்திதேவர் முப்பு சூத்திரம் (ச.236. J.), நந்தீசர் குருநாடி, நந்தீசர், போகநாதர் பாடல் 100 (வகரம்) (ச.289.F), நந்தீசர் வைத்திய சூத்திரம் 5 முதலியன இவர் இயற்றியவை.

## 121. நந்தீசர் ஞானம் நூறு முதலான நூல்கள்

**அ. 435:681; ஆ.** 56 ஏடுகள்; **இ.** 45 × 3 செ.மீ; **ஈ.** 4-6 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

பாரப்பா கணபதியின் கந்தன் பாதம்
  பதிவாக எந்நாளும் தலைமேல் வைத்து
ஆரப்பா சூஸ்திரமுஞ் சாஸ்திரமுஞ் சொன்னேன்
  அணுதொடுத்து மேருவரை யறைவேன் கேளு
நேரப்பா யென்னைப் போலாரும் சொல்லார்
  நிகழ்த்தினேன் இந்நூலைக் கண்ணில் காட்டார்
ஆரப்பா அவனியில் கொடுக்கப் போரா
  ஆச்சிரிய மின்னூலைத் தெளிந்து பாரே (1)

### முடிவு

சிலாசத்து பலம்-1, பொரிகாரம் பலம்-1 கொண்டுவந்து பழச்சாற்றில் அரைத்து வில்லை செய்து காயவைத்துப் புடம் போட்டால் பற்பமாகும். அதைப் பணவிடைத் தேனில் சாப்பிட்டால் மேல் கண்ட வியாதிகள் தீரும்.

### குறிப்புரை

**பாட்டும் உரைநடையும் கலந்ததுள்ளன.** பல மருத்துவ நூல்களிலிருந்து சிறப்பான, வழக்காற்றுக்குப் பயனுடைய பல மருந்துகள் தேர்ந்தெடுக்கப்பட்டுத் தொகுக்கப்பட்டுள்ளன. ‘பதஞ்சலியார் அருளிச் செய்த வச்சிரகண்டி மாத்திரை’ என்ற ஓர் ஏட்டின் உட்தலைப்பு, இது பதஞ்சலியார் நூலிலிருந்து எடுத்துத் தொகுக்கப் பட்டுள்ளதென்பதைக் காட்டுகிறது. இதேபோல் குதம்பச் சித்தர் அருளிச் செய்த சந்திரோதயக் குளிகை, கண்ணாதனதர் அருளிய கெருடன் கிழங்கு யெண்ணை, திருமூல நாயனார் சொன்ன கிரந்தி எண்ணெய், புலிப்பாணி அன்னூறு-பேய் பூதம் ஓடிப் போக மை, வீரமாமுனி சார பற்பம் முதலான தலைப்புகள் காணப்படு கின்றன. தாம்பிரசுத்தி, செம்புசுத்தி, ரசபற்பம், பொன்னா வரைச் சூரணம், அயசெம்பு, மாரணம், மேகத்துக்கு திஷ்க் கந்தாதிச் சூரணம், மேகத்துக்கு லேகியம், மஞ்சக்கா மாலைக்கு, சிவன் வேம்பு சூரணம், வெள்ளைப் பாசாணம்,

கெந்தி சுத்தி, நாகம் சுத்தி, தாம்பிர சுத்தி, லோகமாரணம், படர்தாமரைக்கு, எண்பது மூலத்துக்கு மூலிகை, கர்ப்ப வியாதி போக, நவாச்சார பேதி, சிலாசத்துப் பற்பம் முதலான தலைப்புகள் உள்ளன. ஏட்டெண்களில், பாடல் எண்களில் தொடர்ச்சி இல்லை. பல ஏடுகளுக்கு, சில பாடல்களுக்கு பாடல் எண்கள் இல்லை. இடையில் இரண்டு வெற்றேடுகள் உள்ளன.

## 122. நாடி

**அ.** 560:906; **ஆ.** 4 ஏடுகள்; **இ.** 29 × 3 செ.மீ; **ஈ.** 7 வரிகள்; **உ.** முதல் 3 ஏடுகளின் ஓரப்பகுதிகள் சிதைந்துள்ளன; 4 ஆவது ஏடு பாதியாக முறிந்துள்ளது; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

ஆமேதா னப்புவது பளிங்குநிற மாகும்
அக்கினிதன் நிறந்தானுஞ் செம்பு மாகும்
காமேதான் வாயுநிறங் கறுப்பு மாகுங்
கார்மேகம் புகைநிறமும் ஆகா சந்தான்
போமேதான் பிரிதிவுக்குத் தேவன் பிரம்மா
பெரியசுவா திட்டான மிருப தாமே (10)

முடிவு

புக்குகின்ற காந்தாரி நாபி பத்தி
பெருநரம்போ டெழிலுக்கு ரூப மாகி
சிக்குகின்ற திசையதாய் மேலே யோடி
சிரசளவு நீங்கியே கண்டம் புக்கு
நக்குகின்ற நாவடியில் சிறந்தி ருக்கும்
நலமான சத்தி சிங்குவை யிரண்டு
முக்குகின்ற மூலத்தின் மேலே பத்தி
மேலேறி இரண்டுசெவி தனைத்தொட்டேறே (19)

குறிப்புரை

**9-20** எண்சீர் விருத்தப்பாக்கள். 9, 20 ஆவது பாடல்கள் சற்றுச் சிதைந்துள்ளன. பஞ்சபூதப் பிரிவு, கூறு, மனித

உடம்பு ஐம்பூதங்களின் கூறுகளோடு தொடர்புபடுதல், நிறம், தசநாடிகளின் பெயர், செயல், குணம், அவற்றைக் கொண்டு நோயறிதல் முதலான செய்திகள் இடம் பெறுகின்றன. இச்செய்தி அச்சான நூல்களில் இடம் பெற்றுள்ளன. இறுதியில் ஏழு வெற்றேடுகள் உள்ளன.

## 123. நாடி சோதனை

**அ. 515 : 789; ஆ.** *37, 39, 42* ஆகிய மூன்று ஏடுகள்; **இ.** 25 × 2.5 செ.மீ; **ஈ.** *4* வரிகள்; **உ.** குறை; **ஊ.** அச்சாகாதது.

தொடக்கம்

> போத்திய நாடி தானும் போத்துபோல் பாதத் தடித்தால்
> கிரகத்துக் கதிலே மிக்க கிஞ்சுக மானே கேளாய்
> காத்திருந் திங்க ளொன்றில் கருதியே தீரு விட்டால்
> மாத்தீய மாதம் பத்தில் மரணமென் றுரைக்க லாமே (14)

முடிவு

> சொல்லிய வுந்தி தன்னில் சுழித்ததோ ரெழுத்தைப் பத்தி
> யெல்லையி லெழுந்த நாடி யெழுபத்து நூறா யிரமாம்
> வல்லவர் புகழும் நாடி பத்துள்ளே யேழும் நீக்கி (27)

குறிப்புரை

*14, 15, 18, 19, 25, 26* ஆகிய பாடல்கள் முழுமை. *13, 27* ஆகிய பாடல்கள் குறை. நாடியின் இயல்பு, நாடியை வைத்து நோயறிதல், நாடிகளின் எண்ணிக்கை, நாடியை வைத்து மரணமறிதல், நாடியை வைத்து மரணம் நிகழும் காலம் கூறுதல் முதலான செய்திகள் உள்ளன. இச்செய்தி தொடர் பானவை அச்சு நூல்களில் இடம் பெற்றுள்ளன.

## 124. நாடி நிதானம்

**அ. 563:911; ஆ.** *1-10* ஏடுகள்; **இ.** 35 × 3 செ.மீ; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; சில துளைகள்; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

குருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவும்
கருணை பூக்கவுந் தீமையைக் காயவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகு முள்ளத்துப் பிள்ளையைப் பேணுவாம் (1)

ஓதும் நாடி துகையு மகத்திடும்
வாத பித்த சிலேத்தும வண்மையும்
பேத மான வியாதியின் போகமும்
ஆதி யான அருந்தவ னோதினான் (2)

முடிவு

சிலேஷ்டும நாடி குணம்

உறுதியாஞ் சிலேஷ்டும மெனும்நாடி தானும்
உகந்து யிதுக்கு லஷ்சணங் கேளு
கரமும்பா தம்பிருதியாய் பலமன்றி அசந்து
தானும்பிச காமல் நித் திரையுமதிக மாகும்
கருதியே கொட்டாவி சிரசு நோகும்
காணுமது மூக்கிலே நீரோகமும் தருகுமது
சரீர மெல்லாம் திமிரே காணும்
தானறிந்து கொள்ளுமெனச் சாத்தி னாரே (20)

குறிப்புரை

ஏட்டுஎண் இல்லாத முதல் ஏட்டில் **வேகமாய் நெறிசேரும் வினைகளுந் தாக** எனத் தொடங்கும் காப்புப் பாடல் உள்ளது. அடுத்துக் காப்புப் பாடலுடன் 55 பாடல்கள். அடுத்து ஒன்று முதல் 20 பாடல்கள்; மொத்தம் 75 பாடல்கள். நாடியின் வகைகள், அவை இயங்கும் இடம், நாடியைக் கொண்டு வாத, பித்த, சிலேத்தும நோய்களை அறிதல், வாதத்தின் வகைகள், அவத்தைக்குறி, காலமறிதல், சுவையறிதல், முகக்குறி, மலக்குறி, நீர்க்குறி, நயனக்குறி, நாவுக்குறி, திரேகக்குறி, தந்தக்குறி, சுரம் வருவதற்கு முன் காணுங்குறி, வாதசுர லட்சணம், பித்தசுர லட்சணம், சிலேத்துமச்சுர லட்சணம், அசீரணசுர லட்சணம், பூதசுர லட்சணம், வாதநாடி குணம், பித்தநாடி குணம், சிலேத்தும நாடி குணம் முதலானவை பற்றிய செய்திகள் உள்ளன. இச்செய்தி தொடர்பானவை அச்சு நூல்களில் இடம் பெற்றுள்ளன.

## 125. நாடிப் பரிட்சை

**அ. 550 : 893; ஆ.** *1-10*அ. ஏடுகள்; **இ.** 26.5 × 3 செ.மீ; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** மிகக் கடினம்; கிறுககலான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

**திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவுங்**
**கருணை பூக்கவுந் தீமையைச் சாய்க்கவும்**
**பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்**
**பெருகு ஞானத்துப் பிள்ளையைப் போற்றுவாம் (1)**

முடிவு

**விளம்பியவர் வாத ரோகி தந்தமே மிகக்க றுக்கும்**
**பழம்படு பித்த ரோகி பல்லுஞ் சனித்தி ருக்கும்**
**உளங்கொள் சிலேற்பன ரோகிக்குப் பல்வெளுப்பாகு முண்ணம்**
**துளங்கிடாத தொந்த ரோகி குணமிதிற் தொகுத்துச்**
**சொல்லே (56)**

*நாடிப் பரிச்சை முற்றும்*

குறிப்புரை

**1-56 பாடல்கள்.** பிழை மிகுதி. நாடி பார்க்கும் விதம், நாடிகளின் வகைகள், நாடி நிதானம், நாடியைக் கொண்டு வாத, பித்த, சிலேத்துமம் அறிதல், நாடி நடக்கும் குறிகளி லிருந்து அதன் பலனைக் கூறுதல், சாத்தியம், அசாத்தியம் அறிதல், மரணக்குறி அறிதல், மரணநாடி குணம், காலம் அறிதல், நயனக்குறி, நீர்க்குறி, நாவுக்குறி, சுளவயரி தலமலக் குறி முதலான செய்திகளின் வழி நாடிகளின் பயனை விளக்குகிறது. இச்செய்தி தொடர்பானவை அச்சு நூல்களில் இடம் பெற்றுள்ளன.

## 126. நீலகண்டம் 50

**அ. 503 : 764; ஆ.** *1-16* ஏடுகள்; **இ.** 28.5 × 3 செ.மீ; **ஈ.** *6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

நாடி யதோ ரகண்டபரி பூரணமாய் நின்ற
நாதமுறு கணேசனொடு கந்தன் காப்பு
ஆடியதோர் சிவனாரும் யென்னைப் பெத்த
ஆத்தாளும் நாவுதனில் குடிகொண் டேதான்
பாடியதோர் வைத்தியம் பத்துந்தான் சொல்வேன்
பாண்புலத் தியனேயின்னூ லோடே
தேடியதோர் பூரணசூஷ்த் திரத்தில் நன்றாய்
தீட்சையொடு கருக்குருவுத் திரம தாமே (1)

முடிவு

கண்டாக்கால் வாதமெல்லா மடிக்கீழ் போத்துங்
கருவான சவுக்கார மகிமை தன்னை
விண்டாக்கால் நசித்திடுவாய் நூல்கு டாதே
வேதாந்த ஞானியென்றால் வியானம் பாடு
தொண்டுசெய்வாய் பதினாறு வருஷங் காத்து
சேர்த்துப் பின்புஅவர்க் கீய்வா யப்பா
சண்டமாரு தம்போலே வெளிய தாக
சாத்தியதோர் வயித்தியம் அன்பதுந்தான் முற்றே (50)

குறிப்புரை: நீலகண்டம் அன்ம்பத்து அகத்தியர் கூறல்

**1-50 எண்சீர் விருத்தப் பாக்கள்.** மாலா தேவிக்கட்டு, குறுக்குவளி, சமத்து முதலான தலைப்புகளில் பல்வேறு மருந்துகளின் விவரங்களும், அவற்றால் நீங்கும் நோய்களும் விவரிக்கப்பட்டுள்ளன.

## 127. நோயும் மருந்தும்

**அ.** 353:586; **ஆ.** *142-157* ஏடுகள்; **இ.** 17.5 × 2.5 செ.மீ; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

கண்மூசம் தெரிப்பு மருந்து

கண்ணிது பலகாலத் தானுங் கருதியே அளன்று வந்தால்
நண்ணிய உள்ளங் காலில் நறுநெய் மிகவு மூட்டி

திண்ணிய தவிடு மாவால் தெளியவே மூச்ச றுத்துக்
கண்ணிய கையா லெக்குநீர் சந்த னங்கள் பூசே (1)

முடிவு

கோட்டமுடன் கடுக்காய் கிராம்பு
    கொடியதொரு சரக்கையெல்லாம் வறுப்புச் செய்து
நாட்டமுடன் பொடிசெய்து தேன்விட்டு
    நன்றாக லேகியம்போல் கலக்கிக் கொண்டு
ஆட்டமுடன் செந்தூராகப் போடுஅனைத்துத் தின்னத்தீரும்
    அனலை யிருமலொடு யிளைப்புத் தீரும்
காட்டமுடன் வந்ததொரு காச மெல்லாம்
    குடிவிட்டுப் போகுமென்று கூறி னாரே (21)

குறிப்புரை

**1-21 பாடல்கள்.** தைலம், செந்தூரம் முதலான மருந்துகளின் செய்முறைகளும் அவற்றால் தீரும் காசம், இளைப்பு, இருமல் முதலான நோய்களும் கூறப்படுகின்றன.

## 128. நோயும் மருந்தும்

**அ. 369:610; ஆ.** *19* ஏடுகள்; **இ.** 16.5 × 2 செ.மீ; **ஈ.** *4-5* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

**வாய் வேக்காட்டுக்கு, ஆசன வேக்காட்டுக்கு மருந்து**

கடுக்காய் *10*, கொட்டையைத் தள்ளிச் சூரணம் பண்ணி எருமை வெண்ணெய் கொள்ளப்பட்டது போட்டுப் பிசைந்து தண்ணீரில் போட்டு வைத்துக் கொண்டு காலமே கொட்டைப் பாக்குத் திட்டம் கொடுத்து வரவும். தீரும் வியாதி - கணை, வெட்டை, அழலை, நாபிக்கமலம், புண்ணாயிருக்கிறது, வாய்வேக்காடு, ஆசன வேக்காடு இதுகள் தீரும்.

முடிவு **சீலை எண்ணெய்**

வேப்பம்பட்டை, வேம்பாடம் பட்டை, ஒதியம்பட்டை, மருதம்பட்டை, களிப்பாக்கு, காசுக்கட்டி, துருசு வீசம்

இரண்டு, பூரம் இரண்டு பணவிடை காதில் சீ வாரதுக்கு உருக்கி விடவும்.

குறிப்புரை

**உரைநடை.** வாய்வேக்காட்டுக்கு, ஆசன வேக்காட்டுக்கு மருந்து, உதிரவாயுவுக்கு, புளிகுடிச்ச அறையில் உதிரம் கட்டினால், கண்ணுக்கு எண்ணெ, ஊறல், வண்டுக்கடி, தலையிடிக்குச் சூட்சத் தைலம், சூலைக் கட்டுக்குப் பத்து, தேளுக்கு மருந்து, பித்த வெட்டை, கிராணிக்கு கையாந்த கரை வடகம், சுரத்துக்குப் பேய்ப்புடல் கியாழம், மேக ஊறல், வண்டுக்கடி புண் இதுகளுக்கு மருந்து, நாக பற்ப முறை, நேத்திரரோகத்துக்கு மை முறை, மூலத்துக்கு வெந்தய லேகியம், சன்னிக்குத் தயிலம், மேகச்சூட்டுக்கு ஆவாரைச் சூரணம், தலையிடிக்கித் தைலம், இருமலுக்குப் பால் கிழாயம், வல்லாதி யெண்ணெ, மேகம், கரப்பானுக்கு முதலான தலைப்புகளில் மருந்து செய்முறைகளும் அவற்றால் தீரும் நோய்களும் கூறப்பட்டுள்ளன.

## 129. நோயும் மருந்தும்

**அ. தாள். 5:33; ஆ.** *24-127* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

தொடக்கம்

**குஷ்டம்-** *1.* சமுத்திர நீர்க் காய்ச்சிக் குடித்தல், *2.* எட்டிக் கொட்டை, *3.* ஒட்டை மூத்திரம், *4.* கழுதை மூத்திரம், *5.* செவ்வல்லிக் கொடி, *6.* தில்லைப்பால், *7.* பச்சைவிலா முச்சவேர், *8.* மருதமரம், *9.* மருதோன்றிப்பூ, *10.* வெட்டிவேர், *11.* அரக்கு, *12.* அலரிப்பூ, *13.* ஆடுதீண்டாப் பாளை.... வெங்காயம் ஒரு வீசை சாறு பிழிந்து ஒரு புட்டியிற் பந்தனம் செய்து கல்வத்தில் மேற்படி கெந்தகத்தைப் போட்டு இந்தச் சாற்றால் 4 ஜாமமரைக்க வெளுத்துப் போகும்.

முடிவு (பாம்புதடை)

ஆறு சிங்கத்தையும் பூட்டிக் கொள், ஆடாதே, பாடாதே, அங்கேயும் இங்கேயும் பார்க்காதே, நீடாதே, நிமிர்ந்

தோடாதே, குட்டையில் அகப்பட்ட நாகம்போலக் கிட சர்ப்பமே **ஆமென்.**

(தடை விடுதல்)

ஆதிபரனே தடைவிடு ஆனந்த சொரூபா தடைவிடு, சோதிபரனே தடைவிடு, சொல், மொழி மிகுத்தவா தடைவிடு. **ஆமென்.**

குறிப்புரை

**உரைநடை.** குஷ்டம், தேகக்குத்தல், சரீரத் தடிப்பு, காலரா பேதி, கண்நோய், சன்னி, நீரிழிவு, சோகை, பல்நோய், மேகம், சீதம், காதுநோய், பிள்ளைப்பேறு தொடர்பான நோய் முதலான நோய்களும், அகத்தியர் பெருங்குழம்பு, நன்னாரி, இஞ்சி, மாதுளம்பழம், சந்தனம் முதலான சர்பத் வகைகளும், சோப் தயாரிக்கும் முறையும், கருப்பு பூட்ஸ் பாலிஸ், வாசனைக் கருப்புச் சாந்து, இங்க் பவுடர், மந்திரம், வசியம் முதலானவையும், சில மருந்துகளின் செய்முறையும் கூறப்படுகின்றன.

## 130. (நோயும் மருந்தும் - நாடி மருத்துவம்)

**அ.** 392:636; **ஆ.** *1-51* ஏடுகள்; **இ.** 20 × 2.5 செ.மீ; **ஈ.** 5-7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

கரிமுக னடியை வாழ்த்தி கைதனில் நாடிபார்க்கில்
பெருவிர லங்குலத்தே பிடித்து மூவிரலால் தொட்டு
ஒருவிர லோடில் வாதமத்திரு விரலோடில் பித்தம்
சிறுவிரல் மூன்றிலோடில் சேத்தும நாடியாமே (1)

முடிவு

இதுகளெல்லாம் இடித்து வஸ்திரகாயம் பண்ணி முன் கசாயத்துடனே தூவித் தேன் குறுணிவிட்டு கொமட்டி, மாதுளம் சாறு விட்டு லேகியமாக இறக்கி அந்த லேகியத்துடனே சொர்ண பற்பம், அரிதார பற்பம், பூரண சந்ரோதயம்

கூட்டிக் கொள்ளச் சத்தி, விக்கல், இரைப்பு, இருமல், சயரோகம் அதுமுதலாகிய வாத பித்த சேத்துமத்துடனே கூடிய இரும்பல் எல்லா ரோகமும் குணமாகும் என்றவாறு. **இது வயித்திய நிகண்டு படிக்கு உணர்த்தியது.** இது கைகண்டது என்று செய்தோம்.

குறிப்புரை

**1-179 பாடல்கள்.** பாடல் எண்கள் வரிசையாக இல்லை. வாய்வுக்கு, ஏப்பத்துக்கு, உடம்பு தடிப்புக்கு முதலான தலைப்புகள் உரைநடையிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. எரிமேகம், அடுக்குமேகம், சன்னி 13க்கும், சுரம் 18க்கும், திரிலோக்கிய ரசம், காரீயப்பற்பம், வங்கபற்பம், வாயுவுக்கு, ஏப்பத்துக்கு உடம்புத் துடிப்புக்கு, நாகபற்பம், தேவாவமுர்த ரசம், அமுர்த விரோசனக் குளிகை, சயத்துக்கு அவிழ்தம் ஈசுபரச் செந்தூரம், அரிதாரப் பற்பம், காந்தச் செந்தூரம், நாடிக்குறிப்பு அறிதல், சயவியாதிவரலாறு, மேகவியாதி லட்சணம், சீழ்ப்பிரமேகம், இரத்தப்பிரமேகம், பெரும்பாட்டு மேகம், சந்திரப் பிரமேகம், கல்லடைப்பான் கட்டுமேகம், இரணப்பிரமேகம், முதலான தலைப்புகள் உள்ளன. இந்நூலின் *129* பாடல்கள் மட்டும் நிறுவன ஆய்வேடாக அளிக்கப் பெற்றுள்ளன.

## 131. (பச்சிலை மருந்து செய்முறைகள்)

**அ. 359:594; ஆ.** *1-13* ஏடுகள்; **இ.** 34.5 × 3.5 செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; ஏடுகளில் ஆங்காங்கே பல துளைகள்; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

காந்தம்-*1*, அரப்பொடி-*2*, கிவடான்-*2*, கடுக்கா-*4*, கையான்-*1*, வேரு, துருயிரும்பு, மிளகு-*2*, சீரகம்-*2*, பெலிமிசம்பழம்-*6*, க....ணுபடி-*4*, ஆட்டுநீர் படி-*1* சேர்த்து மாட்டுக் காலடியில் புதைத்து 30 நாளெடுத்து வேளைக்குக் கால்படி குடிக்க. மீன், புளி ஆகாது.

முடிவு

வெள்ளைப் பாஷாணம் வீசம்-*1*, லிங்கம் வீசம்-*2* இந்த மூன்று வீசத்தையும் மெல்லுசு துணியில் கட்டி... சிறுநீரில் அளாத்துக் குழப்பி முப்பது நாழி ஊறி, மேற்படி நீரால் கலக்கி கருமத்தஞ் சாறு விட்டு முப்பது நாழி அரைத்துச் சிறுபயறு உண்டை பச்சைத் தண்ணியிலிடவும். மூன்று பொழுது கொடுத்து, நான்கு பொழுது உப்பில்லாமல் சாப்பிடவும்.

குறிப்புரை

**உரைநடை.** தொடக்கத்தில் மூன்று வெற்றேடுகளும், இறுதியில் இரண்டு வெற்றேடுகளும் உள்ளன. சில ஏடுகளில் ஒரு பக்கம் மட்டுமே எழுதப்பட்டுள்ளது. துளசி லேகியம், பெரும் பாட்டுக்கு, அரையாப்புக்கு, தாளகப்பற்பம், ஆறாத புண்ணுக்கு, காந்தச் செந்தூரம், வங்கச் செந்தூரம், வெங்காரக் கட்டு, வெடியுப்புக் கட்டு, கல்லுப்புக்கட்டு, பாஷாணக் கட்டு, உளிச் செந்தூரம், சகலசுரத்துக்கும் முதலான தலைப்புகள் உள்ளன.

## 132. (பதார்த்த குண சிந்தாமணி)

**அ.** **262:482;** **ஆ.** *1-18* ஏடுகள்; **இ.** 37 × 3 செ.மீ; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; ஓரிரு 'துளைகள்;'; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம் பசுவின்பாலின் குணம்

உற்ற தோர்ன... முகத்தா லோங்கிய கருவை உணரும்
பெற்ற தோர்கடு கையும் பெரிதுள் வய்ய ரென்றே
கற்றதோ ரறிவின் மிக்கார் கழறிடப் போற்றா ரென்றால்
துத்ததோர் நெஞ்சை நீங்காத தொல்லை யாக்கே
நன்சொல்லே (1)

முடிவு பொன்னாங்கண்ணி, மணலி, பசரி

ஆர்ந்திடும் பசரி யாலே யணிலம் வெம்பித்தங் கோழை
கூர்ந்திடு மலத்தின் கட்டு கோளுன் மூத்திர தோடங்கள்
சேர்ந்திடு சேர்பம் பாண்டு தெளிந்த காமாலை தாகஞ்
சார்ந்திடு நோய் தீரு மந்தனிப் பெருமந்த மெய்த (134)

குறிப்புரை

**1-134 பாடல்கள்.** கபிலைப் பாலின் குணம், திரட்டுப்பாலின் குணம், பசுவின் தயிர், மோர், வெண்ணை, நெய், எருமைப் பால் தயிர், மோர், வெண்ணெய், நெய், ஆட்டுப்பால் தயிர், மோர், வெண்ணெய், நெய், பனஞ்சாறு, பனமுட்டி, புளிமாங்காய், தேமாங்கனி, பேயன்பழம், கருவாழைக்கனி, விளாங்கனி, நாவல்கனி, கொய்யாக்கனி, நெல்லிக்காய், பெருங்கிளா, சிறுகிளா, மணத்தக்காளி, சுண்டைக்காய், பிரண்டை, சிறு கீரை முதலான தலைப்புகள் உள்ளன. இறுதியில் *18* வெற்றேடுகள்.

## 133. பதார்த்த குண சிந்தாமணி

**அ.** 327:556; **ஆ.** *3-167 (126)* ஏடுகள்; **இ.** 24.5 × 3.5 செ.மீ; **ஈ.** 6 வரிகள்; **உ.** சிதையும் நிலை; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; ஏ. அச்சு நூலினின்றும் இச்சுவடி வேறானது.

தொடக்கம் வெந்நீர் வெண்பா

நெஞ்செரிப்பு நெற்றிவலி நீங்காப் புளியேப்பம்
வஞ்சமுற வந்த வயிற்றுநோய் - மிஞ்சவே
விழாமலக் கட்டு வெப்பேரும் மற்சுட்ட
நீராழாக்கு கொள்ள வரும் (17)

முடிவு முருதார சிங்கிக்கு வெண்பா

கருதார மனிதரிதைக் கண்டறியார் காணு
முருதார சிங்கி வண்ணடு மொய்குழலே - விருதாவாய்
சாலச்சி ரங்குபுண்ணுந் தப்பாம லாறிவிடும்
வேலொத்த கண்மட வாய் (751)

குறிப்புரை

**3-751 வெண்பாக்கள்.** இடையிடையே பாடல்கள் இல்லை. பெரும்பாலான பாடல்களின் உட்தலைப்புகள் வெண்பா என்ற பெயரை ஈற்றில் கொண்டு முடிகின்றன. கோதும்பை, மீன், மணலி, உளுவை, காரைச்செம்புக்கீரை, பலகலவிக் கீரை, பொன்னாங்காணி, முசுட்டை இலை, பசரிகீரை,

சிற்றாமுட்டி, பேராமுட்டி, முக்கா வேளை, சிறுகீரை, பசுமுன்னை, மணத்தக்காளி, வட்டக்கிலுகிலுப்பை. தழுதாழை, ஆனை நெருஞ்சி, நெருஞ்சி, பொடுதலை, குப்பைமேனி, செருப்படி, சின்னியிலை, வேலிப்பருத்தி, மூக்குறட்டை, சங்கங்குப்பி, கரிமுள்ளி, சின்னிக்கிழங்கு, தாமரை வளையம், சிறுவள்ளிக் கிழங்கு, தண்ணீர்முட்டான் கிழங்கு, வேங்கை, வேம்பு, அகத்தி, நாகல், வேதாரி, மாமரம், வாகை, சங்கம், புங்கம், அரசு, இலுப்பெண்ணை, கொடிக்கள்ளிப்பால், பசுவின் பால், பொன்னாங்காணி, தும்பை, கொத்தமல்லி, வாலு மூவையரிசி, நெய்தற்கிழங்கு. பெருவள்ளிக்கிழங்கு, காட்டுக்கருணைக் கிழங்கு, சிறு குறிஞ்சா, பெருங்கிழங்கு, புன்னைவிரை, அரிசித்திப்பிலி. நிலையாவாரை, சாதிக்காய், நேர்வாளம், சேங்கொட்டை, மாசிக்காய், கலைமான் இறைச்சி, காடை, இலந்தைப் பழம். கண்டங்கத்திரிப்பழம், விளாம்பழம், குறிமுட்டான், ஏலம். புளியங்கொட்டை, பேயன்வாழைப்பழம், துளசி, விஷ்ணு கிராந்தி, சிறுகாஞ்சொரி, செலக்கெண்டை, கிழங்கன், விரால். வெள்ளாடு, செம்பரிக்கறி, கஸ்தூரிமஞ்சள், பழவரிசி, கருஞ் சோளம், கோழி, கொடியாடு, பிள்ளையாடு, செவ்வியம். திப்பிலிமூலம், கடுகுரோகிணி, குயில், தானியவகை, தினை அரிசி, வெள்ள வவ்வால், சன்னக்கூனி, கொள்ளிக் கருவாடு. சுறாக்கருவாடு, ஐந்திணை, கவுதாரி, தவகாயம், பொன்னான் தட்டான், தாளிசபத்திரி, கருங்கோழி, அண்டங்காக்கை, சுண்ணாம்பு, கருங்குருவி, கண்டத்திப்பிலி, சிறுதேக்கு. காசுக்கட்டி, குங்கிலியம், சவ்வீரம், பச்சைக்கற்பூரம். கானாங்கோழி, இறுட்டி, கிட்டு, தவுட்டுப் புறா, மடையான். ஊர்க்காக்காய், புகையிலை, புழுகுச்சம்பா, குண்டுமணிச் சம்பா, பலவகைப்பயறு, மைச்சம்பா, கோடைச்சம்பா, காடைச் சம்பா, பிரண்டை, சடைக்கஞ்சா, நுணா இலைப் பட்டை, கடல் நண்டு, மயரிமீன், ஓமம், அக்கரகாரம், சாரம் நவாட்சாரம், சத்திசாரம், தும்படசாரம், கருஞ்சீரகம், காட்டுச் சீரகம், வெண்காரம், சாமை, மணிச்சம்பா, கொய்யாப்பழம், கொட்டை முந்திரிப்பழம், வளையலுப்பு, அயக்கறியுப்பு. கல்லுப்பு, வெள்ளைப் புறா, வெங்கலம், வாத்துக்கறி, தாம்பிரம், லவங்கம், காந்தம், செந்தூரம், செம்பு, வெள்ளைப் பாஷாணம், அரிதாரம், கெந்தகம், இரசகற்பூரம், இரச

செந்தூரம், இலிங்கம், சாதிலிங்கம் முதலானவை வெண்பா எனும் பெயரைக் கொண்ட தலைப்புகளாக உள்ளன. தூது வளை, சுரை, சந்தனம், கரும்பு, மலைத்தேன், ஆகாத பசுவின்பால், முள்ளங்கி. ஊர்க்குருவி, வயத்துக்கழிச் சலுக்குக் கறி, முயல், ஆலாத்திக் கற்பூரம், தாம்பூலம், மாம்பழம், மாதுளம்பழம், பத்தியத்துக்காகாத கறி, முந்திரி கைப்பழம், மாங்கிசவகை காட்டுப் பன்றி, ஊர்ப்பன்றி முதலியன விருத்தம் எனும் பெயரைக் கொண்ட தலைப்பு களாக உள்ளன. மருந்தாகப் பயன் படக்கூடிய மருத்துவப் பொருட்களின் குணம், அவற்றால் தீரக்கூடிய நோய்கள் கூறப்பெறுகின்றன.

## 134. பதார்த்த குணசிந்தாமணி

**அ. 465:713; ஆ.** *1-153* ஏடுகள்; **இ.** 44 × 3 செ.மீ; **ஈ.** 7-*9* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; ஏடுகளில் துளைகள் உள்ளன; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சான நூலினின்றும் இச்சுவடி வேறானது.

தொடக்கம்

திங்களில் திங்கள் முன்னாள் சென்மநாள் பகைநாள்
மங்கையர் மூன்றுநாளும் வள... மரித்த நாளும்
துங்க........ தோகையைப் புணர்வீ ராகில்
அங்க நோய்வந் தடுக்கும் ஆயுசும் மரிக்கு மன்றே (1)

முடிவு

செய்ய முன்னைப் பாதிரி சிறந்த வாகை பெருங்குமிழும்
பைய்ய சித்தாமல்லி பேராமல்லி பகர்நெருஞ்சில்
மிளகுடன் வில்வவேர்
வைய்ய கண்டங்கத்திரி வழுதலை வகைக்கு
வைக்கும்பலம் இருபது
கொய்யும்வேர் கொம்புகொடு வேலி செவியமும் கூறுகண
மூலமுடன் திப்பிலியோ டரத்தையும்
தொய்யமூக் கரட்டை தொகைக்கு வைக்கும் பலம்அஞ்சு
நொய்யதாகவே மகிடம்தூளை அடைப்பானை யுளநிறைய
... மருந்துள்ளே தூளியாகச் செலவிடு.

குறிப்புரை

**வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம்** என்ற பாடலை அடுத்து இதுபோன்ற வேறு நூல்களின் காப்புப் பாடல்கள் சில தொடக்கத்தில் அமைகின்றன. குளிர்ந்தநீர், காய்ச்சிய நீர், சுத்தநீர், அசுத்தநீர் முதலான நீரின் குணங்களும், பசுவின் மோர், காய்ச்சின மோர், பசுவின் நெய், எருமைப்பால், நெய், தயிர், பலவகை எண்ணெய் முதலான உணவுப் பொருள்களின் குணங்களும் சிறப்பாக எடுத்துக் கூறப்படுகின்றன. பிற்பகுதியில் கூந்தல் தைலம் போன்ற பலவகைத் தைல வகைகளும் அவற்றின் குணங்களும் கூறப்பட்டுள்ளன.

## 135. பதார்த்த குணசிந்தாமணி

**அ. தாள். 4:31; ஆ.** *16-118* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சான நூலினின்றும் இச்சுவடி வேறானது.

தொடக்கம்

உலகமு யாவையு முண்டு படைத்திடும் ஓங்கிய மால்மருகன்
பலகலை யாயுரு வேதமு மப்படி பகரு மந்தநற் றமிழில்
சலமுடன் அறுசுவை வர்க்கமுஞ் சாத்திட வென்னூலில்
கலகல நற்பத நடன மெனத்திரு கணபதி காப்பாமே (1)

பூமியில் முல்லை நெய்தல் புகழ்ந்திடும் தூப பாலை
தாமிது குறிஞ்சி அய்ந்தில் சன்னிக்கு மாகாச மென்னும்
காமிது வருணன் தோன்ற கடாட்ச சித்தபரத் தினாலே
நேமிது சலமு மேவி நிறைந்திடும் பூமி யெங்கும் (4)

முடிவு

வெட்டை போம்நறு வளிக்கு வெறுத்திடும் பெரும்பா டெல்லாம்
சட்டைபோம் கருவேல் வெள்வேல் தனித்திடுங் கிராணி மூலம்
ரெட்டையாம் புவியில் பித்தம் நிறைந்திடும் வெட்டை தீரும்
பட்டையாம் உசிலம் மூலம் பலபல வியாதி போமே (601)

குறிப்புரை

காப்புப் பாடல்களையும் சேர்த்து 601 பாடல்கள். மதுபான வகை, இறைச்சி வகை, மலர் வகை, காய்கறி வகை, கிழங்கு

வகை, கீரைவகை, உலோகம், நவரத்னம், வெயில், சால்வை, கம்பளி போன்ற அணியும் ஆடைகளின் நிறம் முதலான மருந்துச் சரக்குகளின் மருத்துவ குணமும், குறிப்பிட்ட சில மருந்துகள் பல நோய்களைக் குணப்படுத்தும் என்பதும், மருந்து உட்கொள்ளும் போது ஒதுக்க வேண்டிய உணவு வகைகள், நோயின் குறிகுணம், நோயறிந்து மருந்து உட்கொள்ளும் வகை முதலியனவும் கூறப்பெறுகின்றன.

## 136. பதார்த்த குணமும் மருந்து செய்முறைகளும்

**அ.** 350:583; **ஆ.** *15-37* ஏடுகள்; **இ.** 32 × 2.5 செ.மீ; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; இறுதியில் 3 ஏடுகள் பாதியாக முறிந்துள்ளன; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

பித்தமிகு மந்தம்போம் பேருலகில் மானிடர்க்கு
சீதமிகுங் கரப்பான் தீருமே பத்திரவே
அய்யர் கடுகு ரோகணிக்கு ஆனசுரம்
சீதம்போம் வயறுவிடு மெத்த வுமேமலம் (101)

முடிவு

எல்லா நோயு முடனாம் பேரிப்பு மிர்த்தகிராணி யுடன் அழலை
சொல்லா தோடும் பயிற்றியமும் தேரா தென்ன வேண்டாம்
வில்லார் புருவருத லானே மேக மனலு மிகப்போக்கும்
வல்லாரை வல்லார் கொள்வீராய் மாறுங் காணு வானுகளே
(ஏடு.34 பா.204)

குறிப்புரை

**100-215 பாடல்கள்.** *100, 205-215* பாடல்கள் சிதைவு காரணமாய் முழுமையாக இல்லை, கசகசா, முத்தக்காசு, அதிவிடையம், கடுகுரோகணி, கரிக்கோலம், செடி வெள்ளைக் கோலம், வாலுளுவை, கோஷ்டம், அக்கிரகாரம், மிருகசிங்கி, வாய்விளங்கம், சடாமாஞ்சி, அதிமதுரம், வலம்புரிக்காய், சன்னலவுங்கப்பட்டை, லவுங்கப்பட்டை, முந்திரி, பேரிச்சம், நவலோகம், நவரத்தினம், சொர்ண சஞ்சீவி, சாதிலிங்கம், அரிதாரம், நெல்லிக்காய், கந்தகம், வெள்ளைப் பாசாணம்,

கெவுரிப்பாசாணம், தொட்டிப் பாசாணம், துத்தம், துருசு, இம்பூரல், எள்ளுப்புண்ணாக்கு, புளிஇலை, வேப்பிலை, நுணா எலை, அங்க எலை, ஓரிலைத் தாமரை, பூந்தாழை, பிரண்டை, சிறுகாஞ்சொரி, நீர்முள்ளி இலை, செடிவிரை, பேய்ப்புடலை, குமின், பஞ்சவேர், சேவல் வேர், வெட்டி வேர், அவபத்தியம், கோழிமுட்டை, அஞ்சுவாத குணம் மருந்து, ஆட்டுக்கறி, பன்னியின் மாங்கிஷம், விரால் மீன், வாளை மீன், விலாங்கு, அயிரை, வாளைக் கருவாடு, நெய் தொக் கருவாடு, பறங்கிப் பட்டை, சங்கம் வேர், வெள்ளறுகு முதலானவற்றின் பயன்களும், மருத்துவக் குணங்களும் நவரத்தினச் சூரணம், சஞ்சீவிரசம், கொடிய பாடாணாம் முதலானவற்றின் செய்முறைகளும் கூறப்பட்டுள்ளன. இறுதியிலுள்ள மருத்துவம் தொடர்பான ஓர் ஏட்டில் தலைவலி, பித்தம், மஞ்சள் காமலை, நித்திரைவர முதலான வற்றிற்கான மருந்து செய்முறைகள் கூறப்பெறுகின்றன.

## 137. பலதிரட்டு சரக்கு சுத்தி

**அ. 218:428; ஆ.** *1-28* ஏடுகள்; **இ.** 17 × 3 செ.மீ; **ஈ.** *7-9* வரிகள்; **உ.** சில ஏடுகள் முறிந்தும் செல்லரித்தும் உள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

**தொடக்கம்**      **லிங்கம், வீரம், சுத்தி**

சாதிலிங்கக் கட்டி வாங்கிப் பழச்சாறும் பசும்பாலும்..... சாறும் சமன் சேர்த்துச் சுருக்குக்குடுக்கச் சுத்தி. சவ்வீரம் வாங்கி இளநீரில் ஏழு நாழிகை அவிக்கச் சுத்தி. கற்பூரம் கிழியாகக்கட்டி மிளகும் வெற்றிலைச் சாறும் இரண்டுங்கூட்டி இடித்து மூன்று நாழிகைக் காய்ச்சி அதில் குழியைப் போட்டு எடுக்கச் சுத்தி.

**முடிவு**

போடவே அப்பிரேகச் செந்தூர மகிமை
    புகல்வதற்கு நாவுண்டோ பாடுண் டோசொல்
வாடவே வெடியுப்பின் செயனீர் விட்டால்
    மற்றொன்றில் அப்பிரேகந் தழுக்கத் தாது
கூடியே அழுக்கிருந்தா லுடலிற் றங்குங்
    குடிகெடுக்கு மரோசிகமாய்க் குணமாகாது

தேடியே செந்தூரந் திறமாய்ச் செய்து
தின்றிடிலோ நோயேது செப்பக் கேளே

குறிப்புரை

**பாடலும் உரைநடையும் கலந்துள்ளன.** பாடல்களுக்கு எண்கள் இல்லை. இடையில் ஒருசில பாடல்களுக்கு எண்கள் உள்ளன. லிங்கம், வீரம், துருசு, கந்தகம், அரப்பொடி, தாம் பிரம், நாகம், காந்தம், வங்கம், துத்தம், நிமுளை, அப்பிரகம், நேர்வாளம், சேராங்கொட்டை, சிவதை, அமுக்கிரா, சிப்பி, அயச்செம்பு, சாதிலிங்கம், நெல்லிக்கந்தகம், கற்பூரம், தங்கம், வெடியுப்பு, பாடாணம், சதிரக்கள்ளி, இலைக்கள்ளி, அடம்பு, சிப்பி, அயம், ஈயம், சாயில்லியம், சோதிபில்லு, ஓர்தாமரை, தாம்பிரம், தீண்டாபாளை, பச்சைபூரம், பூரம், ரசபூரம், அபின், தாளகம், பச்சைக்கற்பூரம் முதலானவற்றின் சுத்தி செய்முறை, அவற்றைப் பயன்படுத்தும்முறை அவற்றின் பயன்பாடு முதலான செய்திகளும், குழித்தைலம், ரசக்குளிகை, நாகக் கட்டு, வெடியுப்புச் செயநீர், சுண்ணச் செயநீர், உப்பு, ரசக்கட்டு, உப்புக்கட்டு, காந்தச் சிந்தூரம், தாம்பிர பற்பம், தங்கம் இறங்க முதலான தலைப்புகளும் உள்ளன. சரக்குச் சுத்தி பற்றிய செய்திகளுடன் மருந்து தயாரிக்கும் முறைகளும் இருப்பதால் 'பலதிரட்டு சரக்கு சுத்தி' என்ற பெயரினை இந்நூலுக்குத் தந்திருக்கின்றனர். தொடக்கத்தில் சட்டஏடு ஒன்று வெற்றேடாக உள்ளது.

## 138. பல வாகடத்தில் சோதித்து எழுதிய கைவாகடம் - அட்டவணை

**அ.** **513:786;** **ஆ.** *1-65* ஏடுகள்; **இ.** 29,,. × 2.5 செ.மீ; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம் இராமபானக் குளிகை

வெள்ளைப் பாடாணம் பலம்-*1*, கௌரிப்பாடாணம் பலம்-*1* இரண்டும் சேர்த்துச் சுத்தி செய்து பாச்சான் சாறு விட்டரைத்துப் பயிறளவு உருட்டி வைத்துக் கொண்டு அனுபானம் மிளகுக் கசாயத்தில் மூன்று நேரம் கொடுப்பது.

முடிவு கண்நோய்க்கு மருந்து

பேய்மிரட்டி இலையை நறுக்கி எலுமிச்சங்காயளவு பழைய புளி கொஞ்சம் ஓர் ஈருள்ளி நறுக்கித் திராட்சிப்பொடி பலம்-5 இரும்புப்படியில் போட்டுக் காடித்தண்ணீர் விட்டுக் கரைத்துத் துணியில் வடிகட்டி, அந்தப் பொட்டணத்தை இரண்டு கண்ணிலும் பிழிந்து அன்றே முப்பது நாழிகையும் அந்தத் தண்ணியில் துவைத்து ஒத்தடம் போடவும். இந்தப்படி செய்யவும். குணமாகும்.

குறிப்புரை: பதினெண்பேர் பாடிய பலவாகடத்தில் சோதித்து எழுதி வைத்த கைவாகடம் அட்டவணையாக எழுதியது

**'அல்லல்போம் வல்வினைபோம்'** எனும் வேறுநூலிலிருந்து எடுத்தெழுதிய கடவுள் வாழ்த்துப் பாடலும், **'அண்ட மெனும் பரப்பிருமம் அருளே போற்றி'** எனத் தொடங்கும் குரு வாழ்த்துப் பாடலும் காப்புப் பாடல்களாக அமைந்துள்ளன. இரசகற்பூரக்கட்டு, சகலமேகத்துக்கெண்ணெய், அகத்தியர் வெண்ணெய், தங்கவெண்ணெய், ஆறுவகைச் சூரணம், பாரிசாத வில்வாதி லேகியம், குக்குடாதிச் சூரணம், சிவனார் வேம்புச் சூரணம், வயிற்றில் கட்டிக்கு எண்ணெய் முதலான 65 தலைப்புகள் உள்ளன. ஒரு பக்கத்திற்கு ஒரு தலைப்பு என்ற முறையில் ஓர் ஏட்டில் இரு தலைப்புகள் இடம் பெற்றுள்ளன. பதினெண் சித்தர்கள் அருளிய பல நூல்களிலிருந்து திரட்டித் தொகுத்து எழுதப்பட்ட நூல் என்பதை நூற்தலைப்பும், நூற்செய்திகளும் காட்டுகின்றன.

## 139. பிரமமுனி கருக்கிடைச் சூத்திரம் 385

**அ.** 212:422; **ஆ.** *1-98* ஏடுகள்; **இ.** 13 × 4.5 செ.மீ; **ஈ.** *14-15* வரிகள்; **உ.** நன்று; ஒரு சில ஏடுகளில் துளைகள்; **ஊ.** மிகக் கடினம்; பிழை மிகுதி; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

தானான வயித்தியத்தில் ரெண்டுபத்து நூறு
சாத்தினேன் அதைக் குறுக்கிப் பத்து நூறு
தேனான இதைக்குறுக்கிமுன் னூற்றறுவத்தாறு
திரட்டியே கருவெல்லாந் திறந்து சொன்னேன்

பானான மானிடர்கள் பிழைக்க வேண்டிப்
பரிபாஷை பரவாமற் பாடி னேனே (2)

முடிவு

வாரான கருவெல்லாம் வெளியாய்ச் சொன்னேன்
வாதமொடு வயித்தியமும் வகையாய்ச் சொன்னேன்
கூரான செந்தூரங் கனங்கள் செயநீர்
குருமுடிக்கும் வகையெல்லாங் குறிப்பாய்ச் சொன்னேன்
வாரான அஞ்சனமுந் திலதஞ் சொன்னேன்
வசியமொடு அளப்புவித்தை மாரணமுஞ் சொன்னேன்
ஆறான சூரணமோடு வாசி யோகம்
அடங்கிநின்ற பூரணமு மறியச் சொன்னேன்
தேரவே வழலையுட கருவுஞ் சொன்னேன்
செப்பினேன் கருக்கிடைசூஷ் த்திரந்தான் முற்றே (385)

பிற்குறிப்பு

பிரமமுனி சூஷ்த்திரம் முன்னூத்தி எண்பத்தஞ்சும் சுபானு வருடம் தையி மாசம் 15 ஆம் தேதி, திங்கட்கிழமை.... நட்சத்திரம் யேகாதேசியில் யெழுதி முகிழ்ந்தது. முற்றும். ராமசாமி எழுதிய வைத்தியம்.

குறிப்புரை: பிரமமுனி நாயனார் அருளிச்செய்த நூல்

**சீரருளான சோதி சின்மய ஞானசோதி** என்ற காப்புப் பாடலையும் சேர்த்து 385 பாடல்கள். நூலின் தொடக்கப் பாடலான இரண்டாம் பாடலில் ஓர் அடி குறைந்தும், இறுதிப் பாடலில் ஒரடி மிகுந்தும் காணப்படுகின்றன. **கருக்கிடை சூஷ்த்திரம்** என்ற நூற்பெயர் நூல் இறுதியில் மட்டுமே இடம் பெற்றுள்ளது.

170:363 என்ற எண்ணிலமையும் நூல் இதுபோன்றதே. ஆயின் இதில் 385 பாடல்களும், அதில் 397 பாடல்களும் உள்ளன. இறுதிப் பாடல்கள் ஒன்றுபோல் இல்லை.

பிரமமுனி வைத்திய சூத்திரம் (ச.322.C.), பிரம்மமுனி கருக்கிடை சூத்திரம் 400 (ச.314.a), பிரமமுனி சூத்திரம் 360 (ச.36.a, ச. 162.a, ச. 317.J,) என்ற நூல்களும் இதுபோன்றவையே.

*170:363*, ச.314.a, ச.317.J என்ற நூல்களின் இறுதிப பாடல்கள் ஒத்து அமைந்து முறையே *397, 400, 401* என்ற எண்களைப் பெறுகின்றன.

இச்சுவடி நூல் ச.36, ச. 322.C, என்ற எண்களையுடைய நூல்களின் இறுதிப் பாடல்களுடன் ஒத்து அமைகிறது. இவை முறையே *385, 383, 383* என்ற எண்களைப் பெறுகின்றன.

அச்சுநூல்கள்-பிரமமுனி கருக்கிடைச் சூத்திரம் *380 (1951)*, பிரமமுனி கருக்கிடைச் சூத்திரம் *386 (1890)*. பிரமமுனி வாகடம், பிரமமுனி வாதம் *100*, பிரமமுனி வைத்திய சூத்திரம், பிரமமுனி வைத்திய சூத்திரம் *100*, பிரமமுனி வைத்திய சூத்திரம் *700* முதலியன இவர் இயற்றியவை.

வெற்றிகரமான வாழ்க்கை வாழ்வதற்கு ஆலோசனை கூறும் இந்நூல் குருவினுடைய நெறிப்பாடும், உண்மை அறிவும் இறைவனை அடைய துணைபுரிவன என்பதை வலியுறுத்துகிறது.

## 140. பிரமமுனி கருக்கிடைச் சூத்திரம் 250 இல் சித்து

**அ.** **382:625;** **ஆ.** *1-6* ஏடுகள்; **இ.** 30 × 3.5 செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சற்றுக்கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் வேறிடங் களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பத்தாக யென்னூலில் கருக்கிடை களெல்லாம்
பாடிவிட்டே னிகண்டாகப் பழுதில் லாமல்
பத்தாக அடிக்கியே சூஷ்ஷா சூஷ்சம்
பாடினே னவமணிகள் கோத்திட் டாப்போல்
சித்தாகும் திசதீட்சை வெளியாய்ச் சொன்னேன்
முற்கருவும் பிற்கருவு முரைத்திட் டேனே (2)

முடிவு கருவில் அஞ்சனமை

...இம்மையை யெடுத்துச் சுடலை நெயிவிட்டு
கலப்பாலத்தின்மேலரைத்து அஞ்சனா தேவி மூலம்
1008 வோதி, வாலை 1000 ஓதி அனுமனுட
மந்திரமோது; தியான மெல்லா மவுனமோது.

குறிப்புரை     பிரமாசி நாயனார் கருக்கிடை சூஸ்த்திரம் 250 இல சித்து எடுத்து எழுதினது.

'ஆதியென்ற பூரண மெய்ஞ்ஞான சோதி' என்ற காப்புப் பாடல் முதல் பாடலாக அமைகின்றது. அதன்பின் 2-17 பாடல்கள். சில உரைநடைப் பகுதிகள். அஞ்சனம், பாடாணம், அண்டம், அட்டகர்ம வித்தை, பஞ்சபூதச்சரக்கு விபரம், சூலை பதினெட்டுக்கும் தைலம், சூலைக்கி மூலிகைச் சூரணம், குழந்தைகளுக்குச் சன்னி, மாந்தம், பித்தவாத சுரத்துக்கு, வாதவலி முதலான செய்திகள் உள்ளன.

## 141. பிரமமுனி வைத்திய சூத்திரம்

**அ.** **170:363; ஆ.** *1-57* ஏடுகள்; **இ.** 43 × 3.5 செ.மீ; **ஈ.** *6-8* வரிகள்; **உ.** மிகவும் நல்லநிலை; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

சீரரு ளான சோதி சிவமயம் ஞான சோதி
ஆரணி கொன்றை சூடி அரவணிந் தானே போற்றி
வாரண முகத்தான் பாதம் வணங்கியே வைத்திய நூலைக்
காரண மாகக் கூறக் கணபதி காப்ப தாமே (1)

தானான வயித்தியத்தி ரண்டுபத்து நூறு
    சாற்றினே னதைக்குறுக்கிப் பத்து நூறு
தேனான இதைக்குறுக்கி முன்னூற் றறுபது
    திரட்டியே கருவெல்லாந் திறந்து சொன்னேன்
வானான வயித்தியத்துக் குறுதி மெத்த
    வாச்சுதே யிந்நூல்தான் கிட்டா தப்பா
பானான மானிடர்தான் பிழைக்க வேண்டி
    பரிபாஷை யில்லாமல் பாடினேனே (2)

முடிவு

தெளிவான ஆயிரத்தைக் குறுக்கி நன்றாய்த்
    திறமான முன்னூற்றுச் சில்லானம் பாரு
களிவான கருவெல்லாம் வெட்டவெளி யாகக்
    கருவோடே சொல்லிவிட்டேன் கண்டு பாரு

வளியான கருவையெல்லாம் வெளியாய்ச் சொன்னேன்
வாதமொடு வயித்தியமும் வகையாய்ச் சொன்னேன்
அழியாத பொருளையெல்லா மிதிலே சொன்னேன்
அடங்கிநின்ற கருக்கிடைச்சூத் திரந்தான் முற்றே (397)

குறிப்புரை

**1-397 பாடல்கள்.** ஒரு மருந்துக்கு ஒன்றுக்கு மேற்பட்ட செய்முறைகளும் உள்ளன. முப்பு, மேகராசாங்க லேகியம், முக்கூட்டெண்ணை, மேகராசாங்க எண்ணை, சண்டமாருதக் குழம்பு, வாதமெண்பதுக்கும் அஞ்செண்ணைய்த் தயிலம், அசுவ வில்வாதியெண்ணை, மகாமேக கிருதம், ஏழுவகை பீனிசத்துக்கு எண்ணை, கர்ப்பநோய்க்கு எண்ணை, விச முஷ்டித் தயிலம், வாதத்துக்குக் கொம்மட்டிக்காய் பதங்கம், சயமந்தார காசத்துக்கு லேகியம், அரிதார பற்பம், பவள பற்பம், சிங்கி பற்பம்,நிலவாகைச் சூரணம், சிவன்வேம்புச் சூரணம், சூதக வாய்வுக்கு, பத்திய முறிக்குப் புளி உப்புக்கூட்ட, பதினெட்டு குட்டத்துக்கு, மேகம் இருபதுக்குச் சூரணம், அமுக்கிராச் சூரணம், அமுதாதியுண்டை, சுராங்கிச மாத்திரை, வயித்திய புத்தி, செயநீர், புண்களுக்குப் பொடி, சண்ட மாருதக் குடோரி, மகாதிராவகம், தாம்பிர சுத்தி, பாசாணக் கட்டு, சாதிலிங்கக் கட்டு, லிங்கமெழுகு, தேசிவித்தை, குரு முறை செந்தூரம், லேகியம், தயிலம், கைபாகம், பாஷாண மெழுகு, சாதிலிங்க மெழுகு, மேகம், குட்டம், சூலைக்குச் சேங்கொட்டை, வில்வாதிக் குழம்பு, சூதக வல்லாதி எண்ணெய், சயத்திற்கு ஆடாதோடை லேகியம், தந்த நோய்க்கு உப்பு, பல்வலிக்குக் கஷாயம், சூசிகா வாயுவிற்கு லேகியம், காரசாரம் முப்பு விபரம், வாயுவுக்குச் செந்தூரம், சண்ட மாருதக் குழம்பு, ஆமையோடு பற்பம், சிங்கி பற்பம், பிள்ளை இல்லாதவர்களுக்கு எந்திரம், ஆக்கிரானம், ஆறாப் புண்ணுக்குப் புகை, கெற்ப ரோகத்திற்கு எண்ணெய், மகோதரம், சூதகத்தில் உதிரங்காணுதற்கு சூசிகா வாயுவுக்குப் பறங்கிப் பட்டைத் தைலம், அஷ்த்திச் சூட்டுக்குச் சூரணம், சாள கண்டக் குடோரி, அமுரி சூட்ச வாதத்துக்கும் ஏறவாதத் துக்கும், மேகத்துக்கு, மேகமிருபதுக்கும் புங்கம்பூ குடசம், மேகத்துக்குக் கஸ்தூரி எண்ணெய், அசுவகெந்திச் சூரணம், ஆடாதோடை லேகியம், ஆறுவகைச் சூரணம், அமுதாதி

உண்டை, சித்தாதி லேகியம், சுராங்குச மாத்திரை, வெடியுப்பு செயநீர், எமசண்டமாருதகுடோரி, அப்பிரகச் செந்தூரம், தாம்பிர சுத்தி, சூத பற்பம், பாசாணக்கட்டு, சாதிலிங்கக் கட்டு, செந்தூரம், காரீய பற்பம், தாம்பிர பற்பம், வழலைக் கற்பம், நாக பற்பம் வெள்ளெருக்கின் தயிலம், செந்தூரம் வைப்பு, சுண்ணக் குகை முதலான தலைப்புகள் உள்ளன. வெற்றேடுகள் தொடக்கத்தில் இரண்டும், இறுதியில் ஒன்பதும் உள்ளன.

## 142. பிள்ளைப்பிணி மந்திரமும் மருத்துவமும்

**அ.** 481:730; **ஆ.** *2-49* ஏடுகள்; **இ.** 21 × 2.5 செ.மீ; **ஈ.** 4-5 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

பிள்ளை பிறந்தது முதலாகப் பனிரெண்டா நாள் முதலாகச் செண்டினி யென்கிற தேவதை பிடிக்கும். அதன் குணம்- முலை குடியாது. அழும். கால் கை அசக்கிக் கொள்ளும். முறி முறிக்கும். அதற்குப் பெலி உளுத்தப் பருப்பு வடை சுட்டுக் கறுப்புச் சோறும், வெள்ளைச் சோறும் நெய் வாழைப்பழம் மதுமாங்கிஷம் தூபதீபம் செவ்வலரிப்பூவும் சந்தனம் இதுவெல்லாம் கூட்டிச் சாயங்காலத்திலே ஊருக்குக் கிழக்கே போடவும்.

### முடிவு பாலில்லாதவர்களுக்கு

பாதாள பேதியும், அம்மான் பச்சரிசியும் வெள்ளைப் பூண்டும் மோடியும் அரைத்து முள்ளிட்டுப் பனை வெல்லம் கொடுத்து மூன்று நாளுக்குக் கொடுக்கவும். பாலுண்டு (ஏடு. *47*).

### குறிப்புரை

**உரைநடை.** குழந்தை பிறந்த முதல் *12* நாள், *1-12* மாதங்கள், *1-12* ஆண்டுகள், முதல்நாள், முதல் மாதம், முதல் ஆண்டு முதல் *12* ஆம் நாள், *12* ஆம் மாதம், *12* ஆம் ஆண்டுவரை குழந்தைகளைப் பிடிக்கும் தேவதைகளின் பெயர்களும்,

அதனால் குழந்தைகளுக்கு ஏறபடும் தொலலைகளும், அவை தீர மேற்கொள்ள வேண்டிய மந்திர மருத்துவ முறை களும் கூறப்படுகின்றன. அடுத்துப் பிள்ளைகளுக்குப் பிணி உண்டானாலும், காய்ச்சலுக்கும் மருந்து, பிள்ளைகளுக்குக் குடிநீர், சுரத்துக்கு மருந்து, கழித்த பிள்ளைகள் எதிர்ப் பட்டால் அதற்கு, பிள்ளைகள் இருமலுக்கு, சன்னி தோசத் துக்கு, குளிர் தோசத்துக்குக் குணம், பஞ்சாச்சர மாறல் குழந்தைகள் வாந்தி பண்ணினால் அதற்கு முதலான தலைப்புகளில் செய்திகள் கூறப்பட்டுள்ளன. 48, 49 ஆவது ஏடுகளில் குழந்தைகளுக்குச் **சடாக்ஷர மந்திரம்** எனும் தலைப்பில் மந்திரங்கள் கூறப்பட்டுள்ளன. இறுதியில் சுமார் 20 வெற்றேடுகள் உள்ளன. முதல் ஏடும், முடிவுற்றதற்கான குறிப்பும் இல்லாதிருப்பினும் இதனை ஒரு முழுமையான நூலாகக் கொள்ளுதற்கியலும்.

## 143. பீரங்கி 100

**அ. தாள்.** 3:24; **ஆ.** *1-36* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

முற்குறிப்பு

என்சையன் ப. ஆசிர்வாதம் படித்துவருகின்ற வர்ம சாஸ்திர ஏடு. நவம்பர் *1915* - மருவத்தூர்.

தொடக்கம்

திருமுருகு கனந்தன் பாதம் சென்னியி லேந்திக் கொண்டு
கருவுறு நூலை யானும் காசினி தனிலே விள்ள
பெருகநூல் சொல்ல வில்லை பேணியே இந்த நூலை
பருகியே சித்த ரெல்லாம் பார்த்தென்னை மகிழ்ந்தா ரையா (1)

முடிவு

ஆணை சொல்வள மைக்குநீ அறிந்துமே நடந்தா யானால்
பேணியே செய்த தெல்லாம் பிசகாமல் பலிக்கும் சொன்னேன்
நீணிலந் தனிலே மக்காள் நிச்சய நூலிது என்று
பேணியே ஏந்திச் சொன்னோம் பிசகில்லா நூறு முற்றே (100)

குறிப்புரை

**1-100 பாடல்கள்.** பல்வேறு வர்மங்களின் குறி குணங்களும், அவற்றுக்கான மருந்துகளின் செய்முறைகளும், உடம்பில் வர்மங்கள் உள்ள இடங்களும் கூறப் பெறுகின்றன. உடல் சுத்திவர்மம், பூணூல் வர்மம், ஆந்தை வர்மம், வெள்ளை வர்மம், இசைவு வர்மம், குறிவர்மம், உறுமி வர்மம், முட்டு வர்மம் முதலான வர்மங்களின் குறிகுணங்கள் சுட்டப் பெற்று, அவற்றால் ஏற்படும் நோய்களும், அந்நோய்களுக்குண்டான எண்ணெய், தைலம் முதலான வற்றின் செய்முறைகளும் கூறப் பெறுகின்றன.

## 144. பீரங்கித் திறவுகோல்16

**அ. தாள்.3:25; ஆ.** 37-42 பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

தொடக்கம்

அண்டசரா சரங்கடந்த அருளைப் போற்றி
ஆனந்த பராபரத்தின் அருந்தாள் போற்றி
குண்டலிக்குள் மறைந்துநின்ற குகனைப் போற்றி
குருபரனை அனுதினமும் குறியாய்ப் போற்றி (1)

பூரணமாய் பீரங்கி நூறுக் குள்ளே
பூட்டிவைத்தேன் வர்மத்தின் புதுமை யெல்லாம்
காரணமாய் சூத்திரந்தான் ஐம்ப துக்குள்
கைகண்ட மருந்துவகை கருத்தாய்ச் சொன்னேன்
தாரணியோர் பிழைப்பதற்காய்த் திறவு கோலைச்
சாற்றுகின்றேன் பதினாறில் அடக்க மாக
ஆரணத்தின் உட்பொருளில் அடவாய் நின்ற
அனாதியதின் அருந்தாள்தான் இதற்குக்குறி
யைக்கேளு (2)

முடிவு

போகுமுன்னே கெடுவதிலே இளக்கிக் கொள்வாய்
பூட்டெல்லாம் திறந்துவைத்தேன் புதுமை யாக
ஆகுமென்ற புத்தியுடன் இருந்து தானால்
அஞ்சாதே அறையாதே அடுத்துப் பாரு

ஏகுமுன்னே ஈஸ்வரனைத் தவஞ் செய்து
என்குருவே தஞ்சமென்று எழுந்து போவாய்
வாகான அஞ்செழுத்தால் ஓதிப் போடு
வளமான திறவுபதி னாறு முற்றே (16)

குறிப்புரை

**1-16 எண்சீர் விருத்தப் பாக்கள்.** *பீரங்கி நூறு என்ற பாடலில் கூறியுள்ள முறைகளில் சிறந்ததைச் சுருக்கமாகக் கூறுகிறது. ஒருவருக்கு வர்ம முறையில் எங்ஙனம் மருத்துவம் செய்ய வேண்டும் என்பதும், வர்ம பரிகாரம் பற்றிய குறிப்புகளும் கூறப்பெறுகின்றன.*

## 145. புண்ணிய சாஸ்திரம்

**அ.** 294:519; **ஆ.** *1-47 (31) ஏடுகள்;* **இ.** 19.5 × 3.5 செ.மீ; **ஈ.** *8-10 வரிகள்;* **உ.** *ஓரளவு நல்ல நிலை; இறுதி ஏடு சற்றுச் சிதைந்துள்ளது; சில ஏடுகளில் துளைகள் உள்ளன;* **ஊ.** *படிக்கக்கூடிய எழுத்து;* **எ.** *குறை;* **ஏ.** *அச்சாகாதது.*

மூலமெனு முதற்பொருளா முத்தநடு வனையில்
மூதண்ட மானதொரு பிரமமதுக் கப்பால்
ஞாலமெனுந் தவமுடைய சத்திபதி மேலே
நாதாந்தப் பெருவெளி யிண்டுவொளியின்கீழே
நீலமிகு நெருப்பாறும் யிறப்பால் தப்பால்
நிறைந்த பரிபூரண மாய்நிர்க்கள மதாகி
சீலமிகுந் தவமுடையோ ரிருதயமே தானாய்
சாத்துநின்ற பரமகுரு சீர்பாத மந்துணையே (1)

முடிவு

பாரப்பா மனதுகொண்டு அறிவில் சென்று
பரிவான மூலமடா மூலா தாரம்
நேரப்பா நின்றதொரு ஆரா தாரம்
நிலையான நடுமய்ய மேலா தாரம்
வீரப்பா கொண்டஅரி தாரந் தாரம்
மெய்யான தாரமடா விஞ்சை விஞ்சை
கூரப்பா குருவான விஞ்சை மூல
கூர்மை யுடமை மூலங்குறி யாய்க் காணே (177)

குறிப்புரை: **ராம தேவநாயனார் பூசாவிதி சிவயோகம் 200** இத்தலைப்பு முதல் ஏட்டில் இடதுபக்க ஓரத்தில் சிதைந்த நிலையிலுள்ளது.

**1-179 பாடல்கள்.** பூசைவிதி சக்கரம், பூசையில் கட்டும் பொருள், மூலிகை குணம், வசியம், அஞ்சனம், சாஸ்திர விபரம், பூமினாதகுரு, வெள்ளிவித்தை, நிஷ்டை விபரம், பிரமநிஷ்டை, மாலினிஷ்டை, குதிரநிஷ்டை, வல்லாரை கற்பம், கடுக்காய் லேகியம், தயிலம், திலதம், நந்தியுப்பு, குரு, லிங்ககுரு, லிங்கந்தார்குரு, ஞானம் முதலான உட்தலைப்புகள் உள்ளன.

## 146. புலத்தியர் ஞானகற்பம் 222

**அ. தாள்.2:20; ஆ.** *70-118* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது *(1936)*.

தொடக்கம்

சீரு லாவிய தென்பொதி கைவாழ்
மேரு ளும்புகத் தீச ரருளினால்
பேரு ளும்புலஸ் தீசர் விளக்கிய
கார்ம தம்பொழி யானைப் பணிகுவாம் (1)

சீரணிந்த செழும்கடை மேவிய
நார ணிபுவ னாம்பிகை பொற்பதம்
வார ணிந்த மதிமாமலர் சூடிய
கார ணிகம லம்தனைப் போற்றுவாம் (2)

முடிவு

சுருக்க ஞான சுகாதீதச் சூத்திரம்
பெருக்க வாழி பிராணாலயம் சூழ்நகர்
குருக்க ளாசான் குருமுனி தான்பதம்
யுருக்க மாயுடல் உற்பகம் வாழ்த்துவாம்.

ஞானகற்பம் *222* ம் முற்றுப் பெற்றது.

குறிப்புரை: புலஸ்தீசர் விளக்கிய ஞானகற்பம்-222

*1-10* திங்கள் வரை ஏற்படும் நோய்கள், பத்தியம், அபத்தி யத்தால் வரும் துன்பம், கற்பமுணர நாள், தீக்ஷை கெங்கை

மதியாலறிவதெதனால், குரு நூலிரு நூற்றின் மகத்துவமும், குரு கடாட்சம் பின் நூறு பாடியது, *1-10* ஆண்டு வரை யோக, கற்பப் பயிற்சியினால் ஏற்படும் மனநிலை ஆற்றல்கள், உப்பின் பெயர், வழலையுப்பு, பொய்யர்கள், சுண்ணஜயநீர், யோக, தாரண, மூலிகைகள் முதலான தலைப் புகள். கற்பங்கள் மனிதனுடைய நோய்களை நீக்குவதோடு அவன் மனம் வலிமையுற்று ஞானவழியை அடைய முடியும் என்பதையும் காட்டுகின்றன. புலத்தியர் கற்பம் *300* (*3* காண்டங்கள்) என்ற நூலும் உண்டு.

## 147. புலத்தியர் வைராக்கிய சதகம்

**அ. தாள். 2-19; ஆ.** *19-70* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சானதாகத் தெரியவில்லை.

**தொடக்கம்**

**வான்புவியும் மேரும்வாருதியும் சூழுலகில் ஆய்ந்திலகும்**
**தேன்பொழி யும்மதி ரவியைச் செப்பவே**
**யான்புவியில் வைராக்கிய சதகம் செப்பவே**
**மதுரைத்தமிழ் நூறும் ஐராவதம் பெருவாராம் (1)**

**முடிவு**

**நிறுத்தினோர் கோடி குன்றின்மேல் தீபம்**
**மணிவிளக் கெரிய குவலயமா தீதம்**
**சோதி கொள்கையால் ஞானகற்பம் சாதனை**
**நூற்றிரு பரகெதி யில்வாழ் மூன்றே (104)**

பிற்குறிப்பு

மஹா மறைத்துவம் பொருந்திய அகஸ்திய மாமுனியின் அன்புற்ற சீஷராகிய (சிஷ்யன்) புலஸ்தியரருளிச் செய்த வயிராக்கிய சதகம் *104* முற்றிற்று.

குறிப்புரை: புலஸ்த்தியனாரருளிச் செய்த வயிராக்கிய சதகம

**1-104 பாடல்கள்.** *அமுரிஅகார சித்தியறிய, அகார விந்தை யஞ் சந்திமாறல், சரக்குப்பு சட்டையுரிதல், அ-உ-மாறல்-காலை, மாலை, சிவசத்தி தெரிசனம் உடலுயிரென்றறிதல்,*

காரசாரம்-வாதிகள் திறவு கோலறிதல், அகார தீட்சை, உகார தீட்சை-சூட்சும தேகமறியவும், விந்தமுரித்தைலம்-உகார உருசார மறியவும், சத்திசிவ மிரண்டையும் தொழுவது, அடுநடு முடியறிதல், அகஸ்தியர் புலஸ்தியருக்கருளிசை, பதினெண் சித்தருக்கின்னூல் வயிரம், கற்பச் சாதனை-பத்தியம், சத்தி பூசையறிதல், பூநீராவது மூலப்புளி, அண்டக் கல் உப்பறிதல், புளியென்பது - அமுரியென்பது, அமுரித் தைலம், வெடியுப்புச் சுண்ணம் முதலான தலைப்புகளில் மருத்து வச் செய்திகள் யோகத்தின் துணையுடன் கூறப் பெற்றுள்ளன.

## 148. புலிப்பாணி சுரநூல் முதலியன

**அ.** 575:932; **ஆ.** *21-25* ஏடுகள்; **இ.** *22.5* x *2.5* செ.மீ; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

முதற்குறிப்பு

*1100* வருசம் புரட்டாசி மாதம் *11* ஆம் தேதி.

தொடக்கம்

தானென்ற அசுபதிநாள் முதற்கா லப்பா
தயவாக ஒன்பதுநாள் சுரமே தீரும்
தேனென்ற ரண்டாங்கால் கொல்லு மப்பா
திரமான பத்தாநாள் மரண மாவான்
கோனென்ற மூன்றாங்கால் பதினைந் தாகும்
குணமாக நாலாங்கால் மரணஞ் செய்யும்
வானென்ற பரணிதனில் முதற்கால் மூன்று
வளமான ரெண்டாங்கால் மாலேபா மென்னே (1)

முடிவு

தீதான சனிநாள் ரேவதியு மாகாது
தீங்குவரும் இன்னாளில் நோய்கள் கண்டால்
வாதான நமனுக்கு அறுதி யாகும்
வந்தநோய் தீராது கொல்லும் நோவும்
தாளான வைத்தியரே நூலைப் பார்த்துத்
தயவாக வைத்தியங்கள் செய்ய வேணும்

கோனான போகருட கடாட்சத் தாலே
கொற்றவனே புலிப்பாணி சொன்னேன் பாரே (16)

பிற்குறிப்பு

சுரநூல் முற்றிற்று. 1914 ம் வருசம் பங்குனி மாசம் 2 ஆம் தேதி தேவிசகாயம்.

குறிப்புரை: சுரநூல்

**1-16 எண்சீர் விருத்தப்பாக்கள்.** 27 நட்சத்திரங்களில், நட்சத்திரப்பாதங்களில் சுரம் ஏற்படின் எத்தனை நாட்களில் தீரும் அல்லது கொல்லும் என்பதும், வார நாட்கள் ஒவ்வொன்றுடனும் எந்த எந்த நட்சத்திரங்கள் சேர்ந்தால் மரணத்தை ஏற்படுத்தும் என்பதும் கூறப்படுகின்றன. அடுத்துப் பயித்தியம் தலை கொண்டதற்கான மருந்தின் செய்முறையும் .... குளிகையின் செய்முறையும் கூறப் பெறுகின்றன. அடுத்துள்ள இரண்டு ஏடுகளில் அமையும் **தெச்சணாமூர்த்தி சுரநூல்** என்ற நூல் **புலிப்பாணி** சுரநூலி லுள்ள செய்தியினை ஒத்தே பாடலிலும் உரைநடையிலும் அமைகின்றது. அடுத்துத் தெஷ்ணாமூர்த்தி பூரண சூஸ்த்திரம் என்ற நூலின் 4 பாடல்கள் ஓர் ஏட்டில் உள்ளன.

## 149. புலிப்பாணி பலதிரட்டுச் சூத்திரம்

**அ.** 585 : 943; **ஆ.** 1-8 ஏடுகள்; **இ.** 25 × 2.5 செ.மீ; **ஈ.** 6-8 வரிகள்; **உ.** சிதையும்நிலை; துளைகள்; முறிவுகள்; **ஊ.** தெளிவின்மை; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

**தொடக்கம்**

**ஆமென்ற வசியமொன்று மையைக் கேளு**
**அமைவான கஸ்தூரி மஞ்ச ளப்பா**
**வாமேநீ ...யென்ற காந்தந் தானும்**
**வளமான கோரோசனை கிராம்பு கூட்டித்**
**தாமே நீ பச்சையென்ற பூரத் தோடு**
**... ...காய் வராகன் கால்தான்**
**நாமேநீ யிதுவெல்லாம் பொடியாய்ச் செய்து**
**நாயகனே வேண்டுநீ .... பரத்தே (1)**

முடிவு

தூளைவிட்டு இன்னமொன்று சொல்லக் கேளு
துலக்கமுள்ள பாளைவித் தெடுத்து வந்து
பாளையென்ற வி.... .... ...டும்
பண்பான பூமிச்சக்க ரையின் மூலம்
காளையென்ற பூனையுட காலி வித்து
கனிவாக வகைவகை ... ...
... வின்பால் தன்னா லாட்டி
அடைவாகப் பன்னிரண்டு நாள்தான் கொள்ளே (40)

குறிப்புரை: புலிப்பாணி முனிவர் அருளிச் செய்த பல திரட்டு சூத்திரம்

**1-40 பாடல்கள்.** முதல் பத்து பாடல்களில் சிதைவு மிகுதி. மை, பொடி, பூநீர், சுண்ணம், சின்மயம், தூலமுப்பு முறை, ரசக்கட்டு, அஞ்சனம், வசியம், மாரணம், பேதனம், சித்தி முதலான செய்திகளும் சூத்திரம் *18* என்ற தலைப்பு ஒன்றும் உள்ளன. பத்து ஏடுகளும் *1-66* பாடல்களும் உள்ளன. இடையிடையே பாடல்கள் இல்லை. பஞ்சவிசம நாடி வகை, பூரணம், மாந்தியர் திலதஞ் சக்கரம், வசிய மோகம், மோகன வசியம், வித்தை, மவுனவாலை, தோஷம், பூரம், புனுகு, வாசி, சமாதி, கட்டு, சூதம், லேகியம் முதலான செய்திகள் இவ்வேடுகளில் உள்ளன.

## 150. புலிப்பாணி பலதிரட்டு நூல்

**அ.** 516 : 793; **ஆ.** *1*-20 ஏடுகள்; **இ.** 30 × 3.5 செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

தீக்ஷையிலே முப்பத்தி ரெண்டு நாலுஞ்
சித்தருக்காய்ப் பாடிவைத்தேன் சூஸ்த்திர திறத்தால்
தீக்ஷையிலே தூலமொடு மூல சூக்ஷசம்
திடமாக மூன்றுவகை தீக்ஷை மார்க்கம்
தீக்ஷையிலே முதற்தீக்ஷை நாலு மோது
தெளிவான சிந்தையுத்தால் மூல மோது

தீக்ஷையிலே மறுபடிதான் சூக்ஷ்ச மோது
திறமாகத் தோன்றிடவே செப்பி னேனே: (1)

முடிவு

அழுந்துவார் சாஸ்திரத்தை நிசமென் றெண்ணு
அடவான பெரியோரை வணங்கிக் காணு
நழுந்துவாய் பொய்யென்றுஞ் சொல்லொண் ணாது
நாதனுக்கும் ஆளாக வேணு மானால்
கொழுந்துபோல் தீபத்தை நோக்கிப் பாரு
கோபமொண்ணு மாகாது குணமே வேணும்
செழுந்திருக்கும் போகரிட கடாட்சத் தாலே
சோதிக்கும் புலிப்பாணி பாட்டு முத்தும் (100)

குறிப்புரை: புலிப்பாணி நாயனாரருளிச் செய்த பலதிரட்டு நூல்

**1-100 பாடல்கள்.** வசியம், அஞ்சனம், அய்ங்கோலம், மாரணம், பேதனம், வித்து வேஷணம், புதைவைப்பு, பார்வைமை, குறி சொல்ல, லேபனம், கற்பம், ரசபற்பம், ஸ்ரீபுருஷர் வசியம், புகைவிரடைக் காச்சல், வாந்திபேதி, துருசுண்ணம், செந்தூரம், தாளகச் சுண்ணம், சலாசத்துப் பற்பம், அஷ்சமத் தயிலம், பித்தளை வேதை, சிவகிரி, எட்டிப்பாலை, கெந்தி முதலான தலைப்புகள் உள்ளன. **'வினோதம் சொக்கும் பொடி'** என்ற தலைப்பிலான செய்தி உரை நடையாக இறுதியில் தரப்பட்டுள்ளது. புலிப்பாணி பல திரட்டு ஜாலம் (ஜாலத்திரட்டு), புலிப்பாணி முனிவர் பல திரட்டு, ஜால சிதம்பர பூஜை என்ற நூல்கள் உள்ளன.

## 151. பூரண சூத்திரம்

**அ.** 325:554; **ஆ.** 33-87 ஏடுகள்; **இ.** 29 × 31 செ.மீ, **ஈ.** 7-8 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

மறைநாலு வேதமுதலச் சாத்திரங்க ளாறும்
வளர்சரிதை குரிகைமுதல் யோக ஞானங்
குறைவிட்ட குருசீஷன் சமாதுநிலை கற்பம்
குருதெரிச னம்வாசி மாலை ஆசான்

நிறையான தென்திசைக்கு மவுன தீட்சை
நிசச்சரக்குவைப்பு அஞ்சனத் தயிலங் குளிகை
முறையோடே வாதமுதல் அட்சரங்கள் தீட்சை
முறைதப்பா துரைத்தேன் பூரணமா யொன்றே

முடிவு

ஆமிந்த யிருநூற்றுப் பதினா றுக்குள்
அடக்கிவைத்த பொருள்களெல்லாம் வெளியாய்ச்
சொன்னேன்
ஓமிந்த உலகத்தி லின்னூல் குட்டி
உலகத்தில் சித்ததிக முண்டாய்ப் போச்சுதா
தாமிந்தச் சூத்திரத்தெக் கெனியாதீந்தா லத்தலை
தெரித்துப் போகுமடா சத்தியஞ் சொன்னேன்
நாமிந்த மட்டுஞ் சொன் னேன்யோகிக் கீவாய்
நலமான பூரண சூத்திரந்தான் முற்றே (112)

குறிப்புரை

**'கார்செறி மெய்யன் வன்மைக் கடவுள்'** என்ற இந்நூலில் வரும் காப்புப் பாடல் அகத்தியர் பூரண சூத்திரம் (*291:516*) என்ற நூலில் உள்ள பாடலே. ஆயின் இவ்விரு நூல்களின் முதல் பாடல் வேறாக அமைகின்றது. இந்நூலின் முதல் 2 பாடல்களுக்கு எண்கள் இல்லை. அடுத்து 1-112 எண்சீர் விருத்தப் பாக்கள். மவுனதீட்சை, சரக்கு வைப்பு, அஞ்சனத் தைலம், குளிகை, குளியம்மி, பாடாணக்கட்டு, அமுதுகொள்ளப் பாகம் 1200, சாத்திரம் பொய்யென்றவனுக்கு, கற்பூர வைப்பு, பேய் தடுக்க முதலான செய்திகள் உள்ளன. பூரண சூத்திரம் *216* (*1874, 1884, 1931, 1934, 1957, 1964*) என்ற பெயரில் பல நூல்கள் வெளிவந்துள்ளன.

## 152. போகர் சாஸ்திரம்

**அ.** 288:512; **ஆ.** *1-66* ஏடுகள்; **இ.** 28 × 3 செ.மீ; **ஈ.** 6-9 வரிகள்; **உ.** புதிதாகவும் நல்ல நிலையிலுமுள்ளன; ஏடுகளின் தொடக்கப் பகுதிகள், சிலவற்றில் முறிந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

## தொடக்கம்

கொட்டாந் தேறுஞ் சிலதேறுங் கோரோ சனையுங் குங்குமமும்
மட்டே எருத்தின் செவிமடலும் மானா கத்தின் மணிப்பித்தும்
மிட்டே கூட்டித் திலதமிட்டு எதிரே சொல்வீ ராமாகில்
வட்ட முள்ள குவிமுலையாள் வந்து வணங்கா ளாமாகில்
அட்டமுள்ள புத்தகத்தை அனலி லெறிவேன் கண்டீரே
நிசம் (ஏடு.1)

பாடினேன் இன்னமொன்று சொல்லக் கேளு
பாங்கான அந்தராகக் கட்டி யப்பா
கூட்டிய காயத்தோல் நீரா லாட்டி
குணமாக்குமே லக்கவசம் வலுக்கச் செய்து
நாட்டினேன் குகையிலிட்டுச் சில்லுப் போட்டு
நலமாக மண்சீலை வலுக்கச் செய்து
ஆட்டினே னிரண்டேழில் புடத்தைப் போட்டு
அடவாகப் பற்பத்தை எடுத்துக் கொள்ளே (ஏடு.7; பா.1)

## முடிவு

சுக்கு, மிளகு, திப்பிலி, அசுரர்நகம், மஞ்சட்டி, தேங்காய் எண்ணெய் படி அரைக்கால், வகைக்குக் கழஞ்சு-2 இரண்டையுங் குறுணித் தண்ணீரில் இடிச்சிப் போட்டுக் காய்ச்சி நல்லெண்ணெய் படி-1, பசுவின் தயிர் படி-1, மோர் படி-1 எல்லா மருந்தையும் அரைத்து எண்ணெயில் கிளறி மெழுகு பருவத்தில் எடுத்துத் தலையில் தப்பிச் சீயக்காய் இட்டுக் கழுவிப் போடவும். இப்படி மூன்று நாளைக்கு ஒருநாள் தலையிலே தப்பி உடலிலே பூசி, தண்ணீர் விடவும். சகலச் சுரமும் விசவீக்கமும் குளிருந் தீரும். நிசம்.

## குறிப்புரை

**பாடலும் உரைநடையும் கலந்துள்ளன.** வசீகரம் என்று அறிய வேண்டியது, தன்னைக் கட்டுகிற மந்திரம், பிள்ளைப் பெற்றவளுக்கு சோகக் கட்டுக்கு மருந்து, தலையில் மயிர் கழிந்து, புழு வெட்டினால் மருந்து, குழந்தைகளுக்குக் கணைச் சகலத்திற்கும் முலைப்பால் எண்ணெய் வயிற்றுக்குக் கொடுப்பது முதலான செய்திகள் முதல் 6 ஏடுகளில் உள்ளன. 7 ஆம் ஏட்டில் 'போகருட சாத்திரம்

அரிதார பற்பம் புலிப்பாணியில் உள்ளது' என்ற தலைப்பு உள்ளது. இதில் *1-160* பாடல்கள் (*40* ஆவது ஏடு முதல் பக்கம்வரை) உள்ளன. அதன்பின் (*40-65*) வாதராச்சிதக் குளிகை, அகத்தியர் குழம்பு, திப்பிலியாதிச் சூரணம், சன்னிக்குத் தைலம் முதலான தலைப்புகளில் செய்திகள் உரைநடையில் அமைந்துள்ளன. இறுதி ஏட்டில் (*66*) 'அட்டவணை தன்வந்திரி *1200*' என்ற தலைப்பு உள்ளது. போகநாதர் சோடச சூத்திரம் (*ச.295*.E.) போகர் எழுநூற்றிரட்டு (*ச.292*), போகர் சூத்திரம் *35* (*ச.258*.B.), போகர் நாயனார் நிகண்டு (*ச.296*. B.), போகர் நிகண்டு (பல சரக்கு மருந்து) (ச. *279*), போகர் நிகண்டு அட்டவணை, போகர் நிகண்டு பிற்பாதி (ச.*244*) முதலியன இவர் இயற்றியவை.

## 153. போகர் செம்பு வித்தை

**அ. 536 : 869; ஆ.** *1-24* ஏடுகள்; **இ.** 44 × 2.5 செ.மீ; **ஈ.** *4-6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

பூரம்-*1* ½, வீரம்-*1* ½, சூதம்-*1* ½, கெந்தி-*1* ½, லிங்கம்-*1* ½, கெவுரி-*1*, காரம்-*1* இதுவெல்லாம் எலுமிச்சம் பழச்சாத்தால் நாலு ஜாமம் அரைச்சி மாத்திரை செய்து, ரவியில் காயவைத்துச் செம்பு ரெண்டு துலாம் கொண்டு குகையிலிட்டு உருக்கிச் செம்புக்குப் பாதியாக மேற்படி மாத்திரை கிராச மீந்தால் களிம்பத்துப் போகும்.

### முடிவு

உருக்கியே வாரடித்துப் புடத்தைப் போடு
    உத்தமனே செம்பதுவு மகன்று போகும்
செருக்கியே வெள்ளியெடை ஞாலத் தொண்ணு
    செம்மையுடன் தான்சேர்த்து உருக்கித் தீரு
பெருக்கமுடன் எடைகண்டு இனமும் கண்டு
    பேரான சேர்வைமுத லுளவு கண்டு
நெருக்கமுடன் மாற்றதுவு மேவ லாகி
    நேர்மையுடன் பவுமையது வெட்ட தாமே (356)

குறிப்புரை

**உரைநடையும் பாடலும் கலந்துள்ளன.** இரசவாதம் குறித்த தொகுப்பு நூல். போகர் செப்பு வித்தை, பூதவெள்ளிக் குளிகை, துருசுசுண்ணம், போகர் மாத்துயர் வேதை, வாத லிங்க வைப்பு சிடிகை வேதை ஆகிய தலைப்புகளில் ரசவாத முறையில் செம்பைத் தங்கமாக, வெள்ளியாக மாற்றும்முறைகள் உரைநடையில் 1-4 ஏடுகளில் கூறப்படுகின்றன. 5-7 ஏடுகளில் குளவிக் கூண்டு மெழுகுக்கு வேதை, சூத வெண்ணை, நாகக்கட்டு, பாஷாணக்கட்டு ஆகிய தலைப்புகளில் சில பாடல்கள் எண்ணின்றி உள்ளன. 7ஆ -10 ஏடுகளில் 849-858 பாடல்களில் வெடியுப்புச் செந்தூரம், செம்பு, தங்கம், வெள்ளியாதல் முதலியவை பற்றிக் கூறப்படுகின்றன. 10ஆ-13அ ஏடுகளில் கெந்தித் தயிலம், போகர்பச்ச பூரவைப்பு, அயச் செந்தூரம், லிங்கக் கட்டு, தாளகக் கட்டு, தாதுவிர்த்தி தாம்பூலக் குளிகை ஆகிய தலைப்புகள் உரைநடையில் உள்ளன. 13ஆ எழுதப் படாமல் வெற்றிடமாக உள்ளது. 14-15அ ஏடுகளில் 785-789 பாடல்களில் **பொம்மைகாயி தங்க ஒட்டம்** எனும் தலைப்பில் தங்கவுரம் பற்றிய செய்தி அமைகிறது. 15ஆ-19 ஏடுகளில் அய கழங்கு செம்பு வித்தை, சூதவெண்ணை, மாத்திக வேதை, பேய் ஓட்ட, ஆட, தாம்பரச் செந்தூரம், நாகவெள்ளி, லிங்கக் கட்டு ஆகிய தலைப்புகள் உரைநடையில் உள்ளன. 19ஆ என்ற ஏட்டின் இறுதியில் சத்துவாச்சாரியில் இருக்கும் நரசிம்ம நாயரு அவர்களுடைய புத்திரனின் இராசிக் கட்டமும் சாதகக் குறிப்பும் எழுதப் பட்டுள்ளன. 20-24 ஏடுகளில் 340-356 பாடல்களில் இலிங்க **வேந்தன் குளிகை மூனாவது போகர் காண்டம்** எனும் தலைப்பில் பூனாகச் செம்பு, லிங்கவேந்தன் குளிகை அவற்றின் மகிமை பற்றிய செய்திகள் உள்ளன. 347 ஆம் பாடல் குறையாக உள்ளது. போகர் சரக்கு வைப்பு 800 என்ற நூலில் இது தொடர்பான செய்திகள் உள்ளன.

## 154. போகர்-பறங்கி பாஷாண வைப்பு

**அ.** 536 : 870; **ஆ.** 1-3 **அ.** ஏடுகள்; **இ.** 44 × 2.5 செ.மீ; **ஈ.** 4-5 வரிகள்; ஒவ்வொரு பக்கமும் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது; **உ.** நன்று; **ஊ.** சற்றுக் கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

கூட்டியே மும்முறைதான் செய்தா யானால்
கொடுசிகப்பாய் சவ்வீர மிருக்கும் பாரு
நீட்டியே சிறுவிஷமும் பலமு மஞ்சு
நெடிதான அலரிவேர் பட்டைபலம் பத்து
மூட்டியே கெந்தகம் பலமு மிரண்டு
முட்டையா மஞ்சளென்ற கருவா லாட்டி
வாட்டியே வில்லைபண்ணிப் புடத்தில்தைலம் வாங்கி
வகையான வீரத்தில் சுருக்குப் போடே (1)

முடிவு

வாதமென்னா கொஞ்சத்தில் கிடைக்கு மோதான்
மகத்தான யோகிமுதல் ரிஷிகள் சித்தர்
நீதமென்ற பஞ்சாக்கரத்தா லிவர்க ளெல்லாம்
நேர்ப்பாகப் பார்க்கயிலும் தப்பிப் போகும்
வேதமென்ற அந்திரத்தில் முடிவு கேள்க்கும்
விரைந்தமனோன் மணித்தாய் சொல்ல வேணும்
பாதமென் றென்சிரசில் வைத்துக்கேட்டுக் கேட்டு
பரிவாகப் பிள்ளைக்கழ காயுரைசெய் தேனே (8)

குறிப்புரை

**1-8 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** இரசவாத முறையில் பறங்கிப் பாடாணம் செய்யும் முறை, தங்கத்துடன் சவ்வீரம், கெந்தகம் முதலானவற்றைக் கலந்து தங்கத்தின் மாற்றை மிகுவிக்கும் முறை ஆகியன கூறப்படுகின்றன. போகர் சரக்கு வைப்பு 800 என்ற நூலில் இது தொடர்பான செய்திகள் உள்ளன.

## 155. போகர் வெண்பா

**அ. 159:342; ஆ.** 80-99 ஏடுகள்; **இ.** 17 × 2.5 செ.மீ; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கிறுக்கெழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

ஆரியமா வாகடத்தி லுட்பொருளை ஆராய்ந்து
சீரியதோர் செந்தமிழால் செப்புகிறேன் கூறியதற்கு

உள்ளநிதா னஞ்சிட்சை யோத விநாயகனே
வள்ளலே யென்மனத்தில் வா (1)

முடிவு

முட்டுங் கொடுவேலி மொக்கமுஞ் சாதகமும்
வெட்டிவேர்கஷ்த் தூரி மேம்பூசுந் - தட்டியிட்டு
அக்காய் அதனோடு கண்டகமும் பீனிசமும்
சாயுமே விரண்டுமெனச் சாற்று (78)

குறிப்புரை

**1-79 வெண்பாக்கள்.** *79* ஆவது வெண்பா குறைப்பாடல். முதலில் **'வேகமா நெறி சேர்க்கும் வினைகளுந்'** எனும் காப்புப் பாடல் எண்ணின்றி உள்ளது. பிழை மிகுதி. மண்டூரம், அண்டவாதம், சீதம், இருமல், கிரந்தி, ஈளை, எலிக்கடி, கசாயம், சுவாசகாசம், இரத்தபித்தம், மேகம் ஆறு, சுரம், தோடம், தண்ணீர்த் தாகம், சேத்துமம், கரப்பான், சிவனார் பெருமருந்து, சூலைவாய்வு, வயிற்றுவலி, குட்டம், சூரணம், வீரியநெய், மூலம், சிரங்கு முதலான செய்திகள் இடம் பெறுகின்றன.

## 156. மச்சமுனி திருமந்திரம் அல்லது சரக்கு வைப்பு 800

**அ.** 80:181; **ஆ.** *1-62* ஏடுகள்; **இ.** 34 × 3 செ.மீ; **ஈ.** 7 வரிகள்; **உ.** நல்லநிலை; இடதுபக்க ஓரப்பகுதிகள் இலேசாகச் சிதைந்துள்ளன; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை, இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஹரிஓம் மச்சமுனியென்பவர் அருளிச்செய்த திருமந்திரம் எண்ணூறு

ஆதி பராபரத் தய்யர் மலரடி
நீதியில் வேதம் நிராமய மானது
சோதியில் நாதற் துலங்குஞ் சுடரொளி
சாதியில் நந்தி தன்பதம் காப்பே (1)

காப்பான நந்தி கருணை பராபரங்
கூர்ப்பான குண்டலி குகையி லடங்கிடுந்
தாப்பான பிரமன் தன்னொடு தன்பதம்
வாப்பான நெஞ்சில் மகிழ்ந்து கொண்டேனே (2)

முடிவு

ஞானியா ர்ண்டம் னான்றை நன்மையும்
ஊனுனீர் யியந்து ஓடின தாரையும்
வானுவிற் கெற்சிதம் வடிவான போதமும்
பேணி யறிபவர் பேர்கொண்ட னாதரே (787)

குறிப்புரை: மச்சமுனியென்பவர் அருளிச் செய்த திருமந்திரம் அல்லது சரக்கு வைப்பு 800

**1-788 பாடல்கள்.** 788 ஆம் பாடல் குறையாக உள்ளது. 13 பாடல்களே குறைவதால் முழுமை என்றே சுட்டப்பட்டுள்ளது. மூப்பு, துருசு, துருசுபாஷாணம், கெவுரிபாஷாணம், சீன வைப்பு, வெங்காரம், சாரம், வீரம், லிங்கம், வெள்ளிரசிதம், லிங்கரசிதம், தொட்டிப் பாஷாணம், ஏகபச்சாரம், லவனம், இந்துப்பு, செப்புத் தொட்டி, அயத்தொட்டி, பூத்துத் தொட்டி, ரத்தச்சிங்கி, ஏமச்சிங்கி, ரசிதச்சிங்கி, தீமுறுவர் பாஷாணம், லிங்கர் பாஷாணம், வெள்ளைப்பாஷாணம், சுரைக்காய்கெந்தி, பவழப்பூப் பாஷாணம், பாஷாணச் சிங்கி, இரத்தப் பாஷாணம், குங்குமப் பாஷாணம், கோமுகப் பாஷாணம், ரசிதப் பாஷாணச்சிங்கி, சூதப் பாஷாணம், மணலிப் பாஷாணம், லோகப் பாஷாணம், நந்திக்கொழுந்து, ஆராதாரம், சார சத்துரு, மித்துரு, வைப்பு பேதமறிய, அயன்புலன், சிவசக்தி, நிர்மலதேகம், அகத்தியர் தரிசனம், முப்புக் குருமுறை, சரக்கில் வேதை, ஐந்து சரக்குச் செந்தூரம், அண்ட பிண்ட செயநீர், தாரபற்பம், நாகபற்பம், கருட பட்சி, நத்தை இனம், அஸ்தி, சுக்கான், கபாலம், கல்நார், சலாசத்து, முத்து, பவழம், புஷ்பராகம், வைரம், பச்சை, வைடூரியம், நீலம், சிகப்பு, உலோகம் முதலான தலைப்புகள் உள்ளன. நூல்பெயர் எண் இல்லாத முதல் ஏட்டிலும், எண் உள்ள முதல் ஏட்டின் இடதுபக்க ஓரத்திலும் எழுதப்பட்டுள்ளது. ஏட்டுஎண் இல்லாத முதல் ஏட்டில், **'இது யெழுதினது கும்பகோணம் யோகாந்தத் தெருவிலிருக்கும் .... ஆனந்த ஆண்டு தைமாதம் 13 ஆம் தேதி சனிவாரம் ஆயில்ய நட்சத் திரம் திதி திருதிகையிற் சுபதினத்தில் சம்பூரணமாய் நிறை வேறியது'** என்ற குறிப்பு மிகவும் கிறுக்கலாக எழுதப்பட்டுள்ளது.

மச்சமுனி நாயனார் 800 (ச. 325) என்ற நூல் இந்நூல் போன்றதே.

அச்சுநூல்: *மச்சமுனி வைப்பு 800 (1895); மச்சமுனி கடைக்காண்டம் 800; மச்சமுனி கலைஞானம் 800; மச்சமுனி ஞானம் 25 (ச.236.*P*); மச்சமுனி நிகண்டு நூற்றாறு; மச்சமுனி பாடல் (வழலை மார்க்கம்) (ச.231.*D*).*

## 157. மச்சமுனி பெருநூல் சூத்திரம் 800

**அ.** **382:64;** **ஆ.** 1-160 ஏடுகள்; **இ.** 30 × 3.5 செ.மீ; **ஈ.** 5-8 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

ஆனந்த குருவு மாகி யருள்சதா சிவமு மாகி
வானந்த கேச னாகி வடிவுருத் திரனு மாகி
தானந்த விஷ்ணு வாகி சதுர்முக பிரமா வாகி
மோனந்த வானை யாள முக்கணன் சரணம் போற்றி (1)

மூலமொடு பதினெண் பேர்நா தாக்கள்
முத்தி பெற்ற சத்தரிஷி தெஷ்சணாயம்
ஞாலமிசை தெளிந்துரைத்த பாடல் தோய்ந்து
ஞானமொடு வாத வழிசிக சாலங்கள்
தூலமது சூஷ்சமுறும் மவுன பூசை
சூட்டிவைத்த வழலை சவுக்கார போக்கும்
பாலமது போட்டா போத்திரையைத் தாண்டி
பானுமதி விடிப்பதற்கு வேணி பாரே (2)

### முடிவு

வித்தைகத் தொளிபத்த தானே வெளிவி டாதே
வேதாந்த மனோன்மணித் தாயிபாதந் தன்னை
சித்தருக்கா மிந்தஎண்ணூறு பெருநூ லப்பா
சிவஞானந் தங்குகின்ற பெரியோர்க் காகும்
வையத்தோர் இந்நூலைப் பதன மாக
வைத்தாலுங் காயசித்தி வருகும் பாரு
பத்தருக்குப் பாடிவைத்த சத்தமெட் டான
பதிவாரம் பெருநூல் மெஞ்ஞான யோகம் (788)

குறிப்புரை: மச்சமுனி நாதர் அருளிச்செய்த பெருநூல் எண்ணூறு சூத்திரம்

முதல் ஏட்டில் வாழ்த்துப் பாடல் அமைகின்றது. ஒன்று என்ற எண்ணிட்ட அடுத்த ஏட்டில் முதல் பாடலாகக் காப்புப் பாடல் தொடங்குகின்றது. இப்பாடல் உட்பட 1-788 பாடல்கள் உள்ளன. அப்பாடல்களில் நூல் பற்றிய விவரம் அமைந்துள்ளது. வானம்பாடிச்சி வித்தை, சிவன்வேம்பு, மோடி வித்தை, இரசச்செந்தூர வித்தை, பொன்வருங் கபால வித்தை, மாடாகுஅலி வித்தை, சத்துரு மாரண தயிலம், பேய்களுக்குச் சீட்டுவிட, கோகரணம் இடதுகண்வலது கண், நாகக்கழி, வீரச்செந்தூரம், சக்காதேவி, காத்திதேவி, குட்டிச்சாத்தி, வீரனை, சமாதி உப்பு, நீலிமுரி முதலான தலைப்புகள் உள்ளன. **நூல் முற்றுப் பெற்றபின் மந்திரச் செய்தி ஒன்று இடம் பெறுகிறது.**

அச்சுநூல்கள்
மச்சமுனி பெருநூல் 800 (1985)
மச்சமுனி பெருநூல் வைத்தியக் காவியம் 800 (1824; 1895)
மச்சமுனி வைப்பு 800 (1895)
மச்சமுனி நாயனார் திருமந்திரம் 800 (1869, 1883, 1927)

## 158. மந்திர மருத்துவக் கலப்பு ஏடுகள்

**அ. 564 : 916; ஆ.** 42 ஏடுகள்.

குறிப்புரை

மருத்துவம், மந்திரம் தொடர்பான சில சுவடிகளினுடைய ஏடுகளின் கலப்பாக உள்ளது. மந்திர ஏடுகளில் அட்சரங்களும், சக்கரங்களும் உள்ளன. வித்தைகள், சூதக்கட்டு, எரிவாயு, பொருமல், ஏவல், சுப்பிரமணியர் மந்திரம், திருநீரு மந்திரம், ஏவல், பில்லி, எதுராளி மந்திரம், பாவை, பச்சுடுக்கை பல வகை மந்திரம், சன்னிசுரம், வாதராட்சதக் குளிகை, இருமல், குளிர் கொதிப்புக்கு உண்டை, வித்தை ஆரம்பம், சரசுபதி பூசை, சுரங்களுக்கு எண்ணை, முக்கூட்டு எண்ணை, ஏலாதி மாத்திரை, மாந்த எண்ணை, பேதரோக மருந்து, தேவாங்கு வசியம், மோகினி மந்திரம், செவி கேளாததுக்கு, குளிர் காச்சலுக்கு, பயித்தியத்துக்கு, சயத்துக்கு, காமாலை, குடிநீர்.

நெய், மாத்திரை, லவங்கச் சூரணம், திப்பிலிச் சூரணம் முதலான செய்திகள். இடையிலுள்ள ஓர் ஏட்டில் 'வாக்குண்டாம்' என்று தொடங்கும் பாடல் உள்ளது. இரண்டு ஏடுகளில் அகத்தியர் குழம்பு என்ற நூலின் சில பாடல்கள் உள்ளன.

## 159. மந்திரமும் மருத்துவமும்

**அ. 239:455; ஆ.** *35-96 (42)* ஏடுகள்; **இ.** 12 × 3.5 செ.மீ; **ஈ.** *5-8* வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** கிறுக்கெழுத்து; கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

அழைப்பு - மோகனிச் சக்கரம், சாயிகை, ஆலம்பனம்
ஓம் சேஸ்ட்டாயாதும் ஆலோ காயா யிரியும்
தும்யென்ன சாவாது மங்கிலியும் நிற்றறகி
சாய்வர் பூதமளை, வாவா, அப்பு, தேய்வு, சரீரம்
அச்சாதும். இது துமலச்சியம் பதிஓம் கடமிற்றம்.

**முடிவு** நாகேசுரம், முப்பழம், பஞ்சாஅமுர்தம்,
முக்கூட்டுப் பரிமழ வர்க்கம்-

ஏலம்-*1*, லவங்கபத்திரி-*1*, லவங்கப்பட்டை-*2*, வாழைப்பழம்-*1* மாம்பழம்-*2*, பலாப்பழம்-*3*, பால்-*1*, சர்க்கரை-*2*, நெய்-*3*, தேன்-*4*, வாழைப்பழம்-*5*, பசுவின் நெய்-*1*, எண்ணை - நல்லெண்ணை-*2*, விளக்கெண்ணை-*3*, சாதிக்காய்-*1*, ஏலம்-*2*, லவங்கம்-*3*, லவங்கப்பட்டை-*4*, சாதிப்பத்திரி-*5* லேகிய மாய்க் கிண்டி நாக்கில் நக்கிச் சாப்பிடும் படியான மருந்து, வருஞ்சு முழுங்கும்படியான மருந்து, சாத்தியமென்று தின்னும்படியான மருந்து.

### குறிப்புரை

**உரைநடை.** பேச்சு தியானம், அமரபட்சம், வசியம், மாரணம், பேதனம், தம்பனம், மோகனம், ஆக்ரோசனம், பஞ்ச பட்சி, பட்சிபகல், பூர்வபட்சம், வளர்பிறை, படுபட்சி, செங்கொட்டை பலவாதி, வெள்வங்க பற்பம், ரச சுண்ணம் அஷ்டமூலம், அஷ்டவர்க்கம், பூர்வபட்சம் திங்களும் சனியும், இராத்திரி முதல் சாமத்துக்கு, அமரபட்சம் திங்களும் சனியும், பூர்வ

பட்சம் செவ்வாய், ஞாயிறு, நல்ல அமாவாசை பகல் முதலாவது சாமத்துக்கு முதலான தலைப்புகளில் மந்திரச் செய்திகளுடன் சில மருத்துவச் செய்திகளும் இடம் பெறுகின்றன. முதலில் இறுதியிலும் வெற்றேடுகள் உள்ளன.

## 160. மந்திரமும் மருத்துவமும்

**அ.** 290:514; **ஆ.** *1-12* ஏடுகள்; **இ.** 18 × 3 செ.மீ; **ஈ.** 4-6 வரிகள்; **உ.** மிக நன்று; 2-4 ஏடுகள் பாதியாக முறிந்துள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

**சாந்திக்கு ஆனைகட்ட மந்திரம்**

ஆனை ஏறிவந்த பிசாசை ஆனையோடு கட்டினேன்
குதிரை ஏறிவந்த முனியைக் குதிரையோடு கட்டினேன்
இந்தக்கோழி ஏறிவந்த முனியைக் காளியோடே கட்டினேன்
உனக்குப் படைத்த சாதம், எனக்கு நீ கொடுத்த கூலி
கூட்ட தேவதைகளும் அடிவணங்கி முடிவணங்கி
நான்இட்ட சாவத்துக்கு அப்புறம்போக அப்புறம்போக சுவாக
(ஏடு. 6)

**துட்டப்புக்கு மருந்து**

வெள்ளாட்டுப்பால் கொண்டு ஈருள்ளி, உப்பு, கொழுஞ்சி இலை, சிறுதும்பை இலை, தையிவாழையிலை இந்த ஐந்தும் கசக்கிப் பாலில் விட்டு அதன்பிறகு இலுப்பாம் பூச்சிக் கல்லை அடுப்பில் வேகப்போட்டுத் தீ பறந்தவுடன் எடுத்து அதன் பிறகு பாலில் போட்டு எடுத்துவிட்டுப் பிள்ளை களுக்குப் போட்டால் துட்டப்பு வந்து விழும், தோசம் போம் (ஏடு. *12*).

### குறிப்புரை

*1-5* ஏடுகளில் சிதம்பரம் ஐந்தெழுத்து, பூதம் பிசாசுக்கு எந்திரம், அனுமார் சக்கரம், மனிதருக்கு நீர் மந்திரித்துப் போடும் சக்கரம், பாதசக்கரம், மந்திரம் ஆகியனவும், அதன் பின் மலடிக்குப் பிள்ளையுண்டாக மூலமந்திரம் - எந்திரம், கிரந்திக்கு மருந்து, பாரிசவாயுவுக்கு மருந்து, பறங்கிக்கு மருந்து, பெண்களுக்கு எந்நேரமும் மாதவிடை கண்டால் மருந்து முதலான தலைப்புகளும் உள்ளன. மூன்று ஏடுகளின் பின்பக்கம் எழுதப்படவில்லை.

## 161. மந்திரமும் மருத்துவமும்

**அ. 373:614; ஆ.** *13* ஏடுகள்; **இ.** 19 × 2.5 செ.மீ; **ஈ. 4-5** வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

தாயார் மடியில் பிள்ளையை வைத்துச் சுத்தி, மாலை நேரத்தில் பிடாரி கோவிலண்டையில் வைத்துச் சிறுபுள்ளடி வேர், குளிச்சமாடி தீப தூபம், நெயிவேத்தியம் கொடுத்துக் கட்டப் பிணி தீரும். இதுக்கு எந்திரம் அறிந்து கட்டவும்.

### முடிவு

சந்தனம் தெளித்து எருக்கம்பூச்சூடிக் கறுப்புக் கோழி சுத்தி உச்சிநேரம் சுடலையில் வைக்கவும். சுடலை விடதாரி வேர் குளிச்சமாடி கட்டவும். தாரண் ஆண்டு ஆவணி மாதம் முதல் தேதி கொழந்தைகள் பால் கற்க தோசம். **எடுத்தவர்கள் வாசித்து பொன்னப் பாச்சாரியார் கையில் குடுக்கவும்.**

### குறிப்புரை

முதல்நாள், முதல் மாதம், முதல் வருசம், இரண்டாம் நாள், இரண்டாம் மாதம், இரண்டாம் வருசம், மூன்றாம் நாள், மூன்றாம் மாதம், மூன்றாமாண்டு, ஆறாம் நாள், ஆறாம் மாதம், ஆறாம் வருசம், ஐந்தாம் நாள், ஐந்தாம் மாதம், ஐந்தாம் ஆண்டு, பத்தாம் நாள், பத்தாம் மாதம், பத்தா மாண்டு, பதினோராம் நாள், பதினோராம் மாதம், பதினோ ராம் ஆண்டு முதலான தலைப்புகளில் குழந்தைகளுக்கு ஏற்படும் நோய்களும் அவை தீரும் முறைகளும் கூறப் பட்டுள்ளன.

## 162. மந்திரமும் மருத்துவமும் முதலியன

**அ. 397:641; ஆ.** *4-34 (25)* ஏடுகள்; **இ.** 27 × 3 செ.மீ; **ஈ. 5-7** வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சற்றுக் கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

### தொடக்கம்

சொன்னார் என்னைக் கண்டால் உன்னை உண்ண வேண் டாமென்று சொன்னார். ஆணி அடிக்க ஆணியிலே தாக்கிப்

பறவையிலே மரங்களிலே அயிந்த மந்திரஞ் சொல்லி ஆணி அடிக்கவும். திருகு சிவசத்தி தங்கு இறங்கு இறங்கு சன்னி இறங்க தெங்கு நீரைக் கன்னி கொண்டுவந்தால் சத்தி சிவனாணை நிற்க வேணும்.

முடிவு

**புரைபீர் பளுச்சா வரைக்கு விண்ணப்ப நகல்-** மகனுக்குத் திருநெல்வேலி தூத்துக்குடி முனிசுபு கோர்ட்டாரவர்கள் சமுச்சமுகத்துக்கு மேற்படி கோர்ட்டு 1876 வருஷம் சரத்து நம்பர் 324 னதகாத மனுவாதி தென்ங்கரைத் தாலுக்கா இனாங் கிராமம் அளகப்ப புரத்திலும், ஓட்டப் பிடாரத் தாலுக்கா சுப்பாடி குசன் எட்டியாபுரம் சமீன் தூர்வனிதம் சாமி நத்தத்திலிருக்கும் முத்து முகம்மது என்ற சடைய ராவுத்தர் மகன் பீர் முகமது ராவுத்தன் அனேக வணக்கமாய் எழுதிக் கொண்ட விண்ணப்பப் பத்திரம் பிறந்த தேதி 1875 வருஷம் நவம்பர் மாதம் 5 ந் தேதி தமிழுக்கு 1511 வருஷம் அய்ப்பசி மாதம் 22 யில் ரூபாய் 50 க்கு அடமானம். 1877 வருஷம் ஏப்பிரல் மாதம் 7 ந் தேதி கிரயம்.

இப்படிக்குச் சூசைச் சவரிமுத்து பிள்ளை சூசை அந்தோணி (ஏடு.34).

குறிப்புரை

**உரைநடை.** பிழைகள் மிகுதி, சொன்னபடி கேளாத பெண் ணுக்கு, துவலை காண, தண்டுகட்டி, ஏவலுக்குக் கட்டு, வசமாக லவன வித்தை, மகுடம் உடைபட, அனுமன் தியா னம், அட்ட வயிரவன் மந்திரம், அஞ்சனாதேவி மந்திரம், பேதனம், பத்திரிகை, ஏவல் இருளன், சூலைக்கிப் புகை, கெந்தக தாளிக்கி நெய் வைக்க மருந்து, ரத்தப் பிரமியத்துக்கு, சூதக்கட்டு, வாய்வுக்கு, பொருமலுக்கு, வயித்துவலிக்குச் சூரணம், நாவடங்க மந்திரம், பேய் பிசாசுக்கு எழுதிக் கட்ட அச்சரம், பிள்ளையுண்டாக எழுதிக் கட்டச் சக்கரம், தாது விற்கு மருந்து, மோகினி, வினோத தந்திரம், குதிரை, ஆடு, மாடு சோளந் தின்றால், விசங் கடித்துக் கட்டையில் வைத்தவர் மீள, கரும்புத் தோட்டத்தில் புழு விலக முதலான தலைப் புகள். இறுதி ஏடான 34 ஆவது ஏட்டில் நூலோடு தொடர் பில்லாத செய்தியாக 'அடமான பத்திரம்' பற்றிய செய்தி

இருப்பது குறிப்பிடத்தக்கது. இது முறையாகப் பதிவு செய்யப்பட்ட கிரையப் பத்திரத்தின் நகல் என்பதை இவ் வேட்டில் அரசு முத்திரை இல்லாததால் அறிய முடிகிறது.

## 163. மந்திரமும் மருத்துவமும்

**அ.** 462:709; **ஆ.** *1-12+31 (43)* ஏடுகள்; **இ.** 21.5 × 3 செ.மீ; **ஈ.** 4-5 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; சில ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

**பிள்ளை பெற மாட்டாதவளுக்கு மந்திரம்** - குழி, காச்சுக்குழி, நீளக்குழி, நிஷ்டூரக்குழி, பாவிக்குழி, பரப்புவுக்கு குழி, கண்டவள் குழி, கேட்டவள் குழி, ஊருக் குழி, வடக்கே ஆலமரத்துக்கீழ் பிறந்ததோர் கன்னியர் நச்சு பிள்ளயை நமனார் கொண்டு போனாலும் அப்பறமே நிற்பார் கள். பரமேஸ்வரி.... மந்திரித்து மரி(ேசர்ப்பில் எண்ணெய் கொண்டு வா.

### முடிவு

வெங்காயம் 'வேகவைத்துக் ; கருஞ்சீரகம் பொடி பண்ணிப் போட்டு வெள்ளை சிறுகீரை அதில் வேகவைத்துச் சாப்பிடவும்.

### குறிப்புரை

**உரைநடை.** பிழை மிகுதி 1-12 ஏடுகளுக்குப் பின் பல ஏடுகளுக்கு எண்கள் இல்லை. பிற்பகுதி ஏடுகள் முறை மாறியுள்ளன. தொடக்கத்தில் ஒன்றும் இறுதியில் மூன்றும் என்ற நிலையில் வெற்றேடுகள் உள்ளன. காங்கை, வெள்ளைப் போக்கு, சுருக்குப்புண், பவுத்திரம், அரையாப்பு, தேள்மந்திரம், வசியம், வேண்டியதுகிட்ட, தேவிமந்திரம் மோகனம், பக்கசூலை, சூரணம், கழிச்சல், சக்கரம், எந்திரம் முதலான மந்திர மருத்துவச் செய்திகள் இடம் பெறுகின்றன.

## 164. மந்திரமும் மருத்துவமும்

**அ.** 545:881; **ஆ.** *36* ஏடுகள்; **இ.** 21.5 × 2.5 செ.மீ; **ஈ.** 4-6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம் வயிற்றுவலிக்கு மந்திரம்

ஒரு கடல், யிருகடல், முற்கடல், நாற்கடல், அய்ங்கடல், அறுகடல், ஏழுகடல் ஏழாங்கடலுக் கப்பாலே மீனை மீன் தின்று அதைப்போல ஆனை வயிறில் விளாங்கனி அற்றாப் போலே, குதிரை வயிறில் உமியும் கரியும் அற்றாப் போலே இவா வயிறுவலி இதைப் போலே அற்றுப் போகச் சிவா.

முடிவு

சாம்பிராணி, வெத்திலைப் பாக்கு, தேங்காய், கடலை, அவலு, வாழைப்பழம், புதுச்சீலை ஒரு சாண் இந்தப்படி சக்கரம் எழுதி அவன் தடத்து மண்ணு எடுத்து வேருகிட்ட வச்சு அந்த வேரைக் கொச்சத் தொடுப்பு வச்சு அறுக்கவும். முறிவு. திருப்ப பாலு கொத்த கோமியம் வேரில் தொளிவித்து ஒரு பிடி மண்ணு அள்ளி ஓடுகிற தண்ணீரில் விடவும். விலகிப் போயிவிடும்.

குறிப்புரை

**உரைநடை.** ஏட்டிற்கு எண்கள் இல்லை. பிழை மிகுதி. திஷ்ட்டிக்குச் சோறு ஓதிக் கொடுக்க, வித்துவேசன மந்திரம், மாரணம், சர்வத்துக்கும் பூசை மந்திரம், சிரங்கு எண்ணை, விநோதம், அரையாப்புக்கும், கண்டமாலைக்கும் மருந்து, காமாலைக்கு பூத அஞ்சனம், பஞ்சாச்சரம் பூசிக்க நடுவனை மாற, உச்சாடனம், வசிய மந்திரம், வசிய தியானம், ராமர் முகம் பூசை, சாவக் கட்டுக்கு, கிடையா வெட்டால் யாமம் செய்ய, விசமந்திரம் முதலான தலைப்புகள் உள்ளன. மருத்துவச் செய்திகள் மிகக் குறைவாக உள்ளன. முதலிலும் இறுதியிலு முள்ள, ஏடு பிரிக்கப்படாத சட்டங்களில் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. பல அச்சரங்களும் சக்கரங்களும் வரையப்பட்டுள்ளன.

## 165. மந்திரமும் மருத்துவமும்

**அ.** 572 : 929; **ஆ.** 35 ஏடுகள்; **இ.** 26.5 x 4. செ.மீ; **ஈ.** 6-9 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சடக்கைவேர், இலுப்பைவேர் ஞாயிற்றுக் கிழமைக்குக் காப்புக் கட்டி நூறுதரம் தம்பன மந்திரம் செபித்துக் காப்பறுத்து வேரை

மவெட்டிக்கொண்டு வந்து பட்டையைத்தட்டி ஊரு சுத்தி, நீர்விட்டரைத்துக் காட்டாமணக்கின் எண்ணை விட்டு மசித்துக் கையில் பூசுங்கள். உருவரலாம். அக்கினி விளையாடலாம். ஓம் நவசிவய வென்று செபிக்கலாம்.

முடிவு பாம்பு, புறா, பரனி-மருந்து

லவங்கம்-4, பச்சனாவி - 5 பங்கு, கருவாலம் - 5 பங்கு, பனைவெல்லம் - பலம் 2 தேங்காய்ப்பால் விட்டு இந்த நான்கையும் கலயத்தில் போட்டு ஒரு சாமம் அரைத்த பின்பு தாம்பர டப்பியில் வைத்துக் கொள்ளவும். விசத்துக்கு ஆறுகாவளம் இந்த மருந்து. பச்சப் பயிறு பேறுபாதி உள்ளுக்குக் கொடுக்கவும்.

குறிப்புரை

**உரைநடை.** அக்கினிகட்டு, அரணைபிரிய யோகம், நவப் பாஷாணத்துக்கு முறிப்பு, வசியம், மாரணம், பேதனம், உச்சாட்டினம், ஆக்கிராஷணம், காத்துக்கு, ஒருதலை நோவுக்குச் சக்கரம், சத்தி சக்கரம், தலைமேல் சக்கரம், லேபனத்துக்குச் சக்கரம், சுப்பிரமணியர் சக்கரம், வீரபத்திர சக்கரம், சஷ்டி கவச சக்கரம், கூடாததுக்குக் கூட்டிவைக்கச் சக்கரம், பெண்டுகளைச் சேராத புருசனுக்குக் கட்ட, தலை வலிக்குக்கட்டச்சக்கரம், சத்துரு உச்சாடனம், சிதம்பரச்சக்கரம், பேயி ஓட, வீரபத்திரகாளிச் சக்கரம், சத்துரு சங்கார சக்கரம், இரும்பு கூண்டு பலன், சலம் சக்கரம், நினைத்தது வர, தேளு பிடிக்க, காட்டேரி உச்சாடனம், பாவை வித்தை, விநோதம், சத்துருமித்துரு செயிக்கிறது, கட்டி, பக்கச்சூலை, கண்டமாலை, கண்ணு நேத்திரம் தெரிய, பேதிக்கச் சாப்பிட, எதிரிவசியமாக, வசியம் ஆத்துமுட்டி, அனுமார், பேயைக் கட்டவும், காமாலைக்கு மருந்து, ஆண்பெண்வசியம், யோனிப் புத்துக்கு, ரசபறபம், மேகபுண்ணுக்கு, உடல் மேல் தடவ, மதுரைவீரசுவாமி மந்திரம், ஒண்டிவீரன் மந்திரம், மாடன மந்திரம், உச்சாட்டினம், சுப்பிரமணியர் தியானம், வசியம் சகலத்திற்கும் விபரம் - இது மூலம், உச்சாட்டினகணபதி மூலம், வீரபத்திர உச்சாட்டினம், பஞ்சாச்சரம் முதலுக்கு விபரம், கொறளி (குறளி) வசியம், எட்சணி மந்திரம், சக்கம்மா முதலான தலைப்புகள் உள்ளன.

## 166. மந்திரம் மருத்துவம் ஞானம்

**அ. 414:658; ஆ.** 28 ஏடுகள்; **இ.** 22 × 3 செ.மீ; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** ஒன்றிரண்டு ஏடுகள் முறிந்திருப்பினும் மற்றவை நல்ல நிலையிலுள்ளன; **ஊ.** தெளிவு; மூன்று விதமான கையெழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

வாழவையடா யின்னமொரு வரிசை கேளு
    வளமான பூநீற்றை வாரிக் கொண்டு
தாளவே சாறுவார்த் தளைக ளெல்லாஞ்
    சத்தேதான் போட்டிடவே தண்ணீ ராகும்
சூழவே காரத்தைச் சிறுநெருப்பில்
    தோய்த்திடவே காரமது சுண்ணாம் பாகுங்
கூளவே சாறுகளில் போடு சத்தே
    குருவென்ற கலச்சுண்ணத் துப்பில் சத்தே

குறிப்புரை

காணப்பா மவுன வீடு காட்டுறேன் மைந்தா கேளு
பூணப்பா அகாரத்தின்கீழ் புகழ்ந்த உகாரமே சேர்த்து
யூணப்பா மகாரத்தின் நடுவேநின்று உத்துப்பாக்கே
                                        சரிதான் சுழினை வீடு
தோணப்பா வெளிய தாச்சு துந்திமி முழங்கக் காணே

முடிவு

பாடலும் உரைநடையும் கலந்துள்ளன. இரண்டுவகைக் கையெழுத்திற்கு எண்கள் உள்ளன. அவை ஒழுங்கின்றி உள்ளன. எண்கள் இன்றியே பல ஏடுகள் உள்ளன. அகத்தீசர் அருளிச் சொன்னது,தன்வந்திரி சொன்னது, நீறு, சுண்ணம், கணபதி மந்திரம், பூரணம், தியானம், தன்னைக் கட்டிக்கொள்ள கணபதி மந்திரம், சத்துரு சங்காரம், சாபநிவர்த்தி, சுப்பிரமணியம், மவுனவீடு காண் முதலிய தலைப்புகள் உள்ளன.

## 167. மருத்துவ அகராதி

**அ.**260:480; **ஆ.** 1-76 ஏடுகள்; **இ.** 27 × 3; செ.மீ; **ஈ.** 7-8 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

### தொடக்கம்

அக்காள் - ஆண்மரம்
அங்கை - உள்ளங்கை
அக்கு - வயறு
அக்கு - அகில்
அகலம் - மார்பு

அகல.... - அல்குல்
அகுலிடை - பிட்டு
அக்கந்தான்றி - கண
அக்காதேவி - சோனப்புல்லு
அக்கரை - மாம்பூம்
அக்கும் - பலகரை செரவி

### முடிவு

சருவாங்க - முழுவதும்
தை வேளை - நல்வேளை
பூனைவணங்கி - குப்பமேனி
சலந்திரட்டி - களக்கடி
(இது காட்டுக்கொடி)
திரிபுரமெரித்தான் - நல்ல தும்பை

சாரணைவேளை - வெள்ளை
சாட்டரணை
கூர்மத்தோடு - ஆமை
நீர்முதலி - நீர்முள்ளி
வராகநெய் - பன்றி நெய்
வராக முடி - பன்றி முடி
கலசப்பால் - முலைப்பால்

இதுவரையில் சொல்மொழி

### குறிப்புரை: வயித்திய அகராதி

*சித்த மருத்துவ அகராதி பற்றிய இந்நூலில் முதலில் சொற்கள் அகர வரிசையில் தரப்படுகின்றன. ஒரு பாதிக்கு மேல் அகர வரிசை முறை சரி வரப் பின்பற்றப்படவில்லை. மருத்துவச் சொற்களுக்கு நன்முறையில் பொருள் தரப்பட்டுள்ளது. இங்குத் தரப்பட்டுள்ள சலந்திரட்டி என்ற சொல்லுக்கு கட்டுக்கொடி என்பதே சரியான பொருள். இங்ஙனம் சில சொற்களுக்குத் தவறான பொருளும் தரப்பட்டிருக்கிறது.*

## 168. மருத்துவத் திரட்டு

**அ. 131:269; ஆ.** *128* ஏடுகள்; **இ.** 22 × 2.5 செ.மீ; **ஈ. 5-7** வரிகள்; **உ.** சிதையும் நிலை; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

பூரம் பலம்-*1 ½*, வெங்காரம் பலம்-*4* ரண்டும் சுத்தி பண்ணி நுணுக்கிவயித்துக் கொண்டு ரோகங்களுக்குக் கொடுக்கலாம். ரசம் பலம்-½, கெந்தகம் பலம்-*1*, காந்தம் பலம்-*1*, மூணும்

கத்தாளம் சாரஜம்-4, மேனிசாரஜம்-4, சோப்படை சாரஜம்-4 நுணுக்கிச் சீசாவில் வைத்துக்கொண்டு ரோகங்களுக்குக் கொடுக்கவும்.

முடிவு பிள்ளையில்லாதவளுக்கு மருந்து

மாவிலங்கப்பட்டை, ஷேவேர்ப்பட்டை யிந்த யிரண்டும் பசுபாலில் வைத்துக் குடிக்கக் குடுக்கறது. மூனு நாள் காலமே குடுக்கில் கொழந்தை பிறக்கும்

குறிப்புரை

**உரைநடை.** செந்தூர வகைகள், கட்டு வகைகள், மெழுகு வகைகள், கசாய வகைகள், மாத்திரை வகைகள், ஜாதிலிங்க மணி, நெய்வகைகள், மூலாதார சரக்கு, சரக்குகளின் குணம், பற்ப வகைகள், செயநீர், வலிப்புக்கு நசியம், மஞ்சக் காமாலைக்கு மருந்து, சூரண வகைகள், சுண்ணம் முதலான செய்திகள் நோய் பற்றியும், அவை தீரச் செய்ய வேண்டிய மருந்துகள் பற்றியும் விளக்குகின்றன இராம தேவர் நிகண்டு என்ற பெயர் உள்ளே காணப்படுகிறது.

## 169. மருத்துவத் திரட்டு

**அ.** 285:507; **ஆ.** *10-198 (90)* ஏடுகள்; **இ.** 31.. × 3.5 செ.மீ; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; சில ஏடுகளில் துளைகள்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம் சுகசன்னிக் குணம்

.... சாகின்ற சுகசன்னி மார்க்கம்
பாயுகின்ற வகைகேளு பண்பாய் நீயும்
நிறையாத யெண்ணெயுடன் தீர்த்த மாடி
நிரம்பவே தயிர்கூட்டிப் பொசித்துப் பின்னும்
குறையாத மந்தமுடன் புணர்ச்சி செய்யில்
கூடியே வாய்வுதான் கபாலத் தேறி
அசையர்மல் மோகிக்கு மோகஞ் செய்யும்
அப்பனே சத்தியொடு சன்னி யாமே (43)

முடிவு

வாங்கப்பா அருக்கனாள் பிடுங்கி வந்து
மைந்தனே யிந்தயிலைச் சாற்றி லாட்டி

வாங்கப்பா கண்ணிலிடு குருடர்க் கெல்லாம்
வானிலுறு மருந்ததியை மருவிக் காண்பார்
வாங்கப்பா பிரவெடைக்கு மருந்து சொல்வோம்
மகத்தான நேத்திரநோய்க் கெல்லா மாகும்
வாங்கப்பா கடுக்காயுங் காசுக் கட்டி
மடைத்துத்தம் பொன்மெழுகு சீனந் தானே (1070)

குறிப்புரை

நோய் மருந்து பற்றிய செய்திகள் பலவாறாக உள்ளன. பாடும் முறையிலும் எந்த முறைவைப்பும் பின்பற்றப் படவில்லை. எனவே, இது தனிப்பட்ட நூலாக இல்லாமல் திரட்டப்பட்ட நூல் போன்று காணப்படுகின்றது. 43-1052 பாடல்களில் மொத்தம் 270 பாடல்கள் உள்ளன. பெரும்பாலும் எண்சீர் விருத்தங்கள்; சில அறுசீர் விருத்தப் பாக்களும் உண்டு. இந்நூலிலுள்ள பாடல்களில் மச்சகேந்திரர் கூறுவதாகக் குறிப்புக் காணப்படுவதால் 'மச்சகேந்திரர் வைத்தியத் திரட்டு' எனும் பெயரில் இந்நூல் ஆய்வேடாக (1995) அளிக்கப் பெற்றுள்ளது. மேகவெட்டை, வாத மேகம், பித்த மேகம், எலும்புருக்கி, பித்தசூலை, கட்ட நோய், கிரீச்சனம், குடல்வாதம், காமாலை, வைசூரிப் புண் முதலான நோய்களும், மிருதசஞ்சீவி மாத்திரை, இஞ்சிபான மாத்திரை, இரசபூபதி, வடவான ரசம், வெள்ளுள்ளி நெய், தசமூல நெய், மூலமுளைக்குக் களிம்பு, துர்வாதிக் கிருதம், கந்தகத் தைலம், அக்கினி குமாரச் செந்தூரம் முதலான மருந்துகளும், கெந்தி, தாளகம், மனோசிலை, லிங்கம், நாபி, அரப்பொடி, அப்பிரகம், நிமிளை முதலானவற்றின் சுத்தி முறைகளும் கூறப்படுகின்றன.

## 170. மருத்துவத் திரட்டு

**அ. 296:523; ஆ.** *34* ஏடுகள்; **இ.** 29.5 × 3 செ.மீ; **ஈ. 5-7** வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; **ஊ.** சற்றுக் கடினம்; **எ.** குறை. **ஏ.** *அச்சாகாதது.*

தொடக்கம் காப்பு

காட்டுவழிகள் போனாலும் கள்ளர்பயம் ஆனாலும்
கேட்டுவழி காரர்கள் கிட்டினாலும் - நாட்டமுடன்
நம்பிக்கை உண்டாகி நமக்குஒரு வினாயகனாந்
தும்பிக்கை உண்டாயி துணை.

சோபசர மாங்கிசம் அஷத்தி மிக்க
சுக்குலே உதிரம்சஷத் தாதும் உண்டாம்
நாஷசர பெருமையும் யெஞ்சாண் உடம்பும்
இரண்டுகாலும் இரண்டு கையும் உண்டாம்
எண்பத்தி நான்குநூறா யிரம்சந்துகளும் முப்பத்தி ரெண்டு
விலாஎலும்பு களும்முதுகு நடுஎலும்பும் தோன்றி
அங்கிலிகன் பத்தின்நரம் புகள்பிறநூறு இருநூறு
பதினாறு களையுடைய வீணாதண்டையும்
யோனியுமுண்டாம்

முடிவு கெந்தகத் தயிலம்

கெந்தகம் பலம்-1, வெண்காரம் வீசம்-4, சாதிலிங்கம் பலம்-4, பசுவின் வெண்ணை கொண்ட மட்டும் போட்டு அரைக்கவும். இதுக்குத் தீரும் வியாதி பிரமேகம்-12, கிரீச்சனம்-9, மேல்தலைநோய், உடம்பு உளைதல்-4, இருமல் முதல் இளப்பு-90, கடுப்பு, உளைச்சல்-360 வியாதி போகும். பத்தியம் கசப்பு, புளிப்பு, இனிப்பு குளுத்தண்ணீ ஆகாது.

குறிப்புரை

**பாடலும் உரைநடையும் கலந்துள்ளன.** மூன்றுக்கு மேற்பட்ட கையெழுத்து. முதல் ஏட்டில் அகத்தியர் 320 ஆரம்பம் என்றுள்ளது. அவ்வேட்டில் நான்கு காப்புப் பாடல்கள் உள்ளன. இந்நூலிலுள்ள பாடல்கள் மட்டுமன்றி 'அகஸ்த்தியர் நூறு' என்ற நூலின் பல பாடல்களும் இதிலுள்ளன. நூற்பெயர் எழுதப்பட்டுள்ள ஏட்டில் அமான் அல்லா என்ற பெயரும் உள்ளது. பேதி, வெண்மேகம், விரைவாதம், சூலை, பிடிப்பு, பெருவயறு, பாண்டு, வயத்துவீக்கம், கிராணி, செந்தூரம், லேகியம், பூச்சுமருந்து, தைலம், நாடியின் வகைகள், நாடிகளின் எண்ணிக்கை, நாடியை வைத்து சாத்தியம், அசாத்தியமறிதல், தோடம் முதலான மருத்துவச் செய்திகள் விளக்கம் பெறுகின்றன. ஏட்டெண்கள் சிதைந்துள்ளன.

## 171. மருத்துவத் திரட்டு

**அ.** 312:537; **ஆ.** 1-55 ஏடுகள்; **இ.** 31 × 2 செ.மீ; **ஈ.** 4-5 வரிகள்; பல ஏடுகளில் ஒவ்வொரு பக்கமும் மூன்று பகுதிகளாகப் பிரித்தெழுதப்பட்டுள்ளது; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

**தொடக்கம்** **மேகநாத மாத்திரை**

சாதிலிங்கம், வெண்காரம், சுக்கு, திப்பிலி, மிளகு, இந்துப்பு, சிவதவேர்த் தோலு, வசம்பு, காட்டாமணக்கு வேர், பெருங் காயம், வாய்விளங்கம் குன்னிப் பிரமாணம் உண்டைப் பண்ணி நிழலுலத்தி வெந்நீரில் குடுக்கச் சீதமுள்ள தெல்லாம் கழியும். திரிதோசம் பஞ்சாய்ப் பறக்கும். பாண்டு, ரோகம், காமாலை, அசீரணம், தூரபலம், மூலரோகம், கிருமி, தினவு இவையெல்லாம் தீரும். பத்தியம் இச்சாபத்தியம் (ஏடு.1).

**முடிவு** **சந்தனாதித் தைலம்**

கடுக்காய், வால்மிளகு, தானிக்காய், கிளிபூர்வப் பட்டை, சாதிக்காயி, அஞ்சனாக்காயி, வங்காளப்பச்சை (வெங்காரப் பச்சை) இதுவெல்லாம் பால்விட்டு அரைத்து நல்லெண் ணையிலே போட்டுக் கரைத்துக் கலந்து பதத்தில் வடி (ஏடு.55).

குறிப்புரை

**உரைநடை.** சில பாடல்கள். பேதி, சுரமாத்திரை, விரோசினத் துக்கு மாத்திரை, எலும்புருக்கி, பித்தரோகத்துக்கும் எண்ணை, பாரிசவாத வாயுவுக்கு, சூலக்கட்டுக்கு, விரோ சினத்துக்கும், கெர்ப்ப வீர பிரிதிக்கும் மருந்து, கெற்ப வாயு வுக்கு எண்ணை, வெட்டைக்கி கைகண்ட அவிழ்தம், பிரமியத்துக்கு அவிழ்தம், வாயு, காமாலைக்கு, நீரிழிவுக்கு, கும்மட்டிக்காய் எண்ணை, குன்ம குடோரி, பெரும் பாட்டுக்கு அவிழ்தம், மேக சஞ்சீவி எண்ணை, அறுவு அழிந்த பித்தத்துக்கு, சூலைக்கட்டு அடங்கலுக்கும் பிரயோகம், மதத்தும ரசாயனம், அருள்வாதி சூரணம், வாதராட்சத மாத்திரை, ஆனந்த வயிரவன் மாத்திரை, மேக ஊறலுக்கு எண்ணை பண்ணும்படி, தாளிசபத்திரி லேகியம், ஆயக்காரணமாத லங்காயி வடகம், சிவத குழம்பு, சிவதவேர் சூரணம், பீனிசத் தலைவலிக்கி, மண்டைக் குத்தல், பக்கவாதத்துக்குத் தயிலம், சூசிகா வாயுவுக்கு எண்ணை, சிவனார் அமுதம், சுரசன்னி வாதத்துக்கு மாத்திரை, பஞ்சரெத்தின குளிகை, சுகபேதி எண்ணை, சன்னிக்குத் தயிலம். நீர்பாண்டுக்கு, கழிச்சலுக்கு, நீரிழிவுக்கு, எரிவா தத்துக்குக் கெந்தகச் சூரணம், மேகவாயுவுப் பிடிப்புக்குக் குழம்பு, சன்னிக்கு மாத்திரை, மேகத்துக்குச்

சாம்பிராணி தயிலம், வயிறு பேதிக்கு லேகியம், அசுவ கெந்திச் சூரணம், கெற்ப வெட்டைக்கு, சன்னிக்கு, மூலத்துக்கு நெய், சின்னதாளிச பத்திரி, 64 சுரத்துக்கும் பறங்கிப்பட்டை கியாழம், சுவாசகாசத்துக்கு, சிரசு, துவாலை சகலத்துக்கும் தயிலம், பிரமியத்துக்கு மருந்து, வீக்கத்துக்குக் காடி லேகியம், காது சீயி அடைக்கத் தயிலம், பெரும் பாட்டுக்கு மருந்து, சூசிகாவாயுவின் குணம், கெர்ப்பம் தரிக்க, மலட்டுப் புழுவுக்கு, திசைமூலகியாழம், பஞ்சமூல கியாழம், மேகத்துக்குச் சீனம் பாகு சூரணம், நாடி நிதானம், அதிசார கியாழம், வண்டுக்கடிக்கு மருந்து, திப்பிலி ரசாயனம், கண்டாத்திரி லேகியம், தாளிசபத்திரி லேகியம், பறங்கிப் பட்டை ரசாயனம், சயதயிலம், பேதிக்குச் சூரணம், நல்ல பாம்பு கடிச்ச விசத்துக்கு மருந்து, சகல வாயுவுக்கும் செந்தூரம் பட்டுக் கறுப்புச் செந்தூரம், ரசபற்பம், லிங்கப்புகை, தொந்தம் சுயமக்கினி, சந்தனாதித் தயிலம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 172. மருத்துவத் திரட்டு

**அ.** 342:574; **ஆ.** 10-108 ஏடுகள்; **இ.** 21 × 3 செ.மீ; **ஈ.** 7-9 வரிகள்; **உ.** நன்று; இடையே சில ஏடுகள் இல்லை. ஆங்காங்கே சில துளைகள்; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

முகாரி கற்பம்-40, ... சாசப் பெருவங்கம் பலம்-4, இட்டு, அதில் அவுரிவேர், பருத்திவேர், வட்டத் துத்திவேர் இவை கூட்டி வறுத்துப் பவழ நிறமாய் வரக் கண்டிறக்கியெடுத்துக் கொள்ளவும். பலம்-1 தேனிற் கொள்ள ஈளை, இருமல், காசம், சிலேட்பனம் இவை தீரும்.

### முடிவு

வேப்பெண்ணை வாங்கி வைத்துக் கொண்டு கரண்டியில் ரசம் வீசம்-1 விட்டு, ஒரு சொட்டு வெள்ளுள்ளித் தயிலம் விட்டு, வெத்திலை ஐந்து வாட்டிக் கசக்கிச் சார் விட்டு விரலாலே நன்றாய் மத்திச்சப் பிறகு வேப்பெண்ணையிற் கொஞ்சம் விட்டு மத்திச்சுக் கொண்டு விளக்கில் கொதிக்க

வைத்து அதில் மூனு மிளகு, நாலு உள்ளிப் பூண்டும் பொட்டணம் கட்டிக் கொண்டு முன் மருந்தில் தேய்த்து ஒத்துப் போலப் பத்துப் போடவும். சகல கட்டிகளும் தீரும். கைகண்டது....

## குறிப்புரை

கிராணிக்குப் பொடி, கிராணிக்குக் கபாடம், வயிற்றுக் கடுப் புக்குக் கபாட மாத்திரை, கபாட லேகியம், மேகத்துக்கு, மலம் நீர்விட, உறுப்புக்கு, மேகவெட்டைக்கு, ரெத்த பிரமியத் துக்கு, பெரும்பாட்டுக்கு, ரெத்த வெட்டைக்கு, கல்லடைப் புக்கு, இஞ்சி குழம்பு, அனுபானம், சண்முகச் செந்தூரம், விசமாந்த குளிகை, கணைநெய், பச்சைவெட்டுச் செந்தூரம், மாந்த எண்ணை, ரசபற்பம் புகை முதலான தலைப்புகள் முற்பகுதியில் உரைநடையில் உள்ளன. லிங்கக் கட்டு, பூரக்கட்டு, கெந்தகத் தயிலம், தாளகச் செந்தூரம், வல்லாதித் தயிலம், பஞ்சபூதச் சரக்கு, பிரிதிவு, அப்பு, வாய்வு, சத்துரு, மித்துரு, துருசுக்கு, சாரத்துக்கு, கல்லுப்புக்கு, வெடியுப் புக்கு, காரத்துக்கு, சீனத்துக்கு, தங்கத்துக்கு, சூதத்துக்கு, இரும்புக்கு, நாகத்துக்கு, காரீயத்துக்கு, வங்கத்துக்கு முதலான தலைப்புகள் **47-75** ஏடுகளில், **1-32** பாடல்களில் இடம் பெற்றுள்ளன. காதில் புழு புகுந்தால், ஈ புகுந்தால், காந்த பற்பம், கெந்தகச் செந்தூரம், ஆறுமுகச் செந்தூரம், லவனச் செந்தூரம், கிரந்திக்குப் புகை, தாளகச் சுண்ணம், ஆறாத புண்ணுக்குப் புகை, பாசாணக் கட்டு, மேகனாதிக் குளிகை, சன்னிக் குளிகை, கோடாகுடிக் குளிகை, கொம் மட்டிக்காய் லேகியம், அரையாப்புக்கு நெய், அயச் செந்தூரம், இருமல் இளைப்புக்குச் சுடர் தயிலம், வாதராட்சதன், மாண்டை லேகியம், வங்கார சஞ்சீவி, உளிச் செந்தூரம், சண்ட மாருதக் குழம்பு, தேசி முதலான தலைப்புகள் உரைநடையில் பிற்பகுதியில் அமைகின்றன. இது ஒரு தொகுப்பு நூலாக உள்ளது.

## 173. மருத்துவத் திரட்டு

**அ. 361:597; ஆ.** 3-57 (40)ஏடுகள்; **இ.** 16 × 4 செ.மீ; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

**தொடக்கம்　　　　ரசகற்பூர மெழுகு**

பூரம் பலம்-1, ஓமம் பலம்-1, மிளகு பலம்-½ மேற்படி மருந்துருண்டையும் விரவி ஒரு புதுச் சட்டியில் விரவிய மருந்தில் பாதியைப் பரப்பி மேற்படி பூரணத்தை நுணுக்கி மத்தியில் வைத்துப் பாதி மருந்தை மேலும் போட்டு மூடி, மேல்சட்டி கொண்டு மூடித் தீயெரிக்கும் போது, மூடிய ஓமம், மிளகு சிவந்த பதத்தில் குழிக்கல்லில் கொட்டித் தேன்விட்டு, ஒரு சாமம் அரைத்து வழித்து வைத்துக் கொண்டு ஒரு போதைக்குச் சிறு சுண்டைக் காயளவு கருப்பக் கட்டியில் பொதிந்து எழுந்திருக்கும்போது குடுக்கவும். கசப்புத் தள்ளவும். தீரும் வியாதி - வாய்வு, வயித்துவலி, குன்மம், வாதம், மேகம், சூதகவாய்வு, துவாலை இவ்வளவுந் தீரும்.

முடிவு

ரசம், வீரம், பூரம், கெந்தகம், துத்தம், துருசு, கருஞ்சீரகம், கார்கோல் அரிசி, காயம், இந்துப்பு வகைக்கி கழஞ்சி-2, வாளம் கழஞ்சி-8, தேங்காய்-4 இவ்வளவு மருந்தும் தேங்காய்ப் பாலில் காய்ச்சித் தயிலம் எடுக்கவும். துட்டிடை கொடுக்கவும்.

குறிப்புரை

**உரைநடை.** ஒருசில பாடல்கள் எண்ணுடன், சில எண்ணின்றி உள்ளன. ரசகற்பூர மெழுகு, லிங்கமெழுகு, சவ்வீரமெழுகு, ரசச்செந்தூர மெழுகு, விஷபேதிக்குக் கஷாயம், பித்தம், வாதரோகம், குன்மம், குடல்வாயு, சடல்வாயு, கொழுத்துக் குத்துக்கால் கூடினால் விஷக்கடி, 10வகை கிராணி தோஷம், கருவங்கப் பற்பம், லிங்க பற்பம், சுரம், சன்னி, கிராணிக்குப் பாஷாண பற்பம், கற்பூர சிலாசத்துப் பற்பம், மேக வெட்டை, கண்டமாலை, பாதசூலைவாதம் ஆண்பெண் சரக்கு விபரம், மாலாதேவி, கந்தகம், **அனுபோக வைத்தியப் படி வீரபற்பம்,** பச்சைவெட்டு, நாகபற்பம், தன்வந்திரியார் சண்டமாருதச் செந்தூரம், யுனானிச் செந்தூரம், **வேடநத்தம் வெங்கட்டராம் அய்யர் அவர்கள் ரசபதங்கம்,** ரசமெழுகு, காதுசீழுக்கு, ராமபானச் செந்தூரம், லேபனம் கிராணி கழிச்சலுக்கு, மேற்படி சுரமாத்திரை, திரியோகாசரமணி மாத்திரை மாந்தத்துக்கு,

வாயுவுக்கு முதலான தலைப்புகளும், துடிவர்மம், நேர் வர்மம், வர்மங்கள் ஏற்படும் முறை, இளக்குமுறை, நாழிகை விபரம், மருந்துகள் முதலானவையும் இடம் பெறுகின்றன. ஒன்றிரண்டு மந்திரச் செய்திகள் இருப்பினும் பெரும் பான்மை மருத்துவச் செய்திகளே. மூன்று ஏடுகளில் ஒரு பக்கம் மட்டுமே எழுதப்பட்டுள்ளது. ஒருசில அரிய மருத்துவக் குறிப்புகளையுடைய தொகுப்பு நூலாக இலங்குகிறது.

## 174. மருத்துவத் திரட்டு

**அ.** **365:605;** **ஆ.** *1-55* ஏடுகள்; **இ.** 29.5 × 3 செ.மீ; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; முதல் மூன்று ஏடுகள் சிறிது முறிந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

இறுக்குகின்ற யாக்கினையின் கூறு கேளு
    காமக் குரோதமோடு லோப மோக
மறுக்குகின்ற மதமு மாச்சரியத் தோடு
    வானுக்குத் தவஞ்சா சிவமு மாகும்
பெருக்குகின்ற வாமகாசம் பீசம் யவ்வாம்
    பேரான பஞ்சபூதப் பிரிவு மாகு
செருக்குகின்ற... செயலை யெல்லாஞ்
    செப்புகின்றேன் தெளிவாகச் சிறந்து கேளே (14)

முடிவு

நானாவே பஞ்ச பூதத்தைச் சொன்னேன்
    கருத்தறைந்த தத்துவத்தைக் கருதிச் சொன்னேன்
நானாவே நாடியுட நிதானந் தன்னிலே
    நற்குறிப்புந் துர்க்குணமும் நாடிச் சொன்னேன்
நானாவே அஷ்ட்ட விசப்பரிட்சை சொன்னேன்
    சரகமாஞ் சுரமெல்லா மடங்கச் சொன்னேன்
நானாவே சன்னியுட் சாத்தியா சாத்தியஞ்
    சாற்றினேன் குன்மத்தின் காரவை தானே (119)

குறிப்புரை

*1-34* ஏடுகளில், *1-136* பாடல்களில் நாடி பற்றிய செய்தி 'நாடி முற்றும்' என்ற சொல்லாட்சியுடன் இடம் பெற்றுள்

ளது. சுரநிதான விபரம் எழுதும் வாதசுத்தி நிதானம் எனும் தலைப்பில் *35-55* ஏடுகளில், **1-158** பாடல்கள் உள்ளன. இவை வேறு இரண்டு நூல்களிலிருந்து எடுத்து எழுதப் பட்டவை என்பது தெரிகிறது. சுரத்தின் கூறு, சன்னியின் கூறு, மாங்கிசச் சுரம், பதிமூன்று வகைச் சன்னி, அதிசாரக் குணம், சன்னிவாதச் சுரம், குன்மத்தின் குணம், சன்னி சாத்தியம், சன்னி அசாத்தியம், பஞ்சபூதங்கள், நாடி சோதனை முதலான செய்திகள் உள்ளன.

## 175. மருத்துவத் திரட்டு

**அ. 372:613; ஆ.** *1-263 (91)* ஏடுகள்; **இ.** 35 × 4 செ.மீ; **ஈ.** *10-12* வரிகள்; **உ.** நன்று; சில ஏடுகள் மிகச் சிறிய அளவில் உடைந்துள்ளன; **ஊ.** சற்றுக் கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம் **வாலை ரசம்**

அமுகண்ணி இலையை அரைச்சுக் குளிச்சு ரசத்தை விட்டுச் சீலைமண் செய்து புடம் போட வாலை.

முடிவு

காணிந்த உபரசங்கள் நூற்றிரண்டு பத்துங்
    கனமான பாசாணம் அறுபத்தி நாலுந்
தோணிந்த கலவன் முதலிருபத் தஞ்சுஞ்
    சொல்முறையா நவலோக நவரெற் றினங்கள்
ஆணிந்த யிதுவெல்லாஞ் சாறாய் வாங்கி
    அம்மா சூதத்தி லொவ்வொன் றாகப்
பூணிந்தக் குடோரியிட்டு உருக்கிக் கொண்டு
    புகழாருச் சாரணையிற் சாய்த்தி டாயே

(ஏடு.263; பா.159)

குறிப்புரை

**பாட்டும் உரைநடையும் கலந்துள்ளன.** சில மருத்துவ நூல் களிலிருந்து எடுத்தெழுதப்பட்ட சுவடியாக இது அமை கின்றது. ஏட்டு எண் **117** வரை இடையில் பல ஏடுகள் இல்லை. அதன்பின் **263** என்ற ஏடு ஒன்றே உள்ளது.

அரிதார பற்பம், சிரங்குககு, களங்கு, பிரமியத்துக்கு, அக்கினி குமாரச் செந்தூரம், மூல பவுத்திரத்துக்கு, அரையாப்புக்கு, தலைமயிர் கலைந்து சொறிபத்துற புண்ணுக்கு, மண்டைக் கரப்பான், சூலைக்கு, குளிகை வகை, செந்தூரவகை, பிரமியத்துக்கு, மேகத்துக்கு, வெட்டுப்பட்ட புண்ணுக்குத் தண்ணீர் ஓதிவிட மந்திரம், புண்ணுக்குக் களிம்பு, சுத்திவகை, எலும்புருக்கிக்கு, கண்ணுக்கு, குழம்பு, சிந்தாமணி சிந்தாதி லேகியம், நாலுநாள் மாறல், வசீகரம், சுராங்கிதம், இரத பற்பம், பஞ்சலோக பற்பம், பூசணிக்காய் பற்பம், பீனி சத்துக்கு எண்ணை, பெரும்பாட்டுக்கு எண்ணை, காரீயச் செந்தூரம், ஒருதலைவலிக்கு, விஷக்கடிக்கு, குமரித்தைலம், வாதசன்னி புகை, பித்த காமாலை முதலான செய்திகள் விளக்கம் பெறுகின்றன.

## 176. மருத்துவத் திரட்டு

**அ.** 495:755; **ஆ.** 1-20 ஏடுகள்; **இ.** 28 × 3 செ.மீ; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சாத்துரேன் நாடியுடன் புருவதனம் தக்கான்
　　நாக்கு மலமூத் திரமு மாகும்
காத்திரேன் கண்ணோடு பேச்சு வாய்நீர்
　　மாரியம்மன் எட்டுவகைப் பரிக்ஷை தன்னில்
ஆத்திரேன் அவையிலுள்ள குணங்க ளெல்லா
　　அசாத்தியஞ் சாத்தியமறிந்த அய்யம் பார்த்து
சாத்துரேன் நாடியுடன் நன்மை யெல்லாம்
　　நலமறிந்து துர்க்குணமும் நயந்து பாரே (1)

முடிவு

வெள்ளெருக்கு, பெருங்குறிஞ்சா, சிறுகுறிஞ்சா, நஞ்சு முறிச்சான் வேர், நிலவேம்பு, வட்டத்திருப்பி வேர், மாவுலிங்கப்பட்டை, வேப்பம்பட்டை, சிவனார் வேம்பு, தும்பை, துளசி, ஆடுதின்னாப் பாளைவேர், உத்தாமணி, சித்திரமூலம், செருப்படை விழுதுகள் சரியாய் யிடி. சூரணம் பண்ணிச் சாப்பிட விஷம், சில விஷம், வண்டுக்கடி தீரும்.

குறிப்புரை

**பாடலும் உரைநடையும் கலந்துள்ளன.** பித்த, விஷ சுர குணம், அஷ்டதானம், சேத்துமச் சுரத்துக்குக் கியாழம், வாதச் சுரத்துக்கு, தாபசுரத்துக்கு, உஷ்ண வாயுவுக்கு, மேகவாயுவுக்கு, பக்குவம், பித்தசுரத்துக்கு, சுரவாந்திக்கு, பல் அசைவுக்கு, அண்டவாத விரை வீக்கத்துக்கு, அண்ட வாயுவுக்குக் கியாழம், முலைப்பால் சுரக்க, பல்நோய்க்கு, விரைவா தத்துக்கு, மேககாங்கை, சுரமும் பேதிக்கு, கலிக்க மாத்திரை, மார்வலி, அடாவலி, வாய்வு, அசதிக்கு, அனல் வாய் வேக்காடு, பெரும்பாட்டுக்கு, சுரங்கண்ட பிறகு லங்கனம், தலைனோவுக்குப் புகை, காதிரைச்சலுக்கு, பித்த, சொறி சுரத்துக்கு, உஷ்ண வாயுவுக்கு, இரும்பலுக்கு, மேகவாயுவுக்குச் சாந்தி சூரணம், மேகபுண், ஊறல், தினவு, சிலந்திக்கு, பித்தச் சுரத்துக்கு, சுரவீக்கம், குளுத்தி எண்ணை, நாய்கடிக்கி, வயித்தியனை அழைக்க வந்தவன் நின்ற திசைப் பலன் முதலான தலைப்புகள் உள்ளன.

## 177. மருத்துவத் திரட்டு

**அ.** 522 : 815; **ஆ.** *48-55* ஏடுகள்; **இ.** 13 × 4.5 செ.மீ; **ஈ.** *10-11* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** மிகக் கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

பூநீர் பலம் *1*, அமுரி, தேசி, சாராயம் இந்த மூன்றும் பத்துமுறை - ரவி காசலான வுடனே பச்சக் கற்ப்பூரம் பலம் *1*, அண்ட செயநீர் குத்தி, பழச்சாறு குத்தி ரவியில் மூன்று காச்சி செயநீர் காச்சவும். இரண்டும் சரியாய்க் கலந்து பூனீரும் பூரமும் சேத்தரைத்துக் குப்பிக்குள்ளே வைத்து மாக் கல்லாலே குப்பி வாய்மூடி யேழு சீலைமண் செய்து ரெண்டுமுழ ஆழத்துக்குக் குழிவெட்டிக் குப்பி வைத்து மூல சருசாறு பலக்குரையாய்க் கடுகாட்டி மூடி, மூன்று மாசஞ் சென்ற பிறகு எடுத்துப் பழச்சாறும் செயநீரும் சரியாய்க் கலந்து உளத்திக் காயவைத்து எடுத்துக் கொள்ள...

முடிவு

> **பத்திநிறை கண்ணோய்கள் தொண்ணூத் தாறு**
> **பற்றறுக்கச் சிறுகீரை பொன்னாங் காணி**

சித்தவெள்ளை சாரணைவேர் வெள்ளைக் காசு
கண்சேரவே வேரெல்லாம் வாங்கு வாங்கே

குறிப்புரை

**பாட்டும் உரைநடையும் கலந்துள்ளன.** பலவிதமான மருத்துவக் குறிப்புகளுடன் பிரமமுனியின் மருத்துவமும் இடம் பெற்றுள்ளது. வெடியுப்புநீர், செயநீர், அண்டநீர், முப்பு, தாளக்கட்டு, அனர்ப்பு, கண்ணோய் முதலான தலைப்புகள் உள்ளன.

## 178. மருத்துவத் திரட்டு

**அ.** **536 : 869; ஆ.** முதல் இரண்டு ஏடுகளுக்கு எண்கள் இல்லை; அடுத்து *2-17* ஏடுகள்; **இ.** 44 × 2.5 செ.மீ; **ஈ.** *4-6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

கேளடா சூடனது பலம தொன்று
  கெட்டியாயி பூனீரு பலம தொன்று
நாளடா வெடியுப்பு கழஞ்சி ரெண்டு
  நாலடா கல்லுப்பு கழஞ்சி ஒன்று
சூளடா சாரமது கழஞ்சி ஒன்று
  துப்பளவாய் வெண்காரம் கழஞ்சி ஒன்று
கேளடா வராமல் கல்வந் தன்னில்
  கொட்டியே தானரைக்கக் கூறு வேனே

முடிவு

நீதமே தசைமாத்து பிசக்கி ராது போலக் கட்டித்
திறமான தங்கத்தில் நீகுருவின் பதம்போற்றி நினைவாய் நில்லு
காதமே தூரமல்ல செய்துபாரு களிம்பல்ல வேதையடா
கண்டு கழஞ்சி வாங்கி அரும்ப வேகுகை பாரே (556)

குறிப்புரை

ஏட்டுஎண் இல்லாத முதல் ஏட்டில் ரோமரிஷி பூரவைப்பு என்ற தலைப்பு உள்ளது. கட்டு, சத்திமயம், கணபதி, அகத்தியர் ரசபற்பம், சுத்தசலம், பூநீரு, துருசுக்குச் செயநீர்,

அஞ்சு சுண்ணக்குகை, தங்கச் செம்பு, நாதநீர், அண்டநீர், காரசாரம், பூசைமுறை, பூரணம், ஞானம் முதலான செய்திகள் முப்பு, ரசவாதம் குறித்த செய்முறைகளை விளக்கு கின்றன. தொடக்கத்தில் சில பாடல்களுக்கு எண்கள் இல்லை. பின் பாடல் எண்கள் தொடர்பின்றி அமைந்துள்ளன. அடுத்து 384-556 வரை பாடல்கள் உள்ளன. அவற்றிலும் இடையிடையே பாடல்கள் இல்லை.

## 179. மருத்துவத் திரட்டு

**அ. 539 : 875; ஆ.** 20 ஏடுகள்; **இ.** 16 × 3 செ.மீ; **ஈ.** *8-10* வரிகள்; **உ** நன்று; **ஊ.** க்டினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

கேளப்பா ஆறுக்குந் தாண்டி நின்ற
 கெடியான தாரகையை அவர் வழிக்கக்
கேளப்பா உபாயமதாய்ச் சொல்லக் கேளு
 கெடியான மின்வெட்டி கொண்டு வந்து
ஆளப்பா தட்டானைப் பிடித்துக் கொண்டு
 அவன்பிறகே எருக்கலம்பா லடவாய்ப் பூசித்
தாளப்பா மின்வெட்டி அதிரப் பதிக்கத்
 தடையறவே வேணமட்டும் வைத்துக் கொள்ளே
(ஏடு.7; பா.31)

### முடிவு

வெட்டும்போது சிவாய-நமா வென்று பத்துரு செபித்துப் போடவும். வேறு-கண்ணின் புத்துமேலே செந்தட்டிக்கி ஞாயித்துக்கிழமை நாளில் காப்புக் கட்டி, மறு ஞாயித்து கிழமைக்கிப் பொங்கலிட்டுத் தேங்காய் அடித்து வினாயகர் பூசை செய்து வெட்டவும் (ஏடு.42).

### குறிப்புரை

இரண்டுக்கு மேற்பட்ட மருத்துவச் சுவடிகளின் கலப்பாக இச்சுவடிக்கட்டு இருக்கின்றது. அரிதாரம், மோடி, குடிநீர், குடிநீர் கசாயம், சன்னிசுரம், பயித்தியம், மண்டைகூலை, புட்டவியல், பச்சை உடம்பில் வரும் சன்னிக்குத் தயிலம்,

பச்சை சோவை, சோவை நன்று, சித்தாவிர் பிரமச் சன்னியின் குணம், வெட்டுச் சன்னியின் குணம், தூமாபதி எந்திரம், சுரவாத கரப்பன் குணம், தயிலம், அஞ்சனம், சுகசன்னி குணம், வாதசன்னி குணம், அருந்தறிய நிகண்டு, பக்கவாத குணம், சூனியவாத குணம், வினோத வித்தை முதலான தலைப்புகள் உள்ளன.

## 180. மருத்துவத் திரட்டு

**அ. 552:896; ஆ.** *100-201 (67)* ஏடுகள்; **இ.** 18 × 2.5 செ.மீ; **ஈ.** *5-6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; கிறுக்கெழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

கேரக்கர் மூலி குருவி னுபதேசம்
நேரொக்கக் கொண்டு நினைவறி வாரில்லை
நேரொக்கக் கொண்டு நிலையறி வாளர்
சீரொத்துப் பாயுஞ் சிவபதந் தானே (1)

முடிவு

பெரும் பூசணிக்காய் மேல்த்தோடு போக்கி, அரிந்து துவைச்சுச் சாறு புளிஞ்சு கொண்டு சக்கையை எடுத்துக்கொண்டு பெருஞ் சட்டி காயவைத்து அந்தச் சட்டியில் பசுவின் நெய் ஒரு கரண்டி விட்டு உரிய சக்கையை வறுத்து, இப்படி மூன்று பிரகாரம் வறுத்துக் கொண்டு, அந்தச் சட்டியிலே அந்தத் தண்ணீர் விட்டுக் காச்சி சர்க்கரைப் பத்து பலம் கூடப் போட்டுக் கிண்டி இறக்கவும்.

குறிப்புரை

**பாட்டும் உரைநடையும் கலந்துள்ளன.** பிழை மிகுதி. கையாந் தகரைப் பற்பம், இரசபற்பம், வறட்சி, காதுக்கு நெய், ஈளை, காசம், லகு ஏலாதிச் சூரணம், சந்து விப்புருதி, நரம்பு சிலந்தி, முலைகுத்து, பிராமுட்டி நெய், காரீயச் செந்தூரம், அமுர்த லேகியம், விஷபாகத்துக்குத் தயிலம், துத்தனாகச் செந்தூரம், கெற்பக்கோள், கிரந்திக்கு, சூலைக்கு எண்ணை முதலான தலைப்புகள் உள்ளன.

## 181. மருத்துவத் திரட்டு

**அ. 561 : 907; ஆ.** *13* ஏடுகள்; **இ.** 31 × 2.5 செ.மீ; **ஈ.** *4-5* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சற்றுக். கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

கருவாலி பிச்சு, காடை பிச்சு, சிட்டுக்குருவி பிச்சு, கொல்லான் கிழங்கு, பட்டுப் பூச்சி, மதனகாம்பு, சாதிக்காயி, ஏலம், கிராம்பு, பசுவின் வெண்ணை இவை மையாக்கி நாகத் தளைத் தூள் போட்டு வசியம் விடுகிறது. இதைக் காட்ட லாகாது.

முடிவு பஞ்சமூலி கியாழம்

பெருமருந்து சிறுகுறிஞ்சா கண்ட மூலம்
பேரரத்தை சுக்குடனே பெருகக் கூட்டி
ஒருமருந்தே வாதம்போம் சுரமும் தீரும்
உத்தகப சுரந்தீரும் உறுதி யாகும்
தருமருந்தே மாதுநெல்லி கெற்பந் தீரும்
தீர்த்துவிடும் பழஞ்சுரத்தைச் சிதறக் காணும்
குருமருந்தே பஞ்ச மூலக்
கியாழ மென்றே செப்பு வேனே

குறிப்புரை

**உரைநடையும், பாடலும் கலந்துள்ளன.** முதல் ஏட்டில் 'வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம்' என்ற காப்புப் பாடல் உள்ளது. 6 ஏடுகளில் ஒருபக்கம் மட்டுமே எழுதப்பட்டுள்ளது. வீரச்செந்தூரம், மாந்தம், கணம், போர்மாந்தத்தின் குணம்,சுவாசகாசம், சுழிகணத்தின் குணம், பேதிசுரத்துக்கு மாத்திரை, தத்துவம், சத்து இல்லாமல் அற்றுப் போனவருக்குச் செய்து சாப்பிட லேகியம் **அனுபோக மருந்து,** சூடு அதிகப்பட்டவருக்குக் கற்கம் முதலான செய்திகள் இடம் பெறுகின்றன.

## 182. மருத்துவத் திரட்டு

**அ. தாள். 5:34; ஆ.** *128-245* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

### தொடக்கம்

இலிங்கக் கட்டுச் செந்தூரம், உலர்ந்த லிங்கம் ஒரே கட்டியாக எடுத்துக்கொண்டு, நரிவெங்காயம் இரண்டாகப் பிளந்து மய்யத்தில் போதிய பள்ளம் செய்து, இரண்டு பக்கமும் லிங்கத்தை வைத்து வெங்காயத்தை மூடி செம்புக் கம்பியினால் சுத்தி மண்சீலை செய்து, இரண்டு மூன்று சீலை செய்து காயவைத்து ஐந்து வறட்டியில் லகுபுடம் போடவும். மறுபடி எடுத்து மற்றொரு வெங்காயத்தில் மின்மாதிரி யாகவே பள்ளம் செய்து மூடி செம்புக் கம்பி சுத்தி சீலைமண் செய்து காயவைத்து ஏழு விறட்டியில் புடம் போடவும்.

### முடிவு

வில்வப் பழம் சதையை எள்ளெண்ணையில் போட்டு வேகவைத்துக் காதில் விடத் தீரும். காது சீழ் குத்தலுக்குப் பருத்தியிளங் காயும், எருக்கன் இளங்காயும், வெதுப்பிச் சாறு பிழிந்து காதில் விடவும்.

### குறிப்புரை

பல சித்தமருத்துவ நூல்களினின்று எடுக்கப்பட்ட, பல்வேறு மருந்துகளின் செய்முறைகள் பற்றிய குறிப்புகளின், பயன்பாடு கருதிய தொகுப்பு. உரைநடை. இடையே இராமதேவர் சூத்திரம் பத்து என்ற நூலினுடைய 10 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அகத்தியர் குழம்பு என்ற நூலிலிருந்தும் சில பகுதிகள் எடுத்து எழுதப் பட்டிருக்கின்றன. மருந்தும் அதனால் தீரும் நோய்களும், நோயும் அவற்றிற்குரிய மருந்துகளின் செய்முறைகளும் தரப்பட்டுள்ளன. பற்பம், இரசாயனம், எண்ணெய், களிம்பு, மெழுகு, சூரணம், குளிகை, லேகியம், குழம்பு, மாத்திரை, தைலம், கட்டு, சுண்ணம் இவற்றாலான மருந்து வகைகள் விரிவாகத் தரப்பட்டுள்ளன.

## 183. மருத்துவத் திரட்டு

**அ. தாள். 6:35; ஆ.** *1-104* பக்கங்கள்; **அ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

### தொடக்கம்

மயில் துத்தத்தை வாயிக்குப் போடும் சுண்ணாம்புக்குள் வைத்து மூடி, அடுப்புக்கரி நெருப்பின் மேல் வைத்து ரங்கு

நிறம் வரும் பதம் அறிந்து எடுத்துப் பக்குவமாகத் தட்டிக் கல்வக் கல்லில் அந்தப் பற்பத்தைப் போட்டு அரைவீசை சித்தாமணக்கு எண்ணெய் கொஞ்சம் கொஞ்சமாக ஊத்திக்கொண்டே அரைத்துப் பத்து ஜாமம் அரைக்கவும்.

## முடிவு

கண்மந்தம், எரிச்சல் இவைகள் தீர கரிசனாங்கண்ணி, பொன்னாங்கண்ணி, கீழாநெல்லி மூன்று சாறையும், நல்லெண்ணையில் கலந்து சூரியபுடம் வைத்து மூனுநாள், நாலாம் நாள் காய்ச்சி ஸ்தானம் செய்யவும். இரவில் சாதம் சாப்பிட்டுத் தூங்கும்போது காபூல் கடுக்காய் ஒரு சிறிய துண்டு....

## குறிப்புரை

மருந்துப் பொருட்களின் சுத்தி முறைகள், மருந்து செய் முறைகள், பல்வேறு நோய்களுக்கான மருத்துவ முறைகள் என மருத்துவம் தொடர்பான பல செய்திகள் விரிவாகத் தொகுக்கப்பட்டிருக்கின்றன. எனவே இறுதிப் பகுதி முடியாமலிருப்பினும் இதனை முழுமையான சுவடி என்று கொள்ளுதற்கியலும். இரத்தக் காயம், புண், சொறி, சிரங்கு, மேகம், ஒத்தைத் தலைவலி, பல்வலி, வாந்தி, பேதி, விசக்கடி முதலியவற்றிற்கு மருந்துகள் கூறப்பட்டு, அவற்றின் செய் முறைகளும், நோய், நோய்க்கான மருந்து செய்முறைகளும் மிக விரிவாகக் கூறப் பெற்றிருக்கின்றன. தைலம், மாத்திரை, செந்தூரம், களிம்பு, லேகியம், பற்பம், மெழுகு முதலியன தயாரிக்கும் முறைகளும், மூலிகை, உலோகம் முதலிய வற்றின் சுத்தி செய்முறைகளும் கூறப் பெறுகின்றன.

# 184. மருத்துவப் பாடல்

**அ.** **257:474; ஆ.** 1-16 ஏடுகள்; **இ.** 23 × 3 செ.மீ; **ஈ.** **4-5** வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம் தாந்திரிகச் சன்னி குணம்

சேத்துமச் சுரமுங் காயும் சிரம்பசி போலுந் தோன்றும்
யேத்த மாய்ப்பரி தவிக்கும் யிரந்திடும் வயிறு நாணும்

நீத்த மேல்மூச் சியங்கும் நின்றுடல் நடுங்கி நிற்கும்
சாத்திடர் தடித்தல் நாக்கு தாந்திரியச் சன்னி தானே (1)

முடிவு பெருமரப்பட்டையின் குணம்

பெருமரப் பட்டையின் குணங்கள் பேசில் கிராணி யகலும்
இறுவாத னோயகலும் மூல மாத்திவிடும் திருவேகேள்
கடலழிஞ்சிப் பட்டைகதி கதிக்கப் பிரமேகம்போம்
திடனார் சீழம்போம் திண்ணு (75)

குறிப்புரை

**1-75 பாடல்கள்.** கண்டகச் சன்னியின் குணம், கரன்னிகச் சன்னியின் குணம், பித்தச் சுரம், பயித்தியம் வாதச் சுரத்துக்குக் கசாயம், சிலேத்துமச் சுரத்துக்குக் கசாயம், மூளையைப் பத்தின சுரத்துக்குக் கசாயம், விசசுரத்திற்குக் கசாயம், கத்தாழை, மாதுளை, எலுமிச்சை, சீவனாகப்பூ முதலான தலைப்புகள் உள்ளன. இதனைத் தொடர்ந்து 1, 2 என்ற எண்ணிட்ட இரண்டு ஏடுகளில் 64 மூலிகை விபரம், வசியம் என்ற தலைப்புகளில் செய்திகள் இடம் பெறுகின்றன.

## 185. மருத்துவப் பாடல்

**அ. 289:513; ஆ.** *8-54 ஏடுகள்;* **இ.** 28 × 3 செ.மீ; **ஈ.** *7-8 வரிகள்; 8-22* வரையுள்ள ஏடுகளின் தொடக்கப் பகுதிகள் சிதைந்திருப்பினும் ஏடுகள் மிகவும் நல்ல நிலையிலுள்ளன; **ஊ.** *சுமாரான எழுத்து;* **எ.** *குறை;* **ஏ.** *அச்சாகாதது.*

தொடக்கம்

…ளும் பத்தியத்தில் கரியைக் கேளு
கதலியுட காயாகும் முருங்கைப் பிஞ்சு
தண்டுசிறு …. நெல்லிக் காயும்
தான்துவரை அவரையுட பிஞ்சு மாகும்
பண்டுநெய் பால்கற் கண்டாம் தூத ளங்காய்
…ன் முசலுடும்பு பறவையிலே காடை
கொண்டுடன் வெள்ளாடு வெள்ளெலியு மாகும்
… …. விரலாம்சிரை யாமே (30)

முடிவு

குத்தென்ற கழலையொடு பெருங்கால் வீக்கம்
காக்கைவலி முறிவுகைகால் குதிரைக்கால் முறிவு
சுத்ததொரு யெலும்பெல்லாம் முறியப் போகு
மசைவிருந்தால் மூப்பெல்லாந் தெரித்துப் போகும்
செத்ததொரு கைகால்கள் பிலமுண் டாகும்
சித்தியுள்ள தயிலமடா திரமாய்ச் சொன்னேன்
பத்தென்ற பத்தெல்லா முறித்துப் போகும்
பத்தியமாய்த் தயிலத்தைப் பரிந்து கொள்ளே (243)

குறிப்புரை

**29-243 பாடல்கள்.** 29ஆவது பாடல் குறை. குளிகை, தைலம், சூரணம் முதலானவற்றின் செய்முறைகளையும், அவற்றால் தீரும் நோய்களையும் கூறுகிறது. 38 ஆவது ஏடு எண்ணிடப்பட்டு 155 ஆவது பாடலின் இரண்டு சொற்களுடன் நிற்கிறது. 39 ஆவது ஏட்டில் 178 ஆவது பாடல் தொடங்குகின்றது. எனவே 155-177 வரையுள்ள பாடல்களை எழுதுவதற்காக இவ்வேடு விடப்பட்டு பின் எழுதப்படாமல் போயிருக்கிறது. தொடக்கத்தில் ஓலைச் சட்டம் ஒன்றுள்ளது.

## 186. மருத்துவப் பாடல்

**அ. 302:527; ஆ.** 20 ஏடுகள்; **இ.** 35 × 3 செ.மீ; **ஈ.** 8 வரிகள்; ஏடுகள் பல இடங்களில் சிதைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

ஆகிய னாடி மூன்றும் <u>படபடத்</u> தோடில் சன்னி
வாகினி லன்னங் கோழி மயிலென நடக்கும் வாதம்
ஏகிய ஆமை அட்டை யிவையென நடக்கும் பித்தம்
பாகிய தவளை பாம்பு போலு மாஞ்செஷ்டு மெங்கரனே (2)

முடிவு

தள்ளப்பா அக்கினியாஞ் சூரணஞ் சொல்வேன்
தளமான கொடுவேலி கடுகு ஓமம்

விள்ளப்பா சிறுதேக்கு ஆனைத்திப்பிலியும் கோஷ்டம்
விளங்கியதோ ரிரண்டுபா வகைஒன்று பலந்தான்
நள்ளப்பா காயங்கால் வசம்பு கால்தான்
நலமான கடுகுப்பொடி அரைபலந்தான் கூட்டி
தெள்ளப்பா யிளவறுப்பாய் சூர ணித்து
திறமாகச் சீனிசமன் கூட்டிக் கொள்ளே (123)

குறிப்புரை

**1-123 பாடல்கள்.** பல பாடல்களின் தொடக்கப் பகுதிகள் சிதைந்துள்ளன. பலவிதமான நோய்களும், அவற்றின் தன்மைகளும், அவை நீங்கும் முறைகளும். கூறப் பெற்றுள்ளன. வாதம், நாடிகளின் நடைகள், சிலேத்தும நாடி, சுரம், பித்தநாடி, சன்னி, மூலம், வாதராட்சதன், திரிபலைக் கசாயம், சீந்தி கசாயம், ஆனந்த மூலிச்சார், கோரோசனைக் குளிகை, தோடம், செந்தூரம், வாந்தி, மயக்கம், தூக்கம், லேகியம், வாய்வு, பஞ்சதீபாக்கினி, பித்தவாயு, அசதி சுரம், வெட்டை, சகல சுரம், வாதம், சூலை, உஷ்ண நோய், கெற்பவாய்வு, அக்கினி மாந்தம், உப்பிசங்கள்,வில்வாதி லேகியம், கிராணி, வாலரச செந்தூரம், கண்டங்கத்திரி லேகியம், சயம், குன்மம், மேகம், புண், கண்ட மாலை, சூசிகாவாய்வு, அக்கு, வயத்திலுள்ள வியாதி, சூரணம் முதலான பொருண்மைகள் உள்ளன.

## 187. மருத்துவப் பாடல்

**அ.** **316:542;** **ஆ.** *6-54* ஏடுகள்; **இ.** 23.5 × 3 செ.மீ; **ஈ.** *9-10* வரிகள்; **உ.** சிதையும் நிலை; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

சூதமணி

கேளப்பா வள்ளையென்ற சுண்ணந் தானும்
கெட்டியாகக் களனாகி யதில்கூடப் போட்டு
நாளப்பா நாதாந்தத் தால்விட்டு ஆட்ட
நலமான வெண்ணை யாம்வழிச் செடுத்து
வேளப்பா ஆரையிலை பூநாக மோடு
விரவி யரைக்குகை போலே

சூளப்பா சூதத்தை அதுக்குள் வைத்து
துடியாகப் பண்ணிக்கொண்டு அவிபிடமாய்
பத்துவிசை போடே (22)

முடிவு

போக்கான யின்னமொரு தங்கப் பற்பம்
புகலுவேன் மாணாக்காள் புகலக் கேளு
தாக்கான தங்கமொரு பலமே தூக்கி
தகடாக இலைபோலத் தட்டிக் கொண்டு
பாக்கவே சவ..ரம் புனுகு பூரம்
பரிவான வள்ளையோடு சூதங் கூட்டி
ஆக்கவே வாய்நீரால் அரைத்துப் பூசி
அண்டோட்டி லிட்டு.... (249)

குறிப்புரை

**22-249 பாடல்கள்.** பசளை, கருந்துளசி, வல்லாரை, சித்த கத்தி, பேயகத்தி, சீந்தி, சிவனார் வேம்பு, மயிலாரை, கல்தா மரைக் கிழங்கு, கல்லாரை, அழுகிணி, சூதமாமூலி, கரிசலாங் கண்ணி, கல்லுப்புச் சுண்ணம், சூதமணி, அயகாந்தச் செந்தூரம், அஷ்டலோகச் செந்தூரம், சூதகச் செந்தூரம், அய்க்காரச் செந்தூரம், வெண்காரக் கற்பம், தாம்பரப் பற்பம், தங்கப் பற்பம், சூதமணி, சூதக்கட்டு, வெடியுப்புச் சுண்ணம், துருசு சுண்ணம், வெடியுப்புச் செயநீர், பாஷா ணக் கட்டு, ப்தங்க ரசபற்பம், கபால வழலை, ஸ்ரீயும் புருசனும் சேர்ந்து வாழ, கத்தாழைக் கற்பம், மாலாதேவி, கரும்பசளைக் கற்பம், தங்ககுரு, பேயிக்கு, தச்சனை, அஷ்டமாசிங்கி மருந்து, அஷ்டமாசிங்கி குரு, தாம்பர சுத்தி, கெந்தகம், ஈயம் முதலான தலைப்புகளில் மூலிகைகளின் மருத்துவக் குணங்களும், மருந்து செய்முறைகளும் தீரும் நோய்களும் கூறப்பட்டுள்ளன.

## 188. மருத்துவப் பாடல்கள்

**அ.** 326:555; **ஆ.** *31* ஏடுகள்; **இ.** 38 × 2.5 செ.மீ; **ஈ.** *6* வரிகள்; **உ.** ஏட்டெண் உள்ள பகுதிகளின் பல இடங்கள் சிதைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது

தொடக்கம்

எட்டப்பா நாபி யிரத மாகும்
　　இதமான திப்பிலியும் பன்னி ரெண்டு
தட்டப்பா இஞ்சிரசந் தன்னா லாட்டு
　　தளமாக நால்சாம மரைத்துக் கொண்டு
விட்டப்பா மிளகுபோல நிழலுலத்தி
　　விரதான செப்பில் வைத்துச் சொல்லக் கேளு
அட்டப்பா அனர்ப்பான மருந்து போகும்
　　அப்பனே சன்னியென்ற மூலம் போமே
(ஏடு 6; பா. 33)

முடிவு

போமப்பா கணத்தெண்ணை சொல்லிக் கேளு
　　புகலுமுத்துக் கொட்டை யெண்ணெய் தானென்று
நாமப்பா கைய்யானஞ் சாறுகாணிச் சாறு
　　நலமான குமருச் சாறு கீழாநெல்லிச் சாறு
வேமப்பா கோவைச்சாறு புல்யாரைச் சாறு
　　விகுமானக் கனாப்பூத வள்ளிச் சாறு
தாமப்பா வகையொன்று சாறுபடி காலாய்த்
　　தப்பாமல் லெண்ணை யிலேகட வாறே (215)

குறிப்புரை

**33-215 பாடல்கள்.** முடிவுப் பகுதி உள்ளது. சுயமாக்கினி, சபதி, கூழ்ப்பாண்ட லேகியம், திப்பிலி ரசாயனம், பஞ்சதீ பாக்கினி, கபாடலேகியம், சன்னி, மூலம், எண்ணெய், சுரம், பெரும்பாடு, பூபதிக்குத் தீரும் வியாதி, நிலவாகைச் சூரணம், குமரி தயிலம் முதலான செய்திகள் உள்ளன.

## 189. மருத்துவப் பாடல்

**அ. 328:557; ஆ.** *115* ஏடுகள்; **இ.** 26.5 × 2.5 செ.மீ; **ஈ. 6-7** வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

மாட்டி யரைத்திடு ஊமத்தையின் சாத்தினால்
நீட்டி யுறுவ நெளகத்தெல் லுப்போல்

சூட்டி சிலசரிக் குள்வைத்து மூட்டியே
காட்டியே மூன்றுகடுந் தீபம் வைத்திடே
(ஏடு.130; பா. 49)

முடிவு

பண்ணியென்ற வாதத்தில் தொழிலோ சொன்னேன்
பார்ப்பவர்க்கு வெகுவெகுத் தானப்பதம் பொய்யாது
புண்ணியமாம் புருஷாருக்கு வாத சித்தி
பொல்லாத துரோகிக்குப் பொய்யாப்படு மாகும்
நண்ணியதோர் என்னூலைக் கொடுத்தோர் பாதம்
நலமாகச் செய்திடவே நல்லாஞ் சித்தி
கண்ணியவர் மனசுநொந்தால் யொன்று மில்லை
கவனத்தே சுந்தரர் கண்டு பாரே (பா.902)

குறிப்புரை

பிழை மிகுதி. *130* முதல் *183* வரை *(47* ஏடுகள்*)* ஏடுகள் வரிசைப்படுத்தப் பட்டுள்ளன. பின் உள்ளவற்றிற்கு எண்கள் இல்லை. பிற்பகுதியில் உள்ளவற்றுள் பெரும்பாலானவை முற்பகுதிக்குரியவையாக உள்ளன. பாடலுக்கு எண்கள் இருப்பினும் தொடர்ச்சியாக இல்லை. வெண்பாவிலும் விருத்தத்திலும் பாடல்கள் அமைந்துள்ளன. ரத்தனாதி பற்பம், பாடாண பற்பம், காரீயச் செந்தூரம், சித்து, வாதம், குன்மம் முதலான செய்திகள் உள்ளன.

## 190. மருத்துவப் பாடல்

**அ. 329:558; ஆ.** *65 ஏடுகள்;* **இ.** 38.5 × 3 செ.மீ; **ஈ. 7-8** வரிகள்; **உ.** ஓரளவு சிதைந்த நிலை; **ஊ.** நன்று; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

ஓடுமே யின்னமொரு குஞ்சந் தன்னை
உரைக்குறேன் நாவெழும் பாபேர் தனக்கு
ஆடுமே வாதிகளே யிந்தநூல் தான்ஆக
சொர்க்கம் மோட்ச மதைநாடும் பாரு
கேடுமே சதாசிவத்தின் பூர ணத்தில்
காரணமா முக்கோணம் நாதாந் தத்தில்

தேடுமே சதாசிவத்தின் சரத்தைக் கேளு
சரவசரவா சரதம்பர முந்தீட்சை பாரே
(ஏடு. 154; பா. 33)

முடிவு

பிடத்திலே போடவெண்டா லனந்தன் காயைப்
பேர்களா கயிறு துண்டாய் நறுக்கும்போது
இடத்திலே பெருந் துண்டாய்க் குடைந்து ஏனம்
செலுத்தியபின் சிறுதுண்டைப் பொருந்த மூடி
சடத்திலே மண்சீலை யேழுஞ் செய்து
தாணிக்கும் வார்தனைச் சாத்தக் கேளு
எடத்திலே எருவதனை அடுக்கிக் கொண்டு
ஏனத்தின் குட்டிதனை மேலே வைய்யே (பா. 40)

குறிப்புரை

ஒன்றிற்கு மேற்பட்ட நூல்களிலிருந்து திரட்டப்பட்ட மருத்துவப் பாடல் திரட்டு நூல் என்று இதனைக் கொள்ளலாம்.முதல் *46* ஏடுகளுக்கு எண்கள் *(154-346)* உள்ளன. பின்னுள்ள *19* ஏடுகளுக்கு எண்கள் இல்லை. பாடல் எண்களிலும் தொடர்ச்சி இல்லை. வகாரத் துறைக்குத் துரிசுச் சுண் ணம் மகிமை அறிவது, குடவனிலே நீர்வாங்குங் குளிகை, வெள்ளமுறை அறியும் மகிமை, ரசகுளிகை வசியம், பரித்தகட்டில் மகிமை, வசியமகிமை, ரசவாத வித்தை, அஞ்சன மகிமை, கெவுன குளிகை, திலதம், கண்கட்டு வித்தை, சகல சரக்குங் கட்டும் மகிமை சொல்வது, சகலசுரம் தீர்க்கும் தயிலத்தின் மகிமை சொல்வது, ராமதேவர் சோசியம்-*10*, இந்தத் தயிலத்தால் *64* பாசாணமுங் கட்டி வேதையாடும் மகிமை, தெய்வம் தெரிய, சொன்னபடி கேட்க, பாம்பு கழுதையாக, பெண்கள் வசியமாக, முன்சொன்ன எண்ணைக்குப் பத்திய மகிமை ராமதேவர் பஷ்சணி சூத்திரம் நூறு, இஷ்திரி புருசாள் பிணக்கிருந்தால் கூடப் பண்ணும் மகிமை வெள்வங்கத்தை நீர்வாங்குங் குளிகை, சத்துரு தவறியோடிப் போக, பெண் பிள்ளைகள் ஆடை திரள, மகாராசக் குளிகை மகிமை, சர்பவாடை வசியம், வெயில் படாமல் நடக்க, தண்ணியில் நடக்க, கேசரி தயிலத்தை எட்டு மண்டலங்கொண்டால் உகமழிகிற

வரைக்குஞ் சாவில்லை-மகிமை அறியும் முறை, ராமதேவர் கேசரி சூஷ்திர வினோதம், குருமகிமையறியச் சொல்வது முதலான தலைப்புகள் உள்ளன.

## 191. மருத்துவப் பாடல்

**அ.** 349:582; **ஆ.** *1-20* ஏடுகள்; **இ.** *34×3.5* செ.மீ; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நல்ல நிலை; ஆங்காங்கே சில துளைகள்; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

பாதிமாது உமையொரு பாகனார்
தீதிலா வாகட நூலில் ... சேர்தமிழ்
நீதியாய் எனக்கிது நிறைய ஓதுவாய்
ஆதியே பரமனே அரகரா சிவாசிவா(1)

சொல்லு மாந்தர் வினைவழி தொல்பிணி
புல்லும் வாரும் பொருப்பவும் நீள்பவும்
கொல்லும் நோயும் குணமும் மருந்துடன்
வல்லி கேட்க வகுத்தனர் நண்பனே (4)

### முடிவு

உதரமும் சுரந்து ஓங்கி உந்தியுள் மூச்சு முண்டாம்
அதரமும் க...மேனி மார்புமேல் கனத்து நேர்ந்தால்
திறமிது மரண வாய்வு திருமுனி யருளிச் செய்த
பதமுறு வேத நூலின் படிஇது பகர்ந்து காணே (101)

### குறிப்புரை

முதலில் **'வாக்குண்டாம்'**, 'திருவாக்கும்' எனத் தொடங்கும் வேறு நூலின் இருபாடல்கள் காப்புப் பாடல்களாக அமைந் துள்ளன. பின் மேலே கொடுக்கப்பட்டுள்ள நூலின் காப்புப்பாடல் முதலாக 101 பாடல்கள்உள்ளன. வாதக்குறிப்பு, மரணக்குறிப்பு, மரணமில்லாமை அறிக, சிரங்கு சொறி, நோயின் குணமறிதல், அஷ்ட்டவிதக்குறி அறியும் விதம், நோயின் குணமும் நாடியினாலும் குறி, ஐய்ய, பித்த, வாத வயது, பஞ்சபூத வயது, நாடியின் நடை, சாகுங்குறி, நாடி பார்க்குங் காலங்களில் நாடி நடக்கும் இயல்பு, நாடி பார்க்கும்

மாதத்தில் காலங்களறிய, கர்ப்ப சாந்தி, வாத பித்தம் வலுக்கும் காலம், வாதம் வலுவிழக்கும் காலம், பித்தம் வற்றி நின்ற காலம், கபம் வற்றி நின்ற காலம், வாத சரீர குணம், பித்த சரீர குணம், வாத பித்தம் பெலக்கும் இருப்பிடம், சிலேத்தும சரீர குணம், வியாதிகள் உற்பத்தி, சார உற்பத்தி, பித்தகோபம், வாதத்தால், பித்தத்தால், கபத்தால் வரும் வியாதிகளறிய, ஸ்திரிசங்கம், தோசம் முதலான தலைப்புகளில் நோய்களின் அறிகுறிகளும், அதற்குரிய மருந்துகளும் கூறப்பட்டுள்ளன. இறுதியில் பல வெற் றேடுகள் உள்ளன.

## 192. மருத்துவப் பாடல்

**அ. 357:592; ஆ.** *13-64 (26)* ஏடுகள்; **இ.** 33 × 3.5 செ.மீ; **ஈ.** *10-12* வரிகள்; **உ.** இடையிடையே சில ஏடுகள் விடுபட்டுள்ளன; நல்லநிலை; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

பார்ப்பதற்குப் பண்டிதமும் பாவிகமும் வேணாம்
பலியாட்டா லப்பணங் காசுபோட் டாலும்
சேர்ப்பதற்கு மருந்தென்று தாக்கிப் போடு
தீருமென்று தின்பார் கள்நோய்க் காகத்
தானாப் பந்தமாயிடு வாரொரு னாலும்
அவிழ்த்து அவிழ்த்துத் தருவார்கள் பணங்கள் காசு
ஏற்பதற்குப் பண்டிதரே சாச்சி யில்லை
யென்சொல்வே னீட்டுவழி யியம்பி டாதே (90)

### முடிவு

மூழ்கவே அதுசவரஞ் செய்து கொண்டு
முன்கூட்டுங் குங்குமங்க ளாசங்கள் தோய்த்துத்
தாழ்கவே கோக்கோ கலினை செய்து
தடங்கள் கரிகூரம் பாத்துச் சயன மீதில்
வீழ்கவே தோமிடம் பாத்துயர் வீசி
வாழைஇலை கீழ்விரித்து வயனங் கேளே (550)

### குறிப்புரை

**90-551 பாடல்கள்.** இடையிடையே பாடல்கள் இல்லை. *551* ஆவது பாடல் முற்றுப் பெறவில்லை. ஏட்டிற்கு எண்

கள் வலதுபக்க ஓரங்களில் எழுதப்பட்டுள்ளன. 550 ஆவது பாடலில் ஓர் அடி குறைகிறது. புல்லுருவி, அறுகம்புல் மருந்து, அரவுவித்தை, ரசச் செந்தூரம், ரசக்கட்டு, பூதஞ்செயல், மோரணத் தயிலம், சவுக்காரச் சுண்ணம், மூதேவி தியானம், ஆதிமூலிகையாவது, மண்டைப் பிடிக்கி மந்திரம், செந்தூர மெழுகு, அரிதார வித்தை, வீரக்கட்டு, சோதிவண்ண மூலிகை, எதிரி வெட்டெழும்பாமல், பணவித்தை, சூதமணி கட்டவும், தேவர், கெட்டிக்காரச் சீட்டு வித்தை, பேய்க்கன்னியைத் திருத்த வாய்வு தம்பனம், ஈயாதார்க்கு, செப்பிடு வித்தை, அக்கினி சிலேற்பனம், கொடிகட்ட, சேனை படை ஓட, முடக்கு வித்தை, திட்டியேவல், மண்டைப்பிடிக்கி மந்திரம், கொடு பாசாணக் கட்டுச் செந்தூர மெழுகு, கருமலை, செம்மலை சத்திவித்தை முதலான தலைப்புகள் உள்ளன. இறுதியில் **'கொங்கணர் பூசைவிதி'** என்ற நூலின் 5 பாடல்களையுடைய ஓர் ஏடு எண்ணின்றி உள்ளது.

## 193. மருத்துவப் பாடல்

**அ.** 375:616; **ஆ.** *121-168 (16)* ஏடுகள்; **இ.** 32 × 3 செ.மீ; **ஈ.** 7-8 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** படிக்கக் கூடிய எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

காலப்பா வெளிச்சமான பிசினுங் கால்தான்
கலந்துமிக விரைந்தாட்டி வழித்து நீயுங்
காலப்பா வேப்பெண்ணை படியும் விட்டுக்
காச்சியே காசிடைதா னுண்ணச் சன்னி
காலப்பா கழிந்து விடுமே நவத்துவார்க்
கதிப்பெல்லாந் தேய்த்திடவே களங்கந் தீருங்
காலப்பா சுரம்வந்த வுடனே தீரக்
காட்டறேன் பற்பத்தின் பேரு கேளே (479)

முடிவு

வைத்திட்டு அடிகனத்த பானைத் தூரில்
மைந்தனே தமரிட்டு மணலைக் கொட்டி

வைத்திட்டு விரல்கனந் தானால தாக
    வாக்கதின் மேலே குப்பி வைத்து
வைத்திட்ட குப்பிக்குக் கழுத்து மட்டு
    மணல்வைத்துச் சூட்டடுப்பில் வைத்து நீயும்
வைத்திட்ட மந்தரக் கினியை மூட்டி
    மைந்தனே ரண்டுபத்துச் சாம மாட்டே (671)

குறிப்புரை

சன்னி, சுரங்களுக்குச் சுராங்கிசம், குளிகை, பற்பம், ஈளைக்கு, சூலை, மண்டைச் சூலை, கற்பம் விசபாகத்துக்கு விளக்கம், சுத்தசூதம் வெள்ளைச் சூலை, நீரிழிவுக்கெல்லாம் ரசபற்பம், கெந்தகத் தயிலம்-குட்டங் குறை நோய்க்கு, நோய்க்கு அனுபானம், வேதை, சூத, செந்தூர அனுபானம், அரிதாரபற்பம், புண்ணுக்கு, இரத செந்தூரம்-சகல சங்கம நோய்க்கு, சூலைக்கு, பக்கசூலை, பானம், பெருஞ்சூலை, தயிலம் முதலான செய்திகள் உள்ளன.

## 194. மருத்துவப் பாடல்

**அ. 384:627; ஆ.** *1-12(10)* ஏடுகள்; **இ.** 30 × 3 செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** ஏடுகள் மிகவும் பழையதாகவும் சற்றுச் சிதைந்தும் உள்ளன; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சூதம் நாவி இலிங்கம் நொச்சிலை
    தூக்கி யவ்விடை கெந்தகங் காந்தமும்
போதவெண.. பொடி யீடெடுப்பு
    கலைகர ருளையும் பால்விட் டரைத்துமே
மோதுந் தாலப் பிரத்தினி லப்பியே
    முனிந்த சூரியமுகத் தினிக்கார் அந்திடில்
நீத மானா சுயமாக்கினி யீதென
    நிகழ்த்தினார் தமிழ்மா முனிகா ணாமே

முடிவு

பச்சை நாவி சூதம்நற் தாம்பிரம்
    பகருங் கெந்தகம் பரரோ கத்துடன்

மெச்ச அமுர்த வல்லிக் கசாயத்தில்
　　விரும்பி நேக வொருநா ளரைத்தபின்
இச்சை யாகிய சாரணை வேர்த்தளை
　　யிடித்து வெந்த கசாயத் தரைத்திடு
மிச்ச மாகிய கொடிவேலிச் சரகத்தை
　　விட்ட ரைத்திடு பருவ மதாகவே

குறிப்புரை

பாடல்களுக்கு எண்கள் இல்லை. பிழைமிகுதி. சுயமக்கினி நீர்ச்செறிப்புக்கு, கடம்பாச மாத்திரை, மாத்திரை, வேலபடி, நாரசிங்காசம், பித்த கத்தூரிக்குளிகை, மேககஸ்தூரிக் குளிகை, ஏலாதிக் குளிகை, சுரக்குளிகை, கெவுரி யுண்டை, பூபதி, சன்னி, வாத வயிரவன், நீலகண்டாசமர், சுராங்கிசம், தீரிமூர்த்திரசம், நமக் கிரகாசம், சிவுதாக்குளிகை, திதிவிக்கிர மாசம், முத்த சஞ்சீவி, நாலு நாள் மாறல் சுரம், குவிரேசன குளிகை விஷ்ணுசக்கரம், வாதராட்ஷதம், ஆனந்தவயிரவன் முதலான தலைப்புகள் உள்ளன.

## 195. மருத்துவப் பாடல்

**அ.** 400:644; **ஆ.** 23 ஏடுகள்; **இ.** 24.5 × 3 செ.மீ; **ஈ.** 7-8 வரிகள்; **உ.** ஏடுகளின் தொடக்கப் பகுதிகள் சிதைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

வெள்ளையென்ற வெளுப்புழுதல் இளைப்பு கக்கல்
　　விசக்கடியுங் குரைநோவு மீளு மீளு
தள்ளையென்ற சூதபற்பந் தார பற்பம்
　　தடையறவே சண்ணுமடா தாக்கிப் பாரு
பிள்ளையென்று ....யாளி பணிவ ராகில்
　　பிணிதீரும் பணியானால் பிசகுங் கா..ண் (51)

முடிவு

சிவக்கயின்னஞ் சொல்லுகிறேன் தகரைச் சாற்றில்
　　திறமாக அரைத்துவில்லை முன்போல் தீரும்
பவக்குறைகள் தீருமடா மூன்றுபிடம் போடு
　　பண்பான சிவபூசை பண்ணியேதான்

உவப்பான தேனில் பணவிடைதான் கொள்ள
ஒருநாளைக் கிருநேர முறைத்துத் தின்னு
துவப்பான புகையிலையும் புளியும் போடு
தள்ளுகின்ற மீனிறைச்சி நீக்கச் சொல்வேன் (157)

குறிப்புரை

பாடல்களுக்கு எண்கள் இருப்பினும் பாடல்கள் தொடர்ச்சி யாய் இல்லை. அயகாந்தம், நவலோகம். செந்தூரம், லேகியம், தைலம், மாத்திரை, சூரணம் முதலானவற்றின் செய்முறைகளும், அவற்றைப் பயன்படுத்தும் முறைகளும் தீரும் நோய்களும் கூறப்பட்டுள்ளன.

## 196. மருத்துவப் பாடல்

**அ.** **401:645;** **ஆ.** *2-58 (44) ஏடுகள்;* **இ.** 31 × 2.5 *செ.மீ;* **ஈ.** 5 *வரிகள்;* **உ.** *சில ஏடுகளும், ஏட்டெண்களும் சிதைந்துள்ளன;* **ஊ.** *ஓரளவு நல்ல நிலை; கடினம்;* **எ.** *குறை;* **ஏ.** *அச்சாகாதது.*

தொடக்கம்

வாதத்தில் வாத மாகில் வளர்ந்திடும் அன்னம் போல
தீதத்த உடலும் தேர்ந்து தெகிஷ்சியாய் சுருங்கி வாங்கும்
ஆதத்து பத்து மேனி அசனமும் பற்ப மாகும்
யேதுத்த தனத்தின் மின்னே யென்னியே அறிந்து
சொல்லே (4)

முடிவு

ஆமப்பா நன்னாரி பற்ப டாகம்
அப்பனே வகையொன்று பலந்தா னாலு
போமப்பா யிருகாணி வெள்ள நீரில்
பொடியாக யிடித்திட்டு அடுப்பி லேத்தி
நாமப்பா சோடத் தொன்று காய்ச்சி
நலமாக பாண்டத்துள் வடித்துக் கொண்டு
தாமப்பா செவ்வெளநீர் படிதான் ரெண்டு
தப்பாமல் காணிச்சாறு படிரெண்டு வாரே (172)

குறிப்புரை

**4-172 பாடல்கள்.** இடையிடையே பாடல்கள் இல்லை. கண்டங்கத்திரி லேகியம், வில்வாதி லேகியம், அக்கினிச் சூரணம், கீழ்காயி நெல்லித் தயிலம், அசுவகெந்திச் சூரணம், தாளிசபத்திரிச் சூரணம், பஞ்ச தீபாக்கினிச் சூரணம், நிலவாகைச் சூரணம், ஏலாதிச் சூரணம், வில்வாதித் தயிலம், குமரித் தயிலம், சிரசூலைக்கு ஆதண்டைத் தயிலம், கண்டாத்திரி சூரணம், கொம்பரக்குத் தயிலம், சந்தனாதித் தயிலம் பிருங்காமலத் தயிலம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 197. மருத்துவப் பாடல்

**அ.** 402:646; **ஆ.** 4-89 ஏடுகள்; **இ.** 16.5 × 3.5 செ.மீ; **ஈ.** 10-11 வரிகள்; **உ.** இடையில் சில ஏடுகளும் இறுதியில் ஓர் ஏடும் முறிந்துள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

மூலமுடன் ஆலவிழுது குருவிஞ்சி சிறுகுமிழ்
முத்தினதோர் சிஷிபவ முதலையின் வேரும்
சாலவே வகைக்குஒரு பலமாய்வாங் கித்தான்
தூணிச நீர்தனில் போட்டுக் காச்சி
யேலவே யெட்டிலொன்றாய் கிஷாயம் வாங்கி
யிருனீருங் கிடாரத்தில் விட்டுப் பின்பு
பாலவே வகையாம்நால் மரத்தின்பட்டை வகைஒன்று
பலமூன்றா மாவரையின் பட்டைபல மூன்றே (15)

முடிவு

பலமான மூலிகைதான் வகையொன் றுக்குப்
பலமொன்று படிசெலமாய் சாந்து விட்டுச்
செலமான தெட்டொன்றாய் வத்தக் காச்சி
செலத்துக்கு னாலிலொன்று நறுநெய் சேர்த்து
குலமான அதிமதுரங் கோட்டம் ஏலங்
குருசாணி குந்திருக்கம் நறுக்கு மூலம்
பிலமான திரிகடுகு திரிப லாதி
போரான அதிவிடையஞ் சிவதை யாறே (299)

குறிப்புரை

**15-299 பாடல்கள்.** *கிரந்தி, சூலைக்கு லேகியம், வாதளசரங்க எண்ணை, அயச் செந்தூரம், இது சூலைக்கும், பித்தம் தலை கொண்டு வந்த வரலாறு, பித்தனுக்கு மருந்து, காசந்தான் சன்னி, சன்னிக்குத் தயிலம், இதுக்கு மருந்து, பிளவை, கண்டமாலை, கருங்குட்டம் இதுக்கு எண்ணை, கண்ணில் வியாதி வரும் காரணம் முதலான தலைப்புகள் உள்ளன.*

## 198. மருத்துவப் பாடல்

**அ. 406:650; ஆ.** *84-253(131)ஏடுகள்;* **இ.** 32 × 3 செ.மீ; **ஈ.** *7 வரிகள்;* **உ.** *105-138, 155, 167, 168, 185, 224 ஆகிய ஏடுகள் இல்லை; இறுதியிலுள்ள ஏடுகள் சிதைந்துள்ளன; மற்றவை நல்ல நிலையிலுள்ளன;* **ஊ.** *தெளிவு;* **எ.** *குறை;* **ஏ.** *அச்சாகாதது.*

தொடக்கம்

திரிபலாதி நெய், குட்டம், குன்மம், வெண்குட்டம், பாண்டு விசக்கட்டிக்கும்

ஆவலுடன் கொடுவேலி வேரின் பட்டை
அரியசிவதை நிலமா மணக்கின் வேரும்
வீறுடனே மரமஞ்சள் பொற்கொன்றைக் காயும்
வெற்றிபுரி யதிவிடையங் கடுகுரோ கணியும்
வாறுகேள் மஞ்சளப்பா பின்னுஞ் சொல்வோம்
வட்டத்திப் பிலியுடனே வகைக்கு மைந்தா
மீறாமல் வராகன்மூன் றரையாய்த் தூக்கி
விரைந்தாட்டி னாழிநெய்யில் கலக்கிக் காச்சே (328)

முடிவு

கூட்டியே எட்டுநா ளருந்த மைந்தா
குன்மம்போஞ், சூலைபோங் குளிருந் தேகந்
தீட்டியே திப்பிலித்தூள் தேனுங் கூட்டித்
தின்றுவிடில் வெகுவாகுந் தாது தானும்
நீட்டியே செந்தூரம் பணவிடைதா னப்பா
நீயுண்ணு யானைபோலப் பிலனு முண்டு

மாட்டியே யிருபதுநா ளிரண்டு நேரம்
மருளுண்டாம் நாற்றம்போ மாண்மை யாமே
(ஏடு.251; 968)

குறிப்புரை

**328-968 பாடல்கள்.** இடையிடையே பாடல்கள் இல்லை. மேகமிருபதுக்கும் கலியாணக்கிருதம், சன்னிமுதற் சுரத் துக்குச் சீதேவி செங்கழுநீர்நெய், கெண்டைக்கு அனலாதிச் சூரணம், துத்தகாச பானத்துண்டை, கள்ளிக் கசாயம், அப்பிரகச் செந்தூரம், ஏலாதிச்சூரணம், நாரத்தங்காய் லேகி யம், சண்டமாருதச் செந்தூரம், அண்டயெண்ணை, குளுமை மருந்து அரையாப்புக்கு லேகியம், பித்த காமாலைக்குத் தாளிசபத்திரிச் சூரணம், அயனாதி வடகம், வாயுவு, வலி குர்மங் கிருமிகளுக்குக் குளிகை, தருணசுரகசாயம், மந்தரூட்சை, காரீயச் செந்தூரம், கிஷ்ட்டிண பாகச் செந்தூரம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 199. மருத்துவப் பாடல்

**அ.** **498:759; ஆ.** *10-21* ஏடுகள்; **இ.** 27 × 3 செ.மீ; **ஈ.** *8* வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

கேளப்பா கற்பூரங் குங்கு மப்பூ
கிளர்புனுகு சட்டமுடன் கோரோசனையும் போட்டு
நாளப்பா வடித்துடனே வேடு கட்டி
நலமாக வைத்துவைப்பாய் முழுகும் போது
வேளப்பா சீயக்கா வென்னீ ராகு
மெய்யெல்லாஞ் சந்திரன்போலக் கார்த்தி யாகுஞ்
சூளப்பா மேகசலம் பறந்து போகுஞ்
சூத்திரத்தில் சூத்திரமாய்ச் சொன்னேன் தானே (39)

முடிவு

சிரசாகு முடும்போடு காம ரூபி
செந்நண்டின் தலையுடனே பச்சைப் பாம்பு

அரசாகு மலங்கோடு முசுறு முட்டை
அப்பனே நண்டுநத்தை சிப்பி யாமை
விரசாகும் செங்கொண்டை ஆயிரக்கா லட்டை
வெண்பொரசம் விரையுடனே ஊர்க்குருவி முட்டை
பரசான பிராயம் வித்து முருங்கை வித்து
பரிவான வசம்போடு பண்டி நெய்யே (83)

குறிப்புரை

**39-83 எண்சீர் விருத்தப் பாக்கள்.** தாளகற்பம், இரசகற்பம், வாதகற்பம், வாதராசாங்கத் தைலம், லோக செந்தூரம், குன்மகர்மம் வந்த வகை, மெழுகு, குட்டகர்மம், வலியஞ்சு கர்மம், வலியஞ்சு தைலம் முதலான தலைப்புகள் உள்ளன. இறுதியிலுள்ள மருத்துவம் தொடர்பான நான்கு ஏடுகளில் சுரம், அப்புரகச் செந்தூரம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 200. மருத்துப்பாடல்

**அ. 557:903; ஆ.** *8-14* ஏடுகள்; **இ.** 23.5 × 3.5 செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; ஓரிரு துளைகள்; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

வாயுபுகுந்து மலத்தோ ...அபா னத்தைத்
தேயுவைக் கூட்டித் திரட்டிக் கருக்கிடுந்
தோயும் வலம்வரிற் சுருக்குமுன்னே நீண்டு
ஆயு முறைபோல் அபான மிலக்குமே (61)

முடிவு

தின்றிட நோயெல்லாந் திசைகெட்டு ஓடிடும்
பன்றிட வாய்வு பக்கத்திற் சேராது
தன்றிட லோகத்திற்குத் தானாகச் செய்முறை
மன்றிய சித்தர் மகாவியாதி போக்குமே (112)

பிற்குறிப்பு

சுப்பிரமணியர் பாதார விந்தமே கெதி. விக்கினேசுர மூர்த்தி முன்னிற்க. இந்த ஏடு எழுதினேன் ராமலிங்கம் வயித்தியன் மகன் சிவன். *1963* வருசம் ஆடிமாதம் *9* ந் தேதி முகிர்ந்தது.

குறிப்புரை

**61-112 பாடல்கள்.** மூலம், கழிச்சல், கிராணி, பித்தம், அனல் வாதம், மேகக்குறி, குன்மக்குறி, சூலைக்குறி, கெர்ப்பசூலை, சன்னிகுறி, நயனவிதி, குட்டம், விரணம், மலக்கட்டு முதலியன. இறுதியிலுள்ள ஓர் ஏட்டில் மந்திரம் என்ற தலைப்பும் அரைவரியும் மட்டுமே எழுதப்பட்டுள்ளன.

## 201. மருத்துவப் பாடல் முதலியன

**அ. 558:904; ஆ.** 3-5 ஏடுகள்; **இ.** 15.5 × 4 செ.மீ; **ஈ.** 8 வரிகள்; **உ.** நன்று; கிறுக்கலான எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

தீந்துபோம் பலபிணிக ளிதுநா லப்பா
தீராத பலபிணியும் சுரமுந் தீரும்
போந்துபோம் இளைப்புஇருமல் சிலேற்பன வாய்வு
பிரண்டோடுஞ் சிரங்குசொறி கரப்பன் புண்கள்
ஆந்துபோம் கால்காயங்கள் குடச்சல் குத்து
அல்லாத வாயுவுனால் எழுந்த ரோகம்
ஊர்ந்துபோம் பித்தத்தால் எழுந்த ரோகம்
உரப்பனமாய் நான்கொடுத்துச் சோதித் தேனே (5)

முடிவு

பாரப்பா இம்மருந்தால் பிசகொன் றில்லை
பத்தியமும் இதற்கில்லை பாரு பாரு
ஆரப்பா கெர்ப்ப சங்கைக்கு வீக்கங் கொண்டு
அதினாலே இளைப்பெடுத்துச் சன்னி யுண்டால்
மூரப்பா கால்கைகள் முகமுங் கண்ணு
முறுப்பு வலியெடுத்து முறைதள்ளி னாலும்
சீரப்பா இக்குளிகை கொடுத்துப் பாரு
செனத்திலே தீர்ந்துவிடும் திட்டம்ந் தானே (10)

குறிப்புரை

**5-10 எண்சீர் விருத்தப் பாக்கள்.** பலவித நோய்கள், சுரம், இளைப்பு, இருமல், சிலேற்பனம், சிரங்குசொறி, கரப்பான்,

சன்னி, குழந்தைகளுக்கு, பலமில்லாதவர்களுக்கு, மலடிகளுக்கு, உடல்நலக் குறைவுள்ளோருக்கு, கற்பம் கரைவதற்கு, நஞ்சு விழுவதற்கு, நெஞ்சுக் குத்து, இடுப்பு, கைகால் தொடைகள் வலிப்பதற்கு, கழுத்து வலிக்கு, மண்டைக்குத்து, மார்படைப்பு, மேல்மூச்சு வாங்குதல், வயிறு விம்மல் முதலான நோய்களுக்குக் கொர்ப்பசங்கை என்ற குளிகை கொடுத்தால் நோய் தீரும் என்பது கூறப்படுகின்றது. இறுதியில் எண் இல்லாத ஓர் ஏட்டில் *21-25* பாடல்கள் காணம்மானை என்ற மகுட அடியினைக் கொண்டு அமைகின்றன.

## 202. மருத்துவப் பாடல்

**அ. 577:935; ஆ.** *2-15* ஏடுகள்; **இ.***32.5* x *2.5* செ.மீ.; **ஈ. 5-6** வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; முதல் நான்கு ஏடுகளின் கீழ்ப்பகுதிகள் சற்று உடைந்துள்ளன; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; ஏ. அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

தாது முறையே தணித்த இடம் வாதம்
போதுறு பிங்கலை புகன்றது பித்தம்
மாது சுழிமுனை வலமிட மேகண்டால்
ஓது முறைப்பா துணர்ந்தவர் சித்தரே (22)

முடிவு

திண்டே நோயெல்லாம் திசைகெட்டு ஓடிடும்
பன்றிட வாய்வு பக்கத்தில் சேராது
கண்டிட லோகர்க்குத் தானாகச் செய்முறை
மன்றிய சித்தாக மகாவியாதி நோக்குமே (214)

குறிப்புரை

**22-214 பாடல்கள்.** *21* ஆவது பாடல் குறை. வளி, அழல், ஐயம், ஆகிய நாடிகளின் நடைகளைக் கொண்டும், இம்மூன்று நாடிகளும் ஒன்றுடன் ஒன்று கலந்து நடக்கும் நடைகளைக் கொண்டும் நோய் அறிதல், நோயின் குணமறிதல், மரணக் குறி அறிதல், மரணம் நிச்சயமென்றறிதல், எத்தனை நாட்களில்

மரணம் என்றறிதல் முதலியன விளக்கம் பெறுகின்றன. அபானவாயு, வாசி, அப்பு, தேயு, இடகலை, பிங்கலை, சுழுமுனை, யோகி, சித்தர், மாஞ்சுகசன்னி, புண், சுரம், ரோகம், குண்டலினி, கன்னிசுகம், மூலம், உறுக்கியவாய்வு, கழிச்சல், கிராணி, மேகம், நீர்க்கட்டு, வெள்ளை, சுரமேகம், சூலை குன்மம், சூலை, குளிர்சுரம், சுகமாய் பிள்ளை பிறக்க, திறமாய் பிள்ளை பிறக்க, பாரிசவாயு, சூதம், கெர்ப்பத்தில் நோய், கண்ணோய் வருகின்ற காரணங்கள், வெட்டைவாய்வு, குட்டங்கள், கிரந்தி, தங்கம், கெந்தகம் முதலான பொருண்மைகள் உள்ளன.

## 203. மருத்துவம்

**அ.** 202:408; **ஆ.** 7 ஏடுகள் **இ.** 23 × 3 செ.மீ; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; சில ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்    நாக்கு உள்ளே இழுக்க

ஊமத்தங் கிளையில் அஞ்சு புழுவு எடுத்து, ஒரு குடுவையில் அரை ஆழாக்குக் கல் சுண்ணாம்பு போட்டு அதின் பேரில் புழுவை வைத்து, மற்ற அரை ஆழாக்குக் கல் சுண்ணாம்பைக் கொட்டி ஆண்பிள்ளைகள் அமிரியை விட்டுச் சுண்ணாம்பைத் தாளித்து அந்தச் சுண்ணாம்பை மூன்று நாளைக்கு வெற்றிலையில் தடவிக் கொடுப்பது. இதற்கு முறிவு.

முன்னே சொன்னதுதான் புட்டி மூலிகைதான்.

முடிவு    மவுனம்

தேவாங்கு கொண்டுவந்து வலது கண்ணைப் பிடுங்கி நன்றாய் உலர வைத்துத் தீமறி பாஷாணம்... இது ரெண்டையும் பொடி செய்து ஒன்றாய்க் கலந்து புட்டியிலடைத்துக் கொள்ளவும். இந்தப் பொடியை எந்த அனுபானத்திலாவது மூன்று நாளைக்குக் கொடுப்பது.

இதுக்கு முறிவு - இடது கண்ணைப் பொடி செய்து எதிலேயாவது மூன்று வேளை உள்ளுக்குக் கொடுப்பது.

.... இச்சாத்தில் அரைத்துப் பூச மாந்தம் போம்.

### குறிப்புரை

**உரைநடை.** ஏட்டெண் இல்லை. நாக்கு உள்ளே இழுக்க, ஸ்ரீகளுக்கு சிசனம் உண்டாக்குகிறது. கால்கை, முடக்கு சொறியாகிறது, தேரிப்பு, மாரணம் முதலான செய்திகள் உள்ளன.

## 204. மருத்துவம்

**அ. 265:485; ஆ.** *312-315* ஏடுகள்; **இ.** 37 × 3 செ.மீ; **ஈ.** *8-10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

**தொடக்கம் வங்கச் செந்தூரம் - நீரிழிவுக்கு**

ஒரு பலங் காரீயங் கொண்டு வந்து சட்டியிலிட்டு ஆலம்பழமிடித்து உலத்தி நானாழிப் போட்டுக் கொண்டு இந்த நானாழிப் பொடியு மோட்டிலே குறையக் குறையப் போட்டு முருக்கம் கம்பு கொண்டு கிண்டி, இந்த நானாழிப் பொடியும் பின்னை வறுக்க வறுக்கப் பச்சரித் தவிடு போலேயானால் இறக்கிக் கொண்டு இரண்டு செங்கல்லைத் தாயு மூடியுமாகத் தோண்டிக் கொண்டு ஒரு செங்கல்லிலே அந்தப் பொடியை விட்டு மறுமூடி கொண்டு அந்தச் செங்கல்லில் சுத்தியே சீலை மண் செய்து ஒரு மூடி எருவிலே ஒரு பிடமிட்டு எடுத்தால் முருக்கம்பூப் போலேயிருக்கும். இந்தச் செந்தூரம் அவரை விரையும் ஆவாரையிலைத் தண்ணீர் விட்டரைத்துக் குடுக்க நீரிழிவு பொறுக்கும்.

### முடிவு

மத்த மருந்தெல்லாம் வஸ்திரகாயம் பண்ணிக் கொடுவேலி வேர்த்தோல் கூட்டி முன்சொன்ன கசாயம் கம்பிப் பதத்தில் சூரணம் சிறுகச் சிறுகப் போட்டுக் கிண்டப் பதம் வந்தவாறே நல்லெண்ணை உரி, தேன் உரி, நெய் உழக்கு விட்டுக் கிண்டியிறக்கவும். தீரும் வியாதி காமாலை, பாண்டு, சோகை முதலானது தீரும். இளைப்பு எய்ப்புந் தீரும்.

### குறிப்புரை

**உரைநடை.** அரிதாரச் செந்தூரம், சிந்தாதிலேகியம், இருமலுக்குக் குக்குலுச் சூரணம், புளியாரை நெய், விஷ

பாகத்துக்குக் கசாயம், லோகாமிர்த ரசம், விசமந்திரம், கபோத வந்தாதி கிருதம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 205. மருத்துவம்

**அ.** **301:526; ஆ.** *1-34* ஏடுகள்; **இ.** 27 × 3 செ.மீ; **ஈ.** *4-6* வரிகள்; **உ.** முதல் நான்கு ஏடுகள் சிதைந்துள்ளன; இடையில் சில ஏடுகள் இல்லை; **ஊ.** படிக்கக்கூடிய ஒன்றுக்கு மேற்பட்ட கையெழுத்துகள்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

போடப்பா வேம்பிறு தயிலத் துக்கு
  புகழான ஏலமுடன் இலந்தை வேரும்
நாடப்பா பளம்பாசி அக்கிராகார மனல மாக
  வகைக்கு பலமொன் றரைத்துப் போடு
போடப்பா குறுந்தொட்டித் தயிலத் துக்குப்
  பொங்க முள்ள கசகசாமிகு ஏலம்
ஆடப்பா வகைக்கு கால்பல மாகு
  அரைத்திட்டுப் பதமாகக் காச்சு காச்சே (ஏடு. 5)

முடிவு

போச்சப்பா மண்டைஇடி கபால வாயு
  புகழான கண்ணெ ரிவுபுழு வெட்டல்
வீச்சப்பா நடுக்கமது இருமல் காயம்
  விதமான நெஞ்சடைப்பு புகைச்சல் கக்கல்
காய்ச்சப்பா நீராம் பல்பெரு வயிறு
  கனமான ரோகமெல்லாம் காணாதே போகும்
போச்சப்பா உனக்கிது கிடையா தப்பா
  இயல்பான வயத்தியனே இந்நூல் பாராய் (ஏடு. 34)

குறிப்புரை

வாய்வு மூலம்- மண்டைஇடி, கபாலவாயு, கண்ணெரிவு, புழுவெட்டு, குன்மம், பேதி, இருமல், நெஞ்சடைப்பு, நீராம்பல், பெருவயிறு, பெரிய நோய்கள் முதலான நோய்களுக்குரிய மருந்து வகைகளான, குழம்பு, செந்தூரம்

தைலம், லேகியம், கசாயம், சூரணம் முதலானவற்றின் செய் முறைகள் கூறப்படுகின்றன. 34 ஆம் ஏட்டிற்குப் பின் மருத்துவம் தொடர்பான எட்டு ஏடுகள் முறைமாறிப் பொருள் தொடர்பின்றி உள்ளன. அவற்றில் நவக்கிரக வெள்ளை, கடுகுரோகணி மாத்திரை, திருமால் சக்கரக் குளிகை, ஆவேசம், கெற்பவாயுவுக்கு முதலான தலைப்புகள் உள்ளன.

## 206. மருத்துவம்

**அ.** 307:532; **ஆ.** 5-26 (12) ஏடுகள்; இ. 25.5 × 2.5 செ.மீ; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** நன்று; ஓர் ஏடு சற்று முறிந்துள்ளது; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம் மண்டைக் குடைச்சலுக்கு

கருந்துளசிச் சாறு படி-1, நல்லெண்ணை படி-1, சீந்திக்கொடி வேர் பலம்-2, ஆதண்டை வேர் பலம்-1, வேளைவேர் பலம்-1 நறுக்கிச் சாறு பிழிந்து சேர்த்துப் பக்குவத்தில் தயிலங் காய்ச்சித் தலைக்குத் தேய்த்துக் கொண்டால் தீரும். இச்சாபத்தியம் (ஏடு.5).

முடிவு பவள பற்பம்

பவளம் பலம்-20, எலும்பச்சம்பழச் சாற்றில் ஊறப்போட்டு வெந்நீரிலே கழுவச் சுத்தியாகும். சுத்தியான பிறகு எருக்கம் பாலிலே மூன்று நாள் ஊறப்போட்டுக் கெசப்பிடம் (கெஜப்புடம்) போடப் பற்பம் (ஏடு. 26).

குறிப்புரை

**உரைநடை.** காந்தார சத்து வங்கம், சிரசுநோய், பீனிசம், சிரசூலைக்கித் தயிலம், அசுவகெந்தி பலாதி தயிலம், மண்டைக் குடைச்சலுக்கு, ஒருபக்கத் தலைவலிக்கு மருந்து, காரீயப் பற்பம், வீரச் செந்தூரம், காதில் சீழ் வருகுறதுக்கு, நேத்திரவாயுவுக்கு திரிலோகச் செந்தூரம், வாலரசம் (வாலைரசம்), சந்தனாதித் தயிலம், கபாலச் சூலை தீரத் தயிலம், புறவீச்சுக்குத் தயிலம், நீரிழிவுக்கு மருந்து, வெள்ளீயப் பற்பம் முதலானவற்றின் செய்முறைகளும், அவற்றால் தீரும் நோய்களும் கூறப்பெற்றுள்ளன.

# 207. மருத்துவம்

**அ. 347:579; ஆ.** *1-75 (66)* ஏடுகள்; **37** ஆவது ஏட்டிற்குப் பின் ஏடுகள் தொடர்ச்சியாக உள்ளன; **இ.** 25 × 2.5 செ.மீ; ஈ. 5-7 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; முதல் **4** ஏடுகளும், இடையில் ஓர் ஏடும், இறுதியில் **73, 74** என்ற ஏடுகளும் பாதியாக முறிந்துள்ளன; சில ஏடுகளின் ஓரப்பகுதிகள் முறிந்துள்ளன; ஏடுகள் கறுத்துள்ளதால் ஏட்டெண்களை, எழுத்துகளை அறிவது கடினமாயுள்ளது; **ஊ.** கடினம் **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

## தொடக்கம் துவரம்பட்டைச் சூரணம் - பெரும்பாட்டுக்கு

அகத்திப் பட்டை, நாகல், மருது, ஆவாரை, காசை இவற்றைச் சரிசரியாகச் சூரணம் பண்ணித் தயிரில் போட்டுப் பெரும்பாடு, ரத்தப் பிரமியம், பெரும்பாட்டுக் கடுப்புக்குக் குடுக்கவும். தீரும் (ஏடு. 5).

## முடிவு

சதையத்தில் சுரம். *8* நாளில் கொல்லும். கொல்லாதாகில் பின்பு கொல்லும். பூரட்டாதியில் **4...7** நாளையில் கொல்லும். அல்லாதாகில் பின்பு கொல்லும். உத்திரட்டாதியில் சுரம் *8* நாளையில் விடும். ரேவதியில் சுரம் **5** நாளையில் கொல்லும். கொல்லாதாகில் **10** நாளையில் விடும். இப்படி நட்சத்திரம் அறிந்து மருந்து கொடுக்கவும்.

## குறிப்புரை

**உரைநடை.** பிழை மிகுதி. நீர்த்தாரையிலிருக்கிற கல்லு விழ, ஆண் பெண் உடம்பில் ரத்தப் பிரமியங் கண்டால் மருந்து, வாயிலே ரத்தம் விழுகிறதுக்கு மருந்து, புண்ணுக்கு எண்ணை அனுபானம், வயத்தில் செத்த பிள்ளை விழ மருந்து, கண்ணுக்குப் பிரவளைப் பத்து, பெருவியாதிக்கு, குஷ்டத்துக்கு மருந்து, குன்மத்துக்கு அன்ன வேதி, கட்டி கரைய, சருவ வியாதிக்கும் அஞ்சனம், நிலவாகைக் கற்பம் சருவ வியாதிக்கும் கழுதை வண்டு தின்ற பேருக்கு, பூரண சந்திரோதையம், பித்த கிராணிக்கு, சூதத்துக்கு விஷமுட்டித் தயிலம், பித்த சுரத்துக்கு வாயுவுக்குப் பொடி, மண்டை

வியாதிக்கு, கல்லடைப்பன், நீரடைப்பன், பிரமேகம், வெள்ளைக்கு, மருந்தீட்டுக்கு மருந்து, கெர்ப்ப விப்புரு திக்கு, இரச்சல் கொண்டு காது மந்தமாயிருக்கிறதுக்கு, மலட்டுப் புழுவுக்கு, செவிடுக்கு, பசப்ப விதமறியவும், அரையாப்புக் கட்டிக்கு மருந்து, கிரந்தி மேகமிருபத் தொன் றுக்கு மருவட்டைப் புண்ணு, வெள்ளை மாந்தை இது களுக்கு, நாலா மாறலுக்கு மருந்து, விஷத்துக்கு, நாசித்தூள், நட்சத்திரம் அறிந்து பார்த்து அவிழ்தம் கொடுப்பது, பாண்டு, பசலை, காமாலை வீக்கம் இதுகளுக்கு மருந்து முதலான தலைப்புகள் உள்ளன. ஒரு மருந்தால் தீரும் ஒன்றிரண்டு நோய்கள் மட்டுமே தலைப்பில் கூறப்பட்டிருப்பினும் நூலின் உள்ளே அதே மருந்தால் தீரும் வேறு பல நோய்களின் பெயர்களும் சுட்டப் பெற்றுள்ளன.

## 208. மருத்துவம்

**அ.** **331:560;** **ஆ.** *10-104* ஏடுகள்; **இ.** 34 × 3.5 செ.மீ; **ஈ.** *6-9* வரிகள்; **உ.** நன்று; *37, 38, 82-84, 86, 98* ஆகிய ஏடுகள் இல்லை; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம் காமாலைக்கு

பஷ்மரூபம் கழஞ்சு-*1*, காந்தம் கழஞ்சு-*7*, உருக்குக் கெந்தகம் கழஞ்சு-*9*, காந்தம் கழஞ்சு ஏழு, மரப்பொடி கழஞ்சு-*6* குமரிச் சாத்தில் அரைத்துக் கலசத்தில் வைத்து மூடிச் சீலைமண் செய்து அடுப்பில் வைத்து *60* நாழிகை தீ எரிக்கவும். ஆறியெடுத்துத் திரிகடுகுப் பொடியில் பணவிடை வீதம் தேனில் கொடுக்கவும். சோகை, பாண்டு, காமாலை தீரும் (ஏடு.*10*).

முடிவு இளக்கம்

இலைக்கள்ளிப் பட்டை கரிக்கி நல்லெண்ணையில் போடவும். வியாதி உடையும். மஸ்து. **முன்னும் பின்னும் முட்டி வீக்கத்துக்கு மருந்து.** இலைக் கள்ளிச் சாறும் இருசெங்காய்ச் சாறும் எருமை நெய்யில் இட்டுக் காய்ச்சி மூன்று நாள் கொடுக்கவும் தீரும். மேல் முட்டி நாலுங் கேட்கும் மஸ்து. சுபம் முற்றுப் பெற்றது (ஏடு. *104*).

குறிப்புரை

**உரைநடை.** பலவித நோய்களைக் கூறி அவற்றிற்கான மருந்துகளின் செய்முறைகளும், பலவித மருந்துகளின் செய்முறைகளைக் கூறி அவற்றால் தீரும் நோய்களும் சோகை, பாண்டு, காமாலை, இரலைக் கழிச்சல், முன்னும் பின்னும் முட்டி வீக்கம், மேல் முட்டி வீக்கம் முதலான நோய்களுக்கு அக மருந்துகளும், புறமருந்துகளும் கூறப் பெறுகின்றன. குறையான சுவடி ஆயினும் முடிவுப் பகுதி உள்ளது.

## 209. மருத்துவம்

**அ. 394:638; ஆ.** 5-58 ( 45) ஏடுகள்; **இ.** 13.5 × 3 செ.மீ; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** தொடக்க இறுதி ஏடுகள் சில சிதைந்துள்ளன; ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

வெங்காரச் சுண்ணம் நீராம்பலுக்கு, நீர்க்கட்டுக்கு- நாயுருவிப் பட்டையும் வேரும் சேர்த்து அரைத்து வெங்காரத்திற்குக் கவசமிட்டு ஒரு கலயத்துக்குள் வைத்து 256 மணியாகும். மேற்படி மணி.... பூநீரு கீழும் மேலும் போட்டு.... யெருவில் புடமிடச் சுண்ணம்... தண்டி வீதம் கொடுக்க (ஏடு. 6).

முடிவு

சூலை, புண்கட்டிகள், பெருவியாதி, குட்டம், தேமல், படர் தாமரை, கைகால் வெள்ளை, சொறி சிரங்கு - பொரிகாரம், சூதம், லிங்கம், கெந்தகம், காந்தம், தாரம், துருசி துத்தம் ஆவின் நெய் விட்டு அரைத்து நார்ப ... கொள்ள அழிந்திரு.... ஸாம். அந்த நெய்... (ஏடு. 58).

குறிப்புரை

ஏட்டு எண் 5 இல் கணபதி கவசம் அகவல் உள்ளது. அடுத்து மாத்திரை, பற்பம், செந்தூரம், மெழுகு, தைலம் முதலான வற்றின் செய்முறைகளும் அவற்றால் தீரும் வியாதிகளும் உரைநடையில் குறிப்பிடப்பட்டுள்ளன. வெங்காரச்

சுண்ணம் நீராம்பலுக்கு, நீர்க்கட்டுக்கு, தாளகச் செந்தூரம் எலிக்கடி, விசம், சயம், பாண்டு, காமாலை, மூலக்கடுப்பு, ரெத்தக்கடுப்பு, வீரமெழுகு, குன்மம்-8, சன்னி-13, வாய்வு-80, சூலை-18, சூதக வாய்வு வலி குன்மத்துக்குக் கியாழம், சகல கணைக்கும் நெய், சயத்துக்குத் தாளகமெழுகு, வயத்துவலி, சத்தி குன்மம் இதுக்கு மருந்து, மயில்துத்த பற்பம், பல்பொடி, பல் இடுக்கில் ரெத்தம் வருகுறது, சீழ்வருகுறது, அசைவு இதுகள் தீரும், வெட்டைக்கி மருந்து, முத்துச் சிப்பி சுண்ணம் சயத்துக்கு, துருசு பற்பம், ரோம பற்பம், மிளகா பற்பம், பவளதாகை பற்பம், கபம், சோரம், ராமபான மெழுகு, வீரமெழுகு திருவலம் சுழி **பரதேசி முறை,** கிஷ்டண செந்தூரம் வாதகணம், சோரத்துக்கு, ஆனந்த ரச மாத்திரை குழந்தைகளுக்கு கண்டாதிரிவடகம் மாந்தம், செரியாமை, பொருமல், அதிசாரம், கிராணி, மூல வாய்வு, ரசசெந்தூரம் வெட்டை, புண், கிரந்தி, சூலை மேகம், திரேக காந்தி, மூலகிராணி, அதிசாரம் இதுக்கு நெல்லிக்காய் லேகியம், காடிகார செந்தூரம் - வயத்துவலி, குன்மம், சூதகவாய்வு, மாருவலி, காடிகார பதங்கம் **ராமபான மெழுகு - கண்டியூர் அறவாள முறை,** காசத்துக்குத் தங்கச் செந்தூரம், சூதக வாய்வினால் காலில் கூச்சலும் வலியும், குத்தலும், வயத்துப்போக்கு இது லேகியம், சயம், ஈளை, சுவாசம் இதுக்குக் கெந்தகத் தயிலம், மதஸ்த்துமி ரசாயனம்-வாய்வு வாதம், கடுப்பு வாதம், முழங்கால் வாதம், சகலவியாதிக்கும் அயவீரச் செந்தூரம், பாண்டு, வீக்கம் கண்டால் குடுக்கும் மருந்து, பூரமெழுகு-வெட்டைச் சூட்டினால் வயத்தில் வலி, புண், சூலை, சிந்தாதி எண்ணை, தந்த வாயுவுக்குப் பல்பொடி, அமுர்த சஞ்சீவி லேகியம்-பித்த வாய்வு, அன்னதுவேஷம், மாந்தம், அகஸ்தியர் - வாய்வு புத்தி, ரணமாத்திரை, சூதகவாய்வு, மாருவலி, வாய்வு, இசுவு, கெர்ப்பத்தில் குத்தம், எல்லா ரோகங்களுக்கும், மேக வியாதிக்கும் எண்ணை, ரசகல்பூர பற்பம் - வாதம், வாய்வு, சூலை, வெட்டை, புண், கிரந்தி இதுகள் தீரும், வெள்ளி பற்பம், கருவங்க செந்தூரம், காந்த செந்தூரம், ரச செந்தூரம், மேக வியாதிக்கு, நீரடிமுத்து லேகியம், சலாசத்து பற்பம், கண்டா அவுழ்தம் - சன்னி சயித்தியம், குழந்தைகளுக்குக் கோரோசனை மாத்திரை, கோரோசனைக்

குளிகை குழந்தைகளுக்கு, சகல மாந்த எண்ணை - சகல மாந்தம் சன்னி இசுவு இது குடுக்கவும், சகல சுரத்திற்கும், தாது அய்யத்தில் போனதுக்கு அக்கினி குமாரன் சகலவாய்வுக்கு அகில்கட்டை தயிலம், அரையாப்பு கட்டி முதல் சகல கட்டிக்கு எண்ணை, **பட்டாளத்து நாராயணசாமி காந்த மெழுகு,** கஸ்த்தூரி செந்தூரம், அழகாபுத்தூர் **சோசலிங்க ஆசாரி முறை-வெடிமேகம்,** கெர்ப்ப ஸ்ரீகளுக்கு உப்பில்லாப் பத்திய எண்ணை, வீரபதங்கம் வாய்வு, சூலை வெட்டை, புண், வயத்துவலி இதுகள் தீரும் **சேட சுப்பராயலு-வெளக்கெண்ணை பேதிக்கு,** வெட்டை, புண் கிரந்தி, சூலை-சுப்பரயாலு, சூலை, புண் கட்டிகள், பெருவியாதி, குஷ்ட்டம், தேமல், படர்தாமரை, கைகால் வெள்ளை, சொறி சிரங்கு முதலான செய்திகள் இடம் பெறுகின்றன.

## 210. மருத்துவம்

**அ. 332:561; ஆ.** *15* ஏடுகள்;*30-37, 74-77* என்ற ஏடுகள் எண்ணுடனும், எண்ணின்றி மூன்று ஏடுகளும் (அதே கையெழுத்து) உள்ளன; **இ.** 26 × 3 செ.மீ; **ஈ.** *5-6* வரிகள்; **உ.** சிதையும் நிலை; கிறுக்கலான எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

கொடிவேலி, வேர்புறத் தோல், பேயின் ரோமம், மஷ்ட்டிக் காயின் அளவரைத்துக் கடித்த வாய் இரண்டு மொன்றாய்க் கூட்டி, கருசங் கலந்தண்ணீர் தப்பி வைத்து... தானெடுத்துப் பைய்ய நிறுத்திக் கொண்டே அதில் பாதிதான் வாலுளுவை அரிசி பொடித்தேயுடன் சேத்துத் தின்ன (ஏடு. *30*).

### முடிவு

மாசிக்காய் *4* முலைப்பால் விட்டு அரைத்துக் கவசம் கட்டிச் சூரியப் புடத்தில் வைத்து வெள்ளி கரண்ட காரம் பண்ணி உழக்கு எருக்கம் பால் விட்டு அந்தச் சருகை உரித்து வைத்துச் சீலை மண் செய்து ஏழு புடம் போட்டு எடுத்துக் கொள்ளவும் (ஏடு. *77*).

குறிப்புரை

**உரை நடை.** பிழை மிகுதி. சூதக வாயுவுக்கு, வயிற்று எண்ணெய்க்கு, தீராத மேகத்துக்கு, நீர் எரிவுக்கு, நீர்க் கட்டுக்கு, கெருட தியானம், சாணக்கட்டு முதலான தலைப்புகள்.

## 211. மருத்துவம் முதலியன

**அ.** **517:799;** **ஆ.** *9 ஏடுகள்;* **இ.** 30 × 3.5 *செ.மீ;* **ஈ.** *7-8 வரிகள்;* **உ.** *நன்று;* **ஊ.** *சற்றுக் கடினம்;* **எ.** *குறை;* **ஏ.** *அச்சாகாதது.*

தொடக்கம்

சொல்லிருந்த யெடமெங்கே முப்பா லெங்கே
துவாரபா லகரெங்கே முதல்பா லெங்கே
நல்ல சங்கு நதியெங்கே வைகுந்த மெங்கே
நாரணனும் ஆலிலைமேல் துயன்ற தெங்கே
அல்லல்படும் அய்ம்பூதம் ஒடுக்க மெங்கே
ஆரைந்து யிதழ்ரெண்டு முளைத்த தெங்கே
சொல்லவல் லாருண்டாகில் அவரை நாமும்
தொழுதுகுரு வெனப் பணிந்து வணங்க லாமே

முடிவு

தும்மட்டிக் காயளவு குவளையிலே போட்டு வதக்கி மான்சாறு பிழிந்து கொண்டு இந்துப்பு பலம்-*1*, வளையலுப்பு பலம்-*1*, பொட்டிலுப்பு பலம்-*1*, கறியுப்பு பலம்-*1*, கல்லுப்பு பலம்-*1*, சவட்டுப்பு பலம்-*1*, கடுக்காய்ப் பொடி பலம்-*1*, இதுகளைப் பொடி பண்ணி முன்சாறு சுண்டி வருந் தருணத்தில் முன்பொடிகளைப் போட்டுக் கால் சேரு விளக்கெண்ணை விட்டுக் கிளறி லேகியப் பதத்தில் யெடுக்கவும்.

குறிப்புரை

முதல் ஏட்டில் இரண்டு பாடல்களும். பிறவற்றில் உரைநடையும் உள்ளன. நீர்மைப் பாண்டு, காமாலை, வயத்துக் கட்டி, சூலைவலி, சுரம் வந்த நட்சத்திரம் பார்க்க, வெள்ளை ரத்த மூத்திரம், நீர்சுருக்கு, ஒருதலைவலி, பெரும்பாடு, அந்திர வாயு, அண்டவாதம், மண்டை சூலை, குழந்தைகளுக்கு மாந்

தைக்குக் குளிகை, சன்னி சுரத்திற்கு மாத்திரை, மேகசூட்டுக்குச் சூரணம், சுத்தி, மேக சூட்டுக்குத் தைலம், சுரத்திற்கு உருண்டை, நஞ்சேறி உலர்ந்த மாட்டுக்கு மருந்து, வறசுரம், சன்னி முதலியவற்றிற்கு மாத்திரை விபரம், பேயாடாதிருக்க முதலான தலைப்புகள். இதனையடுத்து 9 ஆவது ஏட்டில் 'வம்பூஷவரலாறு விபரம்' என்ற தலைப்பில் செய்திகள் கூறப்பெறுகின்றன.

## 212. மருத்துவம்

**அ.** 518:800; **ஆ.** 2 ஏடுகள்; **இ.** 30 × 3 செ.மீ; **ஈ.** 5-8 வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; ஏட்டெண்கள் சிதைந்துள்ளன; **ஊ.** சற்றுக் கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

கேளப்பா பதினெட்டுக் குட்டத் தோடுங்
கெடியான மந்தார காசந் தானும்
கேளப்பா மேகத்தின் சுவாச காசம்
குலைகுலைந்து பறந்திடவே தயிலஞ் சொல்வேன்
நீளப்பா கெந்தியது பலந்தா னஞ்சு
நிலையான நவாச்சாரம் பலமே யொன்று
நீளப்பா வெடியுப்பு பலந்தான் ஒன்று
மேலான சவ்வீரம் விராக னெடை யொன்றே (1)

முடிவு

வல்லாதி கண்டால் கொத்திக் கிழித்தது போலே
நல்லமுன் பாதத்தில் கிழிய வெடித்து
அத்தி கிரந்தி நுணாக்காய் நல்ல
அமுத பறங்கி யும்அரி கிரந்தியும்
சித்திர வல்லாதி கண்டால் படக்கென்று
பட்சி பறந்தாப் போலப் போமே

குறிப்புரை

முதல் ஏட்டிலுள்ள 5 பாடல்களில் 18 குட்டம், சகல காசம் ஆகியவற்றிற்குக் கெந்தக நெய் தயாரிக்கும் முறையும், அந்தி, சந்தி இருபோது என்ற உண்ணும் நேரமும், ஒரு மண்டலம் என்ற உண்ணும் காலமும் சுட்டப் பெறுகின்றன.

2 ஆம் ஏட்டில் சித்திரவல்லாரி என்ற மருந்தின் செய்முறையும், அதனைப் பயன்படுத்தும் விதமும், இதனால் தீரும் நோய் களான முத்தின சூலை, கிரந்தி, முடக்கு, கடுப்பு, பிடிப்பு, புத்திமிரப்பு, திமிர்ப்பு, மேகம், வாதம், ஊறல், வெளுப்பு, வத்தின உடம்பு, சிரங்கு, புழுவெட்டு, கடிவிஷம், வெண் குட்டம் முதலானவையும் கூறப் பெறுகின்றன. இதனை யடுத்துள்ள ஏழு ஏடுகளில் பல முழுமையான மருத்துவக் குறிப்புகள் மூன்றுவிதமான கையெழுத்துகளில் இடம் பெற்றுள்ளன. இவ்வேடுகளில் அரிதார பற்பம், விரைவீக்கம், பத்தியம், மருந்துண்ணும் முறைகள், தைலம், வலிப்பு, சுத்தி, மந்தாரகாசம், குன்ம மருந்து, காசத்தின் குறி குணம், வெகுவியாதிக்குத் தைலம், அரையாப்புக்குத் தைலம், மேக சூலை, செந்தூரம் முதலான செய்திகள் உள்ளன.

## 213. மருத்துவம்

**அ. 533:866; ஆ.** 5 ஏடுகள்; **இ.** 37.5 × 2.5 செ.மீ; **ஈ. 6-7** வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

**தொடக்கம்** **சஞ்சீவி கிருதம்**

பசுவின்பால் படி-1, பசுநெய் படி-1, கலிக்கம், மதுரம், கோட்டம், ஏலம், செண்பகப்பூ, வெட்டிவேர், பொன்னாங் கண்ணி வேர், விலாமிச்சம் வேர், கிராம்பு, சிறுகீரை வேர் வகைக்கு எடை-1. இதுவெல்லாம் பால் விட்டரைத்து நெய்யில் கலக்கிக் காச்சிக் கடுகு பதத்தில் வடித்துக் கொண்டு தலைக்கித் தேய்த்துச், சிகைக்காய், பச்சப் பயறு, தகரை இதுகள் திரேக மறிஞ்சி தேச்சி முழுகவும்.

**முடிவு** **சிவாகிந்தை யெண்ணை**

சிவாகிந்தைச் சாறு படி-1, வெளக்கெண்ணை படி-1. திரி கடுகு, ஓமம், கசகசா, வெப்பாலை அரிசி, காட்டாத்திப்பூ, திரிபலை, கருஞ்சீரகம் வகைக்கு வீசம்-2, அரைச்சி, காச்சி வடிச்சிக் கொண்டு வடிகலயத்தில், சாதிக்காய், பத்திரி, ஏலம், லவங்கம், வால்மிளகு வகைக்கு வீசம்-2 பொடி பண்ணிப் போட்டு வச்சிக் கொண்டு இச்சா பத்தியமாயிக் கொள்ள 21

மேகம், கிரந்தி, கெற்ப்ப விரோதம் இவைகள் தீரும். புத்திரன் உண்டாகும்.

குறிப்புரை

**உரைநடை.** நஞ்சு மாத்திரை, பறங்கிப் பட்டை ரசாயனம், மேகத்தினால் எடுத்த வியாதிக்கு எல்லாம், நாலாமாறல், தாது புஷ்ட்டி லேகியம், மேக பஞ்சாமுர்தம், சன்னிக்குக் கிஷாயம், பீனிசத்துக்கு, மேகவாயுக்கு மருந்து, அண்ட வாதத்துக்கு, லகனாதி லேகியம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 214. மருத்துவம்

**அ.** 537:872; **ஆ.** 5-*168* (*64*) ஏடுகள்; **இ.** 13.5 × 3 செ.மீ; **ஈ.** 6-*8* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; சில ஏடுகளின் ஓரப் பகுதிகள் சிதைந்துள்ளன; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

காட்டுக் குமிழம் பழங் கொண்டு வந்து பிசைந்து, சாறு கொண்டு சாத்தில் நல்லெண்ணை இரண்டு துளிச் சத்து விட்டு இரண்டு முரவு செய்து ஒரு காசளவு உச்சியில் வைத்து, மறுநாள் அந்தச் சாறு அரைக்கால் படி, நல்லெண்ணை காசளவு விட்டு மத்தித்து உச்சியில் தேய்த்து முழுகவும். பத்தியம்.

முடிவு பெருவயத்துக்கு - வேறு

இருனூறு பெருங்கறையானைப் பிடித்துத் தண்ணீர் விட்டரைத்து ஒரு கொட்டைப் பாக்களவு கொதிப்பாலில் குடுக்கக் கழியும். ஒரு சாமிரு செனமுலப் பால் காச்சி ஆத்திக் குடுக்க எண்ணையிட்டு வென்னீரில் குளிக்கப் பெருவயிறு தீரும்.

குறிப்புரை

**உரைநடை.** பீனிசத்துக்கு; கிராணிக்கு, பூசணிக்காய் நெய், வெட்டுப்பட்டு ஆறாத புண்ணுக்கு, மூலமாறுக்குப் பன்னி நெய், சன்னிவாதம், பெரும்பாட்டுக்கு, லோகச் செந்தூரம், உள்நாக்குக்கு, சூலைக்கி, பவுத்திரத்துக்கு, உள்மாந்தைக்கு, எரிகுன்மத்துக்கு மருந்து, நீரடைப்புக்கு, இருமலுக்கு, அப்புருலச் செந்தூரம், நிலவாகை முதலான தலைப்புகள் உள்ளன.

## 215. மருத்துவம்

**அ. 240:876; ஆ.** *8* ஏடுகள்; **இ.** 45 × 3.5 செ.மீ; **ஈ.** *7-8* வரிகள்; முதல் *5* ஏடுகள் *3-6* பகுதிகளாகப் பிரித்தெழுதப் பட்டுள்ளன; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

**தொடக்கம்** மண்டையிடிக்கித் தயிலம்

நல்லெண்ணை சேர்-*1*, வேப்பெண்ணை சேர்-*1*, நொச்சிச் சாறு படி-½, துளசிச்சாறு படி-½, செம்பைச் சாறு படி-½, வேளைவேரு பலம்-*2*, ஆதண்ட வேர் பலம்-*2*, முளகரணை வேர் பலம்-*2*, மிளகு, வசம்பு, பூண்டு, மஞ்சள் இதுகள் கூட்டி இடிச்சு எண்ணைச் சாறுகள் கலந்து காச்சிப் பதத்தில் முழுகவும்.

**முடிவு**

இறக்குலுகு-*1*, அபினி பலம்-*2* யிது ரெண்டு அரைவீசம் படித் தண்ணீரில் ஊறப் போட்டுப் பெசஞ்சி, வடிகட்டிச் சூரணம் பிசஞ்சி முப்பது குருவிக்கி வச்சி, நாலுநாள் கட்டி நெய்யில் பொரிச்சித் தேனில் விட்டு *14* நாள் வச்சி எடுத்து சாயந்திரம்-*1*, ½ வீதம் சாப்பிடத் தாதுபுஷ்டி உண்டாகும். தாது பந்திக்கும். புளிதள்ளிச் சாப்பிட்டால் குணம் அதிகம்.

**குறிப்புரை**

**உரைநடை.** மண்டையிடிக்கித் தயிலம், மூலத்தினால் ரெத்தம் விழுகுறது, பஞ்சமூலக் கஷாயம், திசமூலக் கஷாயம், நெல்லிக்காய் லேகியம், கெந்தக பற்பம், உள்விசத்துக்கு முதலான தலைப்புகளில் மருந்துகளின் செய்முறைகள் கூறப் பட்டு அவற்றால் தீரக்கூடிய நூற்றுக்கணக்கான நோய்களின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன.

## 216. மருத்துவம்

**அ. 544:880; ஆ.** *34* ஏடுகள்; **இ.** 21 x 3 செ.மீ; **ஈ.** *6-7* வரிகள்; ஒவ்வொரு பக்கமும் மூன்று பகுதிகளாகப் பல ஏடுகளில் பிரித்தெழுதப்பட்டுள்ளது; **உ.** மிக நன்று; **ஊ.** சற்றுக் கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

**தொடக்கம்** **கிராணிக்கு**

லவங்கம் பலம்-1, ஏலரிசி பலம்-1, சாதிக்காய்-1, வெந்தியம் ஒரு மானம் ஊறப் போட்டு அந்தத் தண்ணீர் ஒரு மானம் பசுவின் தயிர் ஒரு சேர், விளக்கெண்ணை ஒரு சேர், இளநீரு ஒரு சேர், ஊறின வெந்தயத்தை அரைச்சி வடைபோலத் தட்டி எண்ணெயில் போட்டு விடவும். சிவந்த பதம் பார்த்து இறக்கிக் கொள்ளவும். வடிகட்டின எண்ணையில் லவங்கம், ஏலரிசி, சாதிக்காய் இது மூனும் பொடி செய்து போடவும். துக்காணி மாத்திரம் உள்ளுக்குக் கொள்ளவும்.

**முடிவு**

வெள்ளைப் பூண்டு உரிச்சி எண்ணெயில் போட்டுக் கடைத் திரவியமும் கூடப் போட்டுக் காச்சி மெழுகு பதமானவாறே இறக்கிக் கொண்டு வினாயகர் பூசை பண்ணி உள்ளுக்கு ஒரு காசிடை கொள்ளவும். ஏழு உரு செபிக்கவும். பத்தியம் உப்பு, புளிப்புத் தவிர்க்கவும். புழுங்கலரிசி சாதமும் வென்னீரும் சாப்பிடவும். இது 40 நாள் கொள்ளவும்.

**குறிப்புரை**

**உரைநடை.** ஏட்டிற்கு எண்கள் இல்லை. தொடக்கத்தில் நரம்பு பிரிக்கப்படாத ஓலை (சட்டம்) ஒன்று உள்ளது. சர்வ வெட்டைக்கு, கிரந்திக்கு மருந்தெண்ணை, மதன காமேசுர லேகியம், வீரியம் பலமடைய, வாயில் இரத்தம் விழுதற்கு, காசநோய், வலிப்புக்கு நசியம், உள்மாந்தைக்கு, மூலத் துக்கு, விரோசனம், சுரவிரோசனம், சுரத்துக்கு அஷ்ட்ட கசாயம், அசுவகெந்தாதிச் சூரணம், கண்ணுராத்தினாதி குளிகை, நாரத்தங்காய் வடகம், ஈளை, இரும்பல், கிலேசம், காசம், மண்டை சன்னி, மகாவாதத்துக்கு, வாய்நீர் கோழை, ஆரோசிகத்துக்கு மருந்து, அசுவகெந்தித் தைலம், கண்ட மாலைக்கு, விக்கலுக்குப் புகை, விப்புருதி, வாயு, சன்னி, சயித்தியம், வலிப்புக்கு எண்ணை முதலான செய்திகள் இடம்பெறுகின்றன.

## 217. மருத்துவம்

**அ.** 546:882; **ஆ.** 50-74 ஏடுகள்; **இ.** 21 × 3 செ.மீ; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** மிகக் கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

ஆறு கடுக்காய் நறுக்கிப் போட்டு நாலுக் கொன்றாய்க் காச்சி உழக்கு நெய்யும் உழக்கு எண்ணையுங் கலந்து பெருங் காயம், சுக்கு, மிளகு, திப்பிலி, நவாச்சாரம், இந்துப்பு, அதிவிடையம், வசம்பு கூட்டிப் பொடி செய்து குழம்பாய் காஞ்சி வாறபோது இந்தப் பொடி போட்டுத் துளவி மெழுகு பதத்திலே கடுகு பண்ணி, கழல் பிரமாணம் மோரில் குழப்பிக் கொள்ளவும்.

முடிவு சுரத்துக்குக் குளிகை

சாதிலிங்கம், சித்தாமணக்குப் பருப்பு, வெங்காரம், செரிநேர்வாளங் கூட்டி வாழைப்பழத்தில் அஸ்த்தமான பட்டாக அரைத்துக் குண்டுமணிப் பிரமாணம் உண்டை பண்ணி வைச்சிக் கொள்ளவும். இது சிறுகீரைச் சாத்தில் விடவும். இதுக்குக் கடுபத்தியம், ஒன்றுமாகாது. அஞ்சி நவச்சுரமும் விடும்.

குறிப்புரை

**உரைநடை.** பிழை மிகுதி. கிரந்திக்குக் கசாயம், பஞ்சாரத் தயிலம், காந்த பற்பம், மாந்தைக்கு எண்ணை, விக்கலுக்கு, சன்னிகலிக்கம், நீர்க்கட்டு, சன்னி, குட்டம், சிங்குவ சன்னி, தூதுவளை இலைக்கல்பம், அசுவகெந்திச் சூரணம், புள்ளை பெறமாட்டாதவளுக்கு, உடம்பு வீங்கினால், நீர்அழ வைக்கி, சுகசன்னிக் கசாயம், ரத்த பித்தத்துக்கு, பாண்டு ரோகத்துக்கு, சயரோகத்துக்கு, பித்த அமுர்த சக்கரைச் சூரணம், வெள்ளெழுத்து மாற, படுதாமரைக்குக் கலிக்கம், தீயில் நடக்க, இரும்பு அறுக்க, ஒரு தலைவலிக்கு முதலான தலைப்புகள் உள்ளன.

## 218. மருத்துவம்

**அ. 549:891; ஆ.** *18-33* ஏடுகள்; **இ.** 21.5 × 2.5 செ.மீ; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** சிதையும் நிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம் பாண்டு, மிக்க பாண்டுக்கு லேகியம்

கய்யான் தகரைச் சாறு படி-¼, வல்லாரைச் சாறு படி-¼, பழச்சாறு படி-¼, பசுபால் படி-¼, அலமுட்டுக் கசாயம் படி-¼, சித்தாமணக்கு எண்ணை பலம்-4, சுக்கு பலம்-2,

சீரகம் பலம்-2. இதுகள் சேர்த்து லேகியம் செய்து வாதபித்த வெட்டை, மேக, ரணம், தாதுபுஷ்டி, சோகை.

முடிவு ராத்திரி பேதி மாத்திரை

சுக்கு பலம்-1, களச்சிப் பருப்பு பலம்-1, சிய்யயெக்காயி விரை தூள் பலம்-1, ரத்தபாளம் பலம்-1, நேர்வாளம் பலம்-1 அரைத்துக் கிழாயம் மாத்திரை குண்டுமணி.

குறிப்புரை

**உரைநடை.** நீரிழிவுக்கு அமுர் பற்பச் சூரணம், வெட்டை, கிரந்தி, சூலை, பவுத்திரம் இதுகளுக்கு யெண்ணை, நீரிழிவு, உடல்கூறு, பாஷாணக் கட்டு, தாளகக்கட்டு, தசநாடி, தாது விருத்தி யுனானி லேகியம், நிலைப்பனைக் கிழங்குச் சூர ணம், சுகந்த சந்தனாதித் தயிலம், அரையாப்பு, கிரந்திக்கு எண்ணை, கெர்ப்பிணிக்குச் சுரம் வந்தால் கஷாயம், சீதபேதி ரத்த பேதிக்கு மருந்து, நெறிகட்டி, அண்டவாயு, வயிற்றுக் கடுப்பு, யுனானி சூரணம் முதலான செய்திகள் இடம் பெறுகின்றன.

## 219. மருத்துவம்

**அ. 553:897; ஆ.** 1-20 ஏடுகள்; **இ.** 26 × 2.5 செ.மீ; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** ஏட்டின் வலதுபக்க ஓரப் பகுதிகளும், இறுதியிலுள்ள 4 ஏடுகளின் இடதுபக்க ஓரப் பகுதிகளும் சிதைந்துள்ளன; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

**மன்மத ராச மகா கோடா குளிகை** சர்வ வியாதிக்கும் கைகண்டது. இரதம் பலம்-1, வச்சனாபி பலம்-1, கெந்தகம் பலம்-1¾, சிறுதிப்பிலி பலம்-2, அரிதாரம் பலம்-3, முளகு பலம்-4¾, கடுக்காய் பலம்-4¾, நெல்விமுள்ளி பலம் 2¾... சுத்தி பண்ணின நேர்வாளம் பாதியுங் கூட்டி இடித்து வடிகொண்டு தங்குகிறது அரைத்து ஆதி வாரம் வினாயகர் பூசை பண்ணி, குரு தோத்திரஞ் செய்து எல்லாத்தையும் ...ந்தரைச் சாறு நாழி விட்டு ஒரு நாளைக்கி ஒரு சாமம் அரைத்து வைக்கவும்.

### முடிவு

பாண்டு ரோகத்துக்கு இலவம்புட்டைச் சாத்திலாவது, அகத்திப் புட்டைச் சாத்திலாவது குடுக்கவும். இடுப்பு நோவுக்கு வேர்க்கொம்புச் சாத்தில் குடுக்கவும். இது கைகண்டது. முற்றும்.

### குறிப்புரை

**உரைநடை.** சீதரத்தம், கழிச்சல், காதுநோய், கனதினவு, புழுவெட்டு, சுக்கில படலம், பூப்பட்டதுக்கு, ஒட்டியபுண், வயிற்றுக் கழிச்சல், ஒரு தலைவலி, அன்னமிறங்காததற்கு, விப்புருதி, பக்கசூலை, சந்து விப்புருதி, கெற்ப விப்புருதி, கபாலவிப்புருதி, வாதவிப்புருதி, சேத்தும விப்புருதி, வாயு, வாதவாயு, சேத்தும வாதம், வலி குன்மம், வாயு குன்மம், சத்தி குன்மம், அகுவை, மேல்க்கவிசை, கீழ்க்கவிசை, விரோசனம், பித்தம், ரத்த பித்தம், சேட்டும பித்தம், வாத மண்டைக் கரப்பான், பித்தவாதம், ஊதுவாதம், தேள்க்கடி, பக்கப்பிளவை, ராசபிளவை, கைநாக்குப் பிளவை, பித்த சுரம், வாதசுரம், சன்னிவாத சுரம், சேத்துமச் சுரம், நல்ல பாம்புக்கடி, பனையன்கடி, விரியன்கடி, நீர்க்கொத்தி, பூரான், செய்யான், ஆணெலிக்கடி, பெண்எலிக்கடி, முதலைக்கடி, மனுஷர் கடி, பெருச்சாளி, புலிக்கடி, சூனியம், நீரிழிவு, விஷபாகம், தாபசுரம், சந்துவாதம், வாதம்-80, சூரை, சர்வகட்டி முதலான தலைப்புகள் உள்ளன. முன்னும் பின்னுமாக இரு வெற்றேடுகள் உள்ளன.

## 220. மருத்துவம்

**அ. 559:905; ஆ.** 4 ஏடுகள்; **இ.** 36 × 4 செ.மீ; **ஈ.** 9 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம் வயிறு கழிகிற பிள்ளைக்கு

ஓமம், வெள்ளைவேர், மாவிலங்கமிலை இது மூன்றுங் காசிடை காசிடை அரைத்து வைச்சுக் கொண்டு சட்டியை அடுப்பிலே காயவைத்து அஞ்சு மிளகு அதிலே போட்டுப் பொரிஞ்சவுடனே ஒரு துளி நல்லெண்ணை குத்தி இந்த மருந்து மூன்றையும் ஒரு சிறங்கைத் தண்ணீரிலே கரைத்துச் சட்டி தாளிதம் பண்ணினாப் போல, அதிலே உலத்தி ஒரு

கொதியிட்டாப் போல இறக்கி வைச்சுக் கொண்டு ஒரு சங்கு குடுக்கவும். இப்படி ரெண்டு நாளைக்குக் குடுக்கவும்.

முடிவு நரம்பு சிலந்திக்கு

நாங்குளுப் பூச்சி மோரில் போட்டு வைத்து, அரைத்துக் கொண்டு சுடு சோத்தில் கலந்து குடுக்க நரம்புச் சிலந்தி போகும். பாலில் போட்டுக் குடுக்கப் பால் சுரக்கும்.

குறிப்புரை

**உரைநடை.** வயிறு கழிகிற பிள்ளை, முலைக்குத்து, அரையாப்பு, மேகவெட்டை, வறட்சி, குத்திருமல், சயம், வெட்டை, தாளக மாத்திரை, நேத்திர வாயுவுக்கு மாத்திரை, புண்ணுக்கும், பூச்சி வெட்டுக்கும் மருந்து, விரைவாதத்துக்கு, பயித்திய வெறிக்கு, தலைக்குத் தேய்க்க, மலட்டுப்புழு விழ பற்பம், கீரிப் பாம்புக்கு மூக்கால், வாயால் இரத்தம் விழுந்தால் மருந்து, லிங்கக் கட்டு, பால்சுரக்க, நரம்புச் சிலந்தி, சுரகுளிகை, குணப்படுத்தும் முறை, தடுப்பு முறை முதலான செய்திகள் இடம்பெறுகின்றன.

## 221. மருத்துவமும் மந்திரமும்

**அ. 208:418; ஆ.** *1-13* ஏடுகள்; **இ.** 15 × 2.5 செ.மீ; **ஈ.** *4-6* வரிகள்; **உ.** சுமாரான நிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

அக்கம்ம கோவில் அழகுக் கருப்பண்ணா
உதரக் கருப்பே ஒளிவி ருக்கும்
செங்கருப்பே சோளக் கருப்பே
சோலைமலைக் கருப்பண்ணா
தேக்குமலை முத்துக் கருப்பண்ணா
செம்மலைக் கருப்பண்ணா
பொந்துபுலிக் கருப்பண்ணா...

முடிவு

தவதீதேறே - ததேசிவ - சூவேதுனாதவ
சூரம கடகலா - கயிரோ கடயம்

ருசுல உதமதர - சலாகச - லைலிரவத
கசுவு இகப - னாசூறு - டிகலடமசூம்....
அப்புக்குட்டி சவுளி கடைக்கி சகல சென்ன சகல ரெத்த வேதி

குறிப்புரை

**உரைநடை.** முதலிலுள்ள சில ஏடுகளில் மந்திரச் செய்திகளும், பின்னர் பல்வகை நோய்களின் பெயர்களும், ரிசிகளின் பெயர்களும், ஆட்களின் பெயர்களும், கன்னி, பூரம் முதலான சோதிடச் சொற்களும் உள்ளன. ஒன்றிரண்டு ஏடுகளில் தமிழ் எழுத்துகளின் இடையிடையே தெலுங்குச் சொற்களும் காணப்படுகின்றன. இறுதியிலுள்ள சில ஏடுகள் தெலுங்கு மொழியில் எழுதப்பட்டுள்ளன. பலவகையான ஏடுகளின் ஒரு தொகுப்பாக இச்சுவடி அமைகிறது. இறுதியில் *11* வெற்றேடுகள் உள்ளன.

## 222. மருத்துவமும் மந்திரமும்

**அ.** 284:506; **ஆ.** *1-99* ஏடுகள்; **இ.** 21 × 3 செ.மீ; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** மிக நன்று; **ஊ.** மிகக் கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

தோதைவட்ட முக்கோணம் சடகோணம்
துலங்கும் வட்டாய்
ஆறிதழிட்டு ரீங்கார மிட்டு இதின்நடுவே
ஆரத்தரிக்கில் அறுவத்து னாலு கலையினை
தாராகுற ளல்லவே வாலஞான சரஸ்பதியே (1)

முடிவு

தண்ணிமுட்டான் கிழங்குச் சாறு, நிலப்பனைக் கிழங்குச் சாறு, ஆயிலம்பட்டை பலம்-*3*, தொழுகட்டை பலம்-*3*, நாவில் பட்டை பலம்-*3*, வாழைப்பூவு-*4*, புழிஞ்சி ஒன்றாய்க் கலந்து நெய் படி-*3* கலந்து பதத்தில் வடிச்சுக் கொள்ளவும். இதில் தீரும் வியாதி இரும்பல், உப்புசம், சயம், பயித்தியம் தீரும்.

குறிப்புரை

**பாட்டும் உரைநடையும் கலந்துள்ளன.** பிழை மிகுதி, முதலில் நாடி பவிசை எனும் தலைப்பில் 1-32 பாடல்கள் உள்ளன. பின்வரும் பாடல்களுக்கு எண்கள் இல்லை. பாடலின் அமைப்பு, பொருள் இவற்றைப் பார்க்கும் போது ஒவ்வொரு உட்தலைப்பும் ஒரு நூலிலிருந்து எடுக்கப் பட்டது என்பதைக் காட்டும் வண்ணம், **'18 சுரத்துக்குச் சூரணம்,'** 'சுரம் உற்பத்தி,' சுரத்தின் குணம் முதலான உட் தலைப்புகள் உள்ளன. முற்பகுதி பாடலும் பிற்பகுதி உரைநடையுமாய் இருக்கின்றன. உரைநடையே மிகுதி. மருத்துவ மந்திரச் செய்திகள் இரண்டும் இடம் பெற்றுள்ளன. மந்திரத்தோடு தொடர்பு படாத மருத்துவச் செய்திகளே மிகுதி. அமுர்த கஷாயம், தேளுக்கு, முலையெழ, கிராணிக்கு, சகல சுரத்துக்கு, சுரநிதானம், சுரத்தின் குணம், விஷ்ணு சாந்தி, தேங்காய் உடைக்க, விநோதம், பிள்ளையுண்டாக, எலிக் கடி, வண்டுக்கடி, நஞ்சுண்டவர்க்கு, கன்றுக்கு வைத்தியம், கரப்பானுக்கு எண்ணை, பிள்ளை வயிற்றில் விலகினால், பிள்ளை விழ எண்ணை ஓத மருந்து, பட்சி தோசமந்திரம், சிலாப்புக்கு, அஞ்சனத்துக்கு, பிரண்டைக் கற்பம், பூனைக் காலிக் கற்பம், மூலக்கிராணிக்கு, அண்டவாதம், குடல்வாதம், பவுத்திரத்திற்கு, சுளுத்திக்கு மந்திரம், தேளுக்கு மந்திரம், பாலகரப்பானுக்கு, உஷ்ண வாயுவுக்குச் சூரணம், முகத்தில் வங்குமாற, புழுவெட்டுக்கு அவிதாரச் செந்தூரம், விசத் துக்கு மருந்து, நட்டுவாக்காலி, பாம்புக் குடத்தில் கைவிட, கெவுரி பாசாணச் சுத்தி, அரிதாரப் பற்பம், வெள்ளி பற்பம், கெந்தகத் தயிலம், தூதுவளைத் தயிலம், சூலைக்கிச் சூரணம், சூலைக்கு மருந்து முதலான தலைப்புகள். பற்பம், செந்தூரம், தைலம், சூரணம், சுத்திமுறை, விசக்கடி மருந்து முதலானவற்றின் வகைகள் பல விளக்கம் பெறுகின்றன. நோய்களுக்கு மருந்துகள் கூறப்பட்டு அதற்குரிய மந்திரங்களும் கூறப்படுகின்றன. ஒருவர் தமக்குத் தேவையான செய்தி களைத் தொகுத்தது போலுள்ள இந்நூல் ஒரு சிறந்த தொகுப்பு நூலாக அமைகின்றது.

## 223. மருத்துவமும் மந்திரமும்

**அ. 363:602; ஆ.** 42 ஏடுகள்; **இ.** 27 × 3 செ.மீ; **ஈ.** 9-12 வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; இடையிடையே ஏடுகள்

இல்லை; **ஊ.** மூன்று வகையான கையெழுத்துகள்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

நாகச்செந்தூரம்..... ப்பையெண்ணையும், பசுவின் வெண்ணையும் கரண்டியிற் றடவி உருக்கி வெள்ளாட்டுப் பாலில் இருபது திரபற சாய்க்கவும். பிறகு ஒரு புதுச் சட்டியிலிட்டு வெடியுப்பு நாழியும், அசமோதகம், சுக்கு, வராகன், மஞ்சள் வராகன் பொடி செய்து சிறுகச் சிறுகப் போட்டு வறுக்கவும். பிறகு தண்டு சிவந்த நாயுருவி, கண்டமாய் தறித்து இதைப் போட்டு வறுக்கவும். இதுவெல்லாம் போட்டு வறுத்தால் மாதளம்பூப் போலச் சிவந்திருக்கும்.

முடிவு தாளகச் சுண்ணம்

எய்தவே தாளகத்தின் சுண்ணஞ் சொல்வேன்
நிதமான தாளகமோ பலந்தா னொன்று
நையவே கலச்சுண்ணத் துள்ளே வைத்து
நலமான தேசிநீர் விட்டு நீற்று
ஐயவே யிப்படியே யேழுதரம் நீற்று
அரிதாரஞ் சுத்தியடா யதீத மாகும்
யெய்தபின்பு ஓட்டிலிட்டு யடுப்பி லேற்றி
ஈருள்ளிச் சாறு ஒருபடிதான் தாக்கே (81)

குறிப்புரை

**பாடலும் உரைநடையும் கலந்துள்ளன.** சதுரக்கள்ளி, கல்தாமரை, வாயுவுக்குப் பொடி, நாகச் செந்தூரம், இருமல், தாளகச் சுண்ணம், அரிதாரச் சுத்தி, நசி, மசி - நட்சத்திரம், முக் கோணம், மாடன மந்திரம் முதலான மந்திர மருத்துவச் செய்திகள் இடம் பெறுகின்றன.

## 224. மருத்துவமும் மந்திரமும்

**அ.** **409:653;** **ஆ.** *30* ஏடுகள்; **இ.** 22.5 × 3.5 செ.மீ; **ஈ.** *10-11* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; *14* ஏடுகள் ஒரு கையெழுத்து; பிற இன்னொரு கையெழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சித்திரமான துத்தந்துருசு சிறந்த வெள்ளை
சேருந்துருசு உளருநாக்கு சிறந்தசாதி லிங்கமு
முத்திரமான கறுத்த னாகம் பண்பாய்க்
கழஞ்சி போட்டபின் பாராய் பருத்திச்
சாத்தாலரைத் துப்பாங்காய் ஏழுவில் லையைத்
தரமான புளியப்பொருக் கினில்தானே யேறும்
புகையினால் தளன்று மெய்யி லொழிந்த
நோயைத்தய வாய்ச்சொல் வோம்பள் ளீரே (5)

முடிவு

வார்த்துவைக்கச் சிலமாகும் சிவதை விட்டு
மாட்டுவாய் பதினெண்டே மருந்து கூட்டி
சேத்துநீ அரைத்திடுவாய் ரெண்டு சாமம்
திரமாகப் பின்பதனை வில்லை செய்து
போர்த்திடுவா யாவியிலே உலந்த பின்பு
புகழான மூசையிலே யிட்டு மூடி
கார்த்திடுவாய் மெல்லோடு கொண்டு மூடி
கைமுறையாய்ச் சீலைமண்ணுங் கனக்கச் செய்யே (7)

குறிப்புரை

சகல நீர்களுக்குப் புகை, அத்தி விளரிக்கு வித்துவேசனம், மலஞ்சலக்கட்டுக்கு, தேங்காய் சூரணம், சன்னிக்கு பெரும் பான்மை பாடல் வடிவிலும் சில பகுதிகள் உரைநடையிலும் அமைந்துள்ளன. சுரத்துக்கு, மேகத்துக்கு, சயம் இருமலுக்கு, சிதம்பரம், கந்தச் செந்தூரம், அனுமார் தியானம், பூதமாரணம், வங்கபற்பம், காந்தச் செந்தூரம், புண்களுக்குப் புகை, சுயமக்கினி, வாதபித்தபாண்டுக்கு, ஓமத்துக்குச் சமுதை, சோகை, காமாலை, பாண்டு கரப்பானுக்கு, உச்சாடனம், புண்களுக்கு மருந்து, நீர்க்கடுப்புக்கு, வயித்திய உபசாரம், திருநீறுமந்திரம், நாவடங்க, பிரிவு, நாகங்கட்ட, தங்கம், பவழம்,அரிதாரச் செந்தூரம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 225. மருத்துவமும் மந்திரமும்

**அ. 452:699; ஆ.** 26 ஏடுகள்; **இ.** 21.5 × 2.5 செ.மீ; **ஈ. 6-7** வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; முதல் ஏடு பாதியாக உடைந்துள்ளது; ஏடுகள் கறுத்துள்ளன; ஓரப் பகுதிகள்

இலேசாகச் சிதைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

கத்தாழை, மொசுமொசுக்கை, கற்பூரவள்ளி, காட்டு மருந்து, மருமதுவை ஒரு படிச் சாறு பிழிஞ்சு, எலுமிச்சம்பழம் 10 சாறு பிழிஞ்சு, கூட விட்டுக் கடைச்சரக்கு, சந்தனம் பலம்-¼, அதிமதுரம் வீசம்-¾, குங்குமப்பூ வீசம்-1, கோரோசனை வீசம்-½, சாதியிலை வீசம்-¾, சாதிப்பத்திரி வீசம்-¾, ... கம்பு எடுத்து வந்து நறுக்கி நாலு முளையாய் செதுக்கி... இருந்த விடத்தில் வலம். வச்ச தடம் ரெண்டும் இந்த வகையில் நாலு முளை ஆரைஞ்சு காட்டேரி மந்திரத்துனால் செவிக்கவும் நன்று.

முடிவு

**சிரச்சனி வித்தை**

சிரச்சனி மகா மந்திராகிய ருத்திர ருஷ்ட்டினி சந்த மசான வாசனவி கீலச்சனி தேவதாருங்க பீசம் ருங்கசத்த உறாங் கீலகம் இட்ட காமியர்.

குறிப்புரை

**உரைநடை.** ஏட்டெண்கள் சிதைந்துள்ளன. இறுதியில் 116, 150-153 என்ற ஏட்டெண்களை மட்டும் அறிய முடிகின்றது. பிழை மிகுதி. அக்கினி குமாரன், சூரிய குளிகை, மயேசுர குளிகை, பெரிய கோட்டான் குளிகை, பெரிய கோடா குளிகை, சுரத்துக்கெல்லாம் சுராங்குச குளிகை, சருவாங்க வாதத் துக்கு அரச தயிலம், மேகசூலை, அரையாப்பு, மேகவெட்டை, கிரந்தி ரோகத்துக்கு, கிரந்திப் புண்ணுக்குக் களிம்பு, வெள்ளை, வெட்டை காணுகிறதுக்கு மருந்து, பேதனவகை மந்திரம், வித்துவேசன மந்திரம், மாரணம், ஆறுவன பத்திரகாளி சர்ப்பம் முதலான தலைப்புகள் உள்ளன. மந்திரத்தோடு தொடர்பு படாத மருத்துவச் செய்திகளே மிகுதியாக உள்ளன.

## 226. மருத்துவமும் மந்திரமும்

**அ. 496:757; ஆ.** 7-26 ஏடுகள்; **இ.** 18 × 3 செ.மீ; **ஈ.** 4-8 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சுக்கு பலம்-¼, பெருஞ்சீரகம் பலம்-¼, அதிமதுரம் பலம்-¼, கிராம்பு பலம்-¼, மிளகு பலம்-¼, வால்மிளகு பலம்-¼, அரிசித்திப்பிலி பலம்-¼, ஆனைத் திப்பிலி பலம்-¼, சிறுநாகப்பூ பலம்-¼ பசும்பால் படி ஒன்றில் பத்துப் பலம் சர்க்கரையைப் போட்டுக் காச்சி கொடிமுந்திரிப் பழம், அபின், முளையிலுவனி, பிசுனியிம் மூன்று நீக்கி, மைத்த சரக்கைச் சூரணித்துச் சர்க்கரைப் பாலில் மெழுகு பதமாக்கிக் கிண்டும்போது, அபினி, பிசுனி நுணுக்கிப் போட்டு, கொடி முந்திரிப் பழத்தை அரைத்துப் போட்டு, அரைக்கால், படித் தேன் விட்டுக் கிண்டி, மேற்படி அரைக்கால் படி நெய்விட்டுக் கிண்டி, லேகியத்தைக் கொட்டைப் பாக்களவும்... தாது புட்டியுண்டாகும்.

முடிவு

**யேவல், பில்லி, சிரங்கு, பருவு, துடைவாளை யிதுக்கெல் லாம் அமுக்குரா வேர்**- வடக்கே போகும் வேரைப் பிணியாளி பேரைச் சொல்லி மத்தியானத்தில் வெட்டித் திரும்பிப் பார்க்காமல் வந்து, பிணியாளி முகத்தில் மசிநசி யென்று செபித்து முகத்திலூதவும் யெல்லாந் தீரும். உரு. 1008.

குறிப்புரை

**உரைநடை.** விந்தாதி லேகியம், பூரமெழுகு, மூலமந்திரம், சக்கரம், வியாதி யுண்டாக்க, வசியமை, சகல விதங்களுக்கும் மந்திரம், சத்திபூசை ஜெபம், வயிரவர் சக்கரம், பஞ்சாட்சர மூலமந்திரம், கட்டு வயிரவர் மூலமந்திரம், சருவியெஷ்சனி வேலை, சருவயெஷ்சனி சக்கரம், பூதபிசாசு ஆட வினோதம், சுப்பிரமணியர் வேலை, தீப்பிடிக்கும் வீட்டையணைக்க மந்திரம் முதலான தலைப்புகள் உள்ளன. இறுதியில் 10 என்று எண்ணிடப்பட்ட ஓர் ஏட்டில் "ரெங்கமலை சன்னியாசி" வேலை கைகண்டது. இந்த வேலை சகல தேவதை பிரமராட்சசி யெல்லாம் ஓடும் என்ற தலைப்பிலான செய்தி உள்ளது.

## 227. மருத்துவமும் மந்திரமும்

**அ.** 580:938; **ஆ.** *13* ஏடுகள்; **இ.** *18* x *3* செ.மீ; **ஈ.** *4-8* வரிகள்; 3 வகைக் கையெழுத்துகள்; **உ.** நன்று; ஓரிரு ஏடுகள் சற்று முறிந்துள்ளன; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

....பூரம் ½, கடுகு ரோகணி, தானிக்காய், நாபி, முத்து, கார்போக அரிசி, சுக்கு, முளகு இதுகள் வகைக்குப் பலம்-1, இதுகளை அரைத்து எண்ணையில் கலந்து மெழுகுப் பதமாய்க் காச்சி குடுவையில் வடியிட்டுச் சிலாசத்து பலம்-75 காசிடை மேற்படி யெண்ணையில் கலந்து அரைத்து அரைபலம் எண்ணை சாப்பிடவும்.

முடிவு

...அரைப்பலத் தெண்ணை உட்கொள்ள வெகுநாட் சென்ற பெருவியாதி, நாலைந்து மேகக் கருங்குட்டம், வெண்குட்டம், புண், சூலையும் மலைபோல் வந்த பிணி பனிபோல வோடிவிடும். வளமான எண்ணை. புவிமேல் வாகான மேக சஞ்சீவி என்னும் பேர் வழங்கிடும் எண்ணை இதுவே.

குறிப்புரை

**உரைநடை.** பெருவியாதி, இருபது மேகம், கருங்குட்டம், எண்ணை, உள்ளுக்கு மருந்து, தேங்காய் எண்ணை, பேய் முசுட்டை வேர் சாமியாடாதிருக்க, அகஸ்தியர் குழம்பு, சகல விலங்குகளும், பேய் பிசாசுகளும் ரெத்தம் முதலானதுங் கட்டுப்படும் மந்திரம், பேச்சி தியானம், நிமிளைச் சத்து, சோதி மணி சூத்திரம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 228. மருந்து அகராதி நிகண்டு

**அ.** 527:851; **ஆ.** 41-72 ஏடுகள்; **இ.** 35 x 2 செ.மீ; **ஈ.** 10 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** நன்று; **எ.** குறை; ஏ. அச்சாகாதது

தொடக்கம்

அரியென்றது ஒரு அக்கரம்
அம்புய மென்பது தாமலை யாகும்
அம்பொ ருகமே தாமரை யாகும்
அரவிந்த மென்பது தாமரை யாகும்
அமரி என்பது மிளகெனப் படுமே

முடிவு

நேகாரம் - நன்றாக
நேமி என்றது திமிசு

நேயம் என்பது விளாமரம்
நேயம் என்றது அதிவிடையம்
நேத்திர புட்பி என்றது கொடாச்செடி
நேத்திரம் என்றது துத்தம்
நேகாரம் முத்துங் குருவே துணை.

குறிப்புரை

அகரம் முதல் நேகாரம் வரையிலான மருத்துவச் சொற்களுக்குப் பொருள் தரப்பட்டுள்ளது. இறுதியில் மக்கட் பெயர்த் தொகுதி, மரப் பெயர்த் தொகுதி, இடப்பெயர்த் தொகுதி என்ற தலைப்பில் பொது நிகண்டின் பகுதியாக சில ஏடுகள் உள்ளன.

## 229. மருந்து செய்முறைகள்

**அ.** 60:88; **ஆ.** 2-17 ஏடுகள்; 2 ஆவது ஏடு பாதியாக முறிந்துள்ளது; **இ.** 24 × 3 செ.மீ; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** சிதையும் நிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சீரகம் பலம்-8, சோம்பு பலம்-8, ஏலம் பலம்-2, சாதிக்காய் பலம்-5, ஜாதிபத்திரி பலம்-5, திராட்சை பலம்-8, பேரீச்சம்பழம் பலம்-32, நெய் சேர், சீனி சேர் சேர்த்து லேகியம் பண்ணவும். பித்த வியாதிகளுக்குக் கொடுக்கத் தீரும். இச்சாபத்தியம் (ஏடு. 3).

முடிவு

உத்தாமணிச் சார்விட்டு அரைத்து வில்லை தட்டிக் காயவைத்துச் சீலைமண் செயிது 2 எருவில் புடம் 16. இப்படிப் புடம் 4, 5 புடத்துக்கு ரசம் பலம்-1 சேர்த்து 2 எருவில் புடம் போட்டு எடுத்துக் கொள்ளவும். வெள்ளியில் கொடுக்க.... வயசு 5 (ஏடு. 17).

குறிப்புரை

**உரைநடை.** பிழை மிகுதி. குங்குமாலேகியம், மகோதரத்துக்கு லேகியம், பூவரசங்காய் எண்ணை, கருங்கோளி லேகியம், மேக எண்ணை, குஷ்ட்டத்துக்கு எண்ணை

பானுக்குப் பேதி எண்ணை, கண்டமாலைக்கு எண்ணை, கண்டமாலை மேல்பூச்சு எண்ணை, பித்த குவலமதுக்கு எண்ணை, காக்கா வலிப்புக்குச் சூரணம், அட்டு எலும்புச் சுண்ணத்துக்குச் சூரணம், மேகத்துக்குச் சூரணம், வச்சிர வல்லிச் சூரணம், வெள்ளி பற்ப முறை, பெரும்பாட்டுக்கு மருந்து, தாதுபுஷ்டிக்கு லேகியம், வெட்டைக்கு மருந்து, உப்புச் செந்தூரம், லிங்கக் கட்டு முதலான தலைப்புகள் உள்ளன.

## 230. மருந்து செய்முறைகள்

**அ.** 290:515; **ஆ.** *13-28* ஏடுகள்; **இ.** 18 × 3 செ.மீ; **ஈ.** *4-6* வரிகள்; சில ஏடுகளின் பக்கங்கள் *2, 3* பகுதிகளாகப் பிரித்தெழுதப்பட்டுள்ளன; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

**அரதிருணம், எரிவுகுணம், குன்மவாய்வு, வயிற்றுவலி அனைத்திற்கும் மருந்து-** சுக்கு, மிளகு, திப்பிலி, அரத்தை, தெசாபுரம், அக்கரகாரம், வால்மிளகு, சிறுநாகப்பூவு, சிறுதேக்கு, வெள்ளுள்ளி, பெருங்காயம், கருஞ்சீரகம், நல்சீரகம், வெடியுப்பு, இந்துப்பு, கல்லுப்பு, அட்டுப்பு, வளகியுப்பு, சவட்டுப்பு, கரியுப்பு பொடி செய்து கொண்டு ஒரு களாச்சிரண்டு ஒரு தேங்காய் வாங்கிக் கண்ணைத் திறந்து தண்ணீரைக் கொட்டிப் போட்டுக் கிளாச்சியிலைச் சாறு மாகாணிப்படி, சிறுசெருப்படிச் சாறு மாகாணிப்படி கூடவிட்டு இந்தச் சாத்தில் இந்த மருந்து சேர்த்துத் தேங்காய்க்குள்ளே செலுத்தி வேப்ப முளையாவது, நார்மொச்சி முளையாவது தேங்காய்க் கண்ணில் அறைந்து எருமை சாணியைத் தேங்காய்மேல் ஒரு விரல் க'னம் பொதிந்து ஒரு கூடை எருவைப் போடு. தேங்காயை நன்கு வேகவைத்து எரித்துச் சிரட்டையும் வெந்த பருவத்தில் எடுத்து வந்து ஆறவிட்டு இடித்துப் பிறகு அரைத்துக் குடிக்க குத்துவலி தீரும். இச்சாபத்தியம்(ஏடு. *13*).

முடிவு

சவுக்காரம், துத்தம், மாடப்புறா எச்சம் இவை மூன்றும் தண்ணீர் விட்டு அரைத்துத் துடைவாழைக் கட்டி, அரை

யாப்புச் சிலந்தி, சிரங்கு, விப்புருதி - இவைமேல் போடத் திரண்டு உடையும். துத்தத்தைக் கரண்டியில் போட்டுப் பசுப்பம் செய்து, ஆணிமேல் போட ஆணியைப் பிடுங்கி எறிந்து விடும் (ஏடு. *28*).

குறிப்புரை

**உரைநடை.** அசதிகுணம், எரிவுகுணம், குன்ம வாய்வு, வகுத்துவலிக் கெல்லாம் மருந்து, பெண்களுக்கு வகுத்து வலி, மாதவிடை மயக்கம் காணும் பேருக்கு மருந்து, குருமி வகுத்துவலி, பாட்டுக்கு மருந்து, சன்னிக்கு மருந்து, சன்னி பொட்டணம், பிள்ளைப் பிணிக்கி எண்ணை வைக்க, சர்வ கணைக்கு எண்ணை வைக்கிறது, கபாலயிடிக்கு மருந்து, பெரும்பாட்டுக்கு மருந்து, வாயுவுக்கு மருந்து, பாரிச வாயுவுக்கு மருந்து, களிம்பு முதலான தலைப்புகள் உள்ளன. இரண்டு ஏடுகளின் பின்பக்கம் எழுதப்படவில்லை. *27* ஆவது ஏட்டின் முன்பக்கம் எழுதப்படாது பின்பக்கம் மட்டும் எழுதப்பட்டுள்ளது.

## 231. மருந்து செய்முறைகள்

**அ.** **320:546; ஆ.** *1-9* ஏடுகள்; **இ.** 18 × 3.5 செ.மீ; **ஈ.** *6-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாக வில்லை.

முதற்குறிப்பு

*1815* வருசம் தைமாதம் வைத்திய துடர்ச்சி ஏடு.

தொடக்கம் பேதி உப்பு

இந்துப்பை, லவனத்தைப் பேய் குமுட்டிக் காய்ச் சாற்றில் சேர்த்துச் சட்டியிலிட்டுக் கிண்டவும். லேகியமாகும். அதைச் சுண்டக்காய்ப் பிரமாணம் நோய் திடம் அறிந்து நீர்த்துப் பாகத்தில் கொடுக்கப் பேதி கழியும் (ஏடு. *1*).

முடிவு ரத்தனாதி பற்பம்

சுத்திவீரம் வீசம்-5, பூரம் வீசம்-5, ரசம் வீசம்-5, கந்தகம் வீசம்-5, தாளகம் வீசம்-5. இவைகளைக் கற்பூர வெற்றிலைச்

சாறுவிட்டு அரைத்து 4 சாமம் கைவிடாமல் ஆட்டிச் சேர்க்கவும். சயம், பித்த வீக்கம், காமாலை, பித்தபாண்டுக்கு வாழைப்பழத்தில் கொடுக்கவும். வியாதி தீரும். பத்தியம் இச்சாபத்தியம் (ஏடு. 9).

### குறிப்புரை

**உரைநடை.** பேதிஉப்பு, சுரத்துக்கு மாத்திரை, லிங்க மாத்திரை, ஒருதலை மண்டை இடிக்கு மருந்து, மேற்படி மண்டை இடிக்குச் சூரணம், வாயுவுக்கு, மனோசிலை மாத்திரை, தாளக மாத்திரை, சண்டமாருதச் செந்தூரம், தாளகப் பற்பம், பாலகருட பட்சிப் பற்பம், கல்நார் பற்பம், அரையாப்புக்குப் பற்பம், சீகாதுக்குத் தயிலம், கண்டத்துக்கு மேல் உள்ளதுக்கு எண்ணெய், லிங்கபற்பம்.ரத்னாதிபற்பம், உப்புக்கட்டு, வீரபற்பம், ஒருதலை வலி, மண்டை இடிக்கு எண்ணெய், அயச்செந்தூரம், 80 செந்தூரம் முதலான மருந்துகளின் செய்முறைகளும் அவற்றைப் பயன்படுத்தும் முறைகளும், அவற்றால் தீரும் நோய்களும் கூறப்படுகின்றன.

## 232. மருந்து செய்முறைகள்

**அ.** 321:547; **ஆ.** *1-28 (19)*; இ. 24.5 × 2.5 செ.மீ; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; இடையிடையே ஏடுகள் இல்லை; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

இரசகற்பூரம், தாளகம், வெங்காரம், இந்துப்பு, காயம், சுக்கு, மிளகு, அரிசிதிப்பிலி வகைக்கு வீசம்-1, வாளப்பருப்பு வீசம்-10, பச்சை வீசம்-5 நாழிகை ஒண்ணில் அரைக்கவும். சுத்துக் கிழாயம் விட்டு அரைக்கவும்.

### முடிவு

பசுவின் நெய் படிக்குப் பசுவின் பால் படி-1, திரிகடுகு, திரிபலாதி, தாளிசப்பத்திரி, கோஷ்ட்டம், அக்கிரகாரம், வாய்விளங்கம், சீரகம், ஓமம், அரத்தை, வால்மிளகு, ஏலம், கிராம்பு, சாதிக்காய், சாதிபத்திரி வகைக்கு வீசம்-1. இது

வெல்லாம் பால்விட்டு அரைத்து நெய்யில் கரைத்துக் கியாழத்தில் விட்டு அடுப்பில் வைத்துப் பதமாய் எடுத்து வைத்துப் போட்டுக் கரண்டியளவு மூன்று நேரம் சாப்பிடவும். இச்சாபத்தியம் (ஏடு. 28).

குறிப்புரை

தாளிசப்பத்திரிச் சூரணம், தாளகவெள்ளி, அயச் செந்தூரம், துளசி லேகியம், கவ, வாத லேகியம், குழம்பு, கசாயம், மாத்திரை முதலான மருந்துகளின் செய்முறைகளும், அவற்றால் குணமாகும் வெட்டை, தலைவலி, எட்டுவகைச் சுரம், பெரும்பாடு முதலான நோய்களும் கூறப்பட்டுள்ளன.

## 233. மருந்து செய்முறைகள்

**அ. 322:548; ஆ.** 22 ஏடுகள்; **இ.** 25 × 2.5 செ.மீ; **ஈ. 4-5** வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம் பூரண்டம்

சுக்கு பலம்-1, கருஞ்சீரகம் பலம்-1, கோரச்சாணி, ஓமம் பலம்-1, அதிவடையம் பலம்-1, கோஷ்ட்டம் பலம்-1, அரிசித் திப்பிலி பலம்-1, கசகசா பலம்-1, அக்கரகாரம் பலம்-1, வால்மிளகு பலம்-1, கொத்தமல்லி பலம்-1, சீரகம் பலம்-1, பெருஞ்சீரகம் பலம்-1, மிளகு பலம்-1, சாதிக்காய் பலம்-1, சாதிபத்திரி பலம்-1.... இடித்துப் போட்டுக் கொடுக்கவும் (ஏடு.1).

முடிவு

நீரிழிவுக்கு ரதம் பலம்-1, காரீயம் பலம்-3, காந்தம் பலம்-3, மாசிக்காய் பலம்-3, சாதிக்காய் பலம்-3, ஆவாரை விதை பல்ம்-5, தென்னம்பூ பலம்-5, .... த்திவிரை பலம்-5, அபினி பலம்-1 ஆக இவ்வளவும் ஆவின் மோர் விட்டரைத்துச் சுண்டைக்காயளவு உண்டைப் பண்ணி, சித்திரப்பாலியும் ஆவாரைக் கொழுந்தும் மோரில் குடுக்கவும். நீரிழிவு தீரும். கைகண்டது.

குறிப்புரை

**உரைநடை.** தொடக்கத்திலுள்ள *1-38* ஏடுகளுக்கு (*11* ஏடுகளுக்கு) எண்கள் உள்ளன. இடையிடையே பல ஏடுகள் இல்லை. இதனைத் தொடர்ந்து வரும் ஏடுகளில் எண்கள் உள்ள பகுதிகள் சிதைந்துள்ளன. பூரண்டம், நீரிழிவு, அன்னபேதிச் செந்தூரம், கர்ப்ப வெட்டைக்கு மருந்து, நிமிகாசச்சத்து, கற்பூரச் சலாசத்து முதலான தலைப்புகள் உள்ளன.

## 234. மருந்து செய்முறைகள்

**அ. 330:559; ஆ.** *8* ஏடுகள்; *7, 75, 76, 78, 87* என்ற எண்ணிட்ட ஐந்து ஏடுகளும் மூன்று எண்ணில்லாத ஏடுகளும் உள்ளன; **இ.** 27.5 × 2.5 செ.மீ; **ஈ. 5-7** வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

**தொடக்கம்** கந்தகக்கட்டு

கந்தகத்தைக் கட்டியாய் வாங்கிப் பீங்கானில் போட்டுக் காட்டாமணக்கின் பால் நிறைய முழுகும்படியாய் விட்டுக் கட்டி எட்டு நாள் வெயிலிலும், பனியிலும் வைக்கவும். மறுபடி களதும்பைச் சாறு முன்போல் விட்டு *8* நாள் முன்போல் காய வைக்கவும். ஒவ்வொரு விசையும் பிடம் போடக் கட்டும் சகல மேகத்துக்கும் கொடுக்கலாம் (ஏடு.*7*).

முடிவு

கத்தரிவள்ளி, மெய்யாங் கொட்டிக்கிழங்கு, எட்டிமரம், தொட்டிசீந்தி, சக்கரை, வெண்தாமரை, செந்தாமரை, குளிர் தாமரையாம், கூற்றன் குதம்பை, பேய்க்கொம்மட்டி, புல்லுருவி, அத்திவாகை, கூகை, நிலவாகை, புளியாரை, மலைமர வேர்ப்பட்டையுமாம் கற்பம் நூற்றெட்டு வகை சொன்னோம். சிவனருள் கற்பம் நூத்தெட்டாம்.

குறிப்புரை

**உரைநடை.** பிழை மிகுதி. கெந்தகக் கட்டு, வெள்ளைப் பாஷாணக் கட்டு, தைலம், செம்பைத் தங்கமாக்குதல் முதலான செய்திகள் கூறப்பெறுகின்றன.

## 235. மருந்து செய்முறைகள்

**அ. 340:572; ஆ.** *10* ஏடுகள்; **இ.** 26 × 2 செ.மீ; **ஈ. 5-6** வரிகள்; **உ.** நல்லநிலை; ஏட்டெண்கள் உள்ள பகுதிகள் உடைந்துள்ளன; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

**சூலைக்கட்டு, கடுப்பு, பிடிப்பு-** கரிய பழம், குங்கிலியம், சாம்பராணி, வெந்தியம் ஒரு நிரையாய், நொச்சிச் சாறாவது சாறணைச் சாறாவது கொதிக்க வைத்துப் பூசத் தீரும்.

### முடிவு அரையாப்புப் படலம்

லிங்கம், மிருதார சிங்கி, ரசகற்பூரம், வெள்ளைக் குங்கிலியம், கடுக்காய், மாசிக்காய், காசிக்கட்டி, தான்றிக்காய் இவைகளை ஒரு நிரையாய்ப் பொடித்து ஆவின் வெண்ணையா லரைத்துத் தண்ணீரில் ஒருநாள் மிதக்கப் போட்டும், ஐந்து நாள் எடுத்து ரணங்களிற் போட மாறும்.

### குறிப்புரை

**உரைநடை.** அஷ்டவாதச் சூரணம், சிரசூலைக்குத் தயிலம், பாரிச வாயுவுக்கு எண்ணை, புறவீச்சுக்கு வெத்திலைத் தயிலம்,வெள்ளம் பூண்டு தயிலம், இரத்த மூலம், வரட்கணம், ஊது மாந்தத்திற்கு, சுரனாச தயிலம், கக்குவான், மாந்த உண்டை, அரையாப்பு முதலான தலைப்புகள் உள்ளன.

## 236. மருந்து செய்முறைகள்

**அ. 343:575; ஆ.** *38* ஏடுகள்; **இ.** 21 × 3 செ.மீ; **ஈ. 5-7** வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** வேறுபட்ட கையெழுத்துகள்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம் சன்னி குளிகை

.... வெங்காரம், லிங்கம், கெந்தி, தாரம், நாவி, செம்பரப் பொடி சமன் கூட்டி இஞ்சிச் சாறில் நாள் மூன்று அரைத்து நெலப் பிரமாண முருட்டி யுலத்தி இஞ்சிச் சாத்திலிடச் சன்னி

பதிமூன்றும் தீரும். சிவதை, கடுக்காய், சுக்கு, இந்துப்பு காயம் இதெல்லாம் சூரணித்துச் சீனி சமன் கூட்டி வெருகடி வாயிலிட்டு வென்னீர் கொள்ள மலசலக் கட்டு, சீதம் வயிற்றுவலி, வாய்வு தீரும்.

### முடிவு

மாமர முன்பட்டைச் சாறு படி 2, ஒரு கலயத்தில் விட்டு, அதில் பின்கால் லாடத்தைப் போட்டு மூடி சீலை செய்து இடுப்பு ஆழம் குழிவெட்டி அதில் மேற்படி கலயத்தைப் புதைத்து வைத்து 24 நாள் மூடியெடுக்கச் செந்தூரம்.

### குறிப்புரை

**உரைநடை.** கெந்தக ரசாயனம், சன்னி குழம்பு, வங்கபற்பம், சூடன் மெழுகு, பதங்கம், அப்பிரகச் செந்தூரம், சண்டமாருதச் செந்தூரம், கோடாகுடிக் குளிகை, சிவனார் சூரணம், லிங்க மெழுகு, ஏலாதிக் குளிகை, நாகலிங்க பற்பம், சன்னிக் குழம்பு, பேதிக்கு மருந்து, விசச்சுரத்துக்கு மருந்து, பாஷாணப் பதங்கம், பாஷாணக்கட்டு முதலான தலைப்புகள் உள்ளன.

## 237. மருந்து செய்முறைகள்

**அ. 344:576; ஆ.** *1-50 (40)* ஏடுகள்; **இ.** 19 × 3 செ.மீ; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; ஓரிரு ஏடுகள் சற்றுச் சிதைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

சடாமாஞ்சி பலம்-*1*, ஓமம் பலம்-*1*, கொப்பரை பலம்-*2*, சேற்றாங்கொட்டை பலம்-½, பனைவெல்லம் பலம்-*3* இடித்து லேகியம் பண்ணவும். சுண்டைக்கா பிரமாணம் உண்டை பண்ணித் தின்னவும். பத்தியம் இச்சாபத்தியம். சோறும் நெய்யும் தின்னவும். விக்கல் நோய் தீரும்.

### முடிவு — வாயுவுக்கு, இடுப்புப் பிடிப்புக்கு

ஓமம் துட்டு எடை-*1*, மிளகு துட்டு எடை-*1*, பூண்டு துட்டு எடை-*1*, எள்ளு துட்டு எடை-*1*, வெல்லம் துட்டு எடை-*1*,

கொப்பரை துட்டு எடை-1. முதலில் மிளகு ஓமம் இரண்டையும் இடித்து வைத்துக்கொண்டு, மறுபடி மற்ற ஐந்தும் இடித்து மறுபடி சமூலம் இடித்து வைத்துக்கொண்டு சாப்பிடவும். இதுக்குப் பத்தியம் புளி தவிர்க்க.

குறிப்புரை

**உரைநடை.** இரத்தப் பிரமியத்திற்கு, அக்கினிக்கட்டு, மாந்தச் சுரத்துக்கு, வாதத்துக்கு, வாதசுரத்துக்கு, பித்த சுரத்துக்கு, தாபசுரத்துக்கு, ராத்திரியில் வரும் சுரத்துக்கு, விசச் சுரத் துக்கு, இருமலுக்குச் சூரணம், கட்டு மந்திரம், மாந்த எண்ணை, மாலைக் கண்ணுக்கு, எண்ணெய், தயிலம், காமா லைக்கு, துடை வாழைக்கி, அரையாப்புக்கு, கரப்பானுக்கு, விப்புருதிக்கு முதலான தலைப்புகள் உள்ளன.

## 238. மருந்து செய்முறைகள்

**அ. 379:620; ஆ.** 29 ஏடுகள்; **இ.** 30 × 2.5 செ.மீ; **ஈ. 5-8** வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** ஒன்றுக்கும் மேற்பட்ட சுமாரான எழுத்துகள்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம் ஆமவாத குளிகை

கோரோசனை வீசம்-3, சாதிப்பத்திரி வீசம்-1, அதிமதுரம் வீசம்-1, ஏலம், செண்பகப்.... கோஷ்டம், மாசிப்பச்சை, விலாமிச்சம் வேர் இது வகைக்கு வீசம்-1, வெட்டிவேர்த் தண்டு நறுக்கிச் சாறு கொண்டு இந்தச் சாறு கொண்டு அரைத்துக் சடலைப் பிரமாணம் உண்டைப் பண்ணி முலைப் பாலிடவும். வகுத்துக்கடுப்பு, கணம் சுரம் இவையெல்லாம் தீரும். கைகண்ட மருந்து.

முடிவு திப்பிலாதிரசாயனம்

திப்பிலி பலம்-2, அரைத்துப் பசுவின் நெய் நாழியில் கலந்து மிளகு, கடுகுரோகிணி ஆழாக்கு, வெளுத்த பிசின் பலம்-1 அரைத்துக் கரைத்து வடித்து நக்க இளைப்பு, இருமல் தீரும்.

குறிப்புரை

**உரைநடை.** கற்பூர சிலாசத்து, திப்பிலாதிக் கிருதம், காய்ச் சலுக்கு மருந்து, வயிறு கழிச்சல், வலிப்பு, மஞ்சக்காமாலை,

சீதம், கிருமி, சொறிசிரங்கு, காயம், ஒத்தைத் தலைவலி மருந்து, சகல பருவுக்கும் மருந்து முதலான மருத்துவக் குறிப்புகள் விளக்கம் பெறுகின்றன.

## 239. மருந்து செய்முறைகள்

**அ.** 398:642; **ஆ.** *2,6,31,42,53,65* ஏடுகள்; **இ.** *28.* ×*2.5* செ.மீ. **ஈ.** *4-5* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

**தொடக்கம்** **தாளகச் சுண்ணம்**

சல்லிகணம் வில்லை தட்டிக் காய வைத்து ஓட்டிலிட்டு, ஓடு மூடி, மூன்று சீலை செய்து, காய வைத்து அரை முழம் பிடமிடச் சுண்ணம். கடூர சுண்ணம். கைகொண்டது (ஏடு.*2*).

**முடிவு** **மூலக்கொடி வேர்த்தயிலம்**

மூலக்கொடி - *6*, நெல்லிக்காய் கெந்தகம் பலம் -*1* பூனீரு பலம் -*1*. இம்மூன்றையும் கல்பத்திலிட்டு மெழுகுபோல் ஆட்டி ஒரு கலயத்தில் தமர் விடச் சிலாகைப் போட்டு செவ்விட்டுச் சீலை செய்து கலயத்தின் கழுத்தில் ஒரு சட்டி மூடி, சீலை செய்து அடுப்பில் பீங்கானை வைக்கவும். ஐந்துயெரு வறட்டிக்குக் குளித்தயிலம் இறைக்கி சீசாவி லிட்டுத் தண்ணீரில் பதனம் பண்ணி வைக்கவும். லிங்கம், வீரம் சகலத்திற்கும் கட்டும் (ஏடு. *65*).

**குறிப்புரை**

**உரைநடை.** தாளகச் சுண்ணம், விந்தாதி லேகியம், கரிஉப்பு, செந்தூரம், வெடிஉப்புச் சுண்ணாம்பு, மூலக்கொடி வேர்த் தயிலம் ஆகியனவற்றின் செய்முறைகள் கூறப் பெறுகின்றன.

## 240. மருந்து செய்முறைகள்

**அ.** 399:643; **ஆ.** *27* ஏடுகள்; **இ.** *21.5*×3 செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; **ஊ.** படிக்கக் கூடிய எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

**தொடக்கம்**

... மருந்துத் தைலம் நல்லெண்ணை படி - *1*, பசுவின் பால் படி -*1*, கையாந்தகரைச்சாறு படி-¾, நெல்லிக்காய்ச்சாறு படி, ¾, ஓரிதழ்த்தாமரை, முசுமுசுக்கை இதுகள் சாறு படி-¼,

இதுவெல்லாம் ஒன்றாக மத்திச்சு மேல் மருந்து சீரகம், அதிமதுரம், கோட்டம், சந்தனம், தேவதாரம், சதகுப்பை, கருஞ்சீரகம் ஒன்று, மூன்று, விராக னெடை கூட்டி நன்று.

முடிவு

**கெர்ப்பத்திற்கு எண்ணை-** அரைப்படி விளக்கெண்ணையில் ..ளக் கிழங்கு நன்றாய்த் தட்டி எண்ணையில் போட்டுச் சூரிய பிடமாக எடுத்து வைத்துக்கொண்டு கெற்பணியார் வயிறாற் பெருக்க, மூணு மாத்தையில் ரெண்டு நாள் குடிக்க, ஆறு மாத்தையில் மூணுநாள் குடிக்க, ஒன்பது மாத்தையில் ... நாள் குடிக்கவும். பத்தியம் ஒண்ணும் ஆகா... அறியவும்.

குறிப்புரை

**உரைநடையும் பாடலும் கலந்துள்ளன.** பாடல்களுக்கு எண்கள் உள்ளன. மலட்டுத் தன்மை நீங்க, கர்ப்பம் தரிக்க, வீரியத்திற்கு, சன்னி சுரத்துக்கு, சூலைக்கு முதலான நோய்களுக் குரிய தைலம், கசாயம், லேகியம் முதலான மருந்துகளின் செய்முறைகள் விளக்கம் பெறுகின்றன.

## 241. மருந்து செய்முறைகள்

**அ.** 422:666; **ஆ.** *9-30 (18)* ஏடுகள்; **இ.** *25* ×*2.5* செ.மீ. **ஈ.** 5-6 வரிகள்; **உ.** நன்று; சில ஏடுகளின் ஓரப் பகுதிகள் சிதைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

**தொடக்கம்**

சுக்கு பலம் *-1*, மிளகு பலம் - *1*, திப்பிலி பலம் *-1*, கருஞ்சீரகம் பலம் - *1*, இந்துப்பு பலம் - *1*, கடுக்காய் பலம்-*3*, தானிக்காய் பலம்-3, தேங்காய்ப் பால், வேலிப்பருத்திச் சாறு, பொரும்மி எலைச் சாறுபடி - ½, பொடுதளைச் சாறு படி - ½, சித்தா மணக்கு எண்ணை படி - *1*. இதுவெல்லாம் யொன்றாய்க் கலந்து மூணுநாள் ... புடம் வைக்கவும்.

முடிவு

சூரணம் செய்து எண்ணையில் கலக்கி விடவும். அடுப் பேற்றி மெழுகு பதமாகக் காய்ச்சிக் கலசத்தில் இறுத்துக் கொள்ளவும். வேளைக்கு *12* நாள்-¼ பலம் வீதம் குடுக்கவும்.

பித்த ஊறல், பித்த வெடிப்பு, மேகம் கொடுக்கவும். 7 நாள், 10 நாள் குடுக்கவும், பிள்ளைகளுக்கு மாந்தம், கணம், மூலச்சூடு, கரப்பான், சொறி, சிரங்கு, 5 நாளைக்குக் குடுக்கத் தீரும். பத்தியம் இச்சாபத்தியம். புளி, வெள்ளாட்டு இறைச்சி, முருங்கப்பிஞ்சி, அவரைப் பிஞ்சு.

### குறிப்புரை

**உரைநடை.** பிழைகள் மிகுதி. மேக எண்ணை தோசத்துக்கு, சுரத்துக்குச் சந்திரோதைய மாத்திரை, பேதி மாத்திரை, பிள்ளைகளுக்கு, இரத்த நாதிக் குழம்பு, சீதக் கழிச்சலுக்குக் கிண்ணத்தெண்ணை, குளுமைக்கு, பிள்ளைகளுக்கு நாக்குப் பூச்சி, எண்ணை, மகோதரம், சூதகவாய்வு, புண், குன்மம் இதுகளுக்கு, கோடாசூரி மாத்திரை, கணயெண்ணை, தலைமுழுக எண்ணை, பித்த சுரத்துக்கு, சத்திக்கு லேகியம், சகல மேகத்துக்கும் தேங்காய் நெய், பூமேகத்துக்கு எண்ணை முதலான தலைப்புகள் உள்ளன.

## 242. மருந்து செய்முறைகள்

**அ. 499:760; ஆ.** *4-9* ஏடுகள்; **இ.** *26.5 × 3* செ.மீ; **ஈ.** *7,8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

சாதிலிங்கம் வீசம் 5, செயங்(சேங்)கொட்டை - 10, சட்டியில் போட்டு அடுப்பில் வைத்து எரியிடவும். தயிலம் வரும். அப்போது லிங்கத்தைப் போட்டுப் பிரட்டிப் பிரட்டிச் சூடு கொடுக்கவும். உருகிக் கூடும். வைத்துக் கொண்டு மாத்திரை லிங்க பூபதி யென்றும் பேர்.

### முடிவு

நவனீதங் கொண்டு வந்து சத்தி சாரணைக் கிழங்கு கொண்டு வந்து, அரைத்து மருந்து ரெண்டு பங்கும், சாரணை ஒரு பங்கும் வைத்துப் பிசைந்து பழஞ்சட்டியில் வைத்து மெல்ல விளக்கெரியுறாப் போலே யெரியச் சட்டியைத் துறந்து ஆவி போக்கி மூடி நுனியில் கறுப்பிருக்க இறக்கிப் போடவும். சட்டி சூட்டால் கட்டியாய்ப் பற்பமாயிருக்கும். வெண்ணை போலே இருக்கும்.

குறிப்புரை

**உரைநடை.** லிங்க பூபதி மாத்திரை, லிங்கச் செந்தூரம், லிங்க மெழுகு மாத்திரை பண்ண விபரம், தாளகம், கண்டுகைச்சலுக்குமை, பேதிக்கு எண்ணெய், அஞ்சுப்புக் கூட்டு, ஊசிகாந்தம் நவனீத பற்பம் முதலான தலைப்புகள் உள்ளன. இதனையடுத்து நோய் வகைகளைச் சுட்டுகின்ற ஓர் ஏடு இடம் பெற்றுள்ளது.

## 243. மருந்து செய்முறைகள்

**அ.** 535:865; **ஆ.** *3-10* ஏடுகள்; *8* ஆவது ஏடு இல்லை; **இ.** *33.5* × *3* செ.மீ; **ஈ.** *4-5* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; ஏ. அச்சாகவில்லை.

### தொடக்கம்

வெள்ளெப் பாஷாணம், கெவுரிப் பாஷாணம் இரண்டையும், வெளாக்காயிப் பிரமாணம் சுண்ணாம்பில் வச்சு மேலே சீலை சுத்தி கொளுத்தின பின்பு மேலே கரியைத் தள்ளிப் பாஷாணம் எடுத்துக் கொண்டு சூதம்-*1*, மத்தமச்சாறில் ஆற வைச்சி அந்தச் சாத்தில் வாளம் - *1*, திப்பிலி-*1* யிதுகளைச் சாத்தில் ஒரு சாமம் அரைச்சி, சிறு பயறு போலே குளிகை செய்து உலத்தி வெந்நீரிலும் முலைப்பாலிலும் குடுக்கலாம்.

### முடிவு

பேயி பிரக்கன் (பேய் பீர்க்கன்) விரை தயிலத்தில் அரைப்பணம் செங்காரம் போட்டுக் குழப்பித் தண்டில் பூசிப் புணர்ந் திடவே கெர்ப்ப சூலை, கெர்ப்ப முண்ணும் புழுவும் சாகும். கெர்ப்ப ரோகம், முளை மூலம் இப்படித் தடவிக் கொண்டு மூன்று நாள் புணர்ந்தால் போகும். ஆசனத்தில் தடவினால் முளை மூலமும் ஆகின பவுத்திரமும் போகும்.

குறிப்புரை

**உரைநடை.** சகல காச்சல் குளுருக்குப் பாஷாணக் குளிகை, வங்க பற்பம், மஞ்சளில் தயிலம், ரசச் செந்தூரம், வங்கச் செந்தூரம் சாரதிராவகம், வீரிய புஷ்டிக்கு லேகியம், நாகச்

செந்தூரம் முதலான தலைப்புகளில் மருந்து தயாரிக்கும் முறைகளும் அதனால் தீரும் நோய்களும் கூறப்படுகின்றன. இறுதியில் மூன்று மருத்துவ ஏடுகள் உள்ளன. 1,2 என்ற எண்ணுடைய முதல் இரு ஏடுகளில் கெந்தகத் தயிலம், பிரிவுக்கு, வாயு எண்பதுவுக்கும் அரிதார பற்பம் என்ற தலைப்புகளும், ஏட்டு எண் இல்லாத 3 ஆவது ஏட்டில் குழந்தைக்குப் பேதி மாத்திரை என்ற தலைப்பும் உள்ளன.

## 244. மருந்து செய்முறைகள்

**அ.** 551:895; **ஆ.** *25* ஏடுகள்; **இ.** *25 × 2.5* .செ.மீ. **ஈ.** *4-6* வரிகள்; **உ.** ஏடுகள் பாதியாக பாதிக்குச் சற்றுக் குறைவாக முறிந்துள்ளன; மீதியுள்ள ஏடுகள் ஓரளவு நல்ல நிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

பூவரசங்காய் சாறு படி - *4*, பட்டைச்சாறு படி *-1* , வெங் காயச் சாறு படி-*1*, எண்ணை படி-*1*, பறங்கிப் பட்டை, கருஞ்சீரகம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுகுரோகணி, கடுக்காய் வகைக்கு பலம் *-1* இடித்து எல்லாம் ஒன்றாய்க் கலந்து எரித்து மெழுகு பதத்தில் வடித்து வைத்துக்கொண்டு சூதக வாய்வுக்கு, மேகங்களுக்கு ஏழு நாளு, 9 நாளு கொடுக்கவும் இச்சாபத்தியம் (ஏடு.*11*).

கரும்பு, நாய்ப்பால், அட்டை சீலை வேட்டி, ... சின்னி, மராட்டி மொக்கு, மருளுமத்தை, பனி முட்டை, தொட்டாஞ் சிணுங்கி, காசிக்கட்டி, களிப்பாக்கு, பனைவெல்லம், சாதிக்காய் கூட்டிச் சட்டியடுப்பு.

### குறிப்புரை

**உரைநடை.** பிழை மிகுதி. *11-19* வரை ஏட்டெண்கள் தொடர்ச்சி யாய் உள்ளன. அடுத்த இரண்டு ஏடுகளில் ஏட்டெண்கள்' மட்டும் சிதைந்துள்ளன. சிவன் வேம்புக்கசாயம், பஞ் சாக்கினித் தயிலம், பிள்ளை கழைய மாத்திரை, தீராத கிராணிக்கு, கிராணி எட்டுக்கும் அதிசாரப்பொடி, நீர்க் கட்டுக்கு இடிமருந்து, மூலம் கண்டமாலை, பவுத்திரம், ஒருதலை நோவுக்கு, சூதகத்துக்கு, மகோதரத்துக்கு, மேகத்துக்கு முதலான தலைப்புகள் உள்ளன.

## 245. மருந்து செய்முறைகள்

**அ.** 579:937; **ஆ.** 7 ஏடுகள்; **இ.** 30 x 3 செ.மீ; **ஈ.** 4-6 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** ஓரளவு கடினம்; மூன்று வகைக் கையெழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம் சந்தனாதி

சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், கோஷ்டம், அதிமதுரம், அக்கிரகாரம், விலாமிச்சி, வெட்டிவேர், கார்போகம், ஏலம், கிராம்பு, சந்தனக் கட்டை... நீர்விட்டு இடிச்சிச் சார்வாங்கி விடவும். கிச்சடிக்கிழங்கு, முளகு, கஷ்தூரி மஞ்சள் இந்த மூனும் பசுவின்பால் விட்டு அரைச்சி எண்ணையில் விடவும்.

### முடிவு

நொச்சியிலைச்சாறுபடி - ¼, ஆதண்டை இலைச்சாறு படி -¼, மலைவேம்பு இலைச்சாறு படி - ¼, சித்திரமூலம் வேர்ப்பட்டை பலம் - ¾, சமுத்திரப்பழம் பலம் - ¼, கஸ்தூரி மஞ்சள் பலம் - ¼, கருஞ்சீரகம் பலம் - ¼, மிளகு பலம் - ¼, செடா மஞ்சி பலம் - ¾, வால்மிளகு பலம் - ¾ இவை ஏழும் தூள்செய்து இந்த மூன்று சாத்திலையும் கலந்து நல்லெண்ணை படி-¼ விட்டு மெழுகுப்பதமாய்க் காச்சிவடிச்சிக் கொள்ளவும்.

### குறிப்புரை

**உரைநடையும் பாடலும் கலந்துள்ளன.** வாலரசம், திரிலோகச் செந்தூரம், தோஷம், மூலம், ஒரு தலைவலிக்கு நசியம், சன்னி, கிறுகிறுப்பு, படபடப்புக்குத் தலை முழுக எண்ணை, மேகத்துக்குத் தயிலம், பித்தத்துக்குத் தயிலம், வெள்ளை தீர, வாத சன்னிக்குத் தயிலம், பஞ்சதீபாக்கினி, சுக்குக் கியாழம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 246. மாட்டு வாகடம்

**அ.** 566:920; **ஆ.** 22-63 (28) ஏடுகள்; **இ.** 26.5 ×2.5 செ.மீ. **ஈ.** 4-6 வரிகள்; **உ.** ஏடுகளில் கீழ்ப்பக்க ஓரப் பகுதிகள் சற்று முறிந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

**தொடக்கம்** **கண்ணு விலங்கின மாட்டுக்குச் செய்குணம்**

வாந்தி வாந்தி ததிகாப் படுமுளறு வாயை வாயை மெல்லும். இதுக்கு மருந்து நாத்தாளி இலையைப் பறித்து இடித்துச் சாறு எடுத்து நல்லெண்ணையில் கலந்து புகட்டத் தீரும். இதுக்கு உடனே நிதானப்படும் (ஏடு.22)

**முடிவு**

கண்டங் கத்திரி கலம் -5, செந்தட்டி கலம் - 5, பிரண்டை கலம் - 5, துருசு கலம் - 1 இதைப் பொடி செய்து பச்சிலை மருந்தும் கூட்டி இடித்துப் பிளிஞ்சு மூன்றுபடித் தண்ணீரில் குடுக்கவும். பிறகு இருபது நாள் சென்று தவளை நெய் படி - ¼, உடும்பு நெய் படி - ௲, நண்டு நெய்படி - ¼, பன்னி நெய் படி - ¼ இதுவெல்லாம் தாளியிலிட்டு, வேலியில் வாழும் ஆமையைப் பிடித்து இடித்து ஒருபடித் தண்ணீரில் நெய் கூட்டிக் குடுக்கவும் (ஏடு. 63).

**குறிப்புரை**

**உரைநடை.** பிழை மிகுதி. இளங்கொடியைத் தின்ற மாட்டின் செய்குணம், சுழற்சி நோய், தோகை நோய், பன்றி நோய், அரணைக் கடி நோய், ஈரல் முட்டி நோய், பன்னியடை நோய், நன்னாரி நோய், சுழல் நோய், சூழட்டாளி நோய், குதிரைச் சிலந்தி, கெர்ப்பச்சில்லாளி, காலில் வலி, ஊழை நோய், உண்டை நோய், கண் நோய், முக்கல் நோய், மண்டை நோய், மூக்கடைப்பான், வெக்கை கொண்ட மாட்டின் குணம் முதலானவற்றின் செய்குணங்களும், மருந்துகளும் கூறப்படுகின்றன. மேலும் தூங்கு சிலந்திக்கு மருந்து, கால் வீங்கினதுக்கு மருந்து, உதிரி நோய்க்கு மருந்து, உதிரி வடைப்பனுக்கு மருந்து, உதிரி செங்காமாரி நோய்க்கு மருந்து, உதிரி வெப்புக்கு மருந்து, எருக்கலுக்கு மருந்து, ரெத்தமாகப் பீச்சரதுக்கு மருந்து, மேயாத மாட்டுக்கு மருந்து, ஆனைவலி கொண்ட மாட்டுக்கு, காலடைப்பனுக்கு, செஞ்சடைப்பனுக்கு, விரட்டை நோய், பீச்சலுக்கு, விரட்டடைப்பான், உள்ளடைப்பான், சங்கடைப்ப நோய்க்கு மருந்து, சதையடைப்ப நோய் முதலான தலைப்புகளில் மாடுகளுக்கு வரும் நோய்களும் மருந்துகளும் விளக்கம் பெறுகின்றன.

## 247. மாந்தத்தின் குணம்

**அ.** 509:779; **ஆ.** 73-75 ஏடுகள்; **இ.** 40 x 3 செ.மீ.; **ஈ.** 6,7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமார்; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

### தொடக்கம்

பொருமுங் கழியும் புகைந்துவலி யுண்டாகும்
மருவு முலைப்பால் மறக்குமே வேர்வுமது
சத்திசெய்யுங் கண்குறியுந் தாகமிக வெதும்பும்
வத்தியிடும் போர்மாந் தமே (1)

### முடிவு

ஆக்கிடுங் கிஷாயந் தன்னை ஆனதோர் சங்கு போகும்
போக்கிடு ஊது மாந்தம் போர்மாந்தம் சத்தி மாந்தம்
தேக்கிடுஞ் செரியா மாந்தம் சிறந்திடும் கட்டு மாந்தம்
தாக்கிடு மாந்த மஞ்சும் தரணியில் தணியு மென்று(13)

### பிற்குறிப்பு

முற்றும் . இந்தப் பொஷ்த்தகம் தொட்டியத்திலேயிருக்கும் முத்துக் கருப்பப் பிள்ளை குமாரன் மொட்டையப்பிள்ளை பொஷ்த்தகம். இது எழுதினது மேற்படி மொட்டையப் பிள்ளை கையெழுத்து. முற்றிற்று. சம்பூரணம் கணபதி துணையாக வேண்டியது.

### குறிப்புரை

**1-13 பாடல்கள்.** போர்மாந்தம், ஊது மாந்தம், கட்டு மாந்தம், விஷமாந்தம், நீர்மாந்தம் முதலான மாந்தத்தின் குறிகுணம் பற்றியும், அதற்கான மருந்துகளின் செய்முறை பற்றியும் கூறப்படுகின்றது.

## 248. மாந்த வகை

**அ.** 487;740; **ஆ.** 101-102 ஏடுகள்; **இ.** 26.5 x 3 செ.மீ.; **ஈ.** 7,8 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

மள்ளை யுங்கனத் திருக்கும் பிரண்டைபோற் பின்ன லாகு
முள்ளமுஞ் சிவந்து கண்ணி லுடம்பினில் வெளுத்துக் காட்டுந்
துள்ளியுங் கையிற் தங்கள் துணுக்கெனச் சுழலு மாகிற்
கள்ளமாய்க் குரலுந் தாழ்ந்து கண்குழிந் திருக்கு மாந்தம் (1)

முடிவு

அம சுரத்தின் குணங்கேளு அறவே கைகால் குளுந்துவிடுஞ்
சாமந் தோறு மெழுந்திருக்குந் தாயின் முலைப்பா லருந்தாது
தும்மல் வாயா லெழுந்துவிடுஞ் சோர்ந்து கிடந்து வாய்பிதத்துங்
காம னுருவாய் கயல்கண்ணி கனத்து மிருக்குங் கண்டீரே (9)

குறிப்புரை

**1-9 அறுசீர் விருத்தங்கள்.** *பிள்ளைப் பிணிகளைப் பற்றிக் கூறுகிறது. ஆசிரியர் தன் தேவைக்கேற்பச் சில பாடல்களைப் பிற சுவடியிலிருந்து எடுத்துக் கையாண்டுள்ளார். மாந்தம், மாந்த சுரத்தின் வகை, தாந்திரிகச் சன்னி மாந்தம், போர்மாந்தம், ஆமச்சன்னி, ஆமசுரம் ஆகியவற்றின் குறிகுணங்கள் கூறப்பெறுகின்றன.*

## 249. முப்பு விபரம்

**அ**. 510:783; **ஆ**. *2-89* ஏடுகள்; **இ**. *22 X 5.3* செ.மீ.; **ஈ**. *14-16* வரிகள்; **உ**. சிதைவு; தாழிப்பனை **ஊ**. சுமார்; **எ**. குறை; **ஏ**. அச்சாகாதது.

தொடக்கம்

காயவே பாண்டத்தில் தமருப் போட்டு
கதம்பைவழித்து அதின்கீழே சட்டியி லிட்டு
நேயவே சட்டிநடு கதம்பை முகிக்கவே
பக்கு வமாவ யித்து மூடு
துய்யவே கதம்பையுட முக்காது பாத்துச்
சுரண்டவே சுத்தசல மயி..ங்கும் பாரு

முடிவு

வாங்கியதோர் முட்டைதனை யுடைத்துப் பாரு
மகத்தான நீரப்பா யென்ன சொல்வேன்

தாங்கியதோர் நீரெல்லாந் தயில மப்பா
    தடியான பீங்கானில் பதனம் பண்ணி
ஓங்கியதோர் ரவிமுகத்தில் வைத்துப் பாரு
    ஒகோகோ தயலமது யென்ன சொல்வேன்
தீங்கில்லாத் தயிலமதில் கோடிவிதச் சித்து
    மிகஆடி னதோர் சியலைக் கேளே (520)

குறிப்புரை

**520 பாடல்கள்.** பற்பம், தைலம், செயரூபசித்து, சித்து, சித்து வகை, தாளகக் கட்டு, மாலாதேவி, துருசு மூப்பு, நாதவிந்து, சுண்ணம், சாரம், தாரம், துருசு சுண்ணம், கற்பம், பாஷாண நீரு, குறுக்குவழி, வேறு மாத்திரை, விஷணம், சர்வகுலச் சித்து, செயரூபச் சித்து முதலான தலைப்புகள் உள்ளன. பல மருந்து களுக்கு ஒன்றிற்கு மேற்பட்ட மருந்து செய்முறைகள் கூறப்பெறு கின்றன. அதுசமயம் 'வேறு' என்ற தலைப்புத் தரப்பட்டு அம்மருந்து தயாரிக்கும் முறை முதன் முறை யினின்று வேறுபட்டது என்பது உணர்த்தப் பெறுகின்றது.

## 250. (இ)ராம தேவர் சூஸ்த்திரம் முப்பது

**அ**. 516:795; **ஆ**. *1-6 ஏடுகள்;* **இ**. *30 x 3.5 செ.மீ.;* **ஈ**. *8-9 வரிகள்;* **உ**. *நன்று;* **ஊ**. *சற்றுக் கடினம்;* **எ**. *முழுமை;* **ஏ**. *அச்சாகாதது.*

தொடக்கம்

ஆதிகுரு வானதொரு பிரம்மன் பாதம்
    அனுதினமும் நெஞ்சுள் வைத்து அருளை நோக்கி
சோதிவெளிக் கப்பாலே துலங்குஞ் சோதி
    சத்திதுணை யெனவேகறுமா னஞ்சுருக்கஞ் சொல்வேன்
நீதியுள்ள வாலைமனோன் மணித்தாய் வந்து
    நிலைத்த பொருள் கருவமைப்பை நிலத்தினோர்க்கு
சோதினையாய் சொல்லுவியோ ராமா வென்று
    சொல்லமனக் கசடகத்தித் துதித்தாள் பாரே (1)

முடிவு

முற்றுமிதைப் பார்க்கையிலே மவுன மாகி
    மூடருடன் பேசாதே வாதா டாதே

சுற்றமுள்ள பெரியோரைத் தொண்டு பண்ணு
துவாதசாந் தத்தில்மனந் துலங்கி நில்லு
சித்தமே சிவன்செயல் தானப்பா சொன்னேன்
திரிகோண முள்ளசத்தி அறிவாம் பாரே
உத்தபொரு ளிதல்லாமல் வேறொன் றில்லை
ஊடாடும் வாசியை நீவணங்க முற்றே (31)

குறிப்புரை

**1-31 பாடல்கள்.** குரு முப்புச் சுண்ணம், செயநீர், லிங்கக் கட்டு, வீரச்சுண்ணம், வெள்ளீயவித்தை, நாகக்கட்டு, பிண்டக் கருத்தயிலம், வெள்ளைச் சுண்ணம், கெந்தி மெழுகு, ரசமெழுகு, கறுவாப்பட்டைத் தையிலம், செயநீர் (வேறு), வீரச் சுண்ணம் (வேறு) முதலான தலைப்புகள் உள்ளன. உரோமரிஷி கருமான சூத்திரம் *4 (ச.296.* F*)* உரோமரிஷி சூத்திரம் *100 (ச.272)*, உரோமரிஷி நாயனார் சூத்திரம் *25 (ச.236.*M*)*, உரோமரிஷி *19 (ச.296.* K*)* முதலான சுவடிகள் உள்ளன.

## 251. வர்ம கண்டி 60

**அ. 529:857**; **ஆ**. *1-16* ஏடுகள்; *15* ஆவது ஏடு இல்லை; **இ**. *30 x 3.5*.செ.மீ; **ஈ**. *7-8* வரிகள்; **உ**. நன்று; **ஊ**. மிகக் கடினம்; **எ**. முழுமை; **ஏ**. அச்சாகாதது.

தொடக்கம்

காரப்பா சடமதிலே மனுஷர்க் கெல்லாம்
கைகண்ட தலங்குறிகள் கருத்தாய்க் கேளு
காரப்பா கியாழமொடு கிருதம் எண்ணெய்
தயவான தைலமொடு யிளகும் மார்க்கம்
கோரப்பா தடவுதட்டு அமர்த லோடு
குணக்கேடு பிறகுறியும் கூர்மை யாக
அப்பனே ஆணியைப்போ லறிவே னப்பா
ஆயுட சீர்பாதம் நெற்றிக் காப்பே (1)

முடிவு

ஊட்டுவாய் பத்தியமாய்க் கொண்ட போது
உள்சுரமோ டறுபத்து நாலுந் தீரும்

நாட்டுவேன் ஏல மொடுஅவல் பிடியும்
நன்மையுடன் தீருமென்று நயந்து பாரு
காட்டுவேன் கைகண்ட முறையாய்ச் சொன்னேன்
காட்டாதே யொருவருக்கும் கைவி டாதே
ஆட்டுகின்ற வாணியைநீ வைத்துக் கொண்டு
அறைந்துவிட்டேன் அறுபதுமே ஆயி முற்றே (62)

பிற்குறிப்பு

அகத்தியர் திருவாய் மலர்ந்தருளிய வர்ம கண்டிப்பாட்டு அறுபதும் முற்றும். கலி 114 ஆவது ஆண்டு, ஆடி மாசம் 23 ஆம் தேதி க. பூதத்தான் குட்டி வக. வர்ம கண்டி எழுதி முடித்தது.

குறிப்புரை

இரண்டு காப்புப் பாடல்களையும் சேர்த்து 62 எண்சீர் விருத்தப் பாடல்கள். திலர்த வர்மம், நட்சத்திர, செவிக்குற்றி, பிடரி, உறக்க, திவளை, அடப்ப, உறுமி, வலிய அத்திச் சுருக்கி, சிறிய அத்திச் சுருக்கி, மூத்திர, கல்லிடைக் காலங்கள், சொல்லத்தக்கோர், தகாதோர், அஞ்செண்ணெய்த் தைலம், சயத்துக்கு, வர்மத்துக்குக் கோழித் தைலம், ஈட்டிற்குக் குறுந்தொட்டுக் கியாழம், அறுகின்வேர்கியாழம், மதுரக் கியாழம், உள்முறிவுக்குக் குடிக்க எண்ணெய், தோடை வேர் கியாழம், முறிவுக்கு முக்கூட்டு, கலப்பால் எண்ணெய், குருடகியாழம் முதலான செய்திகள் இடம் பெறுகின்றன. 'வர்மகண்டியும் சூடா மணியும்' என்ற நிறுவன ஆய்வேட்டில் இப்பகுதி இடம் பெற்றுள்ளது. அரசினர் சுவடி நூலகத்தில் 'வர்ம கண்டி சாத்திரம்' எனும் சுவடிகள் இரண்டு உள்ளன.

## 252. வர்ம சூடாமணி

**அ**. 529:856; **ஆ**. *1-11* ஏடுகள்; **இ**. *30* x *3.5* செ.மீ.; **ஈ**. *7-9* வரிகள்; **உ**. நன்று; **ஊ**. மிகக் கடினம்; **எ**. குறை; **ஏ**. அச்சாகாதது.

தொடக்கம்

அன்னவா கனமீ தேனும் அய்யன்தன் சிருட்டிப் பாலே
அம்புவி தன்னில் வந்து ஆண்டிடும் மனுஷர்க் கெல்லாம்

கண்டித மானவர்மம் கருத்துடன் நரம்பு சூட்சம்
கடுதான உடிமுடம் காயம் உறுதியாங் கிருதம் எண்ணெய்
திடமுடன் கியாழம் லேகியம் சீருடன் தைலம் பாகம்
கருவுடன் உறுதியாகக் கணக்குடன் சூடாமணியில் தானே
கருவளர் மலையில் வாழும் குறுமுனியருள் செய்வ தற்கு
கடவுள்தா னீன்றெடுத்த கரிமுகன் தொந்திக்கணபதி
காப்புத்தானே (1)

முடிவு

தானென்ற முடிவுக்கொரு எண்ணெய் கேளு
தப்பாமல் சொல்லுகிறேன் சரியா கத்தான்
தானென்ற உருக்கெண்ணெய் பச்சை எண்ணெய்
தயவாகப் பெரும்பாம்பின் எண்ணெய் தானும்
தயவுடனே இத்தனையு மொன்றாய்ச் சேர்த்து
சரியான எண்ணெய்க்குக் கற்கம் கேளு (49)

குறிப்புரை

**1-49 பாடல்கள்.** பதப்பில் வர்மம், பூட்டெல்லு வர்மம், நட்சத்திரக் காலம், செவிக்குற்றி வர்மம், அலவாடி வர்மம், சின்ன முக்கூட்டு எண்ணெய், உறக்கக் காலம், நேர்வர்மம், கஞ்சி, காரீரல் வர்மம், உறுமி வர்மம், மூத்திரக் காலம், கல்லடக் காலம், லிங்கத்தின் தண்டு வர்மம், வெள்ளீரல் வர்மம், அடப்பு வர்மம், பிள்ளை வர்மம், வில்லு வர்மம், முண்டெல்லு வர்மம், அத்திச் சுருக்கி வர்மம், வர்மத்துக்கு எண்ணெய், அசையாத முடங்களுக்குச் சித்திர நெய், முறிவுக்கு எண்ணெய் முதலான செய்திகள் உள்ளன. 'வர்ம கண்டியும் சூடாமணியும்' என்ற நிறுவன ஆய்வேட்டில் இப்பகுதி இடம் பெற்றுள்ளது.

## 253. வர்ம சூத்திர நிகண்டகராதி 166

**அ.** 529:853; **ஆ.** *1-42* ஏடுகள்; **இ.** *30 x 3.5* செ.மீ.; **ஈ.** 7-*8* வரிகள்; **உ.** நல்ல நிலை; இடையில் ஓர் ஏடு உடைந்துள்ளது; **ஊ.** மிகக் கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

அண்ட பிண்டம் எண்டிசை யும்அண் டபகி
ரண்டமதின் புறம்பு மாகி நின்று

அண்டபிண்ட மந்திரிகை நாலு யோனி
அதிலெழுந்த ஊர்வலமும் பயுவைத் தேவர்
கண்டிருந்த மனுஷரொ டுந்தா வாவும்
கதிப்பான நீர்வளமும் சாதிநாற் கூடிக்
கொண்டிருந்த எழுதோர் முற்றிய நின்ற
குணமான பொருளாதி குருவே காப்பு (1)

முடிவு

தாக்கேநீ தீயெரித்துப் பாதி வற்றித்
தடமாகக் கோழியிட்டுப் புழிந்து சேரு
போக்கியே புங்கெண்ணெய் மலைப்பாம் பெண்ணை
புகழாக நீவாட்டி எண்ணை சேரு
தூக்கியே தேங்காய்நெய் சென்னை எண்ணெய்
சுகமான மையிலெண்ணை புன்னை எண்ணெய் (166)

பிற்குறிப்பு

*1313* ஆம் வருசம் அய்ப்பசி மாசம் 7 ந் தேதி எழுதி முடிந்தது. மாதன் -*1*, பூதத்தான் குட்டி - *1* சூ, வர்மசூத்திர நிகண்டகராதி ஒட்டிமுறி ஞானம்.

குறிப்புரை

**1-166 பாடல்கள்.** பிரமகிருஷ்ட்டணன், பூதமஞ்சுக்கும் பேர் நிலவும் விபரம், தேவர்களிருப்பிடம் கருவிகளின் விபரம் அறிய, பொறி ஐந்தின் விபரம், மண்ணை நாக்கு, பெருவிரல், யிளி நடுவிரல், படங்காலில், யிளிப்பூட்டில் முதலான தலைப்புகளில் வர்மம் உள்ள இடங்கள், வர்மத்தின் வகைகள், வர்ம மருந்துகள், இளக்கு முறைகள் கூறப்படுகின்றன. இச்சுவடிக் கட்டில் இந்நூலையும் சேர்த்து ஐந்து நூல்கள் உள்ளன. முதல் இரண்டு ஏடுகளில், ''வர்ம கண்டி - 50, வர்ம சூத்திரம் - *89*, வர்ம சூத்திர நிகண்டகராதி - *166*, வர்ம சூடாமணி - 50, வர்ம சாரி விரசாடை சூத்திரம், வர்ம வில்லு விசை சூத்திரம், வர்ம பீரங்கி நூல், துறவுகோல், இதில் இருப்புள்ள சுவடி வர்மகண்டி-50, வர்ம சூத்திரம், வர்ம நிகண்டகராதி, சூடாமணி'' என்ற குறிப்பு உள்ளது. எனவே எட்டு நூல்களின் பெயர்கள் தரப்பட்டு, இக்கட்டில் 4 நூல்களே உள்ளன என்பதை இக்குறிப்பு உணர்த்துகின்றது.

ஆயின் கட்டில் வர்ம பீரங்கியையும் சேர்த்து ஐந்து நூல்கள் உள்ளன. 'வர்ம கண்டி' என்ற நூலின் இறுதியில் அகத்தியர் திருவாய் மலர்ந்தருளிய என்றிருப்பதும், நூலின் இடையி டையே அகத்தியர் கூறியது என்பன போன்ற செய்திகள் இருப்பதும் இந்நூல்களின் ஆசிரியர் **அகத்தியர்** எனக் காட்டுகிறது. நூலாசிரியரின் குருவாகப் போகர் இருக்கலாம் என்பன போன்ற செய் திகளும் உள்ளன. எப்படியிருப்பினும் இவ்வேழு வர்மானிய நூல்களையும் ஒரே ஆசிரியர் இயற்றியிருத்தல் வேண்டும். இந்நூல்கள் சென்னை, கீழ்த்திசைச் சுவடி நூலகத்திலும் உள்ளன. இருப்பினும் இவற்றிற்கிடையே நூற்செய்தியில், பாடல் எண்ணிக்கையில் பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. நூற்பெயர் எழுதப்பட்ட ஏடுகள் இரண்டும், இடையிலுள்ள வெற்றேடு ஒன்றும் உட்பட மொத்தம் 93 ஏடுகள் உள்ளன. இவை வெவ்வேறு அளவுடையன. இந்நூலும் தவிர்த்த பிற நான்கும் தனித்தனியே அட்டவணைப் படுத்தப் பட்டுள்ளன.

## 254. வர்ம சூத்திரம் 89

**அ. 529:854**; **ஆ**. *1-17* ஏடுகள்; **இ**. *30 x 3.5* செ.மீ.; **ஈ**. *7-8* வரிகள்; **உ**. நன்று; **ஊ**. மிகக் கடினம்; **எ**. குறை; **ஏ**. இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் இந்நிறுவனத்தின் வழி வெளியாகியுள்ளது.

### முற்குறிப்பு

எண்சாண் சரீரத்தில் தொடுவர்மம் தொண்ணூற்றாறும், படு வர்மம் பன்னிரண்டும், மயங்கும் வர்மம் எட்டும், மெய் தீண்டாக் காலமொன்றும் இதனிலிரு தோசம் வருத்தியால் கங்கைக் கரையில் காராம் பசுவைக் குத்திக் கொன்ற தோசம் கையேற்றுக் கொள்வேனாகவும் யீவக வர்மமானி ஏடு ஆராகிலுந் திருடிக் கொண்டு போகில் துன்பத்தின் கரையில் வருந்தாமல் பெருமாள் ஆசான் வம்மிச சாரநருக்கு யீவகஏடு சேர்க்கவும் வேண்டும்.

### தொடக்கம்

ஆதியென்ற மூலவட்டம் கணபதியே காப்பு
அகன்றபரி பூரணத்தின் அறிவி னாலே

சோதியருள் நின்றிலங்கும் பிராணா தீபா
சூட்சுமமதை யாவருக்கும் துலங்க வேண்டி (1)

முடிவு

ஏதுனக்கு மானிடரே இந்த மூலி
எவ்வுலகுங் கொழிஞ்சிபோல் எங்கு முண்டு
காதுனக்குத் தெரிவதற்குக் கருத்தைக் கேளு
கனத்ததொரு கல்லேத்தத் தெரித்துப் போகும்
அதுவுனக்கு வேர்பிடுங்கும் முறையைக் கேளு
அடவான மூலியுட மூட்டில் சென்று
ஓதுனக்கு அனுமானே வாவாவென்று ஓம்ஜல்ஜல் என்று
உத்தமனே ஒருநூறு ஓதி அந்தவேர் பிடுங்கி வாங்கே (89)

குறிப்புரை

**1-89 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** இந்நூலினைப் பெறத் தகுதியுள்ளவர் யாவர், தகுதியற்றவர் யாவர் என்ற வரையறையும், படுவர்மங்கள் 12, தொடுவர்மங்கள் 98, மெய் தீண்டாக் காலம், வெற்றி என்ற பச்சிலை ஆகியனவும், தான் கூறிய செய்திகள் உண்மையானவை என்பதுவும், உரை நடையிலும் பாடல் நடையிலும், வர்ம நோய்களைப் போக்கும் சூரணம், கசாயம், தைலம், நெய் எண்ணெய் ஆகியனவும், வர்மங்கள் அமைந்துள்ள இடங்களைக் குறிப்பிட்டு அவற்றில் அடிபட்டால் ஏற்படும் அபாயங் களும், இளக்குமுறை செய்து பாதுகாக்க வேண்டிய குறிப்பிட்ட நேரங்களும் கூறப்பெறுகின்றன. அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்திலுள்ள 'வர்ம சூத்திரம்' என்ற சுவடி நூல் நிறுவன வெளியீடாக (1984) வெளி வந்துள்ளது. அச்சுநூலில் 101 பாடல்கள் உள்ளன. இரண்டிற்குமிடையே மிகுதியான பாட வேறுபாடுகள் உள்ளன. அச்சுநூலில் 89 ஆம் பாடல் குறையாக இருக்க, இச்சுவடியில் அப்பாடல் முழுமையாக உள்ளது.

## 255. வர்ம பீரங்கி சூத்திரம் 50

**அ.** 529:855; **ஆ.** 2-12 ஏடுகள்; 7 ஆவது ஏடு இல்லை; **இ.** 27 × 3.5.செ.மீ; **ஈ.** 7-8 வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** மிகக் கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

## தொடக்கம்

எரிதனிலே விழாமல் குருவைப் போற்றி
இணங்குமொழி பிசகாம லிசைந்தி ருந்தான்
சரிசரிஎன் றுலகோரும் உன்னை யெய்வார்
சாத்திரத்தை மெய்யென்று நம்பு வார்கள்
அரிதான நூலுண்டு துறவு கோல்தான்
அடங்கல்முறை பதினாறி லடக்கி வைத்தேன்
நரிபோல் தலைகைமே லலையாமல் தான
நல்மனசாய் குருவோடே நாமம் நில்லே (5)

## முடிவு

நில்லென்றேன் வழிதப்பி நடந்தா யானால்
நிலமாண்டும் வாய்க்காது நிசமாய்ச் சொன்னேன்
சொல்லொன்றுந் தப்பாது சூகவஞ் சொன்னேன்
துணிகரமாய் வினையொன்றுஞ் செய்ய வேண்டாம்
வல்லமைகள் மதிகெட்டு செய்யா தேநீ
வாய்க்காட்டால் யிந்தநூல் வாய்க்குஞ் சொன்னேன்
துல்லியமாய் மருந்துவகை முடித்து வைத்தேன்
சூத்திரந்தான் ஐம்பதுக்குள் சுருக்கி னேனே (50)

## குறிப்புரை

**5-50 பாடல்கள்.** இடையில் சில பாடல்கள் இல்லை. கடவுள் பற்று, குருபக்தி, நூல் எத்தன்மையருக்கு வாய்க்கும், இந்நூலினைப் பெற இருக்க வேண்டிய தகுதி, வர்மங்கள் அமைந்துள்ள இடம், அடிபட்டால் ஏற்படும் அபாயங்கள், வர்மத்தில் அடிபட்டவர்களை இளக்குமுறை செய்து பாதுகாத்தல், வர்ம நோய்களைப் போக்கும் மருந்து வகைகள் முதலானவை சுட்டப் பெறுகின்றன. குறுந்தோட்டு எண்ணை, கோழித் தைலம், குஞ்சாதி கழாயம், குக்குடக் கழாயம், மிளகு வேர்க் கழாயம், முறிவுக்கு ஒத்தல், ஆலம்பாலெண்ணை, வசவுக்கு முக்கூட்டெண்ணை, அசாத்திய குணம், முக்கூட்டு வசவெண்ணை, அசையாத முடங்களுக்குச் சித்திர நெய், வர்மத்துக்கு எண்ணை முதலான தலைப்புகள் உள்ளன.

## 256. வர்ம வைத்தியம்

**அ.** தாள். 3:27; **ஆ.** *147-159* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

தொடக்கம்

சீரான திலதமென்ற கால மெங்கே
    சிறப்புடனே நட்சத்திரக் கால மெங்கே
பேரான செவிக்குத்திக் கால மெங்கே
    பிடரியென்ற காலமெங்கே பேணிச் சொல்வீர்
கூரான நித்திரையின் கால மெங்கே
    கூர்மையுடன் திவளையென்ற கால மெங்கே
வாரான நேர்காலம் அடப்பக் காலம்
    வகையுடன் அத்திச்சுருக்க வர்ம மெங்கே (16)

முடிவு

பித்தத்தில் வர்மங் கொண்டால் பிசகில்லை காரியம் ஒன்றும்
மத்தி யில்சுழி முனையில் பக்கத்தில் ரண்டு கண்டால்
பத்திரமாய் நெஞ்சில் தட்டுப் பச்சவெள்ளம் முகத்தில் சிந்தே
உத்த சிலேற் பனமே யானா உடன்பட்டுச் செய்யாதே யப்பா

வாதவர்மம், பித்தவர்மம், சிலேற்பன வர்மம் முற்றிற்று

குறிப்புரை

முதலிரண்டு பாடல்கள் எண்ணின்றிக் காணப்படுகின்றன. முதல் பாட்டிற்குமேல் 'பன்னிரண்டு ஈட்டின் விவரம்' எனும் தலைப்பு காணப்படுகின்றது. இதனையடுத்து ஓர் ஏடு இல்லையென்ற குறிப்பும் தாள்சுவடியில் உள்ளது. இதனைத் தொடர்ந்து நரம்புகளின் எண்ணிக்கை, வாத, பித்த, சிலேற்பன வர்மங்களின் எண்ணிக்கை முதலியன உரைநடையில் இடம் பெறுகின்றன பின்னர் ஒன்று முதல் *16* பாடல்களில் வாத, பித்த, சிலேத்தும வர்மங்களைட பற்றியும், அவற்றின் காலம் பற்றியும் கூறப்பெறுகின்றன. இப்பாடல்களில் சீர்கள் ஆங்காங்கே குறைந்து காணப் பெறுகின்றன.

## 257. வாகட நூல் திரட்டு

**அ. 563:913; ஆ.** *1-9* ஏடுகள்; **இ.** *35 × 30* செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; சில துளைகள்; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது. இச்சுவடியிலுள்ள சில பாடல்கள் இதுவரைஅச்சானதாகத் தெரியவில்லை.

### தொடக்கம்

என்னைமுன் னமைத்த வாறும் எழிலுடன் வழங்கா வாறும்
தன்னையா னறியா நெஞ்சில் தயக்கமு மயக்க மாகி
பண்ணுறேன் பலப லந்தம் பாக்கியம் பாரா வண்ணம்
எண்ணுறேன் இயலு மோதான் எனக்கு உதவி செய்வாய்

### முடிவு

என்றே சொன்னோம் ரேபதியில் எழுந்து வந்த சுரந்தானும்
குன்றே யனைய தனத்தாளே குளிர்ந்து விடுதினிக் கேளாய்
நன்றே கும்ப முனிதானும் நாலஞ்சில் மூன்றில் விடுமென்று
மன்றி லுள்ள மனிதருக்கு வாகட சுரநூல் வகித்தாரே (27)

அகஸ்தியர் நாயகனார் அருளிச் செய்த நஷ்சத்திரத்தில் வருஞ்சுரத்தின் குறி எழுதி முகிஞ்சுது முஸ்தும்.

### குறிப்புரை

**முதல் 55 பாடல்கள்** 'வாகட நூல்' என்ற தலைப்பிலும், அடுத்து 27 பாடல்கள் 'நஷ்சத்திரத்தில் வந்த சுரத்தின் குறி' என்ற தலைப்பிலும் ஆக 82 பாடல்கள் உள்ளன. தடக்குறி குணங்கள், நாடியை வைத்து நோயறிதல், நாடி நடையால் ஏற்படக் கூடிய தோடம், வாத, பித்த, சிலேத்தும சுரம், சன்னி, விக்கல் முதலான நோய்கள், அக்கினி குமாரன், சிந்தாமணி சித்திர மூலக்கசாயம் முதலான மருந்துகள், சுரகுணம், விசத்துக்கு, கலிக்கம் காய்ச்சல், காதிரைச்சல், மாந்தம், சோகை, பாண்டு, காமாலை, குன்மம் முதலான செய்திகள் 'வாகடநூல்' என்ற தலைப்பிலும், 27 நட்சத்திர நாட்களில் சுரம் ஏற்படின் அது தீருமா, தீருமாயின் எத்தனை நாளில், தீராதாயின் எவ்வளவு நாளில் இறப்பு என்ற செய்தி அடுத்த தலைப்பிலும் கூறப்படுகின்றன.

## 258. வாதத்திரட்டு

**அ. 334:565; ஆ.** 82-90 ஏடுகள்; **இ.** 37 ×2.5 செ.மீ.; **ஈ.** 5 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

வாதந்தான் எண்ப தாகும் வருகின்ற பக்க வாதம்
சீதமே நடுக்கு வாதம் சிறந்திடும் முடுக்கு வாதம்
சூதமே அசந்த வாதம் தோன்றிய முகத்தில் வாதம்
பேத மாம்வா தத்திற் பெருத்திடும் மருந்து கேளே (1)

முடிவு

போமிது பொன்னாங் கண்ணி புகழ்சிறு கீரை முத்தம்
ஓமிது நிம்பம் உயரு செண்ப கப்பூ லவுங்கம்
ஆமிது மதுர மேலம் வளருஞ்செங் கழுநீர் கோஷ்டம்
யாமிது சொன்னோம் எண்ணை நற்பதஞ் செய்து முழுக்கே (47)

வாதம் 80க்கு வகை 48. ஆதிமுனி உரைத்த வாதத்திரட்டு. குருகடாட்சம்.

குறிப்புரை

**1-47 பாடல்கள்.** அகத்தியர்க்கு ஆதிமுனி என்ற பெயரும் உண்டு. எனவே இதன் ஆசிரியர் அகத்தியர் எனக் கொள்ளவும் இடமுண்டு. வாதத்தின் பெயர்களும் வகைகளும், 48 வகை வாத நோய்களின் குறிகுணங்களும், அந்நோய் களுக்குரிய மருந்துகளும், அவற்றின் செய்முறைகளும் கூறப்பெறுகின்றன. வாத எண்ணை, சூரணம், சூலைப்புண், குஷ்டரோகம், தயிலம், வாய்வு மூலம், செங்கரப்பான், காசம், இருமல் முதலான பொருண்மைகள் உள்ளன.

## 259. வாத லட்சணக்குறிப்பு

**அ. 257:476; ஆ.** 2-6 ஏடுகள்; **இ.** 23 × 3 செ.மீ.; **ஈ.** 4-5 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

உள்ளடி கனத்தல் பிறவடி தடுத்தல்
விரல்தலை நிமிர்த்தல் சுதிநிகம் ஏத்துதல்
பாடுதிரு கலபதம் போர்க்கால் போல
கண்டை ஏறுதல் கிளரஉடல் தெரித்தல்
நரம்பு புடைத்தல் நாடியுனை
தலயேறுதல் இறங்குதல் ரேகங் கெடுதல்
முழங்கால் வீங்குதல் முதுகு விருத்தல்
துடைகனத் திருத்தல் துடைமயிர் சிலுத்தல்
அண்டமுள் வாத்தல் ஆசனங் கருத்தல்

முடிவு வாதசுரலட்சணம் நாடி

காலுச்சி அளவாக நின்றுநின் றேங்கியே
கறப்பிடித்து நிறக்கு முடல்தான்
மேலுச் சுவாசமுங் காசமுண் டாகியே
மெய்யுங் கருத்து மேவியத்
தோவிச் சிறந்த திகழ்வாத மொடுபித்த
முக்கூறுடன் சேத்தும மதுவும்
வாவிச் சிறந்ததொரு கூறுவன் தீக்கிரமுன்
வாதச் சுரத்தின் வகையே

குறிப்புரை

பாடல்களுக்கு எண்கள் இல்லை. பித்த லட்சணம், சிலேத்துமக் குறிப்பு, குன்மத்துக்குக் குணங்கள், வாதசுரத்துக்கு முதலான தலைப்புகளில் நோயும் நோயின் அறிகுறியும், மருந்தும் கூறப்பட்டுள்ளன.

## 260. வாத வைத்தியம்-காலம்

**அ. தாள். 3:28; ஆ.** *159-177* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

தொடக்கம் காலம் 1

முதலாங் காலம் திலர்த காலம். நெற்றி நேர்மையில் திலர்தகாலம் கொண்டால் அதின் குணம் கண்ணு ரண்டும் சிவக்கும். அறிவழிக்கும். நாழிகை 32-க்குள் இளக்கவும்.

மறுபுறம் நேருக்கும், நேர்விரலுக்கும் மேல் தட்டி இளக்கிக் காரியில் அமர்த்திக் கொள்ளவும்.

முடிவு

கால்பெரு விரல் அகத்துக்கு உயர் தொடுவர்மம் கொண்டால், கால் சுருக்கிப் பிடிக்கும். தடவி இழுத்து விடில் தீரும். கால் சிறு விரல், ,பெருவிரல், அடுத்த, நடுத்த, நடுவிரலில் பிசினி வர்மம் கொண்டால் நடக்க வொட்டாது. தடவினால் தீரும். கால் சிறுவிரல் பிசினி வர்மம் கொண்டால், கால் வீங்கும். நடக்க வொட்டாது. எண்ணெய் போட்டுத் தடவினால் தீரும்.

குறிப்புரை

**உரைநடை.** திலத காலம், நட்சத்திர காலம், கொம்பேறி மூக்கன் காலம், உறக்கக் காலம், உச்சிக் காலம், மூத்திரக் காலம் அத்திச் சுருக்கிக் காலம், குவளைக் காலம் முதலான 41 காலங்களும் அக்காலங்களில் தோன்றும் வர்மங்களின் குறிகுணம், நோய் தீர அளிக்கும், மருத்துவ முறை, தொடு வர்மத்தின் விபரம் முதலியனவும், வர்ம காலங்கள், அவற்றில் தோன்றும் குறிகுணங்கள், பரிகார முறைகள் ஆகியனவும் இடம் பெறுகின்றன.

## 261. வால்மீகர் பூதநாடி சூத்திரம்

**அ. 312:538; ஆ.** *56-58* ஏடுகள்; **இ.** *31×2* செ.மீ.; **ஈ. 4-5** வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

அய்விரல் அய்ந்து நாடி அதுசெய்யும் வகையைக் கேளீர்
மெய்விர லொன்று வாதம் மூன்றினில் ஒன்று பித்தம்
செய்நடு விரலே சிலேத்துமம் செருவிரல் பூத நாடி
மய்விர லஞ்சே கூட்டி வகுத்த வால்மீகர் தானே (1)

முடிவு

நிறைந்திடும் பூத நாடி நெருப்பது போலவே சுட்டால்
நிறைந்திடும் பில்லி யாகுஞ் செய்திடும் பாகைக் கேளீர்

குறைந்திடற் குரங்கு நாயும் கூட்டமும் பயமுங் காயும்
எரிந்திடா மயக்கங் காணா செப்புவால்மீ கர்உரைத்த
வாறே (16)

குறிப்புரை

**1-16 அறுசீர் விருத்தப்பாக்கள்.** பூத்நாடி நடக்கும் குறிகளிலிருந்து அதன் பலன் கூறப்படுகிறது. பூனை நடை, காக்கை நடை, வெள்ளெலி நடை, முள்ளை போன்ற நடை, ஒளிந்த நடை, பாம்பு போல் நெளிந்த நடை, சங்கு போல் ஊர்ந்து செல்லுதல், நண்டு போல் செல்லுதல் முதலானவை நாடியின் நடை பேதங்களாம். வால்மீகர் ஞானநாடி சாத்திரம் (இரண்டாம் பாகம்), வால்மீகர் ஞானநாடி சாத்திரம் 11 என்ற அச்சு நூல்கள் உள்ளன. வால்மீக சுவாமியார் நாடி நிதானம் (சு.207.B), வால்மீகர் 80 (சு.195), வால்மீகர் நாடி (சு.193), வால்மீகர் சூத்திரம் முதலான சுவடிகள் உள்ளன.

## 262. வாலை வாகடம்

**அ.** 509:778; **ஆ.** 71-72 ஏடுகள்; **இ.** 40 × 3 செ.மீ.; **ஈ.** 6,7 வரிகள். **உ.** நன்று; **ஊ.** சுமார். **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

நாவி திப்பிலி வெங்காரம் நல்ல காசிடை மூவஞ்சு
மேவிய சாதி லிங்கம் வீசு காசிடையே பத்து
தூவிய பழத்தின் சாற்றில் சுகமுட னரைத்துக் கொண்டு
காவிய பலக னானே கடலை நிறைஉண்டை செய்யே (1)

குருவெனவே யிக்குளிகைச் சரமும் வேர்ப்பு
குளிந்திடுமே குலையெரிவு தோஷந் தீரும்
துள்ளெனவே முனியுரைத்தார் பாரின் மீதே
அமுர்தமென்றும் குளிகையென்றும் மறிந்தி டாயே

முற்றும், சம்பூரணம்

குறிப்புரை

**1-9 பாடல்கள்.** பின் எண்ணின்றி 2 பாடல்கள். வால சஞ்சீவி மாத்திரை, அமுர்தக்குளிகை, கன்ம தோஷத்துக்குக் கிஷாயம்

முதலான மருந்துகளால் குலையெரிவு, தோஷம், எட்டுவகை மாந்தம், நீர்ப்பாடு, வறட்சி முதலான நோய்கள் தீருமெனக் கூறப்பெறுகின்றது.

## 263. வாலை வாகடம்

**அ.** 556:902; **ஆ.** *145-157* ஏடுகள்; **இ.** 36.5 × 4. செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவல்லை.

### தொடக்கம்

வேக மாம்நதி சேரும் வினைகளும்
தாக போகம் விடாத தளர்ச்சியும்
சோகை வாரி யினால்வரும் துன்பமும்
போக யானை முகத்தனைப் போத்துவாம் (1)

வாலக் கிரக கருணைகவியும் மருந்து மந்திரம் எந்திரமும்
காலக் கழிப்பும் நீர்ச்சொரிவும் கட்டுஞ் சீலை வேருடனே
கோலக் குலையு மெண்ணையுடன் குணத்தின் படியே கொள்வதற்கு
சீலத் தலைவர் வியகனார் சிஞ்சித்தார் சஞ்சி யென்றே (2)

### முடிவு

தூவி எண்ணை காசிடைதான் சுகமாய் ரெண்டு நேரமுமே
மேவிக் குழவிக் கிடும்போது மிகுந்த காச்சல் வறல்கனமும்
கூவி யோடிடு மாந்தகனங் குளிதோ சத்தில் சவலையுடன்
பாவை யோர்குயி டுங்காணும் பகர்கத் தாளையெண் ணையென்றே (104)

### குறிப்புரை

**1-104 பாடல்கள்.** மேலேயுள்ள தொடரெண் மட்டுமின்றி *66-78* என்ற வ்ரிசை எண்ணும் உள்ளது. *3* நூல்கள உள்ள கட்டில் இது 3ஆவது நூல். முதல் நூல் *1-79* பக்கங்கள். 2ஆவது நூல் *1-65* (தொடரெண் *80-144*) பக்கங்கள் விசுமில்லா கிர் ரகுமானி கிர்ரகீம் வாலை வாகடம் என்று, நூல் தலைப்புத் தரப்பட்டுள்ளது. பிற சுவடிகளில் தேவிதுணை, சிவகடாட்சம் என்று எழுதப்படுவது போன்றதே இச்

சொல்லாட்சி. குளிதோடம், குன்மரோகம், முட்டுத் தோடம், மாந்தம், செங்கிரந்தியின் குணம், நீர்மாந்தம், கணம், காமாலை, மஞ்சள்காமாலை, செங்கிரந்தி குணம்-மருந்து, கருங்கிரந்தி குணம்-மருந்து, பச்சி தோடத்துக்குக் குணம்-மருந்து, பறவை தோடக் குணம்-மருந்து, குளித்தோடத்தின் குணம்-மருந்து, தேரைக் குணம்-மருந்து, முட்டுத் தோடத்தின் குணம் மருந்து, பெண்தோடக் குணம்-மருந்து, மாந்தத்தின் குணம்-மருந்து, செரியா மாந்தத்தின் குணம்-மருந்து, தலைமாந்தத்தின் குணம்-மருந்து, பொரிமாந்தத்தின் குணம் மருந்து, சலக்கட்டு மாந்தத்தின் குணம்-மருந்து, விசமாந்தத்தின் குணம்-மருந்து, நீர்மாந்தத்தின் குணம் மருந்து, கழிமாந்தத்தின் குணம்-மருந்து, போர்மாந்தம் குணம் மருந்து, கக்குகின்ற காச்சல் குணம்-மருந்து, காக்கனத்தின் குணம்-மருந்து, மாங்கணம், கழிக்கணங் குணம்-மருந்து, வறள்கணத்தின் குணம்-மருந்து, மூலக் கணம், ஊதுமாந்தம், பயித்தியம், லேகியம், கசாயம், கத் தாழை எண்ணை முதலான செய்திகள் இடம் பெறுகின்றன. இடம் பெறுகின்றன.

## 264. விசக்கடிக்கு மருந்து

**அ.** 410:654; **ஆ.** *6-41(11)* ஏடுகள்; **இ.** 20 × 3 செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சுமாரான நிலை; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

... ரசம் பலம்-*1*, கெந்தகம் பலம்-*1*, போகருட மருந்து சேர், பாசாணம், தாளகம், வீரம், கல்லுப்பு, சாரம், சீனம், கெவுரி, மனோசிலை, வெண்காரம், அன்னபேதி, துத்தம் இது வெல்லாம் வகைக்கு பலம்-5 முன் மருந்தில் சேர்த்து எருக் கம்பால், வெண்கரு விட்டரைத்துக் குழம்பாக்கி வைத்துக் கொண்டு தாம்பிரத்தைத் தகடுதட்டி உவர்பூவில் எலுமிச் சம்பழச் சாறு விட்டுப் பொங்கு. அதில் தாம்பிரத் தகடு காச்சி அந்த உவர் பூவும் பழச்சாறும் விட்டு இருக்கிறதில் தோய்த்துக் காச்சிக் காச்சித் தோய்க்கவும். சுத்தியாம். அந்தத் தசபடிலமுறை.

முடிவு

குடிவேறியன், சன்னி, குடல் வாதம், சூலை, மிடிகரப்பன், குட்டம், விசநீர்கள் பொடிப் பொடியாய்ப் போகும். இவை கண்டால் புவி விசங்களொக்கச் சாகும் பீடமில்லை. தணிநாறு, கரந்தை, நாயுருவி, நத்தை, சூரி, தகரை, விரைக்காறு மஞ்சள் இவை கூட்டிக் கடிதாய் நீரிலரைத்துருட்ட வேறு மருந்து நினையாமல் விரும்பி நித்தம் பூசுவீறால் ஊறும் புண்ணும் மாறிப் போகும். உள்ளே தசையு மேவிடும்.

குறிப்புரை

**உரைநடை.** சர்பம் பூசைக்கு விபரம், சர்பம் சர்வ தேவ தைக்கு மேல்தோளில்,, வெள்ளை குட்டத்துக்கும் கருங் குட்டத்துக்கும் மருந்து, சர்வ பச்சணிப் படிக்கி, மேகனாதக் கிருதம், வங்கச் செந்தூர அனுபானம், விசத்துக்கும் சன்னிக் கும் தயிலம் முதலான தலைப்புகளில் மருந்து செய்முறை களும் அவற்றால் தீரும் நோய்களும் கூறப்பட்டுள்ளன.

## 265. விசக்கடி மருத்துவம்

**அ.** **374:615; ஆ.** 62 ஏடுகள்; **இ.** 35 × 2.5 செ.மீ; **ஈ. 6-7** வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

குட்டங் குரல்நெரிவு கூடாவற கரசூலை
விட்ட பழவெதும்பு வெக்கையுட - னெட்டுந்
தலைவ சாயும் பாணனேவுன் நெஞ்சில்
சிலநோவும் கொலைகுலையும் நீகருவைக் கொள்ளே (15)

மிடுக்காகும் காயத்தை மிகவுண் டாக்குஞ்
சடக்கெனவே உண்டிதனைத் தள்ளி விக்கும்
கடுக்காய்க்கு வாதபித்த சேத்துமமறும் வன்னியெழும்
வாலிபமாம் சந்திசிறு காலையிலே தானே (16)

முடிவு பாம்பு அழைப்பிக்க மந்திரம்

சின்னு சின்னுக்களோடு தார் தாரோர்க்கு சின்னு சின்னுக் களோடு நம்மொக்கு நம்மொக்கு சின்னு சின்னுக்களோடு

சிரமறிவதற்கு அருட்சேவிக்கவும். மனைவிட்டும்; பாம்பு சுட்ட சுத்தெல்லாம் இடியும் நரி கீரி வடக்கலாய்க் கிடக்கும். பாம்பு எம்மை விட்டகலப் போவாது. துளையெட்டுக்குச் சேவிக்கவும். மேற்படி வருசம் இது இடது கையில் எழுதி அருளச் சேவிக்கவும்.

### குறிப்புரை

**உரைநடை.** பொதுமருந்துகள் சிலவும், விசக்கடி மருத்துவம் மிகுதியுமாய்க் காணப்படுகின்றன. இச்சுவடியில் ஏட்டெண்கள் ஒன்று முதல் தொடர்ந்து செல்லாமல் மீண்டும் மீண்டும் ஒன்று முதல் செய்திகள் தொடங்குகின்றன. இத்தொகுப்புச் செய்திகள் ஒன்றுக்கொன்று தொடர்புடையதாய் முழுமையாய் உள்ளன. இடைஇடையே சில ஏட்டெண்கள் விடுபட்டுள்ளன. மருந்துகளாக, எடுவாய்வு, கரப்பெருஞ் சூலைக்கு மருந்து, கியாழம், புகை, உளமாந்தைக்கு, செந்தூரம், அமிர்தச் சர்க்கரை முதலானவையும், விசக்கடி பற்றி, விரிசன் கடித்த புண்ணுக்கு மருந்து, மலை விரிசனுக்கு, நீர் விரிசனுக்கு, செவ்விரிசனுக்கு, விரிசன் பாம்புக்கு, பச்சைப் பாம்புக்கு, மண்டலி 14 க்கும், மண்டலி, மண்டலி குணம், கொரிமண்டலி, வீரமண்டலி, திமிர் மண்டலி, சகல விசத்துக்கும் சூரணம், செம்பு மோதிரம், வெள்ளி மோதிரம், பாம்புக்கு, பாம்பு பிடிக்க முதலான தலைப்புகளும் அமைகின்றன. இதில் பாம்புகளின் பிரிவுகள், நிறம், குறி, கடிவாய் விபரம், விசம் போக்க மருந்துகள் முதலானவை கூறப்பட்டுள்ளன.

## 266. விசக்கடியும் மந்திரக் குறிப்பும்

**அ. 367:607; ஆ.** *1-15* ஏடுகள்; **இ.** 14 × 3.5 செ.மீ; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** நன்று; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

மஞ்சளில் சுண்ணாம்பைப் போட்டுச் சிவக்கப் பண்ணி மறுபடியும் புளியைப் போட்டு அரைத்தால் மஞ்சள் நிறமாகும். பச்சைப் பானையைக் கொண்டுவந்து, சென்ன பழத்தைக் கொண்டுவந்து உள்ளே தேய்த்து வெயிலில்

காயவைத்து இப்படி நாலு நாளைக்குத் தேய்த்துக் காயவைத்து அந்தப் பானையில் தண்ணியை வார்த்துத் தூக்குக் கட்டிப் போட்டால் மண்ணெல்லாம் கரைஞ்சிபோய் தண்ணீர் இறங்கும்

முடிவு தேளுக்கடிக்கு மருந்து

மிளகுதுட்டை-3, வெள்ளைப்பூண்டு பல்லு-3, நல்லெண் ணெய், சீரகம், கோரைவேர் இதை அரைத்துக் கடிவாயில் தடவுறது. கௌ... பருப்பு, அவரைப் பருப்பு, முலைப்பால் இதை உரைத்துத் தடவுறது.

குறிப்புரை

**உரைநடை.** பாம்புக் கடிக்கும் தேள்கடிக்கும் மருத்துவம் சொல்லப்படுகிறது. கொன்ற பச்சைப் பாம்பினைப் புதைத்த இடத்தில் வளரும் ஆமணக்கெண்ணெய் விசமுறியாகப் பயன்படுவது பற்றியும், ஆணும் பெண்ணுமாய் இணைந்த ஓணான்களைக் கொன்று, தனித்தனியான பானையில் முறைப்படிப் போட்டு, அப்பானைகளில் பணம், துட்டு இவற்றைப் போட அவை பெருகும் என்ற மந்திரக் குறிப்புகளும் உள்ளன.

## 267. வைத்தியம் - பல மருந்துவகை

**அ.** 556:900; **ஆ.** *1-79 (71)* ஏடுகள்; **இ.** 36.5 × 4 செ.மீ; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; **21** ஆவது ஏடு பாதியாக உடைந்துள்ளது; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

வயத்துக் கடுப்புக்கு மருந்து மூலவாய்வுக்குமாகும்

கருவேலிலை பறித்து எலுமிச்சங் காயளவு அரைத்து அம்பிப் பாலிலாகுதல் எருமைத் தயிரிலாகுதல் கலந்து குடுக்க, காலமே, காலமே மூன்று நேரமாகிலும் அஞ்சு நேரமாகிலும் குடுத்து உப்புக் கூட்டவும். மிளகு, புளி, புகையிலை விட்டு விடவும்.

## முடிவு

காரீயத்தைச் சவரிக் கொத்து அரைத்துக் கவசம் பண்ணிக் கெசபுடமிடப் பற்பம். மருதாணிவேர் காய்ந்து சிறு சுற்றுக்கு ஒரு பானையில் ஓர் அடுக்கு வேரும் அதின் பேரில் கெந்தகமும் இவ்விதமாய் அடுக்கடுக்காயிட்டுச் சீலைமண் செய்து துருவாய்த் தமரிட்டுக் கலசம் வைத்துச் சீலைமண் செய்து வாடை வெளிவராமல் எருப்போட்டுத் தயிலமிறக்கிச் சாதிலிங்கத்துக்குச் சுருக்கிட்டு நாலு சாமம் எடுத்து வெள்ளியில் பதினாறுக்கு ஒன்று குடுத்து அதைத் தட்டித் தங்கம் புடமிட்டது போலப் புடமிட மாற்று.

## குறிப்புரை

**உரைநடை.** இதனையடுத்து *81-157* வரை தொடரெண் இடப்பட்ட ஏடுகள் உள்ளன. *81* ஆவது ஏட்டில் வரிசைஎண் மீண்டும் ஒன்று இரண்டு எனத் தொடங்கி, தொடர்ந்து எழுதப்பட்டுள்ளது. எனவே விடுபட்ட *80* ஆவது ஏட்டில் வேறு ஒரு நூலிலிருந்து எடுத்தெழுதப்பட்ட செய்தி தொடங்குகின்றது என்பது தெரிகிறது. **விசுமில்லா கிர் ரகுமானி கிர் ரகீம்** வைத்தியம் பல மருந்துவகை என்று சுவடியின் தொடக்கத்தில் எழுதப்பட்டுள்ளது. எனவே 'வைத்தியம் பல மருந்து வகை' என்ற சுவடியிலுள்ள தலைப்பு நூலுக்குத் தரப்பட்டுள்ளது. நூல் தலைப்புடன் சேர்த்து எழுதப்பட்டுள்ள ''விசுமில்லா கிர் ரகுமானி கிர் ரகீம்'' என்பதன் திருந்திய வடிவம் ''பிசுமில்லா நிர் ரகிமான் நிர் ரகீம்'' என்ப தாகும். அளவற்ற அருளாளரும், நிகரற்ற அன்பாளருமாகிய அல்லாவின் பெயரால் நூலைத் தொடங்குகின்றேன் என்பதே இத்தொடரின் பொருள். பொதுவாக இஸ்லாம் இலக்கியச் சுவடிகளிலும், இஸ்லாமியர் படியெடுத்த சுவடிகளிலும் இச்சொல்லாட்சி பயன்படுத்தப்படுகிறது. பிற சுவடிகளில் ராமஜெயம், குரு வாழ்க, குருவே துணை என்று எழுதப்படுவது போன்றதே இது. உள்மூலம், சகல மூலத்துக்கும், சகல விப்புருதிக்கும் மருந்து, ரசபாஷாணம் மீறினால் மாத்து, மூக்கால் ரெத்தம் விழுந்தால், சன்னி, ஆனந்த வயிரவன், நேத்திர வாய்வு, வெள்ளெழுத்து, புழுவெட்டுக்கு, சரீர வெட்டைக்கு, மூலக் கடுப்பு கண்டதுக்கும், கழிச்சலுக்கும், சூனியக் குணமறியும்

படி, சன்னி 13-க்கும் வாதம் 80-க்கும் மருந்து, மாந்தம், சுவாசம், தாகத்துக்கு, கால், கை முடங்கின பேருக்கு, பிள்ளைகள் கணத்துக்கு, கரப்பானுக்கு, கெர்ப்ப விப்புரு திக்கு, மஞ்சள் வாடை, தாளகச்செந்தூரம், வச்சிரச் செந்தூரம், நாகங் கட்டுப் பற்பம், குடல் வாதம், பக்க சூலைக்கு, ரெத்த பிரமியத்துக்கு, பசியெடுக்க, தீவனம் வாங்க, வெள்ளி பற்பம், நாகபற்பம், துருசு பற்பம், நாகச் செந்தூரம், கஸ்தூரி எண்ணை பண்ணுகிற வயனம், பித்து கொண்டு நினவறியாமலிருந்தால் நாவிகுளிகை, ரசபற்பம், துருசுபற்பம், கோசம் பெருக்க மருந்து, செய்யான் கடிக்கு, மண்டை வியாதிக்கு, வெட்டைக்கு நெய், காணாக்கடிக்கு ரசபற்பம், சோகைக்கு, பயித்திய குன்மம், சத்தி குன்மத்துக்கு, வாதசுரம், சீதசுரத்துக்குக் கஷாயம், பருவுக்கு எண்ணை, சுரத்துக்கு, சன்னிக்கு ஆனந்த வயிரவன், புல்லுருவி செய்யும் வயனம், பச்சை உடம்பில் வயிறு கழிந்தால் இந்திராணி, வெட்டைக்கு நெய், கிரந்திக்கு மருந்து, மேகவெட்டை, மேல் ஊறலுக்குச் செய்யும் மருந்து, வாதசுரத்துக்குக் கிசாயம், ஒருபுறம் வலிக்கும், இருபுறம் வலிக்கும் வாயுவுக்கு, மூலம், வயிற்றுக் கடுப்புக்கும், அதிசாரத்துக்கும் காரங் கூட்டுறது, உள் வெட்டை காச்சலுக்கு, வாய்வுப் பிடிப்பு, மாந்தத்துக்கு, ஒருபல அண்ட வாயுவுக்கு, சுகந்தாதித் தயிலம், மேகத்துக்கு, அரக்கெண்ணை, பதினெட்டுக் குட்டம், பலகடி, காமாலை, மண்டைக் கரப்பன், ஆறாத புண்ணுக்கு, விசபாகத்துக்கு, சுளுக்குக்கு, சூதக வாய்வுக்கு, பித்த பாண்டுக்கு, பீனிசத்துக்கு, ரசமுறிக்க, காமாலை, சோகைக்கு, பித்தஞ் சிரசில் கட்டிக் கொண்டு மயக்கம், சிலேட்டுமமிருந்தால் மருந்து, கெண்டைக்கு, மூலக்கடுப்புக்கு, மேகவெட் டைக்கு, உஷ்ட்டண வாயுவுக்கு, உஷ்ட்டண வெட்டைக்கு, உடம்பு வெட்டை எரிவுக்கு, விரைவா தத்துக்கு, கபால சூலைக்கு, ஆக்கிரானத்துக்கு, தாகசுரத் துக்கு, சன்னிவாத சுரத்துக்கு, நடுக்கற சுரத்துக்கு, சத்திவிக்கலுக்கு, சகலசுரத்துக்கும் கலிக்கம், சடுதியில் ரசபற்பம், வெட்டைக் கும், வெள்ளை கண்டாலும் பசுவின் நெய், வறட்சிக்கு, பீனிசத்துக்கு, கெவுரி பாசாண பற்பம், குட்டம் 18-க்கும், பவுத்திரத்துக்கு, பிளவைக்கு, பிரமியத்துக்கு, குளிர் காச்சல்,

பழங்காச்சலுக்கு, பல்லும் சவுக்க, செய்யான் கடிக்கு, முளைமூலத்துக்கு, வலஞ்சலம் அடைத்தால், நாய் ஈ புகுந்தால், சலக்கழிச்சலுக்கு, வயத்துக் கழிச்சல் அடைபட, அந்திர வாயுவுக்கு, உதடு வெடிப்புக்கு மருந்து, சகல தோசத்துக்கும், சருவாங்க வாதத்துக்கும், தம்பனம், பிரமியத்துக்கு, செகுட்டுக் காதுவலிக்கு மருந்து, ரெத்த பிரமி யத்துக்கு, எலிக்கடி இரைப்பு, மேல்மூச்சுக்கு எண்ணை, சர்வ பயித்தியத்துக்கு, வெறிகொண்ட பயித்தியத்துக்கு, தீராத வயத்துக்கடுப்பு வலிக்கு, பிரமியங் கல்லடைப்பு, துன்மாங்கிசத்துக்கு, சீப்பிரமேகத்துக்கு, ஏழுவகை மூலத்துக்கு, சத்தி குர்மத்திற்கு, வண்டுக்கடிக்கு, வாயுவுக்கு, சூதக வாய்வுக்கு, வாயால் எடுக்கறதுக்கு, சத்தி குன்மத்துக்கு, கெந்தகதாளிக்கு, சுண்டி எண்ணை, மரிச்சம் மன்னை விழ, பிள்ளை பெற மாட்டாதாருக்கு, வண்டுகடி சகலத்துக்கும், வண்டுகடிக்கு, பேய்நாய்க்கடிக்கு, ரெத்த பிரமியத்துக்கு, செகுட்டுக் காதுக்கு, உஷ்ட்டின வாயுவுக்குக் காரீயச் செந்தூரம், குளிகை, வண்டுகடிக்கு, சகலவிசம், கண்படலம், சகலத்துக்கும், மூலத்துக்கு மருந்து, சகல மூலத்துக்கும் பலவாயுவுக்குஞ் சூரணம், சத்திகுர்மம், வலிகுர்மம், அஷ்ட்ட குர்மம், கண்ணோய், 18 குர்மத்துக்கும், ஏகமூலிகை மருந்து, வறட்சி வெட்டைக்கு லேகியம், தாம்பிராதிக் குளிகை, அரிதாரச் சுத்தி உண்டை, வயத்துக்கடுப்பு, கழிச்சலுக்கு, பிள்ளைகள் சுரத்துக்கு, காமாலைக்கு, வயறு மெத்த கழியுறதுக்கு, மூலக்கிராணிக்குச் சூரணம், தூமை இல்லாத பேருக்குத் தூமையும் பிள்ளையுமுண்டாக, கெர்ப்பந் தரிக்க, தேள்கடிக்கு, சுரத்துக்கும் மாறலுக்கும் துரிசுக் குளிகை, காமாலை, விசபாகம், பாண்டு மகோதரத்துக்கு, ஆணிப்புத்துக்கு, காதில் ஈ சாக, புண்ணுக்கு மருந்து, முசல் வலிப்புக்கும், குமர கண்ட னுக்கும், பாம்புக்கும், தேளுக்கும், கல்லு விற்புருதிக்கும், வாயுவுக்கும் சூரணம், நஞ்சு மாத்து வெதுப்புக்கு, சுரம் உழலைக்கும் ஈயக்கட்டு, சூனியத்துக்கு, கிராணிக்கு, இரு மலுக்கு, எலிகடிக்கி, செய்யான் கடிக்கு, பிள்ளை பெற மாட்டாதவளுக்காக, உதிரக் கட்டுக்கும், இருமலுக்கும் சூரணம், உள்மாந்தைக்கு, இருமலுக்கு, பேய்நாய்க் கடிக்கு, காச்சலுக்கு, காது இரைச்சலுக்கு, வெறிபித்தத்துக்கு,

எலிக்கடி முப்பத்திரெண்டுக்கு எண்ணை, சூதக வாய்வின் குணம், திசைமூலக் கிசாயம், சூதக வாயுவுக்கு, பேய்நாய்க் கடிக்கு, நாய்க் கடிக்கு, பித்தம், உள்ளங்கால், வயறு எரிவுக்கு, மஞ்சள் நோவுக்கு, வெள்ளெழுத்துக்கு, நரைமாற, பயித் தியத்துக்கு எண்ணை, அண்ட வாதத்துக்கு, ஒரு தலைவலிக்கு, கீரிப்புழு விழ, அண்டவாதத்துக்கு, நட்டுவாக்காலிக்கு, செய்யான் கடிக்கு, கால்புத்துக்கு, விஷத் துக்கு, வாதத்துக்கு ஈயக்கட்டு, ரசமுறிக்க, சகலவாயுவுக்கும், குழந்தை வியாதிகளுக்கு, பிள்ளை பிறந்த உடனே வலிப்புக்கு, பிள்ளைகளுக்கு ரத்தம் விழுந்து, வயிற்றுக் கடுப்புக்கு, கணத்துக்கு, மாந்த வலிப்புக்கு, பிள்ளைகளுக்குச் சுண்டி எண்ணை, சூதகவாயுவுக்கு, பலநஞ்சுக்கு, விசத்துக்கு, எழுவியாதிக்கு, எண்ணையும், மாத்திரையும், சூத உதிரக் கட்டுக்கு, வயிற்றுக் கடுப்பு, ரத்தஞ் சீதம் விழுந்தால், முலை எழ, கர்ப்பந் தரிக்க, ஆணிப்பூவுக்கு, சுரத்துக்குக் கெந்தக பற்பம், லிங்கக் கட்டு, பகளபற்பம், திரிபலாதி லேகியம், சிந்தாமணி குளிகை, விஷபாகத்துக்கு, பயித்திய காமா லைக்கு, ரச்சாதி சூரணம், குமரி பற்பம், உள்ளு ரோகத்துக்கு நெய், தம்பனைக்கு மாத்திரை, விசக்கடியால் வந்த நீர்த்தடிப்பு, பட்டை அசுப கெந்தாதி சூரணம், பகள, காரீய, காந்த, தாம்புர, தாளக, குரு பற்பங்கள், வல்லாதி இடிமருந்து, பொண்டம் துருசிக்குரு, துருசு முப்புச் சுண்ணம் நீர் அடைப்புக்கு முதலான தலைப்புகள் உள்ளன. ஒரே நோய்க்கு ஒன்றிற்கு மேற்பட்ட மருந்துகள் வெவ்வேறி டங்களில் சொல்லப்படுகின்றன. ஒரு மருந்தால் தீரும் ஒன்றிரண்டு நோய்கள் மட்டுமே தலைப்பில் கூறப்பட் டிருப்பினும் நூலின் உள்ளே அதே மருந்தால் தீரும் வேறு பல நோய்களின் பெயர்களும் சுட்டப் பெற்றுள்ளன. ஒருசில மருத்துவக் குறிப்புகள் முடியுமிடங்களில் '**நிசா அல்லா**' என்ற சொல்லாட்சி கையாளப் பெற்றிருக்கிறது. 2 ஏடுகளில் ஒருபக்கம் மட்டுமே எழுதப்பட்டுள்ளது.

## 268. வைத்திய சூத்திரம் 300

**அ.** 413:657; **ஆ.** *1-75* ஏடுகள்; **இ.** 23.5 × 4 செ.மீ; **ஈ.** *10-11* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

பூரணமா மும்மூலம் பொறியிற் சூடாய்ப்
புகையெழும்பி மேகமதாய்ச் சிரசிற் சூடாங்
காரணமாய் நீரேற்கும் பீனசப்பேர் கொள்ளுங்
கனலெழுந்த வாயுவதாங் கபால மெல்லாஞ்
சீரணமாய்ப் போகாது வாத பித்தஞ்
சேர்ப்பனந்தான் மூன்றாலே நோய்க ளெல்லாந்
தாரணையாய்த் திசைவாய்வில் மூன்று வாய்வு
சமானனொடு பிராண னபானன் றானே (1)

முடிவு

சித்தியுண்டாம் மவுனத்தில் செல்லு வோர்க்குத்
தெளிவான மனதுருமை யறிவி னோடு
பத்தியாய் நிலைத்தபின்பு பாவம் போச்சு
பஞ்சபொறிப் புலனாண்மை பறந்து தய்யா
புத்தியாய்ப் பிழைப்பதற்குச் சகாரத்தே செல்லு
புகழான மனவாசி வாயு வேகம்
முத்தியாய் இருவினையு மத்த தேசி
முதலான சொர்க்கபத முத்தி தானே (300)

பிற்குறிப்பு

*964* ஆம் வருசம் ஐப்பசி மாசம் *20* ஆம் நாள் குருவாரமும் அவிட்ட நட்சத்திரமும் நவமியுமாக ராமலிங்கம் பண்டிதர் மகன் சிவன் எழுதி முடித்தது (ஏடு. *74*).

குறிப்புரை

**1-300 எண்சீர் விருத்தப் பாக்கள்.** நூல் தொடங்குமுன்பு எண்ணின்றி உடைந்த ஏடு ஒன்றுள்ளது. ஏட்டு எண் ஒன்றின் இடதுபக்க ஓரத்தில் நூல்பெயர் உள்ளது. அப்பகுதி உடைந்துள்ளதால் நூல் பெயரினை அறிய முடியவில்லை. திரிலோகச் செந்தூரம், மதன விந்தாதி லேகியம், பிளவை, கண்டமாலை, பவுத்திரம், பீளியெண்ணை, சிலேற்பனம், குன்மம், சயவரலாறு, கிராணி, பாண்டு, வங்க பிலாசம், அமிர்த சஞ்சீவி, மகாவருளாதிச் சூரணம், மூலகர்ம நிவர்த்தி வகை, மூலத்துக்குக் கந்தாதி லேகியம், வங்க பவழ பற்பம்,

மகாமேக ராசாங்கத் தயிலம், மகோதரம் வரலாறு, கொம்மட்டிக்காய் குழம்பு, மதனவிந்தாதி லேகியம், தாம்பிரச் செந்தூரம், ஏலாதி தயிலம், சயராசச் செந்தூரம், துளசி தயிலம், வாதகற்பம் வரலாறு, பித்த கற்பம் வரலாறு, அப்புரகச் செந்தூரம், அனுபானம், சிலேற்பன கற்பம் வரலாறு, வலிகற்பம், குட்டகர்மம், பிளவை, கண்டமாலை, பவுத்திரம் வரலாறு, சிலேற்பன கற்பம், கெற்ப வகை, சிரசில் வரும் வியாதி, பொடுகுக்கு, செவிநோய்க்கு ஆக்கிரானப் பொடி, செவிநோய்க்கு எண்ணை, காதில் விட எண்ணை, வில்வாதித் தயிலம், மகா சந்தனாதித் தயிலம், தோர்க்க விதை முதலான தலைப்புகள் உள்ளன. 75 ஆவது ஏட்டில் 'தோரக விதைகள் கண்ணோவு, பூவுக்கு' என்ற தலைப்பு உள்ளது.

## 269. வைத்திய சூத்திரம்

**அ. 547:883; ஆ.** 1-66 ஏடுகள்; 65 ஆவது ஏடு இல்லை; **இ.** 32 × 3 செ.மீ; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; இச்சுவடி அச்சாகவில்லை.

முடிவு

பாக்கின்ற தயில மெல்லாங் குழித்தயில மாகா
மைந்தனே வாங்கிறதோர் மார்க்க மாகும்
தாங்கென்ற சாரணையின் சூர ணந்தான்
தயிலத்தில் குழப்பியே தளமாய்த் தின்னு
தீங்கென்ற வாதமெல்லாம் சிதறிப் போகும்
திசைவாய்வு மலபேதந் தீருந் தீரும்
போங்கண்டா லத்தனையுஞ் சொன்னோம்
புகலு வென்றா ... ... (ஏடு. 64.பா.201)

குறிப்புரை

**1-201 எண்சீர் விருத்தப் பாடல்கள்.** 66 ஆவது ஏட்டில் 205 ஆவது பாட்டின் இறுதி அடி 'வயத்திய முற்றே' என முடிவதால் இந்நூல் 205 பாடல்களை உடையது என்பது தெரிகின்றது. 202-205 வரை 4 பாடல்கள் இல்லை. இச்சுவடியின் முதல் ஏட்டின் இடது பக்கம் 'வைத்திய சூத்திரம்' என்ற தலைப்பு மட்டுமே உள்ளது. இந்நூலிலுள்ள 'பூரணமா யுள்மூலம் பொறியில் சூடாம்' என்ற பாடல்

அகத்தியர் வைத்திய சூத்திரம் 205 (493-751)இல் அமைந்த பாடலைப் போன்றதே. இப்பாடல் 221:431 என்ற எண்ணில், அகத்தியர் வைத்திய சூத்திரம் 205 என்ற நூலிலும், அகத்தியர் கன்மகாண்டம்-300 (487:740) என்ற நூலிலும் பாட வேறுபாடுகளுடன் காணப்படுகின்றது. முடிவுப் பாடல்களும், செய்திகளும் வேறுபடுகின்றன. 493:751 இல் உள்ள செய்திகளைப் போன்றே இந்நூல் அமைவதால் இந்நூலும் 'அகத்தியர் வைத்திய சூத்திரம்-205' என்ற பெயரையுடையதாக இருத்தல் கூடும். அயன்தகடு பற்பம், காந்தபற்பம், திராப் பற்பம், பித்தளை, வெள்ளைக் கெருடபச்சை பற்பம், சாதிலீலை, நவரத்தினப் பற்பம், துருசு எண்ணை, கற்பூர நீரு, நிமிளை பற்பம், தங்க நீரு, நத்தைச் சூரிவித்து, இஞ்சித் தயிலம், அகில் கட்டைத் தயிலம், பொன்னாங்காணிக் கிருதம், திரிபலாக் கிருதம், சன்னிக்குத் தயிலம், எருக்கம்பால் குழம்பு, மேனி சூரணம், சுரத்துக்குக் கசாயம், வேம்பின் கசாயம், மொசுமொசுக்கைக் கசாயம், குழித் தயிலம் விபரம், சிவனார் வேம்புத் தயிலம், செங்கொட்டைத் தயிலம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 270. வைத்திய வர்க்கம் - மந்திரங்கள்

**அ. 247:463; ஆ.** 26 ஏடுகள்; **இ.** 25.5 × 4 செ.மீ; **ஈ.** 4-8 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

பூமிநாத மேகமே புனல் கொளிருத பூவதரமாட
ரவிமுகத்தி லாயிருந் தயிந்தாடா சோமநாத
மீறியே சுருபம் வைத்த் சத்தியாம்
ஏமவித்தை பூரணமிறக்க அட்ட சித்தியே

முடிவு

சுண்ண மேபீங் கானிலே தோய பனியில் நீரதாம்
எண்ண மான ஆறு தலைமிந் தவகை யப்பனே
வண்ண மான நீரிலே வலுக்கு மேவெண் காரமும்
உண்மை யான சாரமு முரைக்கு மாமின் னீரிலே (23)

குறிப்புரை

**1-23 பாடல்கள்.** 24ஆவது பாடல் குறைப்பாடல். வைத்திய வர்க்கம் என்ற இந்நூலையடுத்து ஸ்ரீவசியம் சாத்தான் வித்தை, விட்டத்தைத் திருப்புகிற மந்திரம், வீரபத்திரகாளி மந்திரம், காட்டேறி காத்து, சிதம்பரச் சக்கரம், நரிவாக்கட்டு, அனுமார் சத்துரு சங்காரம், அனுமார் மந்திரம், காளி வசீகரம், ஆக்கிராசனம், ஏவல், பில்லி சூனியத்திற்கு எந்திரம், அனுமந்திரன், விக்கினேசுவரன் சாரம், சுப்பிரமணியர், வீர அனுமார் மந்திரம், பிரும்மா சக்கரம், பிள்ளையில்லாத வயிறுக்கு மருந்து, மாடன மந்திரம், பேதனத்துக்குக் கருவுதினுசு, சக்காதேவி மாரணம், சனிதிசை, நீருக்கட்டு உடைய, உஷ்ணத் துக்கு, அசீரணத்துக்கு, பித்த உஷ்ணத்துக்கு, தொடுகுறிக்கு முறிப்பு, கசாயம், மேல்பூச்சு மருந்து, மெழுகு, மாத்திரை, சூலை, பக்க சூலை, வயித்து நோவுக்கு மருந்து, பாம்பு விசம் திருப்ப, தம்பனம், விநோதம், சாபம் நிவர்த்தனை, சித்து விளையாட்டு, மோடி மாரணம் முதலான மந்திர, மருத்துவச் (சில) செய்திகள் இடம் பெற்றுள்ளன. வைத்திய வர்க்கத்தில் உப்பு, சாரம், பூநீர், சுண்ணம், வழலை, லிங்கம், சவுக்காரம், நவலோகம், தங்கம், வெடியுப்பு, நவச்சாரம் முதலான மருந்துப் பொருட்களினால் செய்யப்படும் முப்பு, லிங்கச் சுண்ணம், வழலைச் சுண்ணம், குளிகை, செந்தூரம் முதலான மருந்துகளின் சித்து, வித்தை முதலான ஆற்றல்கள். ஞானத்தின் வழி விளக்கம் பெறுகின்றன. மனித உருவம், எந்திரம், சக்கரம், முக்கோணம் முதலான படங்கள் வரையப்பட்டுள்ளன.



# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113

அண்மை வெளியீடுகள்

| | ரூ. பை. |
|---|---|
| சங்கத் தமிழர் வாழ்வியல் | .. 75.00 |
| தமிழக மேடைநாடகப் பெண் கலைஞர்கள் -குறிப்பேடு | .. 25.00 |
| A Grammar of Contemporary Literary Tamil | .. 80.00 |
| Cilappatikaram | .. 100.00 |
| காதம்பரி மூலமும் வசனமும் | .. 125.00 |
| Tani Pacura Togai | .. 30.00 |
| Dedication | .. 25.00 |
| Temple Chimes | .. 20.00 |
| Nala Venba | .. 45.00 |
| Tamil Heroic Poems | .. 40.00 |
| Six Long Poems from Sangam Tamil | .. 30.00 |
| Kurinci-P-Pattu-Muttollayiram | .. 40.00 |
| Kuruntokai | .. 110.00 |
| Landscape and Poetry | .. 50.00 |
| Tamil Culture and Civilization | .. 60.00 |
| Tolkappiyam and Astadhyayi | .. 110.00 |
| தமிழக மகளிர் தொடக்க காலமுதல் ஆறாம் நூற்றாண்டு வரை | .. 50.00 |
| தமிழில் நவீன நாடகம் | .. 70.00 |
| இலக்கியத்தில் சோதிடம் | .. 65.00 |
| சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும் | .. 80.00 |
| தொல்காப்பியம்-பொருள்-புறத்திணையியல் பகுதி - 1 | .. 50.00 |
| தொல்காப்பியம்-பொருள்-புறத்திணையியல் பகுதி - 2 | .. 65.00 |
| சோதிடவியல் | .. 70.00 |
| மூலிகைக் கற்பங்கள் | .. 80.00 |
| அமிர்த மதன கூத்து நாடகம் | .. 90.00 |
| சித்த மருத்துவ மணிகள் | .. 75.00 |
| கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் விளக்க அட்டவனை (முதல் தொகுதி) | .. 85.00 |
| Tamil Scripts - Work Book | .. 50.00 |
| Work Book Written Tamil | .. 50.00 |
| விடுதலைக்கு முன் தமிழ் நாவல்களில் பெண்கள் | .. 30.00 |
| திருக்கோயில்களில் தொழில் சமுதாய உறவுகள் | .. 25.00 |
| தமிழ்க் காட்சி நெறியியல் | .. 46.00 |
| இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள் | .. 30.00 |
| ஒப்பிலக்கியம்:கொள்கைகளும் செயல்முறைகளும் | .. 15.00 |
| கருணையம்மன் அந்தாதி | .. 22.00 |